# உள்ளடக்கம்

# முன்னுரை

கி.பி. ஏழாம் நூற்றாண்டு வாக்கில் பாரசீகத்தில் காலிஃப்கள் அரசாண்ட காலத்தில் வாழ்ந்த கவிஞர் தான் ‘இபின் அல் முகாஃபா’. இவர் தான் அரபு மொழியில் ஆயிரத்து ஓர் இரவுகள் கதையை எழுதியதாகக் கூறப்படுகிறது.

தொடக்கத்தில் இவை ‘ஆலிப் லைலா கதைகள்’ என அழைக்கப்பட்டன. அதில் 1001 கதைகள் இல்லை, சில நூறு கதைகள் தான் இருந்தன. பின்னர் பல கதைகள் இடையில் சொருகப்பட்டு ஆயிரம் கதைகளாகப் பரிமாணம் அடைந்தது. அதிலும் ஆயிரத்து ஒன்றாவது கதை எப்போது இணைந்தது என்பது தெரியாவிட்டாலும் அதுவே இறுதியாகிவிட்டது. இவற்றில் பண்டைய சுமேரிய, மெசபடோமிய கதைகளும் அடங்கும்.

பிற்பாடு இது அனைத்து மொழிகளிலும் மொழி மாற்றம் செய்யப்பட்டது குறிப்பிடத்தக்கது. இந்நூலிலுள்ள கதைகளுள் பெரிதும் அறியப்பட்டவை அலாவுதீனும் அற்புத விளக்கும், அலிபாபாவும் நாற்பது திருடர்களும், சிந்துபாத் ஆகியவையும் ஆகும். இக்கதைகள் உண்மையான அரேபிய நாட்டார் கதைகளாக இருந்திருக்கக் கூடியன ஆயினும், இவை அன்றைய காலத்தில் எழுதப்பட்ட ஆயிரத்தொரு இரவுகள் கதைத் தொகுதியின் பகுதிகள் அல்ல. ஐரோப்பிய மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்ட போது இவை இடைச் செருகல் செய்யப்பட்டன.

ஆயிரத்தொரு இரவுகள் நூலின் முதல் ஐரோப்பிய மொழிபெயர்ப்பு பிரெஞ்ச் மொழியில் வெளியிடப்பட்டது. அந்தோனி கல்லேன்டு என்பவரால் Les Mille et une nuits, contes arabes traduits en français (ஆயிரத்தொரு இரவுகள்-அராபிய கதைகள் பிரெஞ்ச்சுக்கு மொழிமாற்றப்பட்டது) என்ற பெயரில், மொத்தம் 12 தொகுதிகளாக 1704 ல் இருந்து 1717 வரை இது வெளியிடப்பட்டது. இதில் அராபிய மூல நூலில் உள்ள கதைகளுடன் அலாவுதீனும் அற்புதவிளக்கும், அலிபாபாவும் நாற்பது திருடர்களும் ஆகிய கதைகளும் சேர்க்கப்பட்டிருந்தன. இவ்விறு கதைகளை, அலெப்போ நகரைச் சேர்ந்த ஒரு கிருத்தவ பாதிரியார் தனக்கு சொல்லியதாக கல்லேன்டு பின்னர் அறிவித்தார். இவரின் இந்த மொழிபெயர்ப்பு ஐரோப்பாவில் மிகுந்த வரவேற்பை பெற்றதை அடுத்து தொடர்ந்த பதிப்புகள் அவரின்

பெயரிலே வெளியிடப்பட்டன.

தொடர்ந்து ஆங்கிலம், போலியம் போன்ற மொழிகளிலும் இது வெளியிடப்பட்டு வெற்றி பெற்றது. இதில் சில ஆங்கில மொழிபெயர்ப்புகள், அதன் பாலியல் வர்னனைகளுக்காக தனிப்பட்ட முறையில் அச்சடிக்கப்பட்டு, குறிப்பிட்ட வாடிக்கையாளர்களுக்கு மட்டும் விற்கப்பட்டது. ஆயிரத்தொரு இரவுகள் நூலின் முதல் அராபிய பதிப்பு, 1814 ம் ஆண்டு பிரித்தானிய கிழக்கிந்திய நிறுவனத்தால் வெளியிடப்பட்டது. கொல்கத்தா நகரில் வெளியிடப்பட்ட இந்த பதிப்பை சேக் அகமது பின் முகம்மது என்பவர் தொகுத்திருந்தார்.

ஆயிரத்தொரு இரவுகள், அராபிய இலக்கியங்களில் மிகவும் முக்கியமான ஒன்று. கதைக்குள் கதை எனும் இதன் பாணியானது பண்டைய இந்திய மற்றும் பாரசீக இலக்கியங்களில் ஏற்கனவே இருந்த ஒன்றே என்ற போதும், ஆயிரத்தொரு இரவுகள் நூலுக்கு பிறகே ஐரோப்பிய நாடுகளில் பிரபலமாகத் தொடங்கியது. இதை தொடர்ந்து பல புதினங்கள் இதே நடையில் மேற்குலகில் எழுதப்பட்டன. குறிப்பாக அலாவுதீன், சிந்துபாத், அலிபாபா போன்ற கதை மாந்தர்களும் ஜின்கள், பகுமுத் மீன், பறக்கும் கம்பளம், மந்திர விளக்கு போன்ற தொன்மங்களும் பிற்காலத்திய மிகுபுனைவு நூல்களில் முக்கிய இடத்தைப் பிடித்தன. ஆங்கில இலக்கியத்திலும் ஆயிரத்தொரு இரவுகள் மிகுந்த வரவேற்பை பெற்றது. முக்கியமாக சாமுவேல் டெய்லர் கோல்ரிட்சு, தாமசு தி குயின்சி, வில்லியம் வோர்ட்ஸ் வொர்த், ஆல்பிரட் டென்னிசன், சார்லசு டிக்கின்சு ஆகியோர் இதன் முக்கிய இரசிகர்களாக இருந்தனர்.

இவ்வளவு சிறப்பு பெற்ற ஆயிரத்து ஒரு இரவுகள் கதையை நாங்கள் உங்கள் கைப்பேசியிலேயே இலவசமாகப் பதிவிறக்கம் செய்யும் படியாக கொடுத்ததற்குப் பெருமைப் படுகிறோம். இந்த நூல் சிறுவர் முதல் பெரியவர் வரையில் அனைவரும் படித்து மகிழ வேண்டிய நூலாக்கம். அதனை நினைவில் கொண்டு சில பாலியல் வர்ணனைகளை முடிந்த வரையில் தவிர்த்து உள்ளோம். எனினும், இதன் உண்மைத் தன்மை மாறாமல் கதையின் போக்கை அரபு மொழியில் உள்ளதைப் போன்றே அப்படியே கொடுத்து உள்ளோம். வாருங்கள் நாம் கதைக்குள் செல்வோம்.

# அரசர்கள் வாழ்வில் நடந்த மாபெரும் ஏமாற்றம்

முன்னொரு காலத்தில் பானுசாசன் என்ற மன்னன் ஆசியாவின் பெரும் நிலப்பரப்பை ஆண்டு வந்தான். அதில் சீனாவின் பல பகுதிகள், இந்தியாவின் சில பகுதிகள், மற்றும் இன்றைய பாகிஸ்தான் முதல் உச்பேகிஸ்தான் வரையிலான பெரும் நிலப் பரப்புகள் ஆகிய அனைத்தும் அடங்கி இருந்தது. இதன் காரணமாக அந்தக் காலத்தில் பானுசாசன் பேரரசனாகக் கருதப்பட்டார். அவருக்கு இரண்டு மகன்கள் இருந்தனர். மூத்தவர் பெயர் ஷாரியர், இளையவர் பெயர் ஷாஜமான். இந்த அண்ணன் தம்பிகள் இருவரும் ஒருவர் மேல் ஒருவர் பாசத்துடன் நடந்து கொண்டனர். இவர்களுக்குள் என்றுமே பிரிவினை வந்தது இல்லை. அதை நினைத்து பானுசாசனே பல முறை பெருமை பட்டு உள்ளார். தனது காலத்திற்குப் பிறகு தனது ராஜ்ஜியம் தனது பிள்ளைகளால் நிச்சயம் காக்கப்படும் என்று நம்பினார்.

பானுசாசனுக்கு வயோதிகம் நெருங்கிக் கொண்டு இருந்தது. அதன் காரணமாக உடல் அசௌக்கியம் ஏற்பட்டு படுத்த படுக்கையாக இருந்தார். மரணப் படுக்கையில் கூட தனது பிள்ளைகளை அழைத்து அவர்களுக்கு பல அறிவுரைகள் கூறினார். பிறகு "சாமர்கண்ட்" என்ற நாட்டை ஷாஜமானுக்கு கொடுத்தார். அத்துடன் அந்தப் பகுதிகள் முழுவதும் இளையவருக்கு பிரித்துக் கொடுத்தார். பிறகு ஷாரியருக்கு சீன தேசம் மற்றும் இந்திய தேசத்தின் பகுதிகள் அனைத்தையும் கொடுத்தார். இருவரும் தங்கள், தங்கள் பகுதிகளை நல்ல படியாக ஒற்றுமை குலையாமல் ஆட்சி செய்வதாக ஒப்புக் கொண்டனர். அதைக் கேட்ட சந்தோஷத்திலேயே பானுசாசன் இறைவன் அடி சேர்ந்தார்.

தங்களது தந்தைக்கு செய்ய வேண்டிய இறுதிக் கடன்கள் அனைத்தையும் செய்து முடித்த சகோதரர்கள் இருவரும் தந்தை தங்களுக்கு வழங்கிய நாடுகளை நல்ல முறையில் ஆளுவதற்குப் புறப்பட்டனர். அன்றைய தினம் முதற்கொண்டு அவ்விருவரும் தந்தை தனி ஒருவராக கட்டிக் காத்த ராஜ்யத்தை இருவராக நல்ல முறையில் ஆட்சி செய்து வந்தனர். எனினும் ராஜாங்க விஷயமாய் ஒருவரை, ஒருவர் சந்திக்கவே முடியாமல் போயிற்று. அப்படியே ஏறக்குறைய இருபது வருடங்கள் கழிந்தது. இந்த நீண்ட இடைவெளி தம்பியை

விடவும் அண்ணன் ஷாரியரையே அதிகம் பாதித்தது.

தம்பியைக் காண வேண்டும் என்ற ஆவல் ஷாரியருக்கு நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே இருந்தது. இனியும் தம்பியைக் காணாமல் இருக்க முடியாது என்ற நிலையில் தனது அமைச்சரை அழைத்து எண்ணற்ற பரிசுப் பொருட்களுடன் தனது தம்பி ஷாஜமானை சமர்கண்ட் சென்று சந்தித்து உடனே அழைத்து வருமாறு கூறினார். அத்துடன் தனது அமைச்சரிடம், "எனது அன்புத் தம்பி வர மறுப்பான் தான். ஏன்? இத்தனை நாட்களாக அண்ணனுக்குக் கூட என்னைப் பார்க்கத் தோன்றவில்லையே என்ற கோபம் கூட அவனது மனதில் இருக்கலாம். அதையெல்லாம் நீர் சமாதானப்படுத்தி அவனை எப்படியாவது இங்கு அழைத்து வர வேண்டும். இது எனது ஆணை" என்றார்.

அந்த அமைச்சரும் எண்ணற்ற விலை உயர்ந்த பரிசுப் பொருட்களுடனும், அதனைப் பாதுகாக்க ஒரு பெரும் படையுடனும் சமர்கண்ட் கிளம்பினார். செல்லும் வழி நெடுக அவருக்கு பலத்த வரவேற்பு அளிக்கப்பட்டது. பேரரசரின் அமைச்சர் என்றால் சும்மாவா என்ன?

பல நீண்ட பயணத்துக்கு பிறகு சமர்கண்ட் பகுதியை அடைந்தார் ஷாரியரின் அமைச்சர்.

தனது அண்ணனின் அமைச்சர் தன்னைக் காண வந்துள்ளார் என்ற செய்தியைக் கேட்ட ஷாஜமான் மிகவும் மகிழ்ந்தார். விரைந்து சென்று அனைத்து மரியாதைகளுடன் அந்த அமைச்சரை ராஜிய சபைக்கு அழைத்து வந்தார். அமைச்சர் வந்த நோக்கத்தை அறிந்த ஷாஜமான் மிகவும் சந்தோஷம் அடைந்தார். பிறகு அவரது மனதிலும் அண்ணனைக் காண வேண்டும் என்ற ஆவல் எழுந்ததால், அண்ணனின் அமைச்சருடனையே தான் புறப்பட்டு செல்வதாக ஒரு குறிப்பிட்ட நாளை அறிவித்தார்.

பிறகு தனது அண்ணனின் அமைச்சரையும் அவருடன் வந்த பரிவாரங்களையும் நன்கு கவனித்தார் ஷாஜமான். ஒரு அற்புதமான மாளிகை ஒன்றில் அவர்கள் அனைவரும் தங்க வைக்கப்பட்டனர். அங்கு ஆடல், பாடல் என மகிழ்ந்து திளைத்தனர்.

மறுபுறம் தனது அமைச்சரை அழைத்த ஷாஜமான், தனது அண்ணனை சந்திக்கும் சமயத்தில் அவர் தனக்கு அளித்த பரிசுப் பொருட்களை விட விலை உயர்ந்த பரிசுப் பொருட்களை உடனே தயார் செய்யுமாறு ஆணை பிறப்பித்தார். அதன் படி அனைத்துப் பரிசுப் பொருட்களும் உடனுக்குடன் தயார் செய்யப்பட்டது.

இப்படியாக அண்ணன் ஷாரியரைக் காணப் புறப்பட்டுச் செல்லும் அந்த நாளும் வந்தது. தனது அமைச்சரை ராஜ்யத்தை கவனித்துக் கொள்ளுமாறு கூறி விட்டு, பரிசுப் பொருட்களுடன் அண்ணனின் அமைச்சரை அழைத்துக் கொண்டு புறப்பட்டுச் சென்றார் ஷாஜமான். சிறிது நேரப் பயணத்திற்குப் பிறகு இரவு வேளை வந்ததால், ஷாஜமானின் உத்தரவுப் படி கூடாரம் அமைக்கப்பட்டு அனைவரும் ஒரு பாதுகாப்பான இடத்தில் தங்கினார்கள். ஷாஜமானும் ஓய்வு எடுத்துக் கொண்டு இருந்தார். திடீர் என தனது அண்ணனுக்கு கொடுக்க வேண்டிய பரிசுப் பொருட்களில் ஒன்றை அரண்மனையிலேயே வைத்து விட்டு வந்ததை ஷாஜமான் உணர்ந்து கொண்டார். உடனே அரண்மனைக்குச் சென்று அதனை எடுத்து வரத் தீர்மானித்தார். அதன் படி புறப்பட்டும் சென்றார்.

ஷாஜமான் அந்தப்புரத்தை அடைந்தார். அங்கு தான் அண்ணனுக்கு அளிக்க வேண்டிய அந்த விலை உயர்ந்த பரிசை அவர் வைத்து இருந்தார். ஷாஜமான் சென்ற நேரம் அந்த அந்தப்புரமே அமைதியாக இருந்தது. எனினும், அமைதியான அந்த அந்தப்புரத்தில் ஷாஜமான் கண்ட காட்சி அவரது உள்ளத்தையே நொறுங்க வைத்தது.

அந்தப்புரத்தில் அவருடன், அவரைத் தழுவிய வண்ணம் இருக்க வேண்டிய அவரது மனைவி (அதவாது அந்த நாட்டு மகாராணி) ஒரு சமையல்காரனுடன் உல்லாசமாகக் கிடந்தாள். இது ஷாஜமானின் உள்ளத்தை நொறுக்கியது. உடனே கோபம் பொங்க அந்த அந்தப்புரத்துக்குள் ஷாஜமான் நுழைந்தார். அவர் வந்ததைக் கூட கவனிக்காமல் இருவரும் சந்தோஷத்தில் சங்கமித்துக் கொண்டு இருந்தனர். ஷாஜமான் தனது வாளை எடுத்து அவர்கள் இருவரையும் பார்த்த அந்த இடத்திலேயே கண்டம் துண்டமாக வெட்டி எறிந்தார். பிறகு தன்னுடைய அந்தரங்கச் செயலாளரை மட்டும் அழைத்து அந்தப் பாவிகள் இருவரின் பிணங்களையும் இரவோடு இரவாக அப்புறப்படுத்திவிட வேண்டும் என்று கூறி விட்டுத் தாம் எடுக்க வந்த பரிசுப் பொருட்களை எடுத்துக் கொண்டு மீண்டும் பழையபடி

கூடாரத்தை அடைந்தார்.

எனினும் கூடாரத்தை அடைந்த பிறகும் கூட ஷாஜமானின் மனம் கலங்கித் தவித்தது. தனது அன்பு மனைவிக்குத் தான் எந்தக் குறையும் வைக்கவில்லையே, பிறகு ஏன் அவள் இப்படி நடந்து கொண்டாள் என தனக்குத் தானே பல முறை கேட்டபடி நொந்து கொண்டார். அதனால், ஒரு கட்டத்தில் அவருடைய உடலும் கெட்டு விட்டது. அன்றைய இரவு அவர் தூங்க முயற்சி செய்தும் கூட அவரால் தூங்க முடியவில்லை. அந்த ஏமாற்றத்தை ஷாஜமானால் தாங்கவே முடியவில்லை.

பிறகு அடுத்த நாள் காலையும் பயணம் தொடர்ந்தது. செல்லும் வழியில் எண்ணற்ற தங்குமிடங்களை முன்பே திட்டமிட்டு அமைத்தபடி ஷாரியரின் அமைச்சர் ஷாஜமானை அழைத்துச் சென்று விட்டார்.

இவ்வாறாக ஷாஜமான் அண்ணனின் ராஜ்யத்தை அடைந்தார். அங்கு தலை நகரில் அவருக்கு பலத்த வரவேற்பு அளிக்கப்பட்டது. ஷாரியருக்கு தனது அருமைத் தம்பி வந்து விட்ட செய்தி கிடைத்தது. உடனே விரைந்து அவ்விடம் வந்தார். அத்துடன் சகல மரியாதைகளுடன் தனது தம்பியை அழைத்துக் கொண்டு ராஜ மாளிகையை அடைந்தார். எனினும், வந்து சேர்ந்த நிமிடம் முதல் ஷாஜமானின் முகத்தில் ஒரு வருத்தம் நிழல் ஆடியது. அதனை உணர்ந்து கொண்ட ஷாரியர், தனது தம்பியிடம் இது பற்றிக் கேட்டார்.

ஆனால், அண்ணனிடம் நடந்த விவரத்தைக் கூறத் தயங்கிய ஷாஜமான். இது நீண்ட பயணத்தால் ஏற்பட்ட களைப்பு என்று கூறி ஒரு வழியாக சமாளித்து விட்டார். எனினும், ஷாரியர் தம்பியின் வார்த்தைகளை நம்ப வில்லை. காரணம் அவருக்குத் தனது தம்பியைப் பற்றி சிறு வயது முதற்கொண்டு தெரியும். அதனால், தம்பியின் வருத்தத்தைக் கண்டு தானும் மனதளவில் கலங்கினார். எனினும், விஷயத்தை ஆறப் போட்டுப் பிறகு கேட்கலாம் என்ற முடிவுக்கு வந்தார் ஷாரியர்.

பிறகு அண்ணன் ஷாரியருடன் அற்புதமான விருந்தை உண்டார் ஷாஜமான். தனது அருமைத் தம்பிக்கு எல்லா வசதிகளும் நிறைந்த ஒரு அற்புதமான மாளிகையைக் கொடுத்துத் தங்கச் செய்தார் ஷாரியர். அங்கு கூப்பிட்டக் குரலுக்கு ஓடி வர அழகிகளும், வேலையாட்களும் காத்துக் கொண்டு இருந்தனர். அழகிகள் அனைவரும் அரை குறை ஆடையுடன் தான் அங்கு காணப்பட்டனர். தம்பியை அந்த மாளிகையில்

தங்க வைத்த பின் ஷாரியர் அந்த அழகிகளை அழைத்து தனது தம்பியின் மனதில் உள்ள குறையை நாசுக்காகக் கேட்டு அறிந்து கொள்ளுமாறு ஆணைப் பிறப்பித்தார். அந்த அழகிகளும் அரசர் கட்டளைக்குப் பணிந்தனர். அத்துடன் ஷாஜமானிடம் மிகவும் பக்குவமாக நடக்க முன்வந்தனர். ஆனால், ஷாஜமானின் மனதில் தான் வருத்தம் நிறைந்து காணப்பட்டது. அத்துடன் அவரது மனதில் தனது மனைவியை அணைத்தபடிக் கிடந்த அந்த சமையல் காரனின் முகம் தான் அடிக்கடி ஞாபகம் வந்தது. இந்த நிலையில் ஷாஜமானால் வேறு எந்த ஒரு பெண்ணுடனும் ஒட்டி உறவாட முடியவில்லை. அதனால், அந்த அழகிகள் செய்த எந்த முயற்ச்சிகளும் ஷாஜமானிடம் பலிக்க வில்லை.

இந்நிலையில் மன்னர் ஷாரியர் மூன்று தினங்களுக்குப் பிறகு அந்த அழகிகளை அழைத்து அவர்களிடம் விஷயத்தைக் கேட்டார். ஆனால், அவர்களோ," எதற்குமே உங்கள் அருமைத் தம்பி இடம் தரவில்லை, நாங்கள் தோற்றுப் போனோம், அவருக்கு ஏதோ பெரிய மனக் குறை தான் உள்ளது. அதனை வெளிக் காட்டிக் கொள்ளாமல் அவர் இருக்கிறார்" என்றார்கள்.

பிறகு தனது தம்பிக்கு ஏதோ பெரிய மன நோய் தான் வந்து உள்ளது போல என நினைத்துத் தனது அரண்மனை வைத்தியர்களை அழைத்து மருத்துவம் பார்க்கச் சொன்னார் ஷாரியர். அவர்களும் ஷாஜமானுக்கு மனதை அமைதிப்படுத்தும் பல மருந்துகளை உணவில் கலந்து அவருக்குத் (ஷாஜமானுக்குத்) தெரியாமல் கலந்து கொடுத்தனர். ஆனால், அதனால் ஒரு பிரயோஜனமும் இல்லை. இதனால் ஷாரியரின் அந்தத் திட்டமும் தோற்றுப் போனது.

பிறகு தனது தம்பியின் மனதை வேறு வழியில் திருப்ப யோசித்துக் கொண்டு இருந்தார் ஷாரியர். ஷாஜமானுக்கு வேட்டை ஆடுவது என்றால் அப்படி ஒரு பிரியம். அதன் படி தனது அமைச்சரை அழைத்துக் கானகம் சென்று வேட்டை ஆட அனைத்து ஏற்பாடுகளையும் செய்யும் படியாகக் கூறினார் ஷாரியர். அதன்படியே வேட்டைக்கான அனைத்து ஏற்பாடுகளும் உடனுக்குடன் செய்யப்பட்டது.

ஷாரியர் தனது தம்பி ஷாஜமானை அவராகவே வந்து அன்புடன் வேட்டைக்கு அழைத்தார். ஆனால் ஷாரியர் வேண்டிக் கேட்டுக் கொண்டும் ஷாஜமான் வேட்டைக்கு செல்ல சம்மதம் தெரிவிக்க

வில்லை. அதனால் ஷாரியர் வருத்தம் அடைந்தார். எனினும், வேட்டைக்கு வேண்டிய அனைத்து ஏற்பாடுகளும் செய்யப்பட்டு விட்டதால் ஷாரியர் தான் மட்டுமே வேட்டைக்குச் செல்ல முடிவெடுத்தார்.

இது ஒரு புறம் இருக்க, மன்னர் தனது அருமைத் தம்பியுடன் வேட்டைக்குத் திட்டம் இட்ட இந்த விஷயம் அனைவருக்கும் தெரியும். மாமன்னர் ஷாரியர் அவரது தம்பி ஷாஜமானுடன் மறு நாள் காலையில் வேட்டைக்கு செல்லப்போகிறார், அத்துடன் வேட்டை ஆடி முடித்து விட்டு சில தினங்களுக்குப் பிறகே சகோதரர்கள் இருவரும் திரும்பி வருவார்கள் என்ற விவரம் அனைவரையும் ஏற்கனவே சென்று அடைந்து இருந்தது.

எனினும் அடுத்த நாள் காலையில் தனது தம்பி ஷாஜமான் உடன் வராததால் ஷாரியர் மட்டும் வேட்டைக்குக் கிளம்பிச் சென்றார். ஆனால், எல்லோருமே மன்னர் தனது தம்பியை அழைத்துக் கொண்டு தான் சென்று உள்ளதாக நினைத்தனர். தவிர ஷாரியரும் வேட்டைப் பிரியர் தான். அவர் வேட்டைக்கு என்று கானகம் சென்று விட்டால் திரும்பி வர ஒரு வாரத்திற்கு மேல் ஆகும் என்பது அனைவருக்கும் தெரியும். ஷாரியரின் மனைவியும் கணவன் எப்போது கிளம்புவார் என்று தான் காத்துக் கொண்டு இருந்தாள். அதற்கு ஒரு காரணம் இருந்தது.

இந்நிலையில் அன்றைய இரவுப் பொழுதும் இனிதே வந்தது. ஷாஜமான் தன்னுடைய அறையில் இருந்தபடி, நிலா காய்ந்து கொண்டு இருந்த அந்த நள்ளிரவு வேளையில் சாளரத்தின் வழியாக வெளியே வேடிக்கைப் பார்த்துக் கொண்டு இருந்தார். அப்போது அவர் கண்ட காட்சி அவரது மனதை மீண்டும் ஒரு முறை பாதித்தது.

ஷாஜமான் கண்ட காட்சி இது தான்.

மன்னர் ஷாரியர் நாட்டில் இல்லாத அந்த வேளையில், அதிலும் அந்த இரவுப் பொழுதில் காரணம் இன்றி அரண்மனையின் ரகசிய வாயில் திறக்கப்பட்டது. அந்த இரகசிய வழியின் வழியாக ஒரு கருமை நிறம் கொண்ட அடிமை ஒருவன் தயங்கித், தயங்கி வந்தான். முதலில் ஷாஜமான் இவன் திருடத் தான் வந்து இருக்கிறான் என்று நினைத்தார். ஆனால், சிறிது நேரத்தில் மறு முனையில் கவர்ச்சியான ஆடையை

அணிந்த படி ஷாரியரின் அன்பு மனைவி (அதாவது ஷாஜமானின் அன்பு அண்ணியார்) வந்தாள். ராணியும், அடிமையும் தோட்டத்தின் நடுவில் இருந்த நீராழி மண்டபத்தை அடைந்து சந்தோஷமாகவும், உல்லாசமாகவும் பொழுதைக் கழித்தனர். அதற்கு மேல் ஷாஜமானால் கூட அந்தக் காட்சியைக் காண முடியவில்லை. பிறகு விடிவதற்குள் அந்த அடிமையை ராணி பத்திரமாக அந்த ரகசியப் பாதை வழியாக அனுப்பி வைத்தாள். பிறகு ஒன்றும் அறியாதது போல சிரித்துக் கொண்டே அந்தப்புறம் சென்றாள்.

ஷாஜமான் இந்தக் காட்சியைக் கண்ட பின்னர் ஒரு வகையில் அண்ணனின் வாழ்வும் இப்படி ஆகி விட்டதே என்று நினைத்து வருந்தினாலும். மறுபுறம், 'பெரும்பாலும் எல்லா ராஜ குடும்பங்களிலும் இந்த அசிங்கம் இலை மறைவு, காய் மறைவாய் ஆங்காங்கே நடந்து கொண்டு தான் இருக்கிறது போல' என்ற முடிவுக்கு வந்தான். இதனால் அவனது மனம் சற்று ஆறுதல் அடைந்தது.

இவ்விதம் மேற்கண்டவாறு எண்ணிய ஷாஜமான். மறு நாள் முதற்கொண்டு தனது இயல்பு நிலைக்குத் திரும்பினான். இது தான் உலகம் என்று அறிந்தது போலப் பழைய படி உணவு உண்ணத் தொடங்கினான். இன்னும் சொல்லப் போனால் கொஞ்சம் மகிழ்ச்சியுடன் தான் காணப்பட்டான். அத்துடன் அவனாகவே அழகிகளை அழைத்து உல்லாச வாழ்க்கையை வாழத் தொடங்கினான்.

மறுபுறம் வேட்டைக்குச் சென்ற ஷாரியர் மீண்டும் தனது நாட்டுக்குத் திரும்பினான். தம்பியின் நிலை கண்டு ஆனந்தம் கொண்டான். 'எல்லாம் அந்த அழகிகளின் திறமை தான்' என்று மனதிற்குள் கூறிக் கொண்டான். பிறகு தம்பியிடமே சென்று," அருமைத் தம்பியே வரும் போது மிகவும் சோகமாகக் காட்சி அளித்தாய். ஆனால் இப்போதோ சந்தோஷத்துடன் காணப்படுகிறாயே! அப்படி ஒரு வாரத்தில் என்ன மாயம் நடந்தது? அதனை என்னிடமும் கொஞ்சம் சொல்லேன்" என்று சிரித்துக் கொண்டே கேட்டார்.

ஆனால், தனது அண்ணன் வந்ததும் வராததுமாக உண்மையைக் கூறி அவரது மனதை நோகடிக்க விரும்பவில்லை ஷாஜமான். அதனால் அண்ணனிடம், "அண்ணா! பிறகு ஒரு நாள் நாம் இதைப் பற்றிப் பேசுவோம்" என்று கூறி மழுப்பிவிட்டான். பிறகு அண்ணன் சிறிது நேரம் ஓய்வெடுத்து முடித்த பின்னர். அமைதியாக அண்ணனை

அழைத்து மெல்ல விஷயத்தைக் கூறினான் ஷாஜமான்.

தனது மனைவியின் நடத்தையைப் பற்றி தனது தம்பியே கூறும் பொழுது ஷாரியரால் அதனை நம்பாமல் இருக்க முடியவில்லை. அவனது மனதினில், "பாசமிகு தம்பி பொய் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை" என்று தான் பட்டது. எனினும், தனது தம்பியிடம் கண்ணீர் வடித்தபடி அவன் சொன்னதை அவனால் நிரூபிக்க முடியுமா? என்று கேட்டான்.

அதற்கு ஷாஜமான்," அருமை அண்ணா! தயவு கூர்ந்து தங்களது மனத்தைக் கட்டுப் படுத்திக் கொள்ளுங்கள். மேலும் அண்ணியிடம் இதனைத் தாங்கள் நேரடியாகக் கேட்க வேண்டாம். நீங்களே நேரில் இந்த அநியாயத்தைக் காண விரும்பினால், நான் சொல்லும் படியாகச் செய்யுங்கள். அதன்படி ஒன்றுமே தெரியாதது போல ஒரு வாரம் நடந்து கொள்ளுங்கள். பின்னர் ஒரு வாரம் கழித்து மீண்டும் நாம் இருவரும் வேட்டைக்குச் செல்லப் போவதாக அறிவித்து விடுங்கள். ஆனால், வேட்டைக்குப் போகாமல், விசுவாசமான ஊழியர்களிடம் அந்தப் பொறுப்பை ஒப்படைத்து விட்டு ரகசியமாக எனது அறையில் என்னுடன் இருங்கள். இதில் ஒரு முக்கியமான விஷயம் தாங்கள் வேட்டையாடும் பொறுப்பை அளித்து வனத்திற்கு அனுப்பும் அந்த ராஜ விசுவாசிகள் ஒரு வாரம் கழித்துத் தான் வர வேண்டும். இது ஒரு புறம் இருக்க நாம் இருவரும் ராணியின் நடவடிக்கையை கவனிப்போம். சரிதானே?" என்று கூறி முடித்தான்.

ஷாரியரும் தனது தம்பியின் திட்டத்தை ஒப்புக் கொண்டு அதன் படியே செய்தான். அதனால் நாட்டில் எல்லோருமே மன்னர் மீண்டும் தனது தம்பியுடன் வேட்டைக்குச் சென்று விட்டதாக நம்பினர். அன்றைய தினம் இரவே தனது தம்பி குறிப்பிட்ட அந்த இடத்தை அடைந்தான் ஷாரியர். உடன் அவனது அருமைத் தம்பியும் வந்து இருந்தான். இருவரும் அந்தப்புரத்திற்குச் செல்லும் வழியில் அமைக்கப்பட்ட சாளரத்தைத் திறந்து வைத்துக் கொண்டு அங்கு நடப்பதை இமை மூடாமல் கண்காணிக்கத் தொடங்கினார்கள்.

பின்னிரவு நேரம் வந்தது மாளிகையின் ரகசியக் கதவு திறக்கப்பட்டது. அந்த வழி அரசருக்கும், அரசிக்கும் மட்டுமே தெரிந்த வழி. அதன் வழியாக கருப்பு அடிமை ஒருவன் துணிச்சலுடன் நுழைந்தான் (எல்லாம் ஒருவகையில் ராணி கொடுத்த துணிச்சல் தான்). உடனே ராணி

வெளிப்பட்டு அந்த அடிமையை கட்டி அணைத்தபடி தோட்டத்தின் நடுவில் இருந்த நீராழி மண்டபத்தை அடைந்தாள். அங்கு இருவரும் துணிகளைக் கலைந்த படி உல்லாசமாக இருந்தனர். பின்னர் எல்லாம் முடிந்தவுடன் ஆடைகளை உடுத்திக் கொண்டு ராணியும், அடிமையும் தங்கள், தங்கள் இருப்பிடத்தை அடைந்தார்கள்.

இவைகளை எல்லாம் கண் கூடாகக் கண்ட அரசர், ஷாரியரின் மனம் பெரிதும் கலங்கியது என்பது உண்மை. இனிமேலும் அரண்மனையில் இருக்கக் கூடாது என்று எண்ணியவர்களாய் இருவரும் மெல்ல நடந்து சென்றார்கள். கால் போனப் போக்கில் நடந்த அவர்கள் ஒரு கடற் கரையை அடைந்தார்கள். என்ன செய்வது என்று தெரியாத நிலையில் அண்ணனைத் தேற்ற ஷாஜமான் தனது மனைவி அவனுக்கு செய்த துரோகத்தை எடுத்துக் கூறினான். மேலும் அதனை நினைத்துக் கொண்டு தான் தான் வருந்தியதையும் கூறி முடித்தான். அதைக் கேட்டு அண்ணன் ஷாரியரின் சோகம் இரண்டு மடங்காக ஆனது. இருவரும் கண்கள் கலங்கிய நிலையில் கடலையே பார்த்துக் கொண்டு இருந்தார்கள்.

## பூதத்தை வஞ்சம் தீர்த்த காம சுந்தரி

சகோதரர்கள் இருவரும் அமைதி இழந்த நிலையில் கடலைப் பார்த்தபடி அமர்ந்து இருந்தார்கள். தம்பி ஷாஜமான் செய்தது போலவே தனது மனைவியையும் அவளது அடிமைக் காதலனையும் வெட்டி விடலாமா என்ற கோணத்தில் யோசித்துக் கொண்டு இருந்தான் ஷாரியர். கடலைப் போலவே அவனது மனதிலும் வலுவான அலைகள் பொங்கி எழுந்து கொண்டு இருந்தது. ஷாஜமான் அண்ணனை அமைதிப் படுத்த எவ்வளவோ முயற்சி செய்தும் பலனில்லை. ஒரு கட்டத்தில் கடலில் விழுந்து இறந்து விடலாமா என்று கூட நினைத்தான் ஷாரியர்.

இந்நிலையில் கடலில் இருந்து ஆழிப் பேரலைகள் எழுவது போன்ற ஒரு பேரொலி கேட்டது. அதைக் கேட்ட சகோதரர்கள் இருவரும் பயந்து தான் போனார்கள். அத்துடன் சில கணங்களில் கடலில் இருந்து வானத்தை நோக்கிப் பெரிய தூண் போன்ற ஒன்று மேலே செல்வதைக் கண்டு இருவரும் அஞ்சினார்கள். கடல் பொங்குவதன் அறிகுறி இது தான் என்று அந்த இருவரும் கூறிக் கொண்டார்கள். இறுதியில் இருவரும் இன்னும் கொஞ்ச நாள் வாழ வேண்டும் என்ற நோக்கத்தில் ஒருவரை ஒருவர் பயத்துடன் பார்த்துக் கொண்டனர்.

அப்போது ஷாஜமான் தனது அண்ணிடம் "அண்ணா கடல் பொங்கப் போவது போலத் தெரிகிறது. தவறு செய்தவர்களே மனம் கலங்காத போது நாம் மட்டும் ஏன் கலங்க வேண்டும்? வாருங்கள் அண்ணா இங்கு இருந்து ஓடிச் சென்று அதோ அந்த மரத்தின் மீது ஏறிக் கொள்வோம். முடிந்தவரையில் நமது உயிரைக் காத்துக் கொள்ளப் போராடுவோம். நம்மால் இப்போதைக்கு வெகு தூரம் ஓட முடியாது" என்றான்.

ஷாரியர் தம்பியின் வார்த்தைகளின் படியே அவனுடன் ஓடிச் சென்று அவன் சொன்ன அந்த மரத்தின் மீது ஏறிக் கொண்டான். பின்னர் இருவரும் அங்கு என்ன தான் நடக்கப் போகிறது என்று கூர்ந்து பார்க்கத் தொடங்கினார்கள்.

உண்மையில் அவ்விடத்தில் முன்பு அலை போலத் தோன்றியது அலையே அல்ல. உண்மையில் அது ஒரு பெரிய பூதம். பிறகு தான் அதனை அந்தச் சகோதரர்கள் இருவரும் கண்டு உணர்ந்தார்கள். பின்னர் அந்த பூதம் என்ன தான் செய்யப் போகிறது என்பதைப்

பொறுத்து இருந்து பார்க்கத் தொடங்கினார்கள்.

கடலில் இருந்து வெளிப்பட்ட அந்த பூதம் ஒரு பெரிய பெட்டகத்துடன் கரையை வந்து அடைந்தது. அதனைப் பார்த்த அரசர்கள் இருவரும் உண்மையில் மீண்டும் ஒரு முறை பயந்து தான் போனார்கள். எனினும், தங்கள் இறைவனின் மீது பாரத்தைப் போட்டு சலனம் இல்லாமல் இருந்தார்கள்.

மறுபுறம் அந்தப் பூதம் தன்னிடம் இருந்த ஏழு சாவிகளையும் எடுத்து ஒவ்வொரு சாவியாக போட்டுத் திறந்து கடைசியில் ஏழாவது மரப் பெட்டியைத் திறந்து விட்டது. அந்தப் பெட்டகத்தின் உள்ளே ஒரு பெரிய பேழை ஒன்று காணப்பட்டது. அதனை ஆசையுடன் அந்தப் பூதம் திறந்தது. அப்போது அந்தப் பெட்டகத்தில் இருந்து ஒரு அழகான பெண் ஒருத்தி வெளிப்பட்டாள். அவளைக் கண்ட மாத்திரத்தில் அந்த பூதம் மகிழ்ச்சியில் குது களித்தது.

பிறகு அந்த அழகிய பெண்ணைப் பார்த்து அந்த பூதம், "பெண்ணே! உன்னுடைய திருமணம் ஆன அன்றைய இரவே உன்னை யாருக்கும் தெரியாமல் தூக்கி வந்து விட்டேன். இப்போதும் கூட உன்மீது நான் கொண்ட அந்த மையல் குறையவில்லை. நீ இங்கே உட்காரு, உனது அழகிய மடியில் நான் கொஞ்ச நேரம் படுத்துக் கொள்கிறேன்" என்றது.

அதற்கு அந்தப் பெண்ணும் சம்மதித்து, பூதத்தைத் தனது மடியில் படுக்க வைத்துக் கொண்டாள். அந்த அழகான பெண்ணின் மடியில் படுத்துக் கொண்டு அந்த பூதம் சிறிது நேரத்திற்கெல்லாம் கண் அசந்து நன்றாகத் தூங்கி விட்டது.

பின்னர் அந்த பூதம் தூங்கிய மாத்திரத்தில் அதன் தலையின் பாரத்தைத் தாங்க முடியாத அந்த அழகி அருகில் கிடந்த ஒரு கல்லின் மீது அந்த பூதத்தின் தலையை தலையணை போல வைத்து விட்டு அங்கும், இங்கும் பார்த்தாள். அப்போது மரத்தின் மீது அமைதியாக அமர்ந்து இருந்த அரச குமாரர்கள் இருவரையும் அந்த அழகி கண்டாள். அவர்களைக் கண்ட மாத்திரத்தில் அவர்கள் மீது மோகம் கொண்டாள். அத்துடன் அவர்களை அருகில் அழைத்தாள். ஆனால், சகோதரர்கள் இருவரும் அவ்விடத்திற்கு வர மறுத்தனர். அதைக் கண்ட அந்த அழகி அவர்கள் இருவரையும் எப்படியும் கீழே அழைத்து விட வேண்டும் என்ற எண்ணத்தில் அவர்களைப் பார்த்து," மரியாதையாக இருவரும் இறங்கி

வந்து விடுங்கள் இல்லையேல் பூதத்தை எழுப்பி விடுவேன். அது உங்கள் இருவரையும் கொன்று தின்று விடும்" என்பதைப் போல சைகை காட்டிக் கூறி இறங்கச் சொன்னாள்.

அவள் காட்டிய சைகையின் அர்த்தத்தை உணர்ந்த அந்த இரு சகோதரர்களும் வேறு வழி இன்றி மரத்தை விட்டு மெல்ல இறங்கினார்கள். அவள் அருகில் வந்தார்கள். அந்தப் பெண் மோகனப் புன்னகையுடன் சகோதரர்கள் இருவரில் முதலில் ஷாரியரை தேர்ந்தெடுத்தாள் அத்துடன் அவருடன் உறவு கொண்டு மகிழ்ந்தாள். பிறகு ஷாஜமானை அருகில் அழைத்தாள் அவனோ பூதம் எழுந்து விடுமோ எனப் பயந்து பயந்து அவளை நெருங்கினான். அதனை நாசுக்காகப் புரிந்து கொண்ட அந்தப் பெண், ஷாஜமானிடம்," பயம் கொள்ளாதீர்கள். நான் எழுப்பாதவரை அந்தப் பூதம் எழுந்திருக்காது. அத்துடன் அந்தப் பூதம் எப்போது உறங்கும், எப்போது விழிக்கும் என்பதை நான் நன்கு அறிவேன்" என்றாள். பிறகு சிறிது நேரத்தில் ஷாஜமானை அணைத்துக் கொண்டாள். அந்தப் பிடியில் இருந்து அவனால் தப்பிக்க முடியவில்லை. அத்துடன் அந்த சமயத்தில் அப்படிப் பட்ட ஒரு தழுவல் உண்மையில் அவனுக்குத் தேவைப் பட்டது. குளிர்ந்த இரவில் அவளது அந்த மேனியின் கதகதப்பு அவனுக்கு இன்பத்தை அள்ளி, அள்ளி வழங்கியது. ஆசை தீர அந்தப் பெண் ஷாஜமானை வேட்டை ஆடினாள். அவனும் போதும், போதும் என்று களைத்துப் போனான்.

இப்படியாக அந்தப் பெண் ஒருவளாக சகோதரர்கள் இருவருடனும் உல்லாசமாக இருந்தாள். அதன்பின்னர் அவள் தன்னிடமுள்ள ஒரு பையை எடுத்தாள். அதில் நிறைய மோதிரங்கள் சேர்க்கப்பட்ட ஒரு மாலை இருந்தது. அவள் அந்த மோதர மாலையை சகோதரர்கள் இருவரிடமும் காண்பித்துப் பேசத் தொடங்கினாள்.

"இதோ பாருங்கள். இதில் தொண்ணூற்று எட்டு மோதிரங்கள் உள்ளன. அதாவது இந்தக் கையால் ஆகாத கிழட்டு பூதத்தை ஏமாற்றி நான் இது வரையில் தொண்ணூற்று எட்டு காளையர்களுடன் உறவு கொண்டு இருக்கிறேன். அத்துடன் உடலுறவு கொண்டதற்கு அடையாளமாக அவர்களிடம் இருந்து ஒரு மோதிரத்தைப் பெற்றுக் கொள்வேன். அந்தவகையில் இப்போது உங்களுடனும் உறவு வைத்துக் கொண்டதற்கு அடையாளமாக நீங்களும் கூட ஆளுக்கொரு மோதிரத்தை எனக்கு இப்போதே தந்தாக வேண்டும்" என்று கூறினாள்.

அதைக் கேட்ட சகோதரர்கள் இருவரும் தங்களது கைகளில் இருந்த மோதிரத்தை கழற்றி அந்த அழகியிடம் கொடுத்தனர்.

"இத்துடன் நூறு!" என்று கூறி குறும்பாக சிரித்தபடி அந்த மோதிரத்தைத் தனது மாலையில் சேர்த்துக் கொண்டாள் அந்த அழகி. பின்னர் தனது சோகக் கதையை அந்த சகோதரர்கள் இருவரிடமும் இவ்வாறு பகிரத் தொடங்கினாள்.

"நான் ஒரு வணிகனின் மகள். நான் வயதுக்கு வந்தவுடனேயே எனக்குத் திருமணம் நிச்சயம் செய்தார்கள். என்னுடைய தந்தையின் எண்ணம் போல் எனக்கு அழகிற் சிறந்த ஒரு மணமகனை தேர்வு செய்து அவனுடன் எனக்குத் திருமணத்தை நடத்தினார்கள். அந்தத் திருமணமும் மிகவும் கோலாகலமாக நடந்தது. எங்கள் முதல் இரவை நடத்துவதற்கு ஒரு எட்டடுக்கு மாளிகையை ஏற்பாடு செய்து இருந்தார்கள். உண்மையைச் சொல்ல வேண்டும் என்றால் நானும் ஆசை, ஆசையாகக் காத்துக் கொண்டு தான் இருந்தேன். அதன் படி எனது கணவரும் எனது அறைக்குள் வந்தார். அவர் ஆசையுடன் என்னை நெருங்கினார்.

அந்த நேரம் பார்த்து எங்கிருந்தோ வந்த இந்தக் கிழட்டுப் பூதம் எனது உடல் வனப்பில் ஆசை கொண்டு திடீர் என எங்களது அறைக்குள் வந்தது. நான் பூதத்தைப் பார்த்து அலறினேன். உடனே எனது கணவர் வாளை எடுத்தார். அதற்குள் இந்தப் பாழாய்ப் போன பூதம் எனது கணவரைக் கொன்று விட்டது. அத்துடன் என்னையும் கவர்ந்து சென்று விட்டது. இதெல்லாம் போதாது என்று என்னை ஒரு பெரிய பேழையில் வைத்துப் பூட்டி அந்தப் பேழையை இன்னொரு ஏழு அடுக்குப் பெட்டகத்தில் வைத்துப் பூட்டி தனது மந்திர சக்தியைப் பயன்படுத்தி இந்தக் கடலுக்குள் கொண்டு வைத்து விட்டது. என்ன செய்ய? இப்படியாக எனது விதி தெய்வத்தால் நிர்ணயிக்கப் பட்டு விட்டதே என்று இரவு, பகலாக கண்ணீர் சிந்திக் கொண்டு இருந்தேன்.

இந்தக் கிழட்டு பூதமோ, அதுவும் என்னை சந்தோஷப்படுத்தாமல், அடுத்தவரையும் நான் சந்தோஷப்படுத்த விடமால் கடுமையான கட்டுக் காவலில் வைத்து இருந்தது. அத்துடன் அதனுடைய காவலில் என்னுடயே கற்பும், நேர்மையும் காப்பாற்றப்படும் என்று எண்ணிக் கொண்டு இருக்கிறது. அவ்வப் போது கடலில் இருந்து நான் வைக்கப்பட்டு இருக்கும் பெட்டியுடன் வெளியே வந்தால் இந்த மரத்தடியில் தான் எனது மடி மீது தலை வைத்துப் படுத்து உறங்கும்.

நான் அப்போது இந்த வழியே செல்லும் அழகான வாலிபர்களை அழைத்து அவர்களுடன் உடலுறவு கொண்டு மகிழ்ச்சி அடைவேன்" என்று கூறிய அவள், பூதம் விழிக்கும் நேரம் வந்து விட்டது என்று கூறவும் அவர்கள் இருவரும் அவ்விடத்தை விட்டு விரைவாக புறப்பட்டுச் சென்றனர். சகோதரர்கள் இருவரும் செல்லும் சமயத்தில் அந்த அழகி கூறிய வார்த்தைகளை நினைத்தபடி சென்றார்கள். அப்போது ஷாரியர் தனது தம்பியிடம்," பூதத்தின் கதியே இதுபோன்று இருந்தால், நாம் அனைவரும் சாதாரண மனிதர்கள். நமது நிலை தான் என்ன? சரி இப்போது எனக்கு ஞானம் பிறந்து விட்டது. இனி நான் மாளிகைக்கு சென்று ஒரு நல்ல முடிவை எடுக்கிறேன்" என்று கூறினார்.

பின்னர் ஷாரியர் அரண்மனையை அடைந்ததும் தனது தம்பியை முறைப்படி அவனது நாட்டிற்கு வழி அனுப்பி வைத்தான். பிறபாடு தனது மனைவியையும் அவளுடன் ஆடிக் களித்த அந்த அடிமையையும் அழைத்து அவர்கள் இருவரையும் தனித்தனியே கண்களைத் தோண்டி விஷயம் வெளியில் தெரியாமல் உயிருடன் புதைத்தான்.

அன்றைய தினம் முதல் ஷாரியர் அனைத்துப் பெண்களையும் வெறுக்கத் தொடங்கினான். அத்துடன் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பெண்ணை மணப்பான். அன்று ஒரு நாள் மட்டும் அவர்களுடன் உல்லாசமாக இருப்பான். மறுநாள் காலையில் அந்தப் பெண்ணின் தலை துண்டிக்கப்படும். இப்படியே சுமார் ஆயிரத்துக்கும் மேற்பட்ட பெண்களைக் கொன்றான் ஷாரியர்.

இப்படியே மூன்று ஆண்டுகள் ஓடியது. இந்தக் கொடுமையை தட்டிக் கேட்க முடியாமல் மனம் பதை பதைத்தனர் மக்கள். தங்கள் வீட்டுப் பெண்கள் வயது வந்தவுடன் யாருக்கும் சொல்லாமல் வீட்டிலேயே வைத்துப் பூட்டினார்கள். இன்னும் சிலர் பெண் பிள்ளை பிறந்த மாத்திரத்தில் அந்த ஊரை விட்டே சொல்லாமல், கொள்ளாமல் ஓடத் துவங்கினார்கள். அத்துடன் இதைப் போன்ற கொடுமையை நடத்தும் மன்னனை ஆண்டவன் தான் தட்டிக் கேட்க வேண்டும் என்று வேறு பிரார்த்தனை செய்தார்கள் அந்நாட்டு மக்கள். அந்நாட்டு அப்பாவி மக்களால் வேறு என்ன தான் செய்ய முடியும்? பாவம்.

## ஷாரஜாத் என்னும் அழகிய நங்கையின் துணிச்சல்

மன்னர் ஷாரியருக்கு தினமும் ஒரு பெண்ணை தேடிக் கொண்டு வந்து கொடுக்க வேண்டியது தான் அந்நாட்டு அமைச்சரின் தினசரி வேலையாக இருந்தது. இன்னும் சொல்லப் போனால் அவர் அமைச்சர் வேலையை விட இந்த வேலையைத் தான் அதிகம் பார்த்தார். இதனால் அந்த அமைச்சரையும் மக்கள் சபித்தனர். அந்த அமைச்சருக்கு இரு மகள்கள் இருந்தனர். அதில் மூத்தவள் பெயர் ஷாரஜாத். இளையவள் பெயர் துன்யாஜாத் தந்தையை ஊர் மக்கள் திட்டுவதை ஷாரஜாத்தால் தாங்க முடியவில்லை. பல முறை தனது தந்தையிடம் இது பற்றிப் பேசிப் பார்த்தாள். ஆனால் அவரோ அரச கட்டளையை தன்னால் மறுக்க முடியாது என்று கூறி மகள் கூறிய வார்த்தையைக் கூட காதில் வாங்க வில்லை.

இப்படி இருக்கும் சமயத்தில் தான் ஒரு நாள் அமைச்சர் எவ்வளவோ முயற்சி செய்து பார்த்தும் எந்தப் பெண்ணும் அன்று அரசருக்குக் கிடைக்கவில்லை. என்ன தான் செய்யலாம் என்று எண்ணிய அமைச்சர் தன்னுடைய இல்லத்திற்கு வந்து வேதனைப் பட்டுக் கொண்டு இருந்தார்.

அப்போது மூத்த பெண்ணான ஷாரஜாத் தந்தையை நெருங்கி விஷயத்தை அவரிடம் கேட்டுத் தெரிந்து கொண்டாள். ஷாரஜாத் அழகில் மட்டும் அல்ல, கல்வியிலும் சிறந்தவள். அவளுக்குத் தெரியாத விஷயங்களே இல்லை. அவ்வளவு அறிவு படைத்தவளாக அவள் திகழ்ந்தாள்.

தந்தையின் கவலையைக் கேட்டுத் தெரிந்து கொண்ட ஷாரஜாத் தந்தையிடம், "தந்தையே தாங்கள் கவலை கொள்ள வேண்டாம். இன்றே உங்கள் மன்னருக்கு என்னைத் திருமணம் செய்து வையுங்கள். அவரால் எனக்கு எந்தவிதத் தொந்தரவும் ஏற்படாமல் நான் பார்த்துக் கொள்கிறேன் அல்லது என்னுடைய உயிரைக் கொடுத்தாவது நமது சமூகத்தில் உள்ள கன்னிப் பெண்களை நான் காப்பாற்றுவேன்" என்றாள்.

மகள் ஷாரஜாத் கூறிய வார்த்தைகளைக் கேட்ட அமைச்சர் உண்மையிலேயே பயந்து தான் போனார். அத்துடன் அவள் கூறிய

வார்த்தைகளைக் கேட்டு மிகவும் வேதனை அடைந்தார். மேலும், மகளின் விருப்பத்தை அவர் எதிர்த்தார். அத்துடன் தனது மகளிடம், "நீ மன்னரை மணந்தால் அவர் முதல் இரவு முடிந்த அடுத்த நாளே உன்னைக் கொன்று விடுவார். உன்னை இழக்க நான் சம்மதிக்கவே மாட்டேன்" என்று கூறிக் கலங்கினார்.

இப்படியாகத் தனது தந்தை கூறிய பின்னரும் கூட ஷாரஜாத்தின் மனம் மாறவில்லை. அவள் மன்னரை மணந்து கொள்வதில் பிடிவாதமாகவே இருந்தாள். உடனே அந்த அமைச்சர் தனது மகளிடம்," மகளே நான் உன்னிடம் ஒரு கதையைக் கூறுகிறேன். அதனைக் கேட்ட பிறகு முடிவு செய்து கொள்" என்று கூறினார்.

ஷாரஜாத்தும் அந்தக் கதையைக் கேட்க சித்தம் கொண்டாள். அதன் படி அந்த அமைச்சர் கதையைக் கூறத் தொடங்கினார்.

# ஷாரஜாத்திடம் அவளது தந்தை சொன்ன கதை

ஒரு ஊரில் பணக்கார வியாபாரி ஒருவன் வாழ்ந்து வந்தான். அவன் அந்நாட்டு அரசனுக்கு நிகரான செல்வத்தைப் படைத்தவன். அவனிடம் பல வேலையாட்கள் பணி புரிந்து வந்தனர். அத்துடன் அவன் பல்வேறு கால் நடைகளை வளர்த்து வந்தான். மேலும் அவன் அதீத இறை அருளைப் பெற்று இருந்தான். அதனால் அனைத்து ஜீவ ராசிகளும் தங்களுக்குள் பேசிக் கொள்வதை உணர்ந்து இருந்தான்.

அப்போது ஒரு நாள் தொழுவத்திற்கு அந்த வியாபாரி வந்த சமயத்தில் தனித்தனியே ஒரு எருதும், கழுதையும் கட்டப்பட்டு இருந்தது. அவை இரண்டும் பேசிக் கொண்டு இருப்பதைக் கேட்டான். அதன் படி முதலில் எருது தனது கஷ்டத்தைக் கழுதையிடம் கூறத் தொடங்கியது.

"கழுதையே! உண்மையில் நீ கொடுத்து வைத்தவன். காரணம் பெரும்பாலும் நீ தொழுவத்தில் தான் கட்டப்பட்டு இருக்கிறாய். உன்னை அன்புடன் கவனித்துக் கொள்ள நமது முதலாளியின் ஆட்கள் எல்லோரும் இருக்கிறார்கள். ஆனால் எனது நிலையைப் பார். படாத பாடு பட்டு வருகிறேன். ஏரில் கட்டி என்னை உழ வைக்கிறார்கள். அத்துடன் வலுவான நுகத்தைச் சுமந்து சுமந்து என் கழுத்து கூடப் புண்ணாகி விட்டது. இவ்வளவு கஷ்டப்பட்டும் கூட எனக்கு என்ன பயன்? காய்ந்து போன வைக்கோலைத் தானே உணவாகக் கொடுக்கிறார்கள். என்னால் இந்தக் கொடுமையை தாங்கிக் கொள்ள முடியவில்லை" என்று கண்களில் கண்ணீர் மல்க வேதனையுடன் தெரிவித்தது.

உடனே எருதின் வார்த்தையைக் கேட்ட அந்தக் கழுதை, எருதிடம் "எருதே! நீ கவலை கொள்ளாதே! நான் கூறுகிற படி நீ செய். நாளைய தினம் உன்னை வயல் உழுவதற்குக் கொண்டு போவார்கள் அல்லவா, அப்போது வேண்டும் என்றே முடியாது என்று படுத்து விடு. அப்படியாக நீ படுத்துக் கொண்டால் உன்னை யாரும் ஏரில் கட்டி உழ மாட்டார்கள். அப்படி ஒரு வேலை சில வேலையாட்கள் உன்னை அடித்தாலும் நீ எழுந்து விடாதே. வயலில் இருந்து உன்னை மீண்டும் தொழுவத்திற்கு அழைத்துச் சென்று கட்டிப் போட்டு தீனி கொடுத்தாலும் நீ அதனை சாப்பிடாதே. மாறாக முகர்ந்து பார்த்து விட்டு அமைதியாக ஒதுங்கி

விடு. பிறகு தண்ணீரை குடிக்க வைக்க முயற்சி செய்வார்கள். அதையும் நீ குடித்து விடாதே. அப்போது தான் உண்மையிலேயே உனக்கு ஏதோ உடல் நிலைக் கோளாறு என்று நினைத்து மேற்கொண்டு உன்னைத் துன்புறுத்த மாட்டார்கள். அத்துடன் நீ குறைந்தது இரண்டு மூன்று நாட்களாவது நிம்மதியாக இருக்கலாம்" என்றது.

இப்படியாக அந்த இரண்டு விலங்குகளின் சம்பாஷணையை கேட்ட அந்த வியாபாரி பொல்லாத கழுதையின் புத்திக்கு பாடம் கற்பிக்க வேண்டும் என்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டான்.

மறு நாள் காலை விடிந்தது வியாபாரின் வெளியாட்கள் எருதை வயல் வெளிக்கு ஒட்டிக் கொண்டு சென்றார்கள். அங்கு எருது கழுதையின் சொல்படியே நடந்து கொண்டது. அத்துடன் பயங்கரமாக முரண்டு பிடித்தது. அதனால் அந்த வியாபாரியின் வேலையாட்கள் செய்வதறியாது திகைத்தார்கள். அத்துடன் அவர்களால் முடிந்தவரையில் முயன்றார்கள். எருதை முதலில் அடித்துப் பார்த்தார்கள். பிறகு வைக்கோலும், தண்ணீரும் வைத்துப் பார்த்தார்கள். ஆனால், ஒன்றும் நடக்கவில்லை. அந்த எருது அவற்றை முகர்ந்து கூடப் பார்க்கவில்லை. அது ஒரு கட்டத்தில் நெடுஞ்சான் கிடையாக படுத்துக் கொண்டது. பிறகு எப்படியோ கஷ்டப்பட்டு அந்த எருதை ஒட்டிக் கொண்டு போய் தொழுவத்தில் கட்டினான் வேலையாட்களில் ஒருவன். அத்துடன் தனது முதலாளியிடம் (அதாவது அந்தப் பணக்கார வியாபாரி) சென்று விஷயத்தைக் கூறினான். அந்த வியாபாரிக்குத் தான் எல்லாமே தெரியுமே. அதனால் தனது வேலையாளிடம், "நீ இனிமேல் எருதை தொந்தரவு செய்யாதே மாறாகக் கழுதையை ஒட்டிக் கொண்டு போய் அதனை வைத்து முடிந்தவரையில் ஏர் உழுது விட்டு வா" என்றான்.

தன் முதலாளி கூறிய மேற்கண்ட வார்த்தைகளைக் கேட்ட அந்த வேலையாள் சற்றே திகைத்தான். காரணம் அவன் கழுதையைக் கொண்டு நிலத்தை உழுவது குறித்துக் கேள்விப் பட்டதே இல்லை. எனினும், தனது முதலாளி கூறினால் அதனை மீறக் கூடாது என்ற எண்ணத்தில், தொழுவத்தில் நன்றாக ஓய்வெடுத்துக் கொண்டு இருந்த கழுதையை ஓட்டிச் சென்று ஏர் பூட்டி உழுதான். அன்றைய தினம் முழுவதும் கழுதைக்கு சோதனை தினமாக இருந்தது. எருதை நடத்தியது போல அந்தக் கழுதையை நடத்தினான் அந்த வேலையாள். அதனை சவுக்கால் விளாசி எடுத்தான். அந்தக் கழுதையோ வலி தாங்க முடியாமல்

கனைத்தது. அது செய்வதறியாது அன்றைய தினம் முழுவதும் வேதனையை அடைந்து களைத்துப் போய் மாலையில் தொழுவம் வந்து அடைந்தது. அதனால் நடக்கக் கூட முடியவில்லை.

மறுபுறம் எருதுக்கு நன்றாக ஓய்வு கிடைத்தது. அத்துடன் அது வயிறார புல்லையும் வைக்கோலையும் தின்று தீர்த்தது. தனக்கு இந்த அருமையான வாய்ப்பை உண்டு பண்ணிக் கொடுத்தது கழுதை தான் என்று எண்ணிய எருது மனமார கழுதையை வாழ்த்தி அது வந்த மாத்திரத்தில் நன்றியையும் உடன் தெரிவித்து மகிழ்ந்தது. ஆனால், கழுதைக்கோ ஆத்திரம் தாங்க முடியவில்லை. எல்லாம் தனது வாய்க் கொழுப்பினால் விளைந்தது தான் என்பதை அது நன்கு உணர்ந்து கொண்டது. பிறகு சற்று நேரம் அமைதியாக நின்றபடி "இனி மறுநாளும் வயலுக்குச் சென்று உழ முடியாது என்ன செய்யலாம்" என்று வருத்தத்துடன் யோசிக்கத் தொடங்கியது. அதன் முடிவில் ஏதாவது தந்திரம் செய்து தான் எருதை வயலுக்குப் போகச் செய்ய வேண்டும் என்று எண்ணிக் கொண்டு மெல்ல எருதிடம் பேச்சுக் கொடுக்கத் தொடங்கியது.

"எருது சகோதரா! நான் உனது நல்ல நண்பன் என்பதை நீயும் அறிவாய் அல்லவா? தவிர நான் உனக்கு நல்லதைத் தான் சொல்லுவேன் என்பதும் கூட உனக்குத் தெரியும் இல்லையா? அதனால் நாளை காலையிலும் நீ இது போல அடம் பிடித்தபடி படுத்துக் கிடந்தால் உனக்குப் பெரும் துன்பம் வந்து சேரும். அது எப்படி எனில், உன்னைக் கசாப்புக் கடைக்காரனிடம் விற்று விடுவார்கள். அவன் உன்னை அடித்தே கொன்று விடுவான். ஏனெனில் தனக்குப் பயன் இல்லாத ஒன்றை மனிதர்கள் ஒருபோதும் வைத்துக் கொள்ள மாட்டார்கள். அதனால் தான் நான் சொல்கிறேன், நீ ஒழுங்காக நாளை உன்னை தொழுவத்தில் இருந்து அழைத்துச் சென்ற மாத்திரத்தில் உடனே புறப்பட்டு ஏர் உழுது உனது இந்த உயிரைக் காப்பாற்றிக் கொள்" என்று கூறியது. அப்போது அங்கு வந்த அந்தப் பணக்கார வியாபாரி கழுதை சொல்லிக் கொண்டு இருந்ததைக் கேட்டு விட்டான். எனினும், எதையும் காட்டிக் கொள்ளாமல் மெல்ல தனது வீட்டிற்குச் சென்று உண்டு உறங்கினான்.

அடுத்த நாள் கலையில் வியாபாரி மீண்டும் அந்தத் தொழுவத்திற்கு வந்தான். அப்போது அவனது மனைவியும் அங்கு நின்று கொண்டு இருந்தாள். மறுபுறம் வேலையாள் வந்து வழக்கம் போல தினசரி

வேலைக்கு எருதை அவிழ்த்தான். எருதானது காசாப்பு கடைக்குத் தான் தன்னை கொண்டு செல்வதாக நினைத்துக் கொண்டு அந்த வியாபாரியின் பக்கத்தில் சென்று அவனது காலடியை நக்கியது. அத்துடன் அந்த வேலையாளுடன் முழுவதுமாக ஒத்துழைத்தது. அச்சமயத்தில் கழுதை முந்தய தினம் பேசியதை மனதில் கொண்டவனாய். இப்போது எருதின் நடவடிக்கையைக் கண்டு சிரித்துக் கொண்டான் அந்த வியாபாரி. வியாபாரி சிரித்ததை பார்த்த அவனது மனைவி," ஏன் இவ்விதம் சிரிக்கின்றீர்கள்?" என்று வினவினாள். ஆனால், அவனோ நடந்தது எதையும் சொல்ல முடியாமல் தவித்தான். காரணம் அது தேவ ரகசியம். அதன் படி நடந்ததை சொன்னால் அந்த வியாபாரி அடுத்த கணம் மரணம் அடைய நேரிடும்.

எனவே மேற்கண்ட காரணத்தால் அந்த வியாபாரி எதையும் கூறாமல் அமைதியாக நின்று கொண்டு இருந்தான். ஆனால், அவனது மனைவியோ விடுவதாக இல்லை. பல முறைத் தனது கணவனிடம் துருவித் துருவி கேட்டாள்.

வியாபாரி தனது மனைவியிடம், "இதோ பார் காரணத்தைக் கேட்காதே! நான் உண்மையில் கண்டதையும் கேட்டதையும் நினைத்தே சிரித்தேன். அதற்கு மேல் இது பற்றி என்னிடம் எதுவும் நீ கேட்காதே!" என்று கண்டிப்புடன் கூறினான்.

ஆனால் வியாபாரியின் மனைவியோ அவனை விடுவதாக இல்லை. மீண்டும் அவனை நச்சரிக்கத் தொடங்கினாள். அதன்படி அந்த வியாபாரியிடம், "அந்த கண்டதையும், கேட்டதையும் தான் கொஞ்சம் சொல்லுங்களேன். நானும் அதை கேட்கிறேன்" என்றாள். அத்துடன் அவனைத் துளைத்து எடுத்தாள்.

வேறு வழி இன்றி அந்த வியாபாரி தனது மனைவியிடம், "இதோ பார் என்னிடம் எதையும் கேட்காதே. நான் உன்னிடம் எதையும் கூற முடியாது. கூறினால் எனது உயிருக்கு ஆபத்து. இத்துடன் இதனை அப்படியே விட்டு விடு" என்றான்.

ஆனால் எதையுமே அந்த வியாபாரியின் மனைவி கேட்பதாக இல்லை. மீண்டும், மீண்டும் அந்த வியாபாரியிடம் அந்த ஒரே விஷயத்தையே கேட்டுக் கொண்டு  இருந்தாள். இவளை எப்படி சமாளிப்பது என்று யோசித்தான் அந்த வியாபாரி. இந்தக் காட்சிகளை எல்லாம்

அவ்விடத்தில் மேய்ந்து திரிந்த கோழிகளும், சேவல்களும் பார்த்துக் கொண்டு இருந்தன.

அப்போது அங்கிருந்த சேவல் தனது பெட்டைக் கோழியிடம்,” ஏன் இவர் இப்படிப் பணிந்து பேசிக் கொண்டு இருக்கிறார்? தனது மனைவியைக் கட்டுப் படுத்த முடியாத ஆண்கள் எல்லாம் ஆண்களா? இதுவே நான் இவரது இடத்தில் இருந்தால் மரத்தில் இருந்த ஒரு கொம்பை ஒடித்து அவளைக் கதறக், கதற உதைத்து இருப்பேன்" என்றது.

சேவல் கூறியதைக் கேட்ட அந்த வியாபாரி, அது தான் சரியான வழி என்று எண்ணினான். அத்துடன் உண்மையைக் கூறி அவன் சாக விரும்பவில்லை. அதனால் மெல்லச் சென்று மரத்தில் இருந்த ஒரு கொம்பை ஒடித்துக் கொண்டு வந்து மனைவியை "கேட்பியா? கேட்பியா?" என்று கூறியவாறு நைய்யப் புடைத்தான். அவளோ வலியைத் தாங்க முடியாமல் அழுதபடி "கேட்க மாட்டேன், கேட்க மாட்டேன்" என்று கூறிக் கண்ணீர் வடித்தாள்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு தனது கணவருடன் நல்ல முறையில் வாழ்ந்தாள் அந்த வியாபாரியின் மனைவி. அத்துடன் அன்றைய தினத்தில் இருந்து எதையும் கட்டாயம் கூறத் தான் வேண்டும் என்று முரண்டு பிடிக்க மாட்டாள்; அவர்களது குடும்பமும் மிக அமைதியாக நடந்து வந்தது.

இப்படியாக மேற்கண்ட கதையை கூறி முடித்த அந்த அமைச்சர். தனது மகள் ஷாரஜாத்திடம், "அருமை மகளே, நீ புத்திசாலி அனைத்தையும் அறிந்தவள். ஒரு வேளை, நீ நான் சொல்வதைக் கேட்காமல் அடம் பிடித்தாய் என்றால் நானும் அந்த வியாபாரியைப் போல உன்னிடம் நடந்து கொள்ள வேண்டி வரும்" என்றார்.

அதற்கு ஷாரஜாத், "தந்தையே தாங்கள் என்னை அடித்தாலும் நான் அதைப் பற்றி எல்லாம் கவலைப் பட மாட்டேன். அத்துடன் எந்தத் துன்பம் வந்தாலும் நான் சந்திக்கத் தயார். நான் மன்னரை மணக்க முடிவு செய்து விட்டேன். அவரை என்னால் மாற்ற இயலும் என நான் நம்புகிறேன். இது வரையில் ஆயிரக்கணக்கான பெண்கள் மன்னரின் கோபத்தால் இறந்து விட்டார்கள். இனி வரும் காலங்களில் நான் அவ்வாறு நடக்க விட மாட்டேன். மேலும், ஒரு வேளை தாங்கள் எனது

திருமணத்தை மன்னருடன் நடத்த மறுத்தால் நானே அரண்மனைக்குச் சென்று மன்னரிடம் பேசி அவரை மணந்து கொள்வேன்" என்று தனது தந்தையிடம் திட்டவட்டமாக கூறிவிட்டாள்.

இனியும் தனது மகளிடம் பேசி எந்த விதப் பிரயோஜனமும் இல்லை என்ற முடிவுக்கு வந்தார் அமைச்சர். அதனால் அவரே தனது மகளின் திருமணத்தை நடத்தும் பொருட்டு மன்னரை சந்தித்து உடனுக்குடன் விஷயத்தை அவரிடம் தெரிவித்தார்.

தனது அமைச்சர் கூறியதை பொறுமையாகக் கேட்டார் மன்னர் ஷாரியர். பிறகு அமைச்சரிடம் "அமைச்சரே, தங்கள் மகளை நான் இன்று மணந்து கொண்டாள். நாளை காலை அவளை நான் கொன்று விடுவேன். ஏனெனில் நான் பெண்களை வெறுக்கிறேன். அதில் உங்கள் மகள் மட்டும் விதி விலக்கா என்ன?" என்றார்.

மன்னரின் வார்த்தைகளைக் கேட்ட அமைச்சர், "எனது மகளின் உயிர் அல்லாவின் கரங்களில் உள்ளது. அவர் ஏதேனும் வழியை அவளுக்கு வைத்து இருப்பார். அதனால் அவர் மீது நான் கொண்ட நம்பிக்கையின் அடிப்படையில் எனது மகளைத் தங்களுக்கு மணம் முடித்து வைக்கத் தயார்" என்றார்.

அதைக் கேட்ட மன்னர் ஷாரியார், "எனில் எனக்கு எந்தவிதமான ஆட்சேபணையும் இல்லை, அவளை உடனே நான் திருமணம் செய்து கொள்ளத் தயார். அவளை மணமகள் கோலத்தில் அலங்கரித்து அழைத்து வாருங்கள்" என்றார்.

அதைக் கேட்ட அமைச்சர், மன்னரிடம் விடை பெற்றுத் தனது இல்லம் திரும்பி ஷாரஜாத்திடம் மன்னர் கூறிய வார்த்தைகளைக் கூறினார். உடனே ஷாரஜாத்தும் தன்னை மணமகள் உடையில் அழகாக அலங்காரம் செய்து கொண்டாள். அத்துடன் புது மணப்பெண்ணாய் அரண்மனைக்குச் செல்ல தயார் ஆனாள். இதற்கு இடையில் தனது அருமைத் தங்கையை அழைத்து அவளிடம்," அன்புத் தங்கையே, நான் இன்று இரவு அரசருக்கு மனைவியாகப் போகிறேன். அரண்மனையின் பள்ளி அறையில் இருந்த படி உன்னை அங்கு அழைத்து வருவதற்கு ஆள் அனுப்புவேன். அப்போது நீ அங்கு வந்து சாதரணமாக என்னிடம் பேசுவது போல ஒரு கதையைக் கேட்க வேண்டும். நானும் கதையை சொல்ல ஆரம்பிப்பேன். ஒரு வேளை நான் சொல்லும் அந்தக் கதை

நமது மன்னரின் மனத்தைக் கூட மாற்றலாம். ஒரு வேளை, நான் உன்னை அழைப்பதற்கு தாமதம் ஆனாலும் தயவு கூர்ந்து உனது இந்த அக்காவின் பொருட்டு நீயே அரண்மனைக்கு வந்து விடு" என்றாள்.

தனது அக்காள் ஷாரஜாத்தின் வார்த்தைகளைக் கேட்ட துன்யாஜாத் அக்காவின் சொல்லுக்கு கட்டுப்பட்டு கண்டிப்பாக அவள் அங்கு வருவதாக வாக்களித்தாள். பிறகு ஷாரஜாத் தனது தந்தையுடன் அரண்மனையை அடைந்தாள். உடன் ஏராளமான ஒட்டகங்களை பரிசுப் பொருட்களுடன் இஸ்லாத்தின் வழக்கப்படி மன்னர் தனது புது மனைவிக்கு சீதனமாகக் கொடுத்தார். ஷாரஜாத் அதனைத் தனது தந்தைக்கு அளித்தாள். மகளின் விருப்பப் படி அப்பொருட்களை அரை குறை மனதுடன் பெற்றுக் கொண்ட அமைச்சர். தனது மகளை பாசத்துடன் பார்த்தபடி கண்களில் நீர் வடிய காணப்பட்டார். பிற்பாடு பலர் கூடி நிற்க மன்னருக்கும், அமைச்சரின் அன்பு மகளான ஷாரியத்துக்கும் நல்ல முறையில் நிக்கா (திருமணம்) நடந்தேறியது. அதில் அந்த ஊரே கலந்து கொண்டது.

பிற்பாடு மணமகள் ஷாரஜாத் படுக்கை அறைக்குத் தோழிகள் புடை சூழ அழைத்துச் செல்லப் பட்டாள். அவளுக்காகப் படுக்கை அறையில் காத்திருந்த அரசர் ஷாரியர் அவளது அழகில் மயங்கி தன்னையே அதில் பறிகொடுத்தார். அதன் காரணமாய் அவ்விருவரும் நீண்ட நேரம் இன்பத்தை அனுபவித்தனர். அதிலும் ஷாரஜாத் வித்தியாசமான பெண்ணாக இருந்தாள். பல விதங்களில் அவள் மன்னரைக் கவர்ந்தாள்.

"இத்தனை நாள் நாம் மணந்து இன்பம் துய்த்த பெண்களில் இவள் வித்தியாசமான பெண்ணாக இருக்கிறாளே, எனினும் விடிந்தால் இவளையும் இழக்க வேண்டிய நிலை வந்து விடுமே" என்று மன்னர் ஷாரியாரே கொஞ்சம் மனம் கலங்கினார். அப்படியாக ஷாரஜாத் மன்னரிடம் நாசுக்காக குறிப்பறிந்து நடந்து கொண்டாள். பின்னர் பல முறை இருவரும் சங்கமித்துக் களைத்தனர். இறுதியில் ஷாரஜாத் மன்னரிடம்," அன்பரே, எப்படியும் விடிந்தால் நான் சாகப் போவது உறுதி. அதில் எந்த மாற்றமும் இல்லை என்பதை நான் நன்கு அறிவேன். இப்போது தங்களிடம் எனது கடைசி ஆசையாக ஒன்றைக் கேட்பேன். என் பொருட்டு அதனைத் தாங்கள் நிறைவேற்றி வைப்பீர்களா?" என்று கேட்டாள்.

அப்போது மன்னர் ஷாரியர் அவள் மீது பரிதாபம் கொண்டார். அதனால்

அவளிடம், "எனது அன்புக்கு உரியவளே, நாளைய தினம் நீ மரணிக்கப் போவதால், நீ என்னிடம் இருந்து எதை வேண்டுமானாலும் கேட்கலாம். உனக்கு அது மறுக்கப்படாது. இப்போதே அது நிறைவேற்றித் தரப் படும்" என்றார்.

"அரசே! தங்களைத் திருமணம் செய்யப் போகும் ஆவலில் நான் எனது தங்கை துன்யாஜாத்திடம் கூட சரியாகப் பேசாமல் வந்து விட்டேன். அவள் என்னைத் தவறாக நினைக்கக் கூடும். அதனால் நான் அவளைக் காண உடனே ஏற்பாடு செய்து தர வேண்டும்" என்று ஷாரஜாத் கண்ணீர் மல்க அரசர் ஷாரியரிடம் வேண்டிக் கேட்டுக் கொண்டாள்.

உடனே அரசர் ஷாரியர், ஷாரஜாத்தை கட்டி அணைத்தபடி, "அன்பே! உனது கோரிக்கை உடனே நிறைவேற்றப்படும். இதோ நான் உனது தங்கையை இங்கு அழைத்து வரச் சொல்கிறேன்" என்றார்.

பின்னர் தனது காவலர்களை அழைத்தார். அவர்களும் அரசரின் குரல் கேட்டு ஓடி வந்தார்கள். அவர்களிடம், "இதோ பாருங்கள் நீங்கள் உடனே சென்று ஷாரஜாத்தின் தங்கை துன்யாஜாத்தை அழைத்து வாருங்கள்" என்று கூறினார். அதன் படி காவலர்களும் விரைந்து சென்று துன்யாஜாத்தை அழைத்து வந்தார்கள். உண்மையில் அவள் முன்னேற்பாடுடன் தயாராகத் தான் இருந்தாள்.

பிறகு அரண்மனையை அடைந்த துன்யாஜாத் மன்னரை வணங்கினார். அப்போது ஷாரியர், "இதோ பார் துன்யா! உனது அக்கா உன்னிடம் சரியாகப் பேசாமல் வந்து விட்டதாகக் கூறினாள். அதற்காகத் தான் உன்னை இந்த இரவு வேளையில் அழைத்து வரச் சொன்னேன். உன்னுடன் பேச உனது அக்காள் ஆவலுடன் காத்துக் கொண்டு இருக்கிறாள். உடனே சென்று அவளுடன் கடைசியாகப் பேசி மகிழ்ந்து விடு" என்றார்.

உடனே துன்யாஜாத் ஓடிச் சென்று தனது அக்காளை கட்டி அனைத்துக் கொண்டாள். உடனே அவளிடம் அன்பாகப் பேசத் தொடங்கினாள்.

"அக்கா! என்னாலும் உன்னைக் காணாமல் இருக்க முடியவில்லை. நீ தினமும் என்னைக் கதை கூறித் தூங்க வைப்பாய் அல்லவா? அந்த வகையில் எனக்காக கடைசியாக இன்று ஒரே ஒரு கதையை மட்டும் கூறேன்" என்றாள்.

உடனே ஷாரஜாத் அருகில் இருந்த மன்னர் ஷாரியாரைப் பார்த்தாள். மன்னர் அவளது குறிப்பை உணர்ந்து கொண்டார். அதனால் அவளிடம், "நீ கதை சொல்வதால் எனக்கு எந்த விதத் தொந்தரவும் இல்லை. அத்துடன் நானும் கூட இப்போது உனது கதையைக் கேட்க விரும்புகிறேன். அவசியம் நீ உனது தங்கைக்காக இல்லாவிட்டாலும் இப்போது எனக்காக ஒரு அற்புதக் கதையை கூறித் தான் ஆக வேண்டும்" என்றார்.

"மன்னரின் ஆணையும் இப்போது கிடைத்து விட்டது. இனி என்ன தயக்கம்?" என்று துன்யாஜாத், ஷாரஜாத்திடம் கேட்க ஷாரஜாத் "ஆயிரத்தி ஒரு இரவுகள்" என்ற கதைகளில் முதல் கதையை சொல்லத் தொடங்கினாள்.

# வணிகனை மிரட்டிய கொலைகார பூதம்

ஒரு ஊரில் மிகப் பெரிய வணிகன் இருந்தான். அவனிடம் எப்போதுமே செல்வம் கரை புரண்டு ஓடியது. அப்படிப் பட்ட பணக்காரன்.

ஒரு முறை தனது வியாபாரத்தை பல ஊர்களுக்குப் பரப்ப வெளிநாடுகளுக்குப் பயணத்தை மேற்கொண்டான். அந்தப் பயணம் ஒவ்வொரு ஊரிலும் மகத்தான வெற்றியை அடைந்தது. இறுதியாக அஜ்மன் என்னும் இடத்தை அடைந்தான். அது ஒரு கோடை காலமாக இருந்ததாலும், அப்பிரதேசம் ஒரு பாலை வனமாக இருந்ததாலும் வெயில் அவ்விடத்தில் சற்று அதிகமாகவே சுட்டெரித்தது. அங்கு நீண்ட நடை பயணத்துக்குப் பிறகு ஒரு சின்னஞ் சிறிய பாலைவனச் சோலையை அடைந்தான். அங்கே ஒரு மரத்தின் அடியில் அமர்ந்தான். அப்படிப் பட்ட பாலைவனத்தில் அந்த சோலைவனம் அவனுக்கு வரப் பிரசாதமாக அதிலும் இறைவனின் கருணையாகவே தெரிந்தது. நிம்மதியாக அங்கு இளைப்பாறினான்.

அத்துடன் தனது பயணத்தின் களைப்பை போக்கிக் கொள்ள தன்னுடைய தோற்பையில் இருந்து ஒரு சில ரொட்டித் துண்டுகளையும் சில பேரிச்சம் பழங்களையும் எடுத்து உட்கொண்டான். பிறகு தாகம் தீர தனது தோல் பையில் இருந்து தண்ணீர் பையையை எடுத்துத் தண்ணீரை குடித்து முடித்தான். பின்னர் மீண்டும் பேரிச்சம் பழங்களை உண்ணத் தொடங்கினான். அதன் கொட்டைகளை சற்று வேகமாகவே விட்டெறிந்தான். அது எங்கெங்கோ போய் விழுந்தது.  அப்போது திடீர் என எங்கிருந்தோ ஒரு பெரிய ஒலி கேட்டது. அத்துடன் பயங்கரமான பேரொளி ஒன்று வானத்தில் தோன்றியது. அடுத்த சில நிமிடங்களில் ஒரு கருமை நிறம் கொண்ட பூதம் அந்த வணிகனின் முன்னாள் தோன்றியது. அதைக் கண்ட அந்த வணிகன் உண்மையில் பயந்து தான் போனான்.

அந்த பூதத்திற்கு எப்படியாவது ஏதேனும் காரணம் சொல்லி அந்த வணிகனை தின்று விட வேண்டும் என்ற ஆசை வந்தது.

அதனால் அந்த பூதம் அந்த வணிகனிடம் மிகவும் கோபமாகப் பேசத் தொடங்கியது, "அடே மரியாதையாக எழுந்திரு. நீ எனது மகனைக் கொன்று விட்டாய். அதனால் இப்போது நான் உன்னைக் கொல்லப்

போகிறேன். மேலும் நான் இப்போது அதற்காகத் தான் வந்துள்ளேன்" என்று கர்ஜித்தது.

பூதத்தின் இந்தப் பேச்சு அந்த வணிகனுக்கு மிகப் பெரும் ஆச்சர்யத்தைத் தந்தது. காரணம் அந்த பூதத்தை வணிகம் அப்போது தான் முதல் முறையாக சந்திக்கிறான். அப்படி இருக்கும் சமயத்தில் அவன் எவ்வாறு அந்த பூதத்தின் மகனைப் பார்த்து இருக்க முடியும்? பிறகு கொன்று இருக்க முடியும்?. இந்தக் கேள்வியை அந்த பூதத்திடமே இவ்வாறு கேட்டான் அந்த வணிகன்.

"நான் உனது மகனைப் பார்த்ததே இல்லை. அப்படி இருக்க எப்படி அவனைக் கொன்று இருக்க முடியும்? நீ சொல்வதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. விளக்கிச் சொல்" என்றான்.

"நீ பேரீச்சம் பழங்களைத் தின்று விட்டு வீசி எறிந்த கொட்டைகள் அப்போது நடந்து விளையாடிக் கொண்டு இருந்த எனது மகனுடைய மார்பில் பட்டு அவனைச் சாகடித்து விட்டன" என்றது பூதம்.

"நீயோ ஒரு பூதம் நான் எறிந்த பேரீச்சம் கொட்டைகளால் உனது மகன் இறந்து விட்டான் என்று கூறுவது என்னைப் பொருத்தவரையில் நம்ப முடியாமல் இருக்கிறது. எனினும் நீ கூரியபடித் தான் நடந்தது என்றால் அது தெரியாமல் நடந்த விஷயம் அதற்காக நான் மன்னிப்பு வேண்டுகிறேன். தயை கூர்ந்து என்னை மன்னித்து விடு" என்றான்.

எனினும் அந்த வணிகன் மேற்கண்ட படி வேண்டியும் கூட அந்தப் பூதம் அவனை மன்னிக்கத் தயாராக இல்லை.

"நான் உன்னைக் கொல்வதில் தீர்மானமாக இருக்கிறேன். அது தான் நான் உனக்கு அளிக்கும் தண்டனை" என்றே கூறி தனது கைகளில் வாளை வர வழைத்து அந்த வணிகனின் தலையை வெட்டச் சென்றது.

அப்போது மீண்டும் அந்த வணிகன் அந்த பூதத்திடம், "எனது கடைசி ஆசையைக் கூட நீ கேட்காமல் இப்படி என்னைக் கொல்லத் துடிப்பது அந்த இறைவனுக்கே அடுக்காது. குறைந்த பட்சம் எனது கடைசி ஆசையையாவது நிறைவேற்ற வாய்ப்பு கொடு" என்று மன்றாடிக் கேட்டான்.

உடனே அந்த பூதம், "நீ கடைசி ஆசை என்று சொல்லி விட்டாய்! தவிர இறைவனின் பெயரையும் கூறி என்னிடத்தில் மன்றாடிகிறாய். அதனால் உனக்கு ஒரு கடைசி வாய்ப்பை அளிக்கிறேன். நீ உனது கடைசி ஆசையை சொல். அது நிறைவேறிய பிறகு நான் உன்னைக் கொல்கிறேன்" என்றது.

உடனே அந்த வணிகன் தனது கடைசி ஆசையை அந்த பூதத்திடம் கூறத் தொடங்கினான்.

"பூதமே! நான் ஒரு வணிகன். எனக்கென்று ஏராளமான கடமைகள் காத்துக் கொண்டு இருக்கிறது. அவைகளை நான் முடிக்காமல் இறந்தால் எனது ஆத்மா சாந்தி அடையாது. மேலும் நான் பல பேருக்குப் பணம் கொடுக்க வேண்டி உள்ளது. அவற்றைக் கொடுக்காமல் இறந்தால் கடன்காரன் என்ற பழிச் சொல் எனக்கு வந்து சேரும். மேலும் நான் அந்தக் கடன்களை தீர்க்க வேண்டும் என்றால், பலரிடம் இருந்து எனக்கு வர வேண்டிய பணத்தைக் கொண்டே நான் அதனை தீர்க்க முடியும். இவை எல்லாவற்றையும் செய்து முடிக்க எனக்கு ஒரு வருட கால அவகாசம் கண்டிப்பாகத் தேவை. தயவு செய்து எனக்கு அந்த ஒரு வருட கால அவகாசத்தைக் கொடு. அடுத்த வருடம் இதே நாள், இதே வேளை, இல்லை... இல்லை ... முடிந்தால் கொஞ்சம் சீக்கிரமாகவே கூட வந்து விடுகிறேன். என் மீது கொஞ்சம் கருணைக்காட்டு என்றான்".

உடனே வணிகனின் பேச்சைக் கேட்ட அந்த பூதம், "ஒழிந்து போ. உன்னைப் பார்த்தாலும் பாவமாகத் தான் இருக்கிறது. உனக்கு ஒரு வருடம் மட்டுமே கால அவகாசத்தை தருகிறேன். அதற்குள் நீ மேற்கூறிய கடமைகளை எல்லாம் முடித்து விட வேண்டும். இல்லையேல் அதற்கு நான் பொறுப்பாக முடியாது. ஆனால், என்னை ஏமாற்றலாம் என்று மட்டும் நினைக்காதே. அது உனக்கு நல்லதல்ல. அப்படி நீ என்னை ஒரு வருடம் கழித்து ஏமாற்ற நினைத்தால் உனது குடும்பத்தையே தேடிக் கண்டு பிடித்துக் கொன்று தின்று விடுவன். சரி தானே!" என்றது.

"நான் கண்டிப்பாக ஒரு வருடம் கழித்து இங்கு வருவேன். நீ இதே நாள், இதே நேரத்தில் என்னை அடுத்த வருடத்தில் தாரளமாக எதிர்பார்க்கலாம். மேலும், உன்னை ஏமாற்றும் எண்ணம் எல்லாம் எனக்கு இல்லை. தயவு கூர்ந்து என் மீது கருணையைக் காட்டு" என்றான்.

இறுதியில் பூதமும் அந்த வணிகனின் வார்த்தைக்கு கட்டுப்பட்டு அவனை அனுப்பி வைத்தது. அதன்படியே அந்த வணிகனும் ஓராண்டு காலத்தில் அந்த இடத்திற்குச் சரியாக வந்து விட வேண்டும் என்ற எண்ணத்தில் தனது பணிகள் அனைத்தையும் வேக வேகமாக முடித்தான். எனினும், இன்னும் ஒரு வருடம் தான் தனது உயிர் இருக்கப் போகிறது என்பதை நினைத்து, நினைத்து வருந்தினான். தனது கடன்களை எல்லாம் வேக, வேகமாக அடைத்தான். பிள்ளைகளுக்கு சொத்துக்களை சரிபாதியாக பிரித்துக் கொடுத்தான். மனைவிக்கு ஆறுதல் கூறி, தான் இல்லாமல் எப்படி வாழ்வது என்பதைக் கற்றுக் கொடுத்தான். அவனுக்கு வர வேண்டிய பணத்தை எல்லாம் வசூல் செய்து வியாபரத்தை விரிவு படுத்தினான். இப்போது எல்லாமே அவனுக்கு திருப்தியாக இருந்தது. எல்லா வேலைகளையும் நல்ல படியாக முடித்து விட்டோம் என்ற எண்ணம் வரவே, ஒரு நாள் தனது பிள்ளைகளை அழைத்து அவர்களிடம் தான் யாத்திரைக்கு செல்வதாகக் கூறி முன்பு தான் சந்தித்த அந்த பூதத்தின் இருப்பிடம் நோக்கிப் புறப்பட்டான். அவன் பூதத்திடம் கேட்டு இருந்த அந்த ஓராண்டு கால தவணை கூடிய சீக்கிரத்தில் முடியப் போகும் நிலையும் வந்தது. குறிப்பிட்ட அதே நாளுக்கு சற்று முன்னதாகவே பூதத்தின் இருப்பிடத்தை அடைந்த வணிகன். அந்த பூதத்திடம் தனது உயிரை ஒப்படைக்கக் காத்துக் கொண்டு இருந்தான். வெகு நேரம் கழிந்து கொண்டு இருந்தது. வணிகனுக்கோ, மனதில் வருத்தம் 'அதற்குள் சாகப் போகிறோமா?' என்ற வருத்தம் தான். வேறு ஏதும் இல்லை.

இவ்விதம் அந்த வணிகன் சிந்தித்தபடி காத்துக் கொண்டு இருந்த சமயம் அந்தக் குறிப்பிட்ட இடத்துக்கு, சங்கிலியால் பிணைக்கப்பட்ட அரபிய மான் ஒன்றைக் கையில் பிடித்த வண்ணம் ஒரு கனவான் அங்கு வந்து சேர்ந்தார். அவருக்கு வயது எழுபதுக்கு மேல் இருக்கும். அவர் அவ்விடத்தில் அமர்ந்து இருந்த அந்த வணிகனிடம் பேசிப் பார்த்தார். அப்போது அந்த வணிகன் சோகத்துடன் தனது கதையை முழுவதுமாக அந்த மானுடன் வந்த முதல் கனவானிடம் கூறி முடித்தான்.

வணிகனின் கதையை முழுவதுமாகக் கேட்டு முடித்த கனவான் அவனுக்கு நபிக்கை ஊட்டும் படியாகப் பேசினார். அப்போது அதே தருணத்தில், கருப்பு நிற வேட்டை நாய்கள் இரண்டைக் கையில் பிடித்தவராக இன்னொரு கனவான் அவ்விடத்துக்கு வந்து சேர்ந்தார். அவர் அந்த வணிகனையும், உடன் மானுடன் நின்று இருந்த அந்த முதல் கனவானிடத்திலும் பேச்சுக் கொடுத்து அவர்கள் இருவரைப் பற்றியும்

அறிந்து கொண்டார். அப்போது இரு வேட்டை நாய்களுடன் வந்த அந்த கனவானுக்கு அந்த வணிகனின் கதை தான் மிகுந்த பரிதாபத்தை அளித்தது. இப்படியாக வணிகன், முதல் கனவான், இரண்டாவது கனவான் ஆகிய இம்மூவரும் பேசிக் கொண்டு இருந்த சமயத்தில் கையில் ஒரு கோவேறு கழுதையைப் பிடித்தவாறு மூன்றாவது கனவான் ஒருவர் அவ்விடத்துக்கு வந்து சேர்ந்தார். அவரும் வணிகனின் கதையைக் கேட்டு மிகுந்த துயரத்தை அடைந்தார். இப்படியாக இந்த நால்வரும் பூதம் வரும் நேரத்தை நோக்கிக் காத்துக் கொண்டு இருந்தனர்.

பூதம் வரும் சரியான நேரமும் வந்தது. அதனை அறிவிப்பதற்காக திடீர் என்று ஒரு புகை மண்டலம் வானத்தில் எழுந்தது. அங்கிருந்து ஒரு பூதம் தோன்றியது அது வணிகனைப் பார்த்து, "உன்னைக் கொல்லத் தான் வந்துள்ளேன்; உன்னை நான் தான் கொல்லப் போகிறேன். எனது அன்பு மகனை நீதானே சாகடித்தாய், ஆகவே நான் உன்னைக் கொல்லாமல் விடமாட்டேன்" என்றது.

மறுபுறம் வணிகனோ எதையும் கூற முடியாமல் கண்ணீருடன் காணப்பட்டான். வணிகனின் நிலையைக் கண்ட அந்த கனவான்களும் அவன் மீது பரிதாபம் கொண்டனர்.

அப்போது முதலில் அவ்விடத்துக்கு மானுடன் வந்த முதல் கனவான். பூதத்திடம் மிகவும் கருணை கொண்ட பார்வையுடன்," ஏ பூதமே! ஒரு நிமிடம் நான் சொல்வதைக் கேள். இதோ இந்த மானையும் என்னையும் பற்றிய ஆச்சர்யமான கதை ஒன்றை உனக்குச் சொல்கிறேன். ஒருவேளை நான் சொல்லப்போகும் கதை உண்மையில் உனக்கு அற்புதமாகப் பட்டால், நீ இந்த வணிகனுக்கு அளிக்கப்போகும் தண்டனையில் மூன்றில் ஒரு பங்கை குறைத்துக் கொள்கிறாயா? உனக்கு அதற்கு சம்மதமா?" என்றார்.

உடனே அந்த பூதத்திற்கும் அந்த கனவான் கூறவிருக்கும் கதையைக் கேட்க வேண்டும் என்ற ஆசை ஏனோ வந்தது. அத்துடன் அந்த கனவான் உறுதியாக சொல்லும் போது, நிச்சயம் அவர் சொல்ல இருக்கும் அந்தக் கதை சுவாரஸ்யம் நிறைந்ததாகத் தான் இருக்கும் என்று நம்பியது அந்தப் பூதம். அதனால் அந்த முதல் கனவானிடம், "சரி, நீ முதலில் கதையைச் சொல், அந்தக் கதை உண்மையிலேயே ஆச்சர்யம் நிறைந்ததாக இருந்தால். நானும் இந்த வணிகனுக்கு அளிக்கவிருக்கும்

தண்டனையை குறைத்துக் கொள்ளச் சம்மதம் தெரிவிக்கிறேன்" என்றது பூதம்.

உடனே அதைக் கேட்டு மகிழ்ச்சி அடைந்த அந்த முதல் கனவான் தனது கதையை அந்தப் பூதத்திடம் கூறத் தொடங்கினார்.

## பூதத்திடன் முதல் கனவான் சொன்ன அந்தக் கதை

"அன்பு பூதமே! நான் சொல்லப்போகும் இந்தக் கதை எனது வாழ்க்கையில் உண்மையிலேயே நடந்த சுவாரஸ்யமான கதை ஆகும். அதிலும் நான் கையில் வைத்திருக்கும் இந்த மானைப் பற்றியது" என்றார் முதல் கனவான்.

"பீடிகை எல்லாம் போதும். முதலில் கதையைச் சொல்" என்றது பூதம். உடனே அந்த முதல் கனவானும் கதையைச் சொல்லத் தொடங்கினார்.

"இதோ நான் வைத்திருக்கும் இந்த மான் உண்மையில் எனது மனைவி. மேலும், இவளுடன் தான் நான் பல வருடங்களாக இல்லறம் நடத்தி இருக்கிறேன். எனினும் எங்களுக்கு  குழந்தை பாக்கியம் இல்லாத காரணத்தால் வேறு ஒரு பெண்ணை மணந்து கொண்டேன். அந்தப் பெண் அழகில் சிறந்து விளங்கினாள். அவளுடன் இனிமையாக தாம்பத்திய வாழ்வை நடத்தினேன். அதற்குப் பலனாக எனக்கு அழகான மகன் ஒருவன் பிறந்தான். நானும் அவனை அன்புடன் வளர்த்து வந்தேன். அவன் அழகிலும், அறிவிலும் சிறந்து விளங்கினான். ஊரார் பலர் அப்படி ஒரு மகனைப் பெற்றதற்கு என்னைப் பல விதங்களிலும் பாராட்டினார்கள். அப்படி இருக்கும் சமயத்தில், எனது மகனுக்கு பதினெட்டு வயது நிரம்பி இருந்தது. நான் வியாபார விஷயமாய் வெளி நாடு செல்ல வேண்டிய அவசர சூழ்நிலை, முதல் மனைவியான இவளிடமும் சொல்லிவிட்டு, அத்துடன் என்னுடைய இரண்டாவது குடும்பத்தைப் பார்த்துக் கொள்ளுமாறு முதல் மனைவியிடம் அவள் மீது கொண்ட நம்பிக்கையில் வேண்டிக் கேட்டுக் கொண்டு புறப்பட்டேன். அவளும் அதற்கு சம்மதித்தாள். அது தான் நான் செய்த தவறு. அது எனக்குப் பிறகு தான் தெரிந்தது.

வியாபார விஷயமாக வெளியூர் சென்ற நான் பல மாதங்கள் கழித்துத் தான் சொந்த ஊர் திரும்பினேன். வந்ததும், வராததுமாக எனது மகனைத் தேடிச் சென்றேன். ஆனால், அவன் எங்கு தேடியும் கிடைக்கவில்லை. அத்துடன் எனது இரண்டாவது மனைவியும் எங்கு சென்றாள் என்று நான் அறியவில்லை. உடனே முதல் மனைவியிடம் கோபத்துடன் வந்து,' உனது பாதுகாப்பில் தானே எனது மகனையும், இரண்டாவது மனைவியையும் விட்டுச் சென்றேன். ஆனால் இப்போது அவர்களைக் காண வில்லை. நீதான் அவர்களை ஏதோ செய்து

உள்ளாய் என்று சந்தேகமாக உள்ளது. உண்மையைச் சொல் எனது இரண்டாவது குடும்பத்தை நீ என்ன செய்தாய்?" என்று கண்களில் தீப்பொறி பறக்கக் கேட்டேன்.

உடனே எனது முதல் மனைவியான இவள். எனது இரண்டாவது மனைவி பாம்பு கடித்து இறந்து விட்டதாகவும். அந்த சோகத்தில் இருந்த அவளுடைய மகன் எங்கோ சென்று விட்டதாகவும் கூறினாள். நானும் கூட எனது முதல் மனைவி சொல்வது தான் உண்மை என்று நம்பினேன்.

அத்துடன் எனது இரண்டாவது மனைவியை தொலைத்து விட்டேனே! மகனையும் பறி கொடுத்து விட்டேனே! என நான் அழாத நாள் இல்லை. காலங்கள் தான் ஓடியது. அதனால் எந்தப் பிரயோஜனமும் இல்லை. எங்கெங்கோ எனது இரண்டாவது குடும்பத்தைத் தேடி அலைந்து பித்துப் பிடித்தவன் போல ஆனேன்.

பின்னர் பலி விருந்துப் பண்டிகை வந்தது. இறைவனுக்குப் மாட்டை வெட்டி பலி கொடுக்கும் வழக்கம் எங்களுக்கு இருந்தது. அதனால், என்னிடம் வேலை பார்த்து வந்த மாடு மேய்ப்பவனை அழைத்து ஒரு கொழுத்த மாட்டை கொண்டு வருமாறு கூறினேன். அந்த மாடு மேய்ப்பவனும் நல்ல அழகான கொழுத்த மாட்டைக் கொண்டு வந்து நிறுத்தினான். அந்த மாடோ என்னைக் கண்டதும் அளவற்ற பாசத்தைக் காட்டியது. எனது பக்கத்தில் வந்து நக்கிக் கொடுக்க ஆரம்பித்தது. அத்துடன் என்னையே அது சுற்றிச், சுற்றி வந்தது. அந்தப் பசு எதனால் இப்படிச் செய்கிறது என்பதை என்னால் விளங்கிக் கொள்ள முடியவில்லை. எனினும், அந்தப் பசுவை நான் கொல்ல விரும்பவில்லை. காரணம் அந்தப் பசு என்னிடம் அவ்வளவு அன்பாக நடந்து கொண்டது தான். எனவே நான் எனது வீட்டில் வேலை பார்க்கும் அந்த மாடு மேயப்பவனிடம், 'எனக்கு இந்தப் பசு வேண்டாம். ஓடிபோய், வேறு ஒரு பசுவைக் கொண்டு வந்து கொடு' என்றேன்.

ஆனால் அவனோ (மாடு மேய்ப்பவனோ) மறுமொழியாக என்னிடம்," இதைப் போல நல்ல கொழுத்த பசு வேறு இல்லை, ஆகவே இதனையே தாங்கள் வெட்டி பலி கொடுங்கள்" என்றான். எனவே நானும் வேறு ஒரு பசுவைத் தேட நேரம் இல்லாததால், அந்தப் பசுவையே வெட்டிக் கொன்றேன். ஆனால், ஆச்சர்யம் யாதெனில் அதில் தசைகளையே காண முடியவில்லை. வெறும் எலும்புகளும் நரம்புகளுமாகத் தான் இருந்தது. அவைகளும் கூட பார்ப்பதற்கு வித்யாசமாக மனிதர்களைப்

போலவே இருந்தது. இதனால் ஏதோ தெய்வ குற்றம் நடந்து விட்டதை நான் உணர்ந்தேன். அதற்குப் பிரயாசித்தம் தேட நினைத்தேன்.

வெகு நேரம் யோசித்தப் பிறகு இன்னொரு கன்றைக் கொண்டு வரச் சொன்னேன். அந்த மாடு மேய்ப்பவனும் நல்ல ஒரு கொழுத்த கன்றைக் கொண்டு வந்தான். அந்தக் கன்றோ என்னைக் கண்டதும் நீண்ட நாள் பழகியதைப் போல எனது அருகில் வந்து வாலை உயர்த்திக் கொண்டு துள்ளித் துள்ளி ஓடி விளையாடியது. பின்னர் எனது முன்னர் வந்து நின்றபடிக் கண்ணீர் விட்டு அழுதது. ஆகவே, அந்தக் கன்றையும் வெட்ட எனக்கு மனம் வரவில்லை. அந்த நேரம் பார்த்துத் தகவல் அறிந்து எனது மனைவி என்னைத் தேடி அங்கு வந்தாள். அவள் பார்வையில் அந்தச் சின்னஞ்ச் சிறிய கன்று பட்ட மாத்திரத்தில் உடனே அதனைத் தான் பலியிட வேண்டும் என்று அடம் பிடித்தாள். அவள் ஏன் அவ்வாறு இந்த விஷயத்தில் அடம் பிடிக்கிறாள் என்று எனக்குத் தெரியவில்லை. எனினும் என்னால் அந்தக் கன்றைக் கொல்ல முடியவில்லை. ஏதோ ஒன்று என்னைத் தடுத்தது. மாடு மேய்ப்பவனை அழைத்து மீண்டும் அந்தக் கன்றை ஒட்டிக் கொண்டு செல்லும் படியாகக் கூறினேன். அவனும் அப்படியே ஒட்டிக் கொண்டு சென்றான்.

அன்று இரவு முழுவதும் எனக்கு உறக்கமே வரவில்லை.

மறுநாள் நான் தனியாக இருக்கும் சமயத்தில் மாடு மேய்ப்பவன் கண்கள் கலங்கியபடி என்னை வந்து வணங்கி நின்றான். அத்துடன் அவன் என்னிடம்,' முதலாளி! நான் ஒரு முக்கியமான விஷயத்தைத் தங்களிடம் பேச விரும்புகிறேன். அதனை நான் தங்களிடம் சொல்லித் தான் ஆக வேண்டும்' என்றான். அது என்னவாக இருக்கும் என்று எண்ணிய நான் அவன் கூறத் தொடங்கிய விஷயத்தை ஆவலுடன் கேட்கத் தொடங்கினேன்.

மாடு மேய்ப்பவனும் விஷயத்தை மெல்ல இவ்வாறு கூறத் தொடங்கினான்.

'முதலாளி! எனக்கு ஒரு மகள் இருக்கிறாள். எங்கள் வீட்டுப் பக்கத்திலேயே ஒரு வயதான பாட்டி இருக்கிறார்கள். அவர்கள் அனைத்து மந்திர வித்தைகளிலும் கை தேர்ந்தவர்கள். ஆனால், அதே சமயத்தில் மிகவும் நல்லவர்கள். அவர்களுடம் எனது மகள் நல்ல முறையில் பேசிப் பழகி வந்தாள். அந்தப் பாட்டிக்கு வாரிசுகள் ஏதும்

இல்லாத காரணத்தால் எனது மகளையே அவர்களது மகளாக பாவித்துத் தனக்குத் தெரிந்த அனைத்து விதமான மந்திர வித்தைகளையும் எனது ஒரே மகளுக்கு சொல்லிக் கொடுத்தார்கள். அவளும் மந்திர வித்தையில் கை தேர்ந்து விளங்கத் தொடங்கினாள்.

இப்படி இருக்கும் சமயத்தில் நேற்று தாங்கள் பலி இட இருந்த அந்தப் பாசமான கன்றுக் குட்டியை எனது வீட்டுக்கு ஓட்டிச் சென்றேன். அந்தக் கன்றுக் குட்டியைக் கண்ட மாத்திரத்தில் எனது மகள் தனது முகத்தை மூடிக் கொண்டாள். அத்துடன் வெட்கமும் அடைந்தாள். பின்னர் அவள் அழ ஆரம்பித்தாள்.' காரணமே இல்லாமல் ஏன் எனது மகள் இப்படி நடந்து கொள்கிறாள்?' என்று யோசித்தேன் நான். உடனே எனது மகள் அவள் அவ்வாறு நடந்து கொள்வதற்கான காரணத்தைக் கீழ்க்கண்ட முறையில் கூறத் தொடங்கினாள்.

'அப்பா, இந்தக் கன்றுக் குட்டி யார் தெரியுமா? நம்முடைய எஜமானருடைய மகன் ஆவார். மேலும், இவருடைய மாற்றான் தாய் தான் இவரையும் இவருடைய தாயாரையும் கன்றாகவும் பசுவாகவும் மாற்றிவிட்டார். இதனை நினைத்துத் தான் நான் வேதனை அடைந்து அழுதேன். மேலும் நேற்று தங்கள் எஜமானர் பலி கொடுத்தது மாட்டின் ரூபத்தில் இருந்த தனது இரண்டாவது மனைவியைத் தான்'' என்ற விவரத்தை எடுத்துக் கூறினாள்.

மேற்கண்ட இந்தச் செய்தி எனக்கு ஆச்சர்யம் அளிப்பதாக இருந்தது. மேலும், இந்தச் செய்தியைத் தான் தங்களிடம் சொல்ல வேண்டும் என்று எண்ணினேன். எப்போது விடியும் என்று காத்திருந்து இப்போது வந்துத் தங்களிடம் சொல்லிவிட்டேன்' என்று சொல்லி முடித்தான்.

உடனே எனது வீட்டு ஆடு மேய்ப்பவன் சொன்ன மேற்கண்ட வார்த்தையைக் கேட்ட மாத்திரத்தில் அவனது வீட்டிற்கு விரைந்தேன். ஒரு புறம் எனது இரண்டாவது மனைவியை நானே கொன்று விட்டேனே! என்ற வருத்தம் எனக்கு இருந்தாலும் எனது மகனை வெகு நாட்கள் கழித்துப் பார்க்க இருக்கும் சந்தோஷம் எனக்குள் இருந்தது.

நான் அப்போது அடைந்த மகிழ்ச்சி கொஞ்ச நஞ்சம் அல்ல. அந்த சந்தோஷத்துடனே நான் என்னிடம் வேலை பார்த்த அந்தக் குடியானவனின் வீட்டை அடைந்தேன். மாடு மேய்ப்பவனுடைய மகள் என்னை அன்புடன் வரவேற்றாள்.

'என்னம்மா உனது அப்பா சொல்வதெல்லாம் உண்மையா?' என்று கேட்டேன்.

'எனது அப்பா சொல்வது அனைத்தும் உண்மை தான். மேலும், கன்றுக் குட்டி வடிவத்தில் இங்கு இருப்பவர் உங்கள் அருமை மகன் தான்' என்றாள்.

உடனே நான் அவளிடம், 'அம்மா, நீ ஏதோ பாட்டியிடம் இருந்து மந்திரங்களை எல்லாம் கற்று வைத்து இருக்கிறாய் என்று கேள்விப்பட்டேன். அதனைப் பிரயோகித்து எனது மகனை மீண்டும் பழைய நிலைக்கு மீட்டுத் தர முடியுமா? நீ அப்படிச் செய்தால் உனக்கு எனது பாதி செல்வங்களைத் தருகிறேன். அத்துடன் நீ கேட்பது எதுவாயினும் நான் உனக்குத் தருகிறேன்' என்றாள்.

உடனே மாடு மேய்ப்பவனின் மகள் என்னிடம்,' ஐயா, எனது இரண்டு கோரிக்கைகளைத் தாங்கள் நிறைவேற்றிக் கொடுத்தால், உடனே உங்கள் மகனை நான் பழைய படி மாற்றிக் கொடுக்கிறேன்' என்றாள்.

அதன் படியே நானும் அவளது கோரிக்கைகள் எதுவாயினும் அதனை நிறைவேற்ற ஒப்புக் கொண்டேன். அதன் படி அந்தப் பெண்ணும் தனது இரண்டு கோரிக்கைகளையும் எடுத்து முன் வைத்தாள். அதன் அடிப்படையில் தனது முதல் கோரிக்கையாக,' தங்கள் மகனுக்கு என்னை மணம் முடித்து வைக்க வேண்டும்' என்றாள். பிறகு இரண்டாவது கோரிக்கையாக, 'இத்தனை கொடுமைக்கும் காரணமாக இருந்தவர் தங்கள் முதல் மனைவி தான், எனவே அவர்களை நான் எனது விருப்பப் படி உருமாற்றிக் கொள்ள உத்தரவு தர வேண்டும். காரணம் அவர்களால் எனக்கும், எனது வருங்காலக் கணவருக்கும் பிற்காலத்தில் நிச்சயம் தொந்தரவுகள் வரலாம்'  என்றாள்.

அவள் கூறியபடி நான் எனது மகன் மீண்டும் பழைய படி வந்தால் போதும் என்ற நினைப்பில் அவள் கூறிய அனைத்தையும் ஏற்றுக் கொண்டேன். அத்துடன் அவளது அனைத்து நிபந்தனைகளுக்கும் பச்சைக் கொடியை காட்டினேன்.

உடனே அந்தப் பெண் ஓடிச் சென்று தான் வைத்திருந்த மந்திர நீரைக் கொண்டு வந்தாள். சில மணி நேரம் மந்திரங்களை சொல்லி தியானித்தாள். அந்த மந்திர நீர் தங்கத்தின் நிறத்தில் ஜொலித்தது.

அத்துடன் பேரொளியை வெளியிட்டது. பிறகு அந்நிலையில் இருந்த தண்ணீரை கன்றாக இருந்த எனது மகனின் மீது தெளித்தாள். அடுத்தகணம் எனது மகன் பழையபடி தனது உருவத்தை அடைந்தான். அதைக் கண்டு நான் மகிழ்ந்தேன்.

எனது உரு மாறிய மகனும் தனக்கு நேர்ந்த கொடுமைகளை எடுத்துச் சொன்னான். அதைக் கேட்டு நான் கொதித்துப் போனேன். எல்லாவற்றிகும் காரணமான எனது முதல் மனைவியை நான் தண்டிக்க நினைத்தேன்.

அதன் பொருட்டு மாடு மேய்ப்பவனின் மகளை எனது வீட்டிற்கு அழைத்துச் சென்றேன். அப்போது எனது மூத்த மனைவி நன்றாகத் தூங்கிக் கொண்டு இருந்தாள். அவளை மந்திர நீரைக் கொண்டு மானாக மாற்றினாள் எனது அந்த வருங்கால மருமகள். நானும், இது எனது முதல் மனைவிக்குத் தேவை தான் என்று நினைத்து எனது மருமகளை எதுவும் கூறாமல் அவள் செய்ததை மனப்பூர்வமாக ஆதரித்தேன். பிற்பாடு எனது சொத்துக்கள் அனைத்தையும் எனது மகனுக்கு முறைப்படி எழுதி வைத்தேன். அத்துடன் எனது மகனுக்கும் அந்த இடைப் பெண்ணுக்கும் கோலாகலமாக திருமணத்தை நடத்தி வைத்தேன். அதில் இருந்து நான் இந்த மானுடன் ஊர் ஊராகச் சுற்றி வந்து கொண்டு இருக்கிறேன். என்ன செய்ய இவளும் கூட எனது மனைவி தானே! அதனால் இவளை அப்படியே விட்டு விட எனக்கு விருப்பம் இல்லை' என்று மானுடன் வந்த முதல் கனவான் தனது கதையை பூதத்திடம் முழுமையாகக் கூறி முடித்தார்.

அந்தக் கதையை முழுவதுமாகக் கேட்ட பூதம் சந்தோஷத்தில் துள்ளிக் குதித்தது. அருமையான கதையை சொன்னீர்கள் என்று கூறி அந்த முதல் கனவானைப் பாராட்டியது. அத்துடன் அந்த வணிகனுக்குத் தான் தர இருந்த தண்டனையில் மூன்றில் ஒரு பங்கைக் குறைத்துக் கொள்வதாகவும் அந்த பூதம் கூறியது.

அதன் பின்னர், வேட்டை நாய்களுடன் வந்த இரண்டாவது கனவான் அந்த பூதத்திடம் கீழ்க்கண்ட முறையில் பேசத் தொடங்கினார்.

"அன்புள்ள பூதமே, நாய்களாக உருமாறி இருக்கிற எனது இந்த இரு சகோதரர்களின் கதையை உனக்குக் கூறுகிறேன். அது இன்னும் சுவாரஸ்யமான கதை. நீ அதனைக் கேட்டால் துள்ளிக் குதிப்பாய்.

ஒருவேளை நான் கூறியபடி அது உனக்கு அதிக சந்தோஷத்தை தந்தாள், அதன் பொருட்டு நீ அதற்குக் கைமாறாக இந்த வணிகனுக்கு நீ அளிக்க இருக்கும் தண்டனையில் மேலும் மூன்றில் ஒரு பங்கைக் குறைத்துக் கொள்ள வேண்டும்" என்று வேண்டிக் கேட்டுக் கொண்டார். அதற்கு அந்த பூதமும் ஒப்புக் கொண்டது.

உடனே இரண்டாவது கனவான் தனது சகோதரர்கள் வேட்டை நாய்களாக மாறிய கதையைக் கூறத் தொடங்கினார் என இப்படியாக அரசர் ஷாரியாரிடமும் தனது தங்கையிடமும் கதையைக் கூறிக் கொண்டு இருந்த ஷாரஜாத் விடிந்து விட்டதை எண்ணியவாறு பாதியில் கதையை நிறுத்தி விட்டு அரசர் ஷாரியரை கலவரத்துடன் பார்த்தாள். ஆனால், ஷாரியர் அந்த வேட்டை நாய்களின் கதையைக் கேட்க விருப்பம் கொண்டு காணப்பட்டார்.

ஷாரஜாத்தின் சகோதரியோ, "அக்கா! கதையை சொல்லேன். ஏன் நிறுத்தி விட்டாய்? கேட்க ஆவலுடன் இருக்கிறேன்" என்றாள்.

உடனே ஷாரஜாத் தனது சகோதரியான துன்யாஜாத்திடம், "அருமைத் தங்கையே பொழுது விடிந்து விட்டது. இனிமேலும் என்னால் கதையைத் தொடர முடியாது. ஒரு வேளை நமது மன்னர் இன்று ஒரு நாள் எனக்கு உயிர் பிச்சை அளித்தாள். நான் இன்றைய தினம் இரவு மேற்கொண்டு கதையைத் தொடர்கிறேன்" என்றாள்.

ஷாரஜாத்தின் வார்த்தையைக் கேட்ட மன்னரும் அதற்கு சம்மதம் தெரிவித்து அன்றைய தினம் அவளை எதுவும் செய்யாமல் தனது தினசரி வேலைகளை முடிக்கக் கிளம்பினார்.

மறுபுறம் ஷாரஜாத் உயிருடன் இருப்பதைப் பார்த்த அவளது தந்தை ஆச்சர்யம் அடைந்து மகளிடம் விவரத்தைக் கேட்டு அறிந்தார். பிறகு எல்லாம் வல்ல இறைவனிடம் தனது மகளை நல் புத்தி கொடுத்து காத்ததற்கு நன்றியை தெரிவித்தார்.

அன்றைய பொழுதும் நல்ல விதமாகப் போனது. மாமன்னர் ஷாரியார் விரைவாகத் தனது வேலையை முடித்து விட்டு வேட்டை நாய்களின் கதையை கேட்க ஓடோடி வந்தார். ஷாரஜாத்தும் அந்த வேட்டை நாய்களின் கதையை அரசரிடம் கூறத் தொடங்கினாள். (அப்போது உடன் அவளது தங்கை துன்யாஜாத்தும் இருந்தாள்)

# இரண்டாவது கனவானின் சகோதரர்கள் வேட்டை நாய்களாக மாற்றப்பட்ட கதை

இரண்டாவது கனவான் பூதத்திடம் வேட்டை நாய்களின் கதையை இவ்வாறு கூறத் தொடங்கினான்.

"அன்பார்ந்த பூதமே! இதோ என்னுடன் இருக்கும் நாய்கள் வேறு யாரும் இல்லை எனது சொந்தச் சகோதரர்கள் தான். இந்த உருவத்தை இவர்கள் அடைந்ததற்கு அவர்கள் எனக்குச் செய்த வினை தான் காரணம். இன்னும் சொல்லப் போனால் நான் இவர்களை மன்னிக்கத் தயாராக இருந்தாலுமே இறைவன் இவர்களை தண்டிக்கத் தயங்கவில்லை. அப்பேற்பட்ட பாவத்தை இவர்கள் செய்து இருக்கிறார்கள். ஆம், பேராசை, பொறாமை, உதவி செய்தவர்களை துன்புறுத்தி இன்பம் காணும் எண்ணம் என அனைத்தையும் உடையவர்கள் மனிதர்களாக இருந்தாலுமே நாயினும் கீழான குணத்தைக் கொண்டு இருக்கிறார்கள். அவர்களுக்கு ஒரு போதும் நல்ல கதி வருவதில்லை. இதனை நான் கூறப் போகும் கதையின் மூலமாக நீயும் கூட அறிந்து கொள்ளலாம்" என்று சொன்னார்.

அதைக் கேட்ட பூதம்," எனக்கு உடனே கதையைக் கேட்க வேண்டும் போல் இருக்கிறது. உடனே கதையைக் கூறு" என்றது.

அதன் அடிப்படையில் அந்த இரண்டாவது கனவான் கதையைத் தொடர்ந்து சொல்லத் தொடங்கினார்.

ஒரு கிராமத்தில் நாங்கள் மூன்று சகோதரர்கள் வசித்து வந்தோம். எங்களது தந்தை எங்களை மிகவும் அன்பாகத் தான் வளர்த்து வந்தார். அவர் பெரும் வணிகராக இருந்தார். அவரிடம் இருந்து நல்ல முறையில் நான் தொழிலைக் கற்றுத் தேர்ந்தேன். ஆனால், எனது இரு சகோதரர்களும் சோம்பேறிகளாகவும், சிற்றின்பப் பிரியர்களாகவும் இருந்தார்கள். தந்தையின் பேச்சை அவர்கள் பிறந்தது முதல் என்றுமே மதித்தது கிடையாது. இந்நிலையில் எனது சகோதரர்கள் இருவரைப் பற்றியே கவலைப் பட்டு, கவலைப் பட்டு எனது தந்தை நோய் வாய்ப்பட்டார். படுத்த படுக்கையாக ஆனார். எனினும் சாகும் சமயத்திலும் தனது கடமையை நல்ல முறையில் நிறைவேற்ற நினைத்த எங்களது தந்தை. அவர் காலமாகும் சமயத்தில் மூவாயிரம் தினார்களை

எங்களுக்கு ஆஸ்த்தியாக விட்டு விட்டுப் போனார். அத்துடன் ஊர் பெரியவர்கள் முன்னிலையில் அந்த பணத்தை நாங்கள் மூவரும் ஆளுக்கொரு பங்காக பிரித்துக் கொண்டோம். அதன் படி எனக்கு ஆயிரம் தினார்கள் பங்காகக் கிடைத்தது. நான் உள்ளூரிலேயே ஒரு மளிகைக் கடையை வைத்து நடத்தினேன். எனது தந்தையிடம் இருந்து நான் கற்றுக் கொண்ட வியாபார நுணுக்கங்கள் எனக்கு மிகவும் உதவியாக இருந்தது.

ஆனால் எனது இரண்டு அண்ணன்களும் கேளிக்கையில் ஈடுபட்டு வந்தனர். பல பெண்களுடன் தொடர்பு கொண்டு உல்லாசமாகப் பொழுதைக் களித்தனர். அத்துடன் கெட்ட நண்பர்களின் தூண்டுதலால் உலகத்தை சுற்றிப் பார்க்க விரும்புவதாகக் கூறி வெளிநாடு சென்றனர். நானோ உள்ளூரில் வாழ்ந்த படி எனது வியாபாரத்தை பெருக்கி வந்தேன். ஆயிரம் தினார்களைக் கொண்டு நான் ஆரம்பித்த தொழில் வளர்ச்சி பெற்று இருபதாயிரம் தினார்களை மாத வருமானமாகப் பெற்றேன். அதாவது அந்த அளவுக்கு வியாபாரம் செழித்தது.

இந்தச் சமயத்தில் தான் ஒரு நாள் என்னுடைய கடையில் வியாபாரத்தை செய்த போது யாரோ இருவர் தாடியும், மீசையுமாக பிச்சைக் காரக் கோலத்தில் என்னுடைய கடைக்கு வந்தார்கள். அவர்கள் என்னைக் கண்டு பரிதாபமாக நின்றனர்.

அந்த இருவரும் பிச்சை கேட்கத் தான் வந்து உள்ளார்கள் என்று நினைத்து அவர்களுக்கு சில தினார்களை பிச்சையாகப் போட்டேன். ஆனால், அவர்களோ அதனை வாங்க மறுத்து, "அன்புத் தம்பியே எங்களை உனக்குத் தெரியவில்லையா? நீ கூட எங்களை அடையாளம் கண்டு பிடிக்க முடியாத படி நாங்கள் மாறி விட்டோமா?" என்று கூறி அழுதார்கள்.

அதன் பிறகே அவர்கள் இருவரும் எனது சகோதரர்கள் என்பதை நான் கண்டு கொண்டேன். வெளிநாடு சென்ற சமயத்தில் தங்களது பொருளை எல்லாம் இழந்துவிட்ட கதையை அவர்கள் கூறி அழுதவுடன் அவர்கள் மீது நான் கருணை கொண்டேன். அவர்களை அழைத்து எனது வீட்டில் நான் நல்ல முறையில் உபசரித்தேன். பின்னர் நான் சம்பாரித்து வைத்திருந்த பணத்தில் இருந்து ஆளுக்கொரு ஆயிரம் தினார்களைக் கொடுத்தேன். அதனைக் கொண்டு இருவரும் தனித்தனியே ஒரு கடையை ஆரம்பித்து நடத்தத் துவங்கினார்கள். நானும் இப்போதாவது

சகோதரர்களுக்கு நல்ல புத்தி வந்ததே என்று நினைத்து இறைவனிடம் நன்றி கூறினேன்.

இப்படியே கொஞ்ச நாட்கள் மெல்ல நகர்ந்தது. அவர்கள் இருவரும் ஒரு நாள் மீண்டும் என்னிடம் வந்தார்கள். மீண்டும் வெளிநாடு சென்று வியாபாரம் செய்யப் போவதாகக் கூறினார்கள். ஆனால், இந்த முறை அவர்களுடன் என்னையும் அழைத்தார்கள். நான் முதலில் போக மறுத்தாலும் பிற்பாடு எனது சகோதரர்கள் இருவரும் மிகவும் கெஞ்சிக் கேட்டுக் கொண்டதால் அவர்களுடன் வெளிநாடு செல்ல நானும் சம்மதித்து எனது தொழிலை நம்பிக்கையான நல்ல வேலையாளிடம் சிறிது நாள் பார்த்துக் கொள்ளுமாறு ஒப்படைத்து விட்டுக் கிளம்பினேன். உடன் கணிசமான தொகையையும் எடுத்துக் கொண்டு புறப்பட்டேன். அதனைக் கொண்டு சில பொருள்களை வாங்கி வெளிநாட்டில் விற்றோம். நாங்கள் எதிர்பார்த்ததை விட நல்ல லாபத்தை பெற்றோம். பின்னர் பல மாதங்கள் கழிந்ததால் நாங்கள் மீண்டும் தாய் நாடு செல்லத் தீர்மானித்தோம். அதன் பொருட்டுக் கடற்கரைக்கு வந்தோம்.

அப்போது கந்தல் ஆடையை உடுத்திய ஒரு பெண்ணைக் கண்டேன். அவள் பார்க்கப் பிச்சைக் காரி போலத் தோற்றம் அளித்தாலும், அவளது முகத்தில் ஒரு தெய்வீக ஒளியைக் கண்டேன். அந்தப் பெண் மிகவும் இளவயதுடைய பெண்; அத்துடன் அழகியாகவும் இருந்தாள்.

அந்த சுந்தரி என்னைப் பார்த்தமட்டில் எனது கைகளைப் பற்றிக் கொண்டாள். நான் எனது கைகளை உதர விரும்பவில்லை. அத்துடன் அவளது கனிவான பேச்சு எனக்கு ஒரு வித மயக்கத்தை அளித்தது. அவள் தனது அன்பார்ந்த அமுத மொழிகளை என்னிடம் கூறத் தொடங்கினாள்.

"ஐயா, நீங்கள் என்னை தயை கூர்ந்து ஆதரிக்க வேண்டும். அப்படி நீங்கள் செய்தால் நான் எக்காலமும் உங்களுக்கு நன்றி உடையவளாக இருப்பேன். அத்துடன் உங்களுக்கு என்னால் முடிந்த உதவிகளையும் செய்வேன்" என்றாள்.

"நான் உனக்கு எந்தவகையான உதவியையும் பிரதிபலன் பார்க்காமல் செய்யக் காத்துக் கொண்டு இருக்கிறேன். உனக்கு என்னிடம் இருந்து என்ன வேண்டும். நிச்சயம் நீ தவறாக எதையும் கேட்கக் கூடிய பெண்

இல்லை என்பதை உனது முகமே எனக்கு சொல்கிறது. அத்துடன் நீ நல்ல பெண்ணாகத் தான் இருப்பாய் என்றும் எனது உள் மனம் என்னிடம் கூறுகிறது. அதனால் நீ என்னிடம் தைரியமாக எதை வேண்டுமானாலும் கேட்கலாம். தயங்காதே!" என்று அந்தப் பெண்ணிடம் நான் அன்புடன் பதில் கூறினேன்.

உடனே அவள் என்னிடம், "அன்பரே! அப்படியானால் தாங்கள் என்னை மனைவியாக ஏற்றுக் கொள்ள முடியுமா? அப்படித் தாங்கள் என்னை உங்கள் மனைவியாக ஏற்றுக் கொண்டு விட்டால். நான் தங்களுக்கு மனைவியாக மட்டும் அல்ல, வேலைக்காரியாகவும் இருப்பேன்" என்றாள்.

அவளின் வார்த்தைகளைக் கேட்ட நானும் அவளை ஏற்றுக் கொள்ளத் தீர்மானித்தேன். அத்துடன் அவளுக்கு நல்ல உடைகளை வாங்கிக் கொடுத்தேன். வயிறார உண்ணக் கொடுத்தேன். பிறகு அவளை மணந்து கொண்டேன். அத்துடன் அவளை அழைத்துச் செல்லத் தீர்மானித்தேன். ஆனால், இது எதுவுமே என்னுடன் இருந்த எனது சகோதரர்களுக்குப் பிடிக்கவில்லை. எனக்கு எங்கே வாரிசு உருவாகி விடுமோ என்று பயந்தார்கள். அவர்களுக்கு எப்போதுமே நான் சம்பாதித்த செல்வத்தின் மீது ஒரு கண் இருந்து கொண்டு தான் இருந்தது. ஆனால் நானோ முட்டாள் தனமாக எனது உடன் பிறப்புகளை நம்பி வந்தேன்.

அத்துடன் அக் கப்பல் பயணத்தின் போதும் நான் எனது மனைவியை நல்ல முறையில் கவனித்து வந்தேன். இரவு, பகலாக அவளுடனேயே இருந்து வந்தேன். இதனால் என் மீது அதிக ஆத்திரம் கொண்ட சகோதரர்கள் ஒரு கட்டத்தில் என்னைக் கொல்லவே தீர்மானித்து விட்டனர்.

ஒரு நாள் கப்பலில் நானும் எனது மனைவியும் நன்றாக உறங்கிக் கொண்டு இருந்தோம். அது ஒரு நள்ளிரவு வேளை. கப்பல் மெல்லக் கடலில் நகர்ந்து கொண்டு இருந்தது. எனது சகோதரர்கள் இருவரும் விரைந்து வந்து தூங்கிக் கொண்டு இருந்த என்னையும், எனது மனைவியையும் வாயைப் பொத்தியவாறு அடித்துத் தூக்கிச் சென்று நடுக் கடலில் வீசி எறிந்தார்கள்.

நானும் எனது மனைவியும் கடலுக்கு அடியில் சென்று கொண்டு இருந்த

சமயம் நான் செய்வதறியாது திகைத்தேன். அப்போது எனது மனைவி அவளது உண்மையான ரூபத்தை எடுத்தாள். ஆம்! அப்போது தான் எனக்கே தெரியும் அவள் ஒரு பெண் பூதம் என்று.

அப்படி பூதமாக மாறியவள் என்னைப் பத்திரமாகக் கொண்டு போய் ஒரு தீவில் சேர்த்தாள். பின்னர் அவள் எங்கே போனாள் என்று தெரியவில்லை. அடுத்த நாள் காலை விடிந்தது நான் சாப்பிட உணவுப் பதார்த்தங்களை கொண்டு வந்து கொடுத்தாள். நான் அதனை மகிழ்ச்சியுடன் உண்டு அவளுக்கு நன்றியைத் தெரிவித்தேன். அத்துடன் அந்த நிலையிலும் அவளை நான் விரும்பினேன். அதனை அவள் உணர்ந்தவளாய் என்னிடம் பேசத் தொடங்கினாள், "ஐய்யா எனக்கு உதவி செய்தவர்களுக்கு நான் என்றுமே நன்றி உள்ள அடிமையாக இருப்பேன். அதன்படி தண்ணீரில் விழுந்து சாக இருந்த உங்களைக் காப்பற்றும் பாக்கியத்தைப் பெற்றேன். அத்துடன் நான் உங்களுக்கு ஒரு வாக்கை அளிக்கிறேன் நமக்குத் துரோகம் செய்த உங்கள் சகோதரர்களை நான் கொல்லாமல் விட மாட்டேன்" என்றாள்.

நானோ, அப்பொழுதும் கூட எனது அந்த சகோதரர்களை நான் மிகவும் விரும்பியதன் காரணமாக அவர்களை கொல்லக் கூடாது என்று அவளிடம் வேண்டிக் கேட்டுக் கொண்டேன். அத்துடன் அவளால் எனது சகோதரர்களின் உயிருக்கு எந்த வித ஆபத்தும் நேர்ந்து விடக் கூடாது என்று சத்தியமும் வாங்கிக் கொண்டேன். அவளும் அப்படியே சத்தியம் செய்தாள்.

பின்னர், பெண் பூதமாக மாறிய எனது மனைவி என்னைத் தனது கைகளில் ஏந்தியபடி வான் வழியாகப் பறந்து சென்று எனது வீட்டு மொட்டை மாடியில் கொண்டு விட்டுச் சென்றாள். அதன் பின்னர் நான் எதைப் பற்றியும் நினைக்காமல் எனது வியாபாரத்தைத் தொடர்ந்து நடத்தினேன். அத்துடன் பலனை எதிர்பார்க்காமல் எனது கடமையை மட்டும் கண்ணும், கருத்துமாக செய்து வந்தேன்.

அப்படி இருக்கும் சமயத்தில், ஒரு நாள் எனது வியாபாரத்தை முடித்து விட்டு நான் வீடு திரும்பிய சமயத்தில், அங்கு இரண்டு நாய்கள் கட்டப்பட்டு இருப்பதைக் கண்டேன். என்னைக் கண்டதும் அவைகள் இரண்டும் குதித்து ஆர்பாட்டம் செய்யத் தொடங்கின. எனக்கோ ஒன்றுமே தெரியவில்லை. எதுவுமே புரியவில்லை. அந்த நாய்களை யார் எனது வீட்டு வாசலில் கட்டி இருப்பார்கள் என்று சிந்தித்துக் கொண்டு

இருந்தேன்.

அந்த சமயத்தில் மீண்டும் எனது மனைவி எனக்கு முன்னாள் தோன்றினாள். அவள் என்னிடம், "இந்த நாய்களாய் இருப்பவர்கள் வேறு யாரும் இல்லை உங்களது நயவஞ்சக சகோதரர்கள். நான் எவ்வளவோ தடுத்தும் கூட எனது சகோதரிகளில் ஒருத்தி எனது கதையைக் கேட்டு, தங்கள் சகோதரர்கள் இருவரையும் நாயாக மாற்றி என்னிடம் கொண்டு வந்தாள். அத்துடன் நான் தான் நாய்களாக மாறிய தங்களது சகோதரர்களை உங்கள் வீட்டு வாசலில் கட்டிவிட்டுச் சென்றேன். இன்னும் பதினைந்து ஆண்டுகள் கழித்து நானே உங்கள் சகோதரர்கள் இருவரையும் பழைய நிலைக்கு மாற்றுவேன். என்னை நம்புங்கள்" என்று கூறிவிட்டுச் சென்றாள்.

இப்படியாக இந்த நிகழ்ச்சி நடந்து பதினைந்து ஆண்டுகள் ஆகப் போகின்றன. எனது சகோதரர்களின் நிலை எனக்கு பார்க்கப் பார்க்கப் பரிதாபத்தைத் தந்தது. அதனால் தான் நான் எனது மனைவியை (அதாவது அந்தப் பெண் பூதத்தை) தேடிச் சென்று கொண்டு இருக்கிறேன். அத்துடன் எங்காவது தென்பட மாட்டாளா என்று ஏங்கித் தவித்துக் கொண்டு இருக்கிறேன்.

அப்போது வழியில் தான் இந்த வணிகனின் சோகக் கதையைக் கேட்டேன்; அப்படியே இங்கு இருந்துவிட்டேன்' என்று தனது கதையை முழுவதுமாக கூறி முடித்தார் அந்த இரண்டாவது கனவான்.

அதுவரையில் அந்தக் கதையை கேட்டுக் கொண்டு இருந்த பூதம், "உண்மையிலேயே, இது பாராட்டக் கூடிய கதை தான். வியாபாரியின் தண்டனையில் மேலும் மூன்றில் ஒரு பங்கைக் குறைத்துக் கொள்கிறேன்" என்றது.

பிறகு கோவேறு கழுதையுடன் வந்தவர் அந்த பூதத்திடம் இவ்வாறு பேசத் தொடங்கினார்.

"அன்புக்கு அடிபணியும் இயல்பு கொண்ட பூதமே, நான் கூறப் போகும் கதையும் ஒரு சுவாரஸ்யமான கதை தான். ஒருவேளை அதுவும் உனக்குப் பிடித்து இருந்தாள். நீ இந்த வணிகனை முழுவதுமாக மன்னித்து விட்டு விட வேண்டும்" என்று வேண்டிக் கேட்டுக் கொண்டார்.

அதற்கு அந்த பூதமும் மூன்றாவது கனவானிடம், "நீர் சொல்லும் கதையானது சுவாரஸ்யம் நிறைந்த கதையாக இருக்குமே ஆனால், நான் உனக்கு வாக்களிக்கிறேன், இந்த வணிகனை நான் மன்னித்து விட்டு விடுகிறேன்" என்றது.

உடனே மூன்றாவது கனவானும் தனது கதையைக் கூறத் தொடங்கினார்.

# மூன்றாவது கனவானின் கதை

கோவேறுக் கழுதையுடன் வந்தவர், பூதத்தை முதலில் வணங்கிய பின்னர் அந்தப் பூதத்திடன் தனது கதையை இவ்வாறு கூறத் தொடங்கினார்.

"அன்புக்கு கட்டுப்படும் நல்ல உள்ளம் கொண்ட பூதமே, இங்கு கோவேறு கழுதையாக இருப்பவள் வேறு யாரும் இல்லை, எனது மனைவி தான்" என்று கூறினார்.

"கொஞ்சம் விளக்கமாக அந்தக் கதையைக் கூறு" என்றது பூதம்.

உடனே மூன்றாவது கனவான் மேலும் தொடர்ந்தார்.

"வாணிப விஷயமாய் நான் வெளிநாடுகளுக்கு பயணத்தை மேற்கொண்டு இருந்தேன். ஏறக் குறைய இரண்டு ஆண்டுகளாக நான் ஊரிலேயே இல்லாமல் இருந்தேன்.

இரண்டு ஆண்டுகள் கழித்து என்னுடைய பயணத்தை முடித்துக் கொண்டு எனது மனைவியின் முன்னாள் அவளுக்கு இன்ப அதிர்ச்சி தரும் விதத்தில் போய் நிற்க வேண்டும் என்று ஆவலுடன் விரைந்து வீடு திரும்பினேன். ஆனால் அவளோ எனக்கு ஒரு பேர் அதிர்ச்சியைத் தரக் காத்துக் கொண்டு இருந்தாள். அது அங்கு போக விட்டுத் தான் எனக்கே தெரிந்தது. மேலும் அப்போது தான் அவள் எவ்வளவு கீழ் தரமானவள் என்பதை நானும் புரிந்து கொண்டேன். ஆம்! எனது மனைவி ஒரு கருப்பு நிற அடிமையை மார்புடன், மார்பாகத் தழுவி இதழோடு, இதழ் சேர்த்து அவனை நன்கு அனுபவித்துக் கொண்டு இருந்தாள். அதனைக் கண்ட நான் ஒரு கணம் திகைத்துத் தான் போனேன். எனது அன்பு மனைவியா இப்படி நடந்து கொண்டு இருக்கிறாள் என்பதை நான் உணர்ந்த சமயம். திடீர் என்று நான் அங்கு நிற்பதைக் கண்ட எனது மனைவி எழுந்தாள். அரை குறை ஆடையுடன் இருந்த அவள் ஒரு கூஜாவில் இருந்த தண்ணீரை என் மீது தெளித்தாள். அடுத்த நிமிடம் நான் நாயாகி விட்டேன். அவளோ மீண்டும் அந்தக் கருப்பு நிற அடிமையுடன் உல்லாசத்தில் மூழ்கினாள். அப்போது நான் கண்ணீருடன் அவ்விடத்தில் நிற்பதைக் கண்ட அவள் என்னை அடித்து ரத்தம் வடிய, வடிய துரத்தி விட்டாள்.

நாயாக மாறிய நான் குறைத்துக் கொண்டே ஓடினேன். இறுதியில் ஒரு இறைச்சிக் கடைக்காரரின் வாசலை அடைந்தேன். அவர் மிகவும் நல்ல மனம் படைத்தவராக இருந்தார். எனக்கு சாப்பிட பல வகையான இறைச்சிகளையும், பதார்த்தங்களையும் அளித்தார். அவர் கடையைப் பூட்டி விட்டு வீடு சென்றவுடன் நானும் உடன் அவர் பின்னாலேயே அவர் வீடு நோக்கிப் புறப்பட்டு விட்டேன். அவர் அந்த வீட்டிலேயே என்னைக் கட்டி வைத்து நல்ல முறையில் பராமரித்து வந்தார்.

நானும் எனது பழைய வாழ்க்கையை மறந்து இறைவன் விட்ட வழி என்றபடி அந்த நாய் வாழ்க்கையை வாழப் பழகிவிட்டேன்.

அப்படி இருக்கும் சமயத்தில் தான், ஒரு நாள் வெளியூரில் இருந்து அவரது மகள் சொந்த ஊர் திரும்பி ஆவலுடன் அந்த இறைச்சிக் கடைக் காரரை "அப்பா" என்று அழைத்த படி அவ்விடம் வந்தாள். அப்போது நான் வீட்டு வாசலில் கட்டப் பட்டு இருப்பதைக் கண்டாள். கண்ட மாத்திரத்தில் அலறினாள். அதைக் கேட்டு அந்த இறைச்சிக் கடைக்காரர் ஓடி வந்தார். மகளிடம் விசாரித்தார். அவளும் தான் அலறிய காரணத்தை இறைச்சிக் கடைக்காரரிடம் சொல்லத் தொடங்கினாள்.

"அப்பா, உண்மையில் இது நாயே அல்ல, இவர் ஒரு ஆண் மகன். இவருடைய மனைவியால் தான் இவ்விதம் நாயுருவாக மாற்றப்பாட்டார்" என்றாள்.

தனது மகள் கூறிய வார்த்தைகளைக் கேட்ட இறைச்சிக் கடைக்காரர் ஆச்சர்யம் கொண்டார். உடனே தனது மகளிடம்," எனில், எனது அன்பு மகளே, நீ தான் பல மந்திரங்களைக் கற்றவள் ஆயிற்றே! அதனால் இவரை மறுபடியும் ஒரு ஆண் மகனாக மாற்றக் கூடாதா?" என்று கேட்டார்.

"முடியும் அப்பா. அது எனக்கு ஒன்றும் ஒரு பெரிய காரியம் இல்லை. உடனே நான் இவரைப் பழைய படி மாற்றி விடுகிறேன்" என்று கூறி ஒரு குவளையில் இருந்து மந்திர நீரை எடுத்து அதனை நாயாக இருந்த என் மீது தெளித்தாள். அடுத்த கணம் நானும் பழைபடி ஆண் மகனாக மாறிவிட்டேன்.  உடனே அதுவரையில் எனக்கு ஆதரவு தந்த அந்த இறைச்சிக் கடைக்காரருக்கு நன்றிகளைத் தெரிவித்தேன். மேலும் என்னை பழைய நிலைக்கு மாற்றிய அவரது மகளுக்கும் நன்றிகளைத் தெரிவித்தேன்.

பிறகு மீண்டும் எனது மனைவி என்னைப் பார்த்தால் வேறு ஏதேனும் ரூபத்துக்கு மாற்றி விடுவாளோ என்று அச்சம் கொண்ட நான். அந்த இறைச்சிக் கடைக்காரரின் மகளிடம்," அம்மா, என்னை நாயுருவாக மாற்றினாளே எனது மனைவி, அவளையும் உருவ மாற்றம் செய்ய விரும்புகிறேன், காரணம் மீண்டும் அவள் என்னை வேறு ஒரு ரூபத்துக்கு மாற்றி விட்டாள் எனக்குத் தான் பிரச்சனை. அதனால் நீங்கள் தானம்மா எனக்கு உதவிட வேண்டும்" என்று மன்றாடினேன்.

உடனே என் மீது பரிதாபம் கொண்ட அந்தப் பெண் மந்திர நீரைக் கொண்டு வந்து என்னிடம் கொடுத்து, "இந்த நீரை உங்கள் மனைவி மீது தெளித்து என்ன உருவில் நீங்கள் அவளைக் காண வேண்டுமோ அந்த உருவத்தை மனதினில் எண்ணிக் கொள்ளுங்கள்" என்று கூறினாள்.

உடனே நானும் அந்த மந்திர நீரை எடுத்துக் கொண்டு விரைவாக எனது வீட்டிற்குச் சென்றேன். என்னை நாயாக உருமாற்றிய அந்தக் கிராதகி - அதாவது எனது மனைவி நன்றாக உறங்கிக் கொண்டு இருந்தாள். அந்நிலையிலேயே, அந்த இறைச்சிக் கடைக்காரரின் மகள் கொடுத்த மந்திர நீரைக் கொண்டு எனது மனைவி கோவேறு கழுதையாக மாற வேண்டும் என்று நினைத்தபடி அவள் மீது தெளித்தேன். என்னுடைய எண்ணம் போலவே, எனக்குத் துரோகம் செய்த எனது மனைவி கோவேறுக் கழுதையாக மாறிவிட்டாள். அவளைத் தான் இப்போது நான் கயிற்றில் கட்டி இழுத்து வந்து உள்ளேன்" என்று அவர் கூறி முடித்தார்.

மூன்றாவது கனவான் கூறிய கதையைக் கேட்ட பூதம், "இந்தக் கதையும் நன்றாகத் தான் உள்ளது" என்று கூறியபடி அந்த வணிகனை முழுமையாக மன்னித்து விடலாம் என்ற முடிவுக்கு வந்தது. அதன் படியே அந்த வணிகனிடம்," எனக்கு மனிதர்களே பிடிக்காது. அதனால் தான் நீ என்னிடத்துக்கு வந்தவுடன் எனது பிள்ளையைக் கொன்று விட்டதாகப் பொய் காரணம் கூறி உன்னைக் கொல்லத் தீர்மானித்தேன். ஆனால், இப்போதோ எல்லா மனிதர்களும் சுயநலக் காரர்கள் இல்லை என்பதைப் புரிந்து கொண்டேன் அதனால் உன்னை நான் மன்னிக்கிறேன்" என்று கூறி மன்னித்து விட்டு விட்டது.

தன்னை ஆபத்தில் இருந்து காப்பாற்றிய அந்த நல்லவர்கள் மூவரையும் கட்டித் தழுவித் தனது நன்றியைத் தெரிவித்துக் கொண்டார் அந்த

வணிகர்.

இவ்விதம் கதையை அரசர் ஷாரியாரிடம் சொல்லி முடித்தாள் ஷாரஜாத், அதைக் கேட்ட மன்னர் அவளை வெகுவாகப் பாராட்டினார். அத்துடன் ஷாரஜாத்தின் தங்கை துன்யாஜாத்தும் அந்தக் கதையை கேட்டு அக்காவைப் பாராட்டி மகிழ்ந்தாள்.

அப்போது ஷராஜாத் அரசரிடம், "இந்தக் கதையை விடவும் செம்படவனுடைய கதை இன்னும் பிரமாதமானதாகும்" என்று கூறினாள். உடனே அதையும் கேட்க ஆவல் கொண்டார் மன்னர் ஷாரியர்.

உடனே செம்படவனின் கதையை சொல்லத் தொடங்கினாள் ஷாரஜாத்

# செம்படவனும் பூதமும்

முன்னொரு காலத்தில் மைதீன் என்ற பெயருடைய வயது முதிர்ந்த ஏழைச் செம்படவன் ஒருவன் இருந்தான். அவனுக்கு மனைவியும் மூன்று பிள்ளைகளும் இருந்தார்கள். அவனிடம் ஒரு வழக்கம் இருந்தது. அவன் ஒரு நாளைக்கு நான்கு முறைதான் கடலில் வலை வீசுவான். மீன் கிடைக்காவிட்டாலும் அதற்கு மேல் அவன் வீசமாட்டான்.

அப்படி இருக்கும் சமயத்தில் தான் ஒரு நாள் பகல் வேளையில் அவன் மீன் பிடிப்பதற்காகப் புறப்பட்டான். கடற்க் கரையை அடைந்த மைதீன் கடலில் இறங்கி வலையை வீசினான். மூன்று முறை வீசியும் அவனுக்கு எதுவுமே கிடைக்கவில்லை. மூன்று முறையும் அவனுக்குக் கிடைத்ததெல்லாம் மண்ணும், மணலும் தான். அதனால் நான்காவது முறையாக இறைவனை நினைத்துக் கொண்டு தனது வலையை வீசினான். அவன் நினைத்தபடி வலை மிகவும் கனத்துப் போனது. அப்போது வலையைப் பொறுமையாக இழுத்தான். வலையும் கரையை அடைந்தது, உடனே ஆசையுடன் அந்த வலையை பிரித்துப் பார்த்தான். அதில் ஒரு மஞ்சள் நிறத் தகட்டாலான ஜாடி ஒன்று இருக்கக் கண்டான்.

ஜாடியின் வாய்ப்பக்கம் ஈயத்திலாலான மூடியால் மூடப் பட்டு இருந்தது. அதன் வாய்ப் பக்கத்தில் சுலைமானின் முத்திரை பதிக்கப்பட்டு இருந்தது (இஸ்லாமியர்கள் இவரை ஒரு புகழ்பெற்ற புனிதராக, இறையருள் பெற்றவராக நினைவு கூறுவர்)

ஜாடியை முதலில் பார்த்ததும் அவனுக்கு அச்ச உணர்வு தான் முதலில் ஏற்பட்டது. அதன் பின்னர் சுலைமானின் முத்திரையைப் பார்த்த பிறகே தெளிவடைந்தான். அத்துடன் ஜாடியினுள் ஏதோ விலை மதிப்பு மிக்கப் பொருள் இருக்கும் என்றும் நம்பினான். அதனால் ஏற்பட்ட ஆர்வக் கோளாறில் ஜாடியைத் திறந்து பார்த்தான்.

அடுத்த கணம் அந்த ஜாடியில் இருந்து பெரும் புகை வெளிவந்தது. பின்னர் அந்தப் புகையில் ஒரு உருவம் தெரிந்தது. அடுத்த கணம் மைதீன் ஒரு வித்யாசமான ரூபத்தைக் கண்டான். பிறகு தான் அது ஒரு பூதம் என்பதை அவன் அறிந்து கொண்டான். அதனால், உண்மையில் அவன் அச்சம் அடைந்தான்.

ஜாடியில் இருந்து வெளிவந்த அந்தப் பூதம் மைதீனைப் பார்த்து கோபத்துடன் பேசத் தொடங்கியது "என்னை வெகு காலத்திற்குப் பிறகு நீ ஜாடியில் இருந்து காப்பாற்றி மிகப் பெரிய தவறை செய்து விட்டாய். நான் உன்னை விடப் போவதில்லை. நீ சாக வேண்டியவன்" என்றது.

பூதத்தின் மேற்கண்ட வார்த்தையைக் கேட்ட மைதீன் மிகவும் கலங்கிப் போனான். அத்துடன் அவன் பூதத்திடம், "நான் ஏன் சாக வேண்டும்? உன்னை இந்த ஜாடியில் இருந்து விடுவித்ததற்க்காகவா?" என்று தைரியமாகக் கேட்டான்.

ஆனால் அந்த பூதமோ மைதீன் சொன்னதைக் காதில் போட்டுக் கொள்ளவே இல்லை. மாறாக மைதீனிடம், "நீ எப்படிச் சாக வேண்டும் என்று விரும்புகிறாய் என்பதைச் சொல், அதன் படி உனக்கு மரணத்தை பரிசாக அளிக்கிறேன்" என்று கூறியது.

"என்னைச் சாகடிப்பதிலேயே நீ ஏன் குறியாக இருக்கிறாய்? நான் உனக்கு நல்லது தானே செய்தேன்?" என்று மீண்டும் ஒரு கேள்வியைக் கேட்டான் மைதீன்.

அதற்கு அந்தப் பூதம், "நான் இந்தக் கடலுக்குள் பல ஆயிரம் வருடங்களாக அடைபட்டு இருந்தேன். இப்போது எனக்கு பசி எடுக்கிறது. வெகு நாட்கள் கழித்து நான் புசிக்க உன்னைப் போன்ற ஒருவன் கிடைத்து இருக்கிறான். உன்னை நான் விடுவேனா?” என்றது.

“ஆஹா! இந்த பூதம் நம்மைத் தின்பதில் குறியாக உள்ளது. அத்துடன் நம்மைத் திண்ண வேண்டும் என்றும் தீர்மானம் செய்து விட்டது. இதனிடம் இருந்து நாம் தப்பிக்க நமது புத்தியைத் தான் பயன்படுத்தி ஆக வேண்டும்” என்று யோசித்து அந்த செம்படவன் ஒரு முடிவுக்கு வந்தான்.

தான் எடுத்த அந்த முடிவின் அடிப்படையில் அந்தச் செம்படவன், ”சுலைமான் பெருமானாரின் மீது ஆணையிட்டு உன்னிடம் ஒன்றைக் கேட்கிறேன். நீ சத்தியத்தை சொல்ல வேண்டும்” என்று கேட்டான்.

அந்த செம்படவன் சுலைமான் பெருமானாரின் பெயரைச் சொன்ன மாத்திரத்தில் அந்த பூதம் பயந்து அலறி நின்றது. அந்தக் கலக்கத்துடன் அந்த செம்படவனிடம்,” நீ என்னிடம் என்ன கேட்க விரும்புகிறாய்?

சொல்" என்றது.

உடனே அந்த செம்படவன் அந்த பூதத்திடம், "நீ பெரிய உருவத்தைக் கொண்டு இருக்கிறாய். ஆனால், இந்த ஜாடியோ மிகச் சிறிய துவாரத்தைக் கொண்டு இருக்கிறது. நீ இதற்குள் எப்படிப் போனாய்? அத்துடன் நீ இந்த ஜாடியில் எப்படி இருந்திருக்க முடியும்? என்னால் அதனை நம்பவே முடியவில்லை. நான் கண்ணால் கண்டால் தான் நம்புவேன். நீ இந்தச் ஜாடியில் தான் இருந்தாய் என்பதை எனக்கு நிரூபித்துக் காட்டு. இதனை நான் சுலைமான் பெருமானார் மீது ஆணையாகக் கேட்கிறேன்" என்றான்.

செம்படவனை நம்பச் செய்வதற்காக ஜாடியில் உள்ளே சென்று வர அந்தப் பூதம் முடிவு செய்தது. அந்த முடிவை எடுத்த மாத்திரத்தில் அந்த பூதம் தன்னுடைய உடலைச் சுருக்கிக் கொண்டு, அதாவது கொஞ்சம் கொஞ்சமாக சுருக்கிக் கொண்டு அந்த ஜாடிக்குள் நுழைந்து விட்டது.

இந்த சமயத்துக்காகத் தான் அந்த செம்படவனும் காத்துக் கொண்டு இருந்தான். பூதம் புகுந்த அடுத்த கணம் அந்தச் செம்படவன் கணப் பொழுதில் செயல்பட்டு சுலைமானின் முத்திரையுடன் கூடிய ஈய மூடியை எடுத்து ஜாடியின் வாயில் பொருத்தி அதனை நன்கு இறுக்கமாக அந்த பூதம் வெளிவராத படி மூடிவிட்டான்.

மறுபுறம் ஜாடியில் இருந்து வெளிவருவதற்கு அந்தப் பூதம் ஆன மட்டும் அனைத்து முயற்ச்சிகளையும் செய்தது. ஜாடியை அந்தச் செம்படவன் சுலைமான் பெருமானாரின் முத்திரையைக் கொண்டு நன்றாக மூடி இருந்ததால் அந்தப் பூதத்தால் கடைசி வரையில் அந்தச் சாதியை விட்டு வெளிவர முடியவில்லை. அதனால் தவித்துப் போனது. அத்துடன் எவ்வளவு சாமர்த்தியமாகத் தன்னை வெற்றி கொண்டு விட்டான் என்று எண்ணிப் பெரிதும் வேதனை அடைந்தது அந்தப் பூதம். அத்துடன் தன்னை விடுவிக்குமாறு அந்தச் செம்படவனிடம் வேண்டிக் கேட்டுக் கொண்டது.

உடனே அந்தச் செம்படவன் அந்த பூதத்திடம்," பல ஆயிரம் வருடங்களாக சிறைபட்டு இருந்த உன்னை மீட்டு எடுத்தேன். ஆனால், நீயோ கொஞ்சம் கூட மனசாட்சி இல்லாமல் என்னையே கொல்லப் பார்த்தாய். இனி நான் உன்னை விடுவிப்பேனா? நிச்சயம் மாட்டேன்" என்றான்.

"என்னை மட்டும் நீ திறந்து விடேன். உனக்கு நான் பல வழிகளில் உதவுவேன். என்னை நம்பு" என்றது அந்தப் பூதம்.

"பூதமே. நீயும் சில மனிதர்களைப் போல ஒரு ஏமாற்றுக்காரன் தான். நான் அதனை நன்கு உணர்ந்து கொண்டேன். நான் மட்டும் உன்னை இப்போது விடுதலை செய்தேன் என்றால் யூனான் மன்னருடைய அமைச்சர், ஞானி தூபானிடம் நடந்து கொண்டதைப் போலத் தான் நீயும் நடந்து கொள்வாய், அதனால் எதற்கு வம்பு உன்னைத் தூக்கி கடலில் போட்டு விடுகிறேன்" என்றான் செம்படவன்.

"அது யார் யூனான் மன்னனின் அமைச்சன்? அது சரி ஞானி தூபான் என்பவர் யார்? எனக்கு அவர்களைப் பற்றி எல்லாம் தெரியாது. உன்னால் அவர்களைப் பற்றி விளக்கிக் கூற முடியும் என்றால் கூறு" என்றது அந்தப் பூதம்.

"அவசியம் நீ அந்தக் கதையை கேட்க வேண்டும். அப்போது தான் உன்னைப் போன்ற நன்றி இல்லாதவர்கள் திருந்துவார்கள்" என்றான் அந்தச் செம்படவன்.

பிறகு யூனான் மன்னரின் அமைச்சரின் கதையை பற்றி அந்த பூதத்திடம் சொல்லத் தொடங்கினான் அந்தச் செம்படவன்.

# யூனான் மன்னனின் நயவஞ்சக அமைச்சன் செய்த அக்கிரமம்

அன்றைய காலத்தில் கிரேக்க நாட்டை யூனான் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனுடைய பேராற்றல் கண்டு பல நாட்டு மன்னர்கள் அவனுக்கு உதவி செய்யக் காத்துக் கொண்டு இருந்தார்கள். அவனிடம் மிகப் பெரிய படை இருந்தது. அதனால் அனைத்து அரசர்களும் அவனுக்கு பயந்து கப்பம் கட்டி வந்தார்கள். அவன் சிறந்த ராஜ தந்திரியும் கூட. எனினும், செல்வத்தையும், அறிவையும் அவனுக்கு வாரி வழங்கிய இறைவன் ஏனோ தொழுநோய் என்ற பெருவியாதியையும் அவனுக்கு கொடுத்து விட்டான். அதனால் யூனான் அனுதினமும் அவஸ்த்தைப் பட்டுக் கொண்டு இருந்தார். அவரது அந்தப் பெரு வியாதியைத் தீர்க்க எண்ணற்ற மருத்துவர்கள் முயன்றும் கூட முடியாமல் போனது தான் கொடுமை.

யூனான் சாப்பிடாத மருந்துகளே இல்லை என்ற அளவுக்குப் பல விதமான மருந்துகளையும் உட்கொண்டார். ஆனால், நாளுக்கு நாள் அவரது வியாதி பெருகிக் கொண்டு தான் போனதே தவிர சிறிதும் குறையவில்லை. அது தான் கொடுமை.

இந்தச் சமயத்தில் தான் மருத்துவ மேதை என்று பல நாடுகளிலும் புகழப் பெற்ற மாபெரும் அறிஞரான "தூபான்" என்னும் ஞானி அந்த நகரத்துக்கு வந்தார். அவரைப் பார்த்தவுடனேயே மக்கள் அடையாளம் கண்டு கொண்டனர். அவ்வளவு பிரபலமானவராக அவர் இருந்து வந்தார். அத்துடன் அவரது மனமும் கூட நன்மைகளின் இருப்பிடமாகத் திகழ்ந்தது. மருத்துவ சாஸ்திரம் மட்டுமின்றி தத்துவ சாஸ்த்திரத்திலும் ஆழ்ந்த புலமை பெற்றவர் அவர். மருத்துவத்தை தொழிலாகச் செய்யாமல் சேவையாக செய்து வந்தார். பலருக்கு இலவச மருத்துவ சேவையையும் அவர் வழங்கி உள்ளார். அதனால் சில ஊரில் வாழ்ந்த மக்கள் அவரை தெய்வமாகத் தான் போற்றினார்கள்.

இந்நிலையில் தான் "தூபான்" அந்நாட்டு அரசரான "யூனானுக்கு" ஏற்பட்ட தொழு நோயைப் பற்றிக் கேள்விப்பட்டார். அவருக்கு அரசரை குணமாக்க வேண்டும் என்ற எண்ணம் பிறந்தது. அத்துடன் அது தன்னால் முடியும் என்றும் அவர் நம்பினார். அதனால் அரசரைக் காண அந்நாட்டின் அரண்மனைக்கு விரைந்தார். காவலர்கள் "தூபானைப்"

பார்த்த மட்டில் உணர்ந்து கொண்டார்கள் அவர் யார் என்று. அத்துடன் அவரை உள்ளே செல்ல அனுமதித்தனர்.

தூபான் மன்னரை சந்தித்து அவருக்கு ஆறுதல் கூறினார். அத்துடன் யூனானுக்கு நம்பிக்கை அளிக்கும் விதத்தில் பேசினார். அதனால் யூனான் மகிழ்ச்சி அடைந்து தனது நோய் நிச்சயம் நீங்கும் என்று நம்பினார். பிறகு தூபானிடம் அரசர்," எனது நோய்க்கு எவ்வகையில் மருத்துவம் பார்க்கப் போகின்றீர்கள்?" என்று கேட்டார்.

அதற்கு தூபான், "அரசே! தாங்கள் எந்த வித மருந்தையும் உட்கொள்ள வேண்டிய அவசியம் இருக்காது. ஏன்? தைலங்களைக் கூடத் தாங்கள் தேய்த்துக் குளிக்கத் தேவை இல்லை. களிம்பு வகைகளைக் கூட தேகத்தில் பூசிக் கொள்ள வேண்டியதில்லை. ஏன் கசப்பு சுவை கொண்ட கஷாய மருந்துகளைக் கூட அருந்த வேண்டிய அவசியம் இல்லை. ஆம்! இந்த வகையில் தான் உங்களை நான் குணப்படுத்தப் போகிறேன்" என்றார்.

"உண்மையாகவா? இது சாத்தியமா?" என்று கேட்டார் மன்னர்.

"ஆம்" என்றார் தூபான். உடனே அரசர் மனம் மகிழ்ந்து தூபான் தனது அரண்மனையில் தங்குவதற்கான அனைத்து ஏற்பாடுகளையும் செய்தார்.

தூபானுக்கு ஒரு அற்புதமான கலைநயம் மிக்க அறை ஒன்று கொடுக்கப்பட்டது. அதில் தனது நூல்களை எல்லாம் பத்திரமாக அடுக்கி வைத்தார் தூபான். பிறகு "போலோ" விளையாட்டிற்குப் பயன்படும் மட்டையைத் தயார் செய்தார் தூபான். அதிலும் அதனை சற்று வித்தியாசமாகவே தயார் செய்தார் தூபான். குறிப்பாக, அதில் நிறைய துவாரங்களை உண்டு பண்ணி அதற்குள் பலவிதமான மூலிகைகளின் தூளை நிரப்பினார். இதைப் போலவே பந்தினுள்ளும் நிரப்பி அதன் வாயை அடைத்தார்.

அடுத்த நாள் காலை தூபான் அந்தப் பந்தையும் மட்டையையும் கொண்டு வந்து அரசரிடம் கொடுத்தார். பிறகு அவரிடம், "அரசே! இந்தப் பந்தையும் மட்டையையும் வைத்து நீங்கள் நாளைக் காலையில் அதுவும் சூரிய ஒளியில் விளையாட வேண்டும். அப்போது வியர்வை நன்றாக வெளிவர வேண்டும். அந்த அளவுக்கு நீங்கள் ஓடி, ஆடி

விளையாட வேண்டும். அப்போது இந்தப் பந்திலும், மட்டையிலும் இருக்கும் மூலிகைகளின் தூள் வெளியில் வந்து உங்கள் ஸ்பரிசத்தில் படிய வேண்டும். மேலும், இதில் நான் அடைத்து வைத்திருக்கும் அனைத்து மூலிகைகளின் காற்றையும் தாங்கள் சுவாசிக்க வேண்டும். அவ்வாறு தாங்கள் அந்தத் தூளின் மனத்தை சுவாசித்தால் நிச்சயம் தங்களது நோய் குணமாகும்" என்று கூறி முடித்த தூபான். அந்தப் பந்தையும், மட்டையையும் எப்படிப் பிடிக்க வேண்டும் என்பது பற்றிய அறிவுரைகளையும் கூட மன்னருக்கு வழங்கினார்.

அதனை சரியாகப் பின்பற்றி அடுத்த நாள் காலையில் மன்னர் போலோ விளையாட்டை விளையாடினார். இதே போல அன்றைய தினம் இரவும் தூபான் இன்னொரு மூலிகைப் பொடிகளைக் கொண்ட பந்தையும், மட்டையையும் அரசரிடம் வழங்கினார். அதைக் கொண்டு அடுத்த நாளும் மன்னர் போலோ விளையாட்டை ஆர்வமுடன் விளையாடினார். இப்படி சுமார் ஒரு வாரம் நடந்தது. ஒரு நாள் மன்னர் குளித்து, முடித்து உற்சாகத்துடன் குளியல் அறையை விட்டு வெளியே வந்தார். அப்போது தான் தன்னைப் பிடித்து இருந்த தொழு நோய் முற்றிலும் குணமானதை அவர் உணர்ந்தார். உடனே தூபானை அழைத்து அதற்காக நன்றியைத் தெரிவித்தார். அத்துடன் அவருக்கு விலை மதிக்க முடியாதப் பரிசுப் பொருட்கள் பலவற்றைக் கொடுத்து கௌரவித்தார். மேலும், ஒரு மிகப் பெரிய மாளிகை ஒன்றையும் பரிசளித்தார்.

பிறகு தூபானிடம் அரசர்," தாங்கள் இனி ராஜ வைத்தியராக எனது நாட்டிலேயே தங்கி விடலாம். அத்துடன் தங்களது ஆராய்ச்சியையும் தொடர்ந்து தாங்கள் எனது நாட்டிலேயே செய்து கொள்ளலாம். அதற்குத் தேவையான அனைத்தும் தங்களுக்கு செய்து தரப் படும்" என்றார்.

அரசர் யூனானின் கட்டளைப் படி தூபான் அந்த நாட்டிலேயே தங்கினார்.

மன்னரின் தீர்க்க முடியாத நோயை தூபான் தீர்த்ததால் அவருக்கு அந்த நாட்டிலும், அரண்மனையிலும் அப்படி ஒரு மரியாதை அளிக்கப்பட்டது. தூபான் பெரிதும் மதிக்கப்படும் மனிதராகத் திகழ்ந்தார்.

இது இப்படி இருக்க, மன்னருக்குப் பல அமைச்சர்கள் இருந்து வந்தார்கள். அவர்களில் ஒருவன் அதிக பொறாமைக் காரனாகவும். பிறர்

நன்றாக வாழ்வதைப் பொறுக்க முடியாதவனாகவும் இருந்தான். அவன் ஞானி தூபான் போற்றப்படுவதை விரும்பவில்லை. மேலும் அந்தப் பொறாமையால் அந்த அமைச்சர் தூபானை பற்றி மன்னரிடமே தவறாகப் பேசத் தொடங்கினார். எனினும், அந்நாட்டு மன்னர் அதனைப் பொருட்படுத்தவில்லை.

ஒரு நாள் மீண்டும் அந்த அமைச்சர், "ஞானி தூபான் அவர்கள் தங்களுக்கே கெடுதல் நினைக்கக் கூடும்" என்று மன்னரிடம் கூற அதனைக் கேட்ட அரசர் அதீத கோபம் அடைந்தார். பிறகு அந்த அமைச்சரைப் பார்த்து, "தூபான் ஒரு உண்மையான ஞானி. அவர் போற்றுதலுக்கு உரியவர். அவரது திறமைக்கு இந்த நாட்டைக் கூட அவருக்குப் பரிசாக அளிக்கலாம். ஏனெனில், அவர் எனது தொழுநோயையே போக்கியவர். நீ சொன்ன விஷமத்தனமான வார்த்தைகளை நம்பி உன்னுடைய பேச்சைக் கேட்டு நான் அந்த ஞானியைத் துன்புறுத்தினால் சிந்திபாத் அவர் வளர்த்த வல்லூறைக் கொன்றதைப் போன்ற மூடத்தனமான செயலை செய்தவன் ஆவேன் நான்" என்றார்

இப்படிக் கூறி விட்டு கதையை நிறுத்தினாள் ஷாரஜாத் அப்போது இருள் மெல்ல விளகிக் கொண்டு இருந்தது. அதனால் இரவு விடை பெற்றுக் கொண்டு இருந்தது. ஒரு அர்த்தத்துடன் மன்னர் ஷாரியாரைப் பார்த்தாள் ஷாரஜாத். தனது மனைவியின் பார்வையைப் புரிந்து கொண்ட ஷாரியர்.

"சரி, பொழுது விடிந்ததை எனக்கு சொல்லாமல் சொல்கிறாயா? எனில், இப்போதைக்கு நான் போகிறேன். மீதி கதையை நான் இன்று இரவு வந்து கேட்கிறேன். கண்டிப்பாக மீதி கதையையும் சொல்ல வேண்டும். சரிதானே?" என்று கூறி விட்டுத் தனது அலுவலகப் பணியைப் பார்க்கச் சென்றார்.

பிற்பாடு அன்றைய பொழுதும் அற்புதமாகக் கழிந்தது. இரவு வேளையும் நெருங்கியது ஷாரியர், ஷாரஜாத்தை நெருங்கி மீண்டும் கதையை கேட்கத் தொடங்கினார். அப்போது ஷாரஜாத்தும் சிந்திபாத் என்ற அரசனின் முட்டாள் செயலை பறைசாற்றும் கதையை கூறத் தொடங்கினாள்.

# சிந்திபாத் வளர்த்த வல்லூறின் கதை

பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் சிந்திபாத் என்ற பேரரசர் இருந்தார். அவர் வேட்டையாடுவதில் அதீத ஆர்வம் கொண்டு இருந்தார். அது போல அவர் குதிரைகளை ஓட்டுவதிலும் வல்லவர். மேலும் அந்த சிந்திபாத் பல பறவைகளை வளர்த்து வந்தார். அதில் ஒரு வல்லூறையும் வளர்த்து வந்தார். அந்த வல்லூறை வேட்டைக்குச் செல்லும் சமயத்தில் எப்போதும் உடன் அழைத்துச் செல்வார். மேலும், அந்த வல்லூரின் கழுத்தில் ஒரு தங்கக் கிண்ணத்தையும் கட்டித் தொங்க விட்டு இருப்பார். அதில் அந்த வல்லூறுக்கு தேவையானவற்றை போட்டு வைத்திருப்பார். தேவைப்படும் போது அந்த வல்லூறு அதில் உள்ள தானியங்கள் போன்றவற்றை எடுத்துக் கொள்ளும், அத்துடன் அதில் ஒரு பக்கத்தில் இருக்கும் நீரைக் கொண்டு தனது தாகத்தையும் தீர்த்துக் கொள்ளும். மேலும், மன்னர் எங்கு சென்றாலும் அவரை அந்த வல்லூறு நிழல் போலத் தொடரும். நன்றியுள்ள அப்பறவை மன்னரையே எப்போதும் சுற்றிச், சுற்றி வரும்.

அப்படி இருக்கும் சமயத்தில் தான் ஒரு நாள் சிந்திபாத் வேட்டை ஆடுவதற்காக தனது பெரும் படைகள் பின் தொடர வனத்திற்குச் சென்றார். ஒரு பெரிய காட்டாற்றின் கரையை அடைந்த மன்னர் அதனை அடுத்து உள்ள ஒரு சமவெளியில் வலையை விரிக்கச் செய்தார். அதன் படியே மன்னரின் காவலர்கள் அவ்விடத்தில் வலையை நன்றாக விரித்துக் கட்டினார்கள். அத்துடன் வன விலங்குகள் எதுவும் அந்தப் பொறியை அறியாதபடி வலையை நன்கு மறைத்தனர். எனினும், அப்பகுதிக்கு வந்த மான் ஒன்று அந்த வலையில் சிக்கிய பிறகும் கூட அதில் மாட்டாமல் சாதுர்யமாக துள்ளிக் குதித்துத் தப்பியது. அதனைக் கண்ட அரசர், தனது சேவகர்கள் சரியாக வலையை விரிக்க வில்லை என்று ஆத்திரம் கொண்டு அவர்களிடம் கத்தினார்.

உடனே சேவகர்கள் பின்னாலேயே துரத்திச் சென்று அந்த மானை பிடிக்கச் சென்றனர். அப்போது அவர்களுடன் மன்னரும் தனது குதிரையில் அந்த மானை துரத்திக் கொண்டு சென்றார். சேவகர்கள் எவ்வளவு முயற்சி செய்தும் கூட அந்த மான், அவர்கள் கைகளில் வைத்திருந்த வலையில் அகப்படாமல் போனது. இவ்வளவுக்கும் மன்னரால் கூட அந்த மானை அது அருகில் வந்த சமயத்தில் கூட பிடிக்க முடியாமல் போனது. அப்போது மன்னருடன் சென்று இருந்த அவர்

வளர்த்த வல்லூறு, மானை எப்படியாவது மன்னரிடம் பிடித்துத் தர வேண்டும் என்று சித்தம் கொண்டது.

மறுபுறம் அந்த மான் துள்ளிக் குதித்து ஒரு மலை அடிவாரத்தை அடைந்தது. அங்கு நின்று சற்று நேரம் இளைப்பாறியது. மன்னருடன் சென்ற வல்லூறு இது தான் சமயம் என்று பறந்து சென்று மானின் கண்களில் தன்னுடைய கால் நகங்களைச் செலுத்திப் பார்வை இல்லாமல் செய்தது. அதற்குப் பிறகு அந்த மானால் ஓட முடியவில்லை. உடனே மன்னர் அவ்விடத்திற்கு சென்று மிகச் சுலபமாக அந்த மானை வேட்டை ஆடினார்.

அந்த சமயம் உச்சி வேளை நெருங்கிக் கொண்டு இருந்தது. தண்ணீர் தாகத்தால் மன்னர் தவித்துப் போனார். எங்கு தேடியும் தண்ணீரும் கிடைக்க வில்லை. அந்த சமயத்தில் ஒரு மரத்தின் அடியில் வந்து நின்றார். அந்த மரத்தில் இருந்து பால் போன்ற வெள்ளை திரவம் வெளிப்பட்டுக் கொட்டிக் கொண்டு இருப்பதைப் பார்த்து அதனைப் பருகி தனது தாகம் தீர்க்க வேண்டும் என்று மன்னர் ஆசை கொண்டார். அதன் படியே தன்னைத் தொடர்ந்து வந்த வல்லூரின் கழுத்தில் இருந்த கிண்ணத்தை எடுத்து மரத்தில் இருந்து வடிந்து கொண்டு இருந்த திரவத்தை அதில் நிரப்பி அதனை ஆசையுடன் பருகச் சென்றார் மன்னர் சிந்திபாத். அப்போது திடீர் என்று அந்த வல்லூறு தனது கால்களால் அந்தக் கிண்ணத்தை தட்டி விட்டது.

அதைக் கண்ட மன்னர், மீண்டும் அந்தக் கிண்ணத்தை மரத்தின் பால் கொண்டு நிரப்பினார். அதனைப் பருகவும் கையில் எடுத்தார். இந்த முறையும் அந்த வல்லூறு பாய்ந்து சென்று அந்தக் கிண்ணத்தை தட்டி விட்டது. இப்படி மூன்று முறை நடந்தது. கோபத்தின் எல்லையைக் கடந்தார் மன்னர்.

ஒரு கட்டத்தில் அதீத ஆத்திரம் கொண்ட அரசர், "என்னைக் குடிக்க விடாமல் இந்த மரத்தின் பாலை இப்படி வீணடித்து விட்டாயே! உன்னை என்ன செய்கிறேன் பார்" என்று கூறிய வண்ணம் அந்த வல்லூரின் இறக்கைகளை வெட்டி வீழ்த்தினார்.

அப்போது அந்தப் பறவை அந்த நிலையிலும் கூட மன்னரைத் தனது அழகால் தேய்த்த வண்ணம் மரத்தைப் பார்த்தது. இவ்விதம் அந்த வல்லூறு அந்த மரத்தை மீண்டும், மீண்டும் பார்க்கிறதே, எதையோ

நமக்கு அது உணர்த்த எண்ணுகிறது போலும் என்று எண்ணியவராய் மரத்தின் மேலே என்ன இருக்கிறது என்று தலையை உயர்த்திப் பார்த்தார் சிந்திபாத். அங்கு ஒரு விரியன் பாம்பு கிளைகளில் இருந்த படி விஷத் துளிகளை அந்த மரத்தின் பாலில் சிந்திக் கொண்டு இருப்பதைக் கண்டார். அப்போது தான் சிந்திபாத்துக்கு எல்லாமே புரிந்தது.

அதாவது அந்த விஷத் துளிகளைத் தான் அருந்தி விடக் கூடாது என்பதை உணர்த்தத் தான் அந்த வல்லூறு அவ்விதம் நடந்து கொண்டது என்பதை அவர் அப்போது தான் உணர்ந்தார். அதனால் கண்கள் கலங்கி நின்றார். ஆத்திரக் காரனுக்கு புத்தி மட்டு என்னும் பழமொழி தனது விஷயத்தில் நிஜமானதை எண்ணி, எண்ணி வருந்தினார்.

பிறகு தனது குதிரையில் ஏறி வல்லூறுடன் முகாமுக்கு வந்து சேர்ந்த மன்னர் மான் இறைச்சியைச் சமையல் செய்யச் சொல்லிவிட்டு காயமடைந்த வல்லூறைத் தனது கைகளில் வைத்துக் கொண்டு வேதனைப் பட்டுக் கொண்டு இருந்தார்.

"வல்லூறு மூன்று முறை உணர்த்தியும் கூட அதனை உணராமல் அதன் இறக்கைகளை வெட்டி விட்டோமே, அவசரப்பட்டு இந்தச் செயலை செய்து இப்போது துன்பத்தையும், பாவத்தையும் ஒரு சேர சேர்த்துக் கொண்டு விட்டோமே" என்றெல்லாம் சிந்திபாத் மன வேதனையை அடைந்து கொண்டு இருந்த சமயம் அந்த வல்லூறு தனது உடலில் இருந்த ரத்தம் எல்லாம் வடிந்து போன நிலையில் அக்கணமே துடி, துடித்து இறந்தது.

"இது தான் மன்னர் சிந்திபாத்தின் கதை" என்று மன்னர் யூனான் மேற்கண்ட கதையை தனது பொறமை கொண்ட அமைச்சனிடம் கூறி முடித்தார்.

பிறகு மீண்டும் அந்த அமைச்சரிடம் அரசர் யூனான், "இதே போலத் தான், தான் வளர்த்த அருமைக் கிளியை முட்டாள் தனமாகத் தானே கொன்ற வியாபாரியின் கதையும் உண்டு. அதையும் கேள். அப்போது தான் நீ இது போன்ற கெட்ட அறிவுரைகளை என்னிடம் கூற மாட்டாய்" என்று கூறியபடி அந்தக் கதையையும் கூறத் தொடங்கினார்.

# தான் வளர்த்த கிளியைத் தானே கொன்ற ஒரு வியாபாரியின் முட்டாள் தனம்

ஒரு ஊரில் பெரிய வியாபாரி வாழ்ந்து வந்தான். அவன் பெரும் தன வந்தன். அவனுக்கு ஒரு ஆசை இருந்தது, அது யாதெனில், தனக்கு வரும் மனைவி நல்ல அழகு படைத்தவளாக இருக்க வேண்டும் என்பதே. அத்துடன் தனது இந்த விருப்பத்தை தனது தாயிடம் கூறினான் அவன். ஆனால் அவனது தாயோ, "உன்னை விட அழகான மனைவியை நீ திருமணம் செய்து கொண்டால், இறுதியில் அது உனக்கே ஆபத்தாக முடியும்" என்று எத்தனையோ முறை எடுத்துச் சொன்னார்கள். இருந்தாலும் அந்த வியாபாரி தாயின் வார்த்தையை அலட்சியம் செய்தான். இறுதியில் தான் விரும்பியபடியே ஒரு பேரழகியை அவன் மணந்து கொண்டான். அத்துடன் அந்த அழகிய பெண்ணை அவன் விட்டுப் பிரியாமல் அவளுடனேயே இருந்து வந்தான். அவள் எதைக் கேட்டாலும் அவன் மறுக்காமல் வாங்கிக் கொடுத்தான். இன்னும் சொல்லப் போனால் அவளது பேரழகில் மயங்கிக் கிடந்தான். இதனால் நாளடைவில் செல்வங்கள் கரைந்தன. அதனால் தனது வியாபாரத்தை மேம்படுத்த அவன் வெளிநாடு செல்லத் திட்டம் தீட்டினான். அதன் படியே வெளிநாடு செல்லும் வாய்ப்பும் அவனுக்குக் கிடைத்தது. அவன் வெளிநாட்டுக்கு புறப்படும் முன்னர் ஒரு பேசும் கிளியை வாங்கிக் கொண்டு வந்து வீட்டில் வைத்து தனது வேலையாட்களை பார்த்துக் கொள்ளுமாறு பணித்தான். அத்துடன் அவன் வாங்கி வந்த கிளியின் விசேஷ அம்சம் யாதெனில் அந்தக் கிளி சொன்னதை சொல்லும் கிளி அல்ல, தான் பார்த்ததை அப்படியே பார்த்தபடி சொல்லும் இயல்பு கொண்டது. அதனால் தான் அந்த குறிப்பிட்ட கிளியை வியாபாரி தனது வீட்டில் வேவு பார்க்க வாங்கி வந்து வைத்து விட்டுப் போனான். ஆனால், அந்தக் கிளியின் அபூர்வ சக்தியைப் பற்றி அவனது மனைவி அறியவில்லை. உண்மையில், இவ்வளவு அழகு படைத்தவள் இறுதிவரையில் தன்னுடன் இருப்பாளா என்ற சந்தேகத்தால் தான் அந்த வியாபாரி அந்தக் கிளியையே வாங்கி வந்து வீட்டில் வைத்தான். மேலும், அந்தக் கிளியை நம்பித் தான் அவன் வெளியூர் செல்லவே தீர்மானித்து இருந்தான். பிறகு குறிப்பிட்ட நாளும் வந்தது. அந்த வியாபாரி தனது வெளிநாட்டு பயணத்துக்கு கிளம்பினான்.

வியாபாரி வெளிநாடு சென்று மூன்று வருடங்கள் வெகுவாக நகர்ந்தது. எத்தனை நாட்கள் தான் அவனது அழகு படைத்த மனைவி காமத்தை

கட்டுப் படுத்திக் கொண்டு இருப்பாள். வியாபார விஷயமாக வியாபாரி வெளி நாட்டுக்குச் செல்லவும், வியாபாரியின் தாய் இறந்து போனாள். இது அவனது மனைவிக்கு சாதகமாகப் போனது. இனி தன்னைக் கேட்க யாரும் இல்லை என்றே அவள் நினைத்தாள். அதன் படியே ஒரு வாலிபன், அந்த வியாபாரியின் மனைவியின் அழகில் மயங்கிப் போனான். அவளும் அப்படித் தான் அந்த வாலிபனைக் கண்டதும் தனது மனதைப் பறிகொடுத்து அவனை வீட்டுக்கு அழைத்து இன்பத்தை அனுபவித்தாள்.

இப்படி பல நாட்கள் இந்த இருவரும் கள்ளக் காதலிலும், இன்பத்திலும் சந்தோஷமாக ஈடுபட்டு வந்தனர். அந்த சமயத்தில் அந்த வியாபாரி வெளியூரில் இருந்து வந்தான். 'உன்னை விட அழகான மனைவி அமைந்து விட்டால், அது ஆபத்தைத் தான் தரும்' என்று அவனது தாயார் சொன்னது அந்த வியாபாரியை உறுத்திக் கொண்டே இருந்தது.

வெளியூரில் இருந்து திரும்பிய அந்த வியாபாரி முதல் வேலையாக தான் வளர்த்த அந்தச் செல்லக் கிளியுடன் பேசத் தொடங்கினான். அந்தக் கிளியும் அந்த வியாபாரியைக் கண்ட மாத்திரத்தில் அவனது தோலின் மீது ஏறி விளையாடியது. பிறகு அந்த வியாபாரியிடம், அது உண்மையைக் கூறத் தொடங்கியது. அதன் மூலம் அவன் வீட்டில் இல்லாத சமயத்தில் ஒரு வாலிபன் அவனது மனைவியைக் காண அடிக்கடி இரவு வேளையில் தனது வீட்டுக்கு வந்து போவதை அந்த வியாபாரி அறிந்து கொண்டான். விஷயத்தைக் கேள்விப்பட்ட அந்த வியாபாரி கொதித்துப் போனான். அத்துடன் அவன் தனது மனைவியிடம், இது பற்றிக் கேட்டான். ஆனால், வியாபாரியின் மனைவியோ அவனை சிறிதும் மதிக்காமல் எதிர்த்துப் பேசினாள். அது அவனது ஆத்திரத்தை மேலும் தூண்டி விட்டது. அதனால் தனது மனைவியை அந்த வியாபாரி நைய்யப் புடைத்தான். அத்துடன் கோபத்தில் சற்று நேரம் வீட்டை விட்டும் வெளியேறினான்.

மறுபக்கம், அந்த வியாபாரியின் மனைவியின் மனதினில், 'தனது ரகசியத் தொடர்பு எவ்வாறு தனது கணவனுக்குத் தெரியவந்தது?' என்ற ஒரு கேள்வி எழுந்தது. முதலில் அவளுக்கு கிளியின் மீது சந்தேகம் வரவில்லை. தனது வேலையாட்களில் தான் யாரோ சொல்லி இருக்க வேண்டும் என்று நினைத்து அனைவரையும் அழைத்து மிரட்டினாள். அப்போது தான் தனது ஒரு வேலைக்காரியின் மூலமாக கிளிதான் தன்னைப் பற்றிய உண்மையை கணவனிடம் சொன்னதை அறிந்து

கொண்டாள். அத்துடன், அப்போதே அந்தக் கிளியைக் கொல்லத் தீர்மானித்தாள். அதன் படியே அவள் ஒரு அற்புதத் திட்டத்தை வகுத்தாள்.

அன்று இரவு அவள் கணவன் பக்கத்து ஊருக்குப் போய்விட்டான். தன்னுடைய முக்கியமான பணிப் பெண்களில் இருவரை அழைத்து அவர்களில் ஒரு பெண் கிளிக் கூண்டின் அருகே அமர்ந்து இருக்கையில் அரிசியை அரைத்துக் கொண்டு இருக்க வேண்டும் என்றாள். இன்னொருத்தி முகம் பார்க்கும் கண்ணாடியைக் கிளிக் கூண்டின் பக்கத்தில் அசைத்துக் கொண்டே இருக்க வேண்டும். இடை இடையே அவள் கொஞ்சம், கொஞ்சமாகத் தண்ணீரை மேல் இருந்து கீழாக ஊற்றிக் கொண்டே இருக்கவும் வேண்டும்; அதாவது அந்தக் கிளியானது பாக்கும் வண்ணம் தண்ணீர் இடையிடையே ஊற்றப்பட வேண்டும் என்றாள்.

அந்த வேலைக் காரப் பெண்களும் கூடுதல் பணம் தங்களுக்குக் கிடைக்கும் என்ற ஆர்வத்தில் அவ்வாறே நடந்து கொண்டார்கள்.

பக்கத்து ஊருக்கு சென்று விட்டுத் திரும்பிய கணவன் வழக்கம் போலக் கூண்டில் இருந்து கிளியை எடுத்து அதனிடம் பேச்சுக் கொடுத்தான்.

அப்போது அந்தக் கிளி, "நேற்றைய இரவு இடி இடித்தது; அத்துடன் மின்னல் வேறு மின்னியது; விட்டு விட்டு மழை வேறு பெய்தது" என்று கூறியது. அதனைக் கேட்ட அந்த வியாபாரி ஆத்திரத்தின் உச்சிக்கே போனான்.

"சித்திரை மாதம் நகர் முழுவதும் கடுமையான வெயில் காய்கிறது. இந்த அறிவு கெட்டக் கிளி என்னவென்றால், இடியுடன் மழை பெய்ததாக ஏதேதோ  கூறுகிறதே! இப்படித் தான் இதற்கு முன்னாலும் இந்தக் கிளி சொன்னதை உண்மை என்று எண்ணித் தானே நமது அன்பு மனைவியை அடி, அடி என்று அடித்தோம், அவள் அவ்வளவு அடிபட்டும் கூடத் தான் எந்தத் தவறும் செய்யவில்லை என்று கூறினாளே! நாம் அதனை எல்லாம் நம்பாமல் மிகக் கொடுமையாக அவளிடம் நடந்து கொண்டோமே! அனைத்திற்கும் காரணம் இந்த அறிவு கெட்டக் கிளி தான் இதனை நாம் இன்னமும் விட்டு வைத்தால், நமது குடும்ப வாழ்க்கையை ஏதாவது சொல்லி கெடுத்து விடும்" என்று நினைத்தபடியாக அந்தக் கிளியின் கழுத்தை அந்த வியாபாரி திருகிக்

கொன்றான். அந்தக் கிளியும் அப்போதே துடி துடித்து இறந்து போனது.

என்ன தான் இருந்தாலும் பாசமாக சில நாட்கள் பழகிய கிளி யாயிற்றே. இந்த நிலையில் தான் கிளியை கொன்ற விஷயத்தை தனது நம்பிக்கைக்கு உரிய பணிப் பெண் ஒருத்தியிடம் வருத்தமாகக் கூறிக் கொண்டு இருந்தான் அந்த வியாபாரி. அப்போது வியாபாரியின் நிலையைக் கண்டு பரிதாபம் கொண்ட அந்தப் பணிப் பெண், மெல்ல அந்த வியாபாரியிடம் விஷயத்தைக் கூறத் தொடங்கினாள்.

அப்போது தான் அந்த வியாபாரிக்கு அனைத்து உண்மைகளும் புரிந்தது. தனது கிளியின் மீது எந்தத் தவறும் இல்லை என்பதை அவன் உணர்ந்தான். அத்தனை தவறுகளுக்கும் காரணம் தனது மனைவியும் அவளது கள்ளக் காதலனும் தான் என்பதை காலம் கடந்து அந்த வியாபாரி உணர்ந்து கொண்டான். அத்துடன் சத்தியத்தைப் பேசிய அந்தக் கிளியைக் கொன்று விட்டோமே என்று அந்த வியாபாரி குற்ற உணர்வில் அதனைப் பற்றி நினைத்து நினைத்து அழுதான்.

எனினும், தனது  மனைவியிடம் இது பற்றி எதையுமே கேட்காமல் அவளைக் கையும், களவுமாக படித்து விட வேண்டும் என்று அந்த வியாபாரி சித்தம் கொண்டான்.

வியாபாரியின் பணிப் பெண் கூறியது போலவே, ஒரு நாள் இரவு அவன் நேரம் கழித்து வரவும் அவனுடைய மனைவியின் அறையில் இருந்து அவள் கள்ளக் காதலன் வெளியே செல்வதைக் கண்ட அந்த வியாபாரி. கோபத்தின் உச்சிக்கே சென்று அவனைக் கொன்றான். அத்துடன் தன்னை இத்தனை நாட்கள் ஏமாற்றிக் கொண்டு இருந்த தனது மனைவியையும் அந்த வியாபாரி அடித்துக் கொன்றான்.

இப்படியாகக் கதையைத் தனது அமைச்சரிடம்  சொல்லி முடித்தார் மன்னர் யூனான். அந்தக் கதையை முழுமையாகக் கேட்ட பொறாமைக்கார அமைச்சர், அரசர் யூனானிடம்," அரசே! நான் ஒன்றும் அந்த ஞானிக்கு கெடுதல் செய்ய வேண்டும் என்றெல்லாம் நினைக்க வில்லை. நான் எல்லாவற்றையும் தங்களது நலன் கருதியே சொன்னேன். ஒரு வேளை, நான் சொன்னதில் தங்களுக்கு ஏதேனும் தவறு தென்பட்டால், பாரசீக அரசர், அந்நாட்டு இளவரசருக்கு, அந்நாட்டு  அமைச்சர் செய்த துரோகத்தைக் கருதி அவரைக் கொன்றதைப் போல என்னையும் தாங்கள் கொன்று விடுங்கள்" என்று

கூறி முடித்தார்.

இப்படியாக ஷாரஜாத் தனது அன்புக் கணவரிடம் அன்றைய இரவும் ஒரு கதையைக் கூறி அதனைப் பாதியில் நிறுத்திக் கொண்டாள். அரசர் ஷாரியார் அந்தக் கதையை மேற்கொண்டு கேட்கத் துடித்தார். அந்த நேரத்தில் ஷாரஜாத்தின் தங்கை உடன் இல்லை என்பது ஷாரஜாத்துக்கு ஒரு வகையில் வசதியாகப் போய் விட்டது. அதனால், ஷாரஜாத் அன்பு மொழி பேசி, அரசரை அணைத்துக் கொண்டு அவருக்கு இன்பத்தைக் கொடுத்தாள். அரசரும் ஆவலுடன் இன்ப விளையாட்டில் மூழ்கினார். இதனால் அன்றைய இரவும் கழிந்தது. அடுத்த நாள் காலையில் அரசர் ஷாரியார், மனைவியிடம் மீதிக் கதையை அன்று இரவு சொல்ல வேண்டும் என்று கேட்டுக் கொண்டு விட்டு, தனது அரசுக் காரியங்களை கவனிக்க அரசவைக்குச் சென்றார். இப்படியாக அன்றைய பொழுதும் நல்லபடியாக முடிந்தது. இரவு நேரம் தொடங்கியது. ஷாரியார் கதையைக் கேட்க ஆவலுடன் ஷாரஜாத்தைத் தேடி வந்தார். அன்றைய இரவும் அரசரிடம் தான் பாதியில் விட்டக் கீழ்க்கண்ட கதையை கூறத் தொடங்கினாள் ஷாரஜாத்.

# யூனான் ஒரு நன்றி கெட்ட அரசன்

ஷாரஜாத், அரசர் ஷாரியாரிடம் யூனானின் அந்த வஞ்சக அமைச்சர் கதையை சொல்வதைப் போலவே சொல்லத் தொடங்கினாள்.

பாரசீக அரசர் சுல்தான் நாதிர் ஷா, தனது ஒரே மகனின் மீது உயிரையே வைத்து இருந்தார். அவன் தான் இளவரசர் குஸ்ரு, அவன் அனைத்துப் போர் கருவிகளையும் கையாள்வதில் வல்லவன், புத்தி சாலியும் கூட, எந்த நேரத்தில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை நன்கு அறிபவன். ஆனால், தனது தவறுக்கு பிறரை கஷ்டப்படுத்தும் இயல்பு கொண்டவன். எனினும், பாரசீக அரசர் நாதிர் ஷா இளவரசன் குஸ்ருவின் மீது உயிரையே வைத்து இருந்தார். அத்துடன் தனது மகனுக்கு எப்போதும் துணையாக இருக்க வேண்டும் என்று எண்ணிய அரசர், அமைச்சர் ஒருவரைத் தனது மகனுக்கு எப்போதும் துணையாக இருக்குமாறு பணித்து இருந்தார்.

அப்படி இருக்கும் சமயத்தில் ஒரு நாள் அமைச்சரும், இளவரசனும் வேட்டைக்குச் சென்றார்கள். அப்போது இளவரசன் அந்தக் காட்டில் ஒரு வித்தியாசமான மிருகத்தை கண்டு அதனை துரத்திக் கொண்டு குதிரையில் சென்றான். உடன் அமைச்சரும் குதிரையில் விரைந்தார். ஒரு கட்டத்தில் இளவரசனை துரத்திக் கொண்டு செல்ல முடியாமல் அமைச்சர் தடுமாறினார். இளவரசனும் எங்கு சென்றான் என்றே தெரியவில்லை. இந்நிலையில் காட்டில் வெகு தூரம் சென்ற இளவரசன் அவ்விடத்தில் ஒரு அழாகான இளம் பெண்ணைக் கண்டான். அவள் கண்ணீருடன் காணப்பட்டாள். அவளைப் பார்க்கவே இளவரசனுக்கு பரிதாபமாக இருந்தது. உடனே அவளை அணுகி அவளைப் பற்றி அவளிடமே விசாரிக்கத் தொடங்கினான் இளவரசன் குஸ்ரு.

அப்போது அந்த இளம் பெண் குஸ்ருவிடம் தன்னைப் பற்றி இவ்வாறு கூறத் தொடங்கினாள்.

"ஐயா, நான் ஒரு பேரரசரின் மகள். இந்த வனத்திற்கு வந்த சமயத்தில் இதன் இயற்கை அழகில் மயங்கி வெகு தூரம் கடந்து இவ்விடம் வந்து விட்டேன். இப்போது எனக்கு வழி தெரியவில்லை. நான் தவித்துக் கொண்டு இருக்கிறேன். எனக்கு வழி காட்டவும் யாரும் இல்லை. எனக்குத் தாங்கள் உதவ முடியுமா?" என்றாள்.

உடனே அந்த இளவரசன் அந்த இளம் பெண்ணின் அழகில் மயங்கி அவளைத் தனது குதிரையில் ஏற்றிக் கொண்டு சென்றான்.

அந்த இளம் பெண் குதிரையில் ஏறிய மாத்திரத்தில், அந்தக் குதிரை தனது விருப்பப் படி விரைந்து ஓடியது. இளவரசன் அப்போது செய்வதறியாது திகைத்தான். அவனால் அந்தக் குதிரையை கட்டுப் படுத்தவே முடியவில்லை. அப்படி ஓடிய அந்தக் குதிரை ஒரு பழைய மண்டபத்தை அடைந்தது. அவ்விடத்தில் அப்படியே நின்றது. இளவரசன் குஸ்ருவுக்கு எதுவும் புரியவில்லை.

அப்போது அந்தக் குதிரையில் இருந்து இறங்கிய அந்த இளம் பெண் தான் உடனே வந்து விடுவதாகக் கூறி அந்த மண்டபத்துக்குள் புகுந்தாள். அவள் அவ்வாறு புகுந்த சில நிமிடங்களில், அவளுக்கு ஏதேனும் ஆபத்து நேரலாம் என்ற நல்ல நோக்கில் அந்த இளவரசன் மண்டபத்துக்குள் அவளைத் தொடர்ந்து ரகசியமாகச் சென்றான்.

அப்போது சிறிது தூரத்தில் நின்று இருந்த இளம் பெண், திடீர் என்று ஒரு அரக்கியாக மாறினாள். அதைக் கண்ட இளவரசனுக்கு தூக்கி வாரிப் போட்டது. அப்போது அவள் தனது அரக்கப் பிள்ளைகளிடம், "பிள்ளைகளே! இன்று ஒரு நல்ல ஆரோக்கியமான நர மாமிசத்தை அம்மா கொண்டு வந்து உள்ளேன். அந்த மாமிசப் பிண்டம் வெளியில் நின்று கொண்டு இருக்கிறது" என்று சொன்னாள்.

அதைக் கேட்ட அந்த அரக்கியின் பிள்ளைகள் மகிழ்ந்து கூத்தாடின. இதை ஒட்டுக் கேட்ட அந்த இளவரசன் பயத்தில் சத்தம் போடாமல் அங்கிருந்து விரைந்தான். அந்த அரக்கி சூதாரிப்பதற்குள் அல்லாவை ஒரு கணம் பிரார்த்தனை செய்து விட்டு குதிரையில் ஏறி புயல் போல தனது அரண்மனைக்கு விரைந்தான்.

வேர்க்க, விறுவிறுக்க வந்த இளவரசனைக் கண்ட நாதிர்ஷா அவனிடம் விவரத்தைக் கேட்டறிந்தார். இளவரசனும் அனைத்தையும் கூறி முடித்து இதற்கெல்லாம் காரணம் அமைச்சர் தான் என்ற ரீதியில் தந்தையிடம் பேசி முடித்தான். தனது ஒரே மகன் குஸ்ரு இறந்தால், பிறகு கிழ அரசனான தன்னையும் கொன்று விட்டு தான் ராஜிய பதவியை கைப்பற்றிக் கொள்ளலாம் என்ற நோக்கத்தில் தான் அமைச்சர் தனது மகனை பாதுக்காக்கத் தவறியதாகக் கூறி மகனைப் பாதுக்காக்க தான் நியமித்த அந்த அமைச்சரைத் தானே கொன்று ஒழித்தார் அரசர்.

இப்படியாக யூனானிடம் கதையைக் கூறி முடித்தார் யூனானின் பொறாமைக்கார அமைச்சர். அமைச்சரின் இந்தக் கதை யூனானை பல வகையில் குழப்பியது. அதற்கு மேலும் தூபம் போடும் படியாக அந்த பொறாமைக்கார அமைச்சர் தனது பேச்சைத் தொடர்ந்தார்.

"அரசே! நான் மேற்சொன்ன கதையில் சொன்னது போல ஒரு நாட்டின் அரசர் என்பவர் பல வகையில் யோசிக்க வேண்டும். மேற்கண்ட கதையில் ஒரு வேளை, அந்த அமைச்சர் வேண்டும் என்றே கூட இளவரசரைத் தொடராமல் இருந்து இருக்கலாம். காரணம், ஒரு பெரும் ராஜ்யத்தை பலர் அபகரிக்க நினைப்பார்கள். ஏனெனில், யாருக்குத் தான் அரசனாகும் ஆசை இருக்காது? ஏன் இதில் இந்த ஞானி தூபானும் கூட விதி விலக்கா என்ன? நாளையே அந்தக் கை தேர்ந்த மருத்துவன் தங்களை விஷம் வைத்துக் கூட கொள்ளலாம். இல்லை அவனே கூட எதிரி நாட்டின் கைப்பாவையாக இருக்கலாம். ஒருவன் தேவை இல்லாமல் மற்றொருவனுக்கு அதுவும் இக்காலத்தில் நல்லது செய்கிறான் என்றால் அவனுக்கு நிச்சயம் ஏதோ உள்நோக்கம் இல்லாமல் இருக்காது" என்றான்.

யூனான் தனது பொல்லாத அமைச்சனின் வார்த்தைகளைக் கேட்ட மாத்திரத்தில் அவனுக்குள் சாத்தான் புகுந்து விட்டான். அவன் மனம் எப்படி எப்படியியோ யோசிக்கத் தொடங்கியது.

"அமைச்சனே! நீ எனது கண்களைத் திறந்து விட்டாய். அன்றைய தினம் எனது கைகளில் எதையோ கொடுத்து எனது தொழுநோயை குணப்படுத்திய இந்த தூபான் ஏன் நாளையே எதிரிகளுக்கு விலை போய் வேறு எதையாவது கொடுத்து என்னைக் கொல்ல மாட்டான்? தூபானை விடக் கூடாது அவன் உயிருடன் இருந்தால் எனக்கு ஆபத்து ஏற்படலாம். அவனை இப்போதே கொன்று விடுகிறேன்" என்று கூறி தனது சேவகர்களை அழைத்து தூபானை இழுத்து வருமாறு பணித்தான் யூனான்.

அதன் படியே தூபான் அரசவைக்குக் கட்டி இழுத்து வரப் பட்டார். அப்படி இழுத்து வரப்பட்டவர் அரசன் யூனானுக்கு முன்னாள் நிறுத்தப்பட்டார். அவருக்கு ஒன்றுமே புரியவில்லை. அரசரின் முகத்தைப் பார்த்தார். அரசன் யூனான் கடு கடுப்புடன் காணப்பட்டான். அவன் ஞானி தூபானை பார்த்து, "அடேய்! நான் உன்னைப் புரிந்து கொண்டேன். நீ உண்மையில் எனது எதிரிகளின் ஒற்றன் தான்

என்பதை எனது மதி மிகு அமைச்சர் கண்டு கொண்டு விட்டார். அவர் என்னிடமும் அதனை தெளிவு படுத்தி விட்டார். இனியும் நீ தப்ப முடியாது. நீ என்னைக் கொல்வதற்கு முன்னாள் நான் உன்னைக் கொன்று விடுகிறேன் பார்!" என்றான்.

யூனானின் இந்தக் கொடிய வார்த்தைகளைக் கேட்ட தூபான் உண்மையில் கண் கலங்கிப் போனார். அழுது துடித்தார். யூனானிடம்," அரசே! எவ்வளவு பெரிய பழியை என் மீது போடுகின்றீர்கள். இது ஞாயம் அல்ல மன்னா! நான் நல்ல நோக்கத்தில் தான் உங்களுக்கு உதவி செய்தேன்" என்று அழுது கூறினார்.

"இப்படி எல்லாம் கூறி என்னை நீ ஏமாற்ற முடியாது. உன்னைக் கொல்ல முடிவு செய்து விட்டேன். யார் அங்கே இவனது தலையை வெட்டி எறியுங்கள்" என்று ஆணையிட்டான் கல் மனம் கொண்ட யூனான்.

"அல்லா மீது ஆணையாகக் கூறுகிறேன் நான் நிரபராதி மன்னா" என்று கூறி மீண்டும், மீண்டும் கதறினார் தூபான்.

ஆனால் யூனான், தூபானைக் கொல்ல தனது சேவகர்களை ஏவினான். அவர்களும் வாளுடன் விரைந்தனர்.

"இனி இந்தக் கொடியவனிடம் கெஞ்சிப் பிரயோஜனம் இல்லை" என்பதை உணர்ந்து கொண்டார் தூபான். பிறகு அரசரிடம்," அரசே! நான் சாகப் போவது உறுதி ஆகிவிட்டது. எனக்கு ஒரு கடைசி ஆசை உள்ளது. தயவு செய்து தாங்கள் அதனை எனக்காக நிறைவேற்றி வைக்க வேண்டும். உங்கள் தொழுநோயை குணப்படுத்தினேன் அல்லவா? அதையாவது ஞாபகத்தில் வைத்துக் கொண்டு எனக்கு உதவுங்கள்" என்றார்.

அதைக் கேட்ட யூனான், "சரி. ஒழிந்து போகிறது. உனது கடைசி ஆசை என்ன?" என்றான்.

"அரசே! எப்படியோ நான் கொல்லப் படப் போவது உறுதியாகி விட்டது. நான் கொல்லப்படுவதற்கு முன்னாள் வீடு வரையில் சென்று விட்டுச் சிறிது நேரத்திற்குள் வந்து விடுகிறேன். ஏனெனில், என்னிடம் உள்ள பொருட்கள் சிலவற்றை உரியவர்களிடம் ஒப்படைக்க வேண்டும்.

அத்துடன் நான் இறந்த பிறகு எனது உடலை எந்த இடத்தில் புதைக்க வேண்டும் என்பதையும் எனது நண்பர்களிடம் நான் கூற வேண்டும். என்னை நம்புங்கள் அவர்களிடம் நான் அவ்வாறு கூறி விட்டு உடனடியாகத் திரும்பி வந்து விடுகிறேன்" என்றார் தூபான்.

ஆனால் அரசன் யூனான் இதற்கு மறுத்தான். காரணம் தூபான் தப்பிச் செல்லலாம் என்று அவன் கருதினான்.

அப்போது அரசவையில் இருந்த ஒரு பெரியவர் எழுந்தார். யூனானிடம், தூபானுக்காக மன்றாடினார். தூபானின் கடைசி விருப்பத்தை ஏற்றுக் கொள்ளுமாறு மிகவும் வேண்டினார். காரணம் அந்தப் பெரியவருக்குத் தெரியும் தூபான் நல்லவர் என்று.

வாக்கு சாதுர்யம் கொண்ட அந்தப் பெரியவரின் வார்த்தைகளைக் கேட்ட யூனான். ஒரு வழியாக தூபானின் கடைசி ஆசையை நிறைவேற்ற ஒப்புக் கொண்டான். எனினும், பலத்த காவலுடன் அவரை அனுப்பி வைத்தான்.

தனது வீட்டை அடைந்த ஞானி தூபானும் தனது கடமைகள் அனைத்தையும் உடனுக்குடன் முடித்தார். எனினும், அடுத்த நாள் தான் அவர் அரசவைக்கு வந்தார். உடன் காவலுக்கு சென்ற வீரர்களும் இருந்தனர்.

அப்படி அரசவைக்கு வந்த தூபான் கைகளில் ஒரு புத்தகத்தை வைத்து இருந்தார். அத்துடன் ஒரு தாம்பாளத்தில் சில வண்ணப் பொடிகளை வைத்து இருந்தார்.

ஞானி தூபானைக் கண்ட அரசர் அவருக்கு தண்டனை அளிக்க உத்தரவுயிட்டார்.

தூபான் நிரபராதி என்று அந்த அவையில் இருந்த அனைவரும் அறிந்து இருந்தனர். இருந்தாலும் என்ன செய்ய? அரசன் யூனான் மீது இருந்த பயத்தில் யாரும் அந்த அவையில் சத்தியத்தைப் பேச முன் வரவில்லை.

மறுபுறம் தூபான் தாம்பாளத்தில் தான் கொண்டு வந்த பொடியை பத்திரமாகக் கீழே வைத்தார். பிறகு மன்னரிடம்," அரசே! இந்தப் புத்தகத்தில் முக்கியக் குறிப்பொன்றை தங்களுக்காக விட்டுச்

செல்கிறேன். ஆனால், இதனைத் தாங்கள் எனது தலை வெட்டப் பட்ட பிறகு தான் திறந்து படிக்க வேண்டும். அத்துடன் எனது தலை வெட்டப் பட்டதும். அந்தத் தலையை இந்தத் தாம்பாளத்தில் இருக்கும் பொடியில் வைத்து அழுத்த இரத்தம் நின்றுவிடும். அதன் பிறகு தாங்கள் புத்தகத்தை படிக்கத் தொடங்கலாம்" என்றார்.

ஞானி தூபான் அளித்த புத்தகத்தைக் கையில் வாங்கிக் கொண்ட மன்னர் தூபானைக் கொல்லும் படிக்கு கொலையாளிக்கு செய்கை காட்டினார். அதன் படியே தூபானின் தலை வெட்டப்பட்டது. அந்தத் தலையில் இருந்து இரத்தம் பெருக்கெடுத்து ஓடியது. பிறகு தூபானின் விருப்பப் படி அந்தத் தலை தாம்பாளத்தில் இருந்த அந்தப் பொடியில் வைக்கப்பட்டது. அத்தோடு தூபானின் வெட்டப்பட்ட தலையில் இருந்து அருவி போலக் கொட்டிய ரத்தம் நின்று போனது.

உடனே அந்த தலை கண்களைத் திறந்து மன்னரிடம் புத்தகத்தைப் படிக்குமாறு கேட்டுக் கொண்டது. அதைக் கண்ட அவையினர் அனைவும் அதிசயித்தனர். மன்னரும் அந்தப் புத்தகத்தைப் படிக்கத் தொடங்கினார். ஆனால், அந்த புத்தகத்தில் இருந்த ஏடுகள் அனைத்தும் ஒன்றுடன் ஒன்று ஒட்டி இருந்தது. மன்னன் யூனான் நாக்கில் இருந்த எச்சியைத் தொட்டுத் தொட்டு அந்தப் புத்தகத்தின் ஒட்டி இருந்த ஏடுகளை பிரித்துப் பார்த்தார். ஆனால், அந்த ஏடுகளில் ஒன்றுமே எழுதப்படவில்லை. அதனைக் கண்ட அரசர்," இந்த ஏட்டில் ஒன்றுமே இல்லையே!" என்று கூற.

வெட்டப்பட்ட தூபானின் தலை," இன்னும் கொஞ்சம் புரட்டிப் பாருங்கள் அரசே! விஷயம் இல்லாமல் நான் இதனைத் தங்களிடம் கொடுக்க வில்லை" என்றது.

அதன் படியே யூனான் மேற்கொண்டு எச்சில் தொட்டு, தொட்டுப் பக்கங்களை புரட்டினான். இப்படியாக பல மணி நேரம் எச்சில் தொட்டுத் தொட்டு அந்த ஏட்டைப் புரட்டியதால் அந்த ஏட்டில் தடவப்பட்டு இருந்த விஷம் மெல்ல, மெல்ல மன்னனின் எச்சில் மூலம் அவனது உடம்பில் புகுந்து அவனைக் கீழே தள்ளி விட்டது. அவன் துடி, துடித்து இறந்தான்.

அப்போது ஞானி தூபானின் தலையில் இருந்த கண்கள் நிரந்தரமாக மூடப்பட்டது.

இப்படியாக ஞானி தூபானின் கதையை செம்படவன் பூதத்திடம் கூறி முடித்தான். பிறகு அந்த செம்படவன் அந்த பூதத்திடம்," பார்த்தாயா! பூதமே ஞானி தூபான் அவ்வளவு கெஞ்சிக் கேட்டும் கூட கொடிய நெஞ்சம் கொண்ட யூனான் அந்த ஞானியை கொல்ல ஆணை பிறப்பித்தார். அவன் ஒருவேளை இரக்கம் காட்டி இருந்தால் மன்னனும் நலமுடன் வாழ்ந்திருப்பான் அந்த ஞானியும் நலமுடன் இருந்திருப்பார். ஆனால்,"கேடு வரும் பின்னே, மதி கெட்டு வரும் முன்னே" என்ற பழமொழிக்கு ஏற்ப அந்த மன்னன் கெட்ட புத்தி கொண்ட அந்த அமைச்சனின் உபதேசத்தை பின்பற்றி நன்றி மறந்ததால் இறுதியில் இறந்தும் போனான். இது உண்மையில் அந்த அல்லாவின் தீர்ப்பு தான்.

மேலும், இந்தக் கதையில் வரும் ஞானி தூபானைப் போலத் தானே நானும் உன்னிடம் கெஞ்சினேன். ஆனால், நீயோ மேற்சொன்ன கதையில் இருக்கும் யூனான் போல என்னிடம் நடந்து கொண்டாயே! அப்படி இருக்க நான் உன்னை ஒருவேளை மன்னித்தாலும் அல்லா உன்னை மன்னிப்பாரா?" என்றான். அத்துடன் அந்தத் ஜாடியை கடலில் தூக்கி ஏறிய முற்பட்டான்.

அதனை அந்த ஜாடிக்குள் உள்ளிருந்த படி உணர்ந்த பூதம் அந்தச் செம்படவனிடம் மேலும் மன்றாடி அழுதது. அத்துடன் செம்படவனிடம்," நான் சூலைமான் மீது ஆணையாக உனக்கு வாக்கு அளிக்கிறேன். இந்த முறை மட்டும் மீண்டும் நீ எனக்கு விடுதலை தந்தால். உன்னை நான் மிகப் பெரிய செல்வந்தனாக ஆக்குவேன். அத்துடன் உனக்கு எந்தத் துன்பத்தையும் நான் தர மாட்டேன். நீ நினைத்துப் பார்க்க முடியாது செல்வத்தைப் பெற நான் உனக்கு உதவுவேன். என்னை நம்பு" என்று கூறியது அந்தப் பூதம்.

பூதம் சூலைமானின் மீது ஆணையிட்டதாலும், அதுவும் அது மிகவும் கெஞ்சிக் கேட்டுக் கொண்டதாலும். அதனை விடுவிக்க முடிவு செய்தான் அந்தச் செம்படவன். அவன் அப்போதே ஜாடியைத் திறந்தான். பூதத்திற்கு இவ்விதம் விடுதலையையும் அளித்தான். வீரியன் பாம்பு போல, அந்தப் பூதம் அந்த ஜாடியை விட்டு விரைந்து வெளியேறியது. தான் வெளியில் வந்ததும் முதல் வேலையாக அந்தத் ஜாடியை உதைத்து கடலில் தள்ளியது அந்தப் பூதம். அதைக் கண்ட அந்தச் செம்படவம் திகைத்தான். அத்துடன் அந்தப் பூதம் முன்னை விடப் பெரிய ரூபத்தை எடுத்துக் கொண்டது. அதைக் கண்ட செம்படவன், "நான் இன்று செத்தேன் போல" என்றே நினைத்துக் கொண்டான். அல்லாவை

வேண்டினான். செம்படவனின் பயத்தை அவனது கண்களில் கண்ட பூதம் உரக்கச் சிரித்தது.

பிறகு செம்படவனிடம் அந்தப் பூதம், "நான் சூலைமானின் மீது ஆணையிட்டு உள்ளதால் உன்னைக் கொல்ல மாட்டேன். அத்துடன் நீ என்னை விடுவித்தவன். அதனால் உனக்கு ஒரு ஆபத்தையும் நேர விட மாட்டேன். உனக்கு ஒரு நல்ல வழியைக் காட்டுகிறேன். ஆனால், அதனை நீ அடைய வேண்டும் எனில், என்னைத் தொடர்ந்து வா!" என்றது.

அப்படிச் சொன்ன பூதம், சமவெளியைத் தாண்டி விரைந்து செல்லத் தொடங்கியது. செம்படவனும் பூதம் தன்னை எதுவும் செய்து விடக் கூடாது என்ற பயத்தில் அதனைத் தொடர்ந்து விரைந்து சென்றான். பல காது தூரம் சென்றதும், அந்தப் பூதம் ஒரு ஏரியை அடைந்தது. அப்போது செம்படவனும் அந்த இடத்தை வந்தடைந்தான். அந்த ஏரியில் பல வகையான வண்ண மீன்களைக் கண்டான் அந்தச் செம்படவன். அதுவரையில் அவன் அப்படிப் பட்ட அழகிய மீன்களைக் கண்டதே இல்லை. அவ்வளவு அழகு வாய்ந்த மீன்களாக அவைக் காணப்பட்டது. அந்தத் தெள்ளத் தெளிவான ஏரியில் அவன் பல மீன்களைக் கண்டான். தனது வறுமை இன்றுடன் ஒழிந்தது என்று நினைத்து அல்லாவை வேண்டினான் அவன்.

அப்போது உடன் வந்த பூதம் அவனிடம், "இந்த ஏரியில் இருந்து மீன்களைப் பிடித்துச் சென்றால் உனக்கு நல்ல வருமானம் கிடைக்கும் என்பதால் தான் உன்னை நான் இங்கு அழைத்து வந்தேன். இந்த மீன்களை பிடித்துக் கொண்டு போய் உனது சுல்தானிடம் கொடுத்தால் அவரே கூட உனக்குப் பொன்னையும், பொருளையும் அள்ளிக் கொடுப்பார். அதனைக் கொண்டு நீ நலமுடன் வாழ்வாயாக" என்று கூறி விட்டு அந்தப் பூதம் அந்த இடத்தை விட்டுக் கிளம்பியது. உடனே செம்படவன் அந்த மீன்களில் ஒவ்வொரு வண்ணத்திலும் ஒன்றைப் பிடித்தான். அதனை எடுத்துக் கொண்டு நேராக சுல்தானிடம் சென்றான்.

அந்த செம்படவன் கொண்டு வந்த மீன்களைப் பார்த்த சுல்தான் அதிசயித்தார். அது நாள் வரையில், அவர் அப்படிப் பட்ட கொழுத்த, அழகான மீன்களைப் பார்த்ததே இல்லை. அதிக விலை கொடுத்து அந்த செம்படவனிடம் இருந்து மீன்களைப் பெற்றுக் கொண்டார். உடனே

தனது புகழ் பெற்ற சமையல் காரியை அழைத்து அந்த மீன்களைக் கொடுத்து சமைத்து உடனே அதனை எடுத்து வரும்படியாகக் கூறினார்.

மறுபுறம் செம்படவனும் கை நிறைய செல்வதைப் பெற்றுக் கொண்டு தனது குடிலை மகிழ்ச்சியுடன் அடைந்தான்.

இந்நிலையில், அரண்மனையில் மீன்களை சமைக்க எடுத்துச் சென்ற அந்த சமையல்காரி அந்த மீன்களை சுத்தம் செய்து அவைகள் ஒவ்வொன்றாகக் கையில் எடுத்து மசாலா தடவி கொதிக்கும் எண்ணெய்யில் போடத் தொடங்கினாள். மீன்களும் நன்கு கொதித்துக் கொண்டு இருந்தது. அவற்றை வேகின்ற வரையில் அந்த அடுப்பிலே திருப்பிப் போட்டாள்.

அந்தச் சமயத்தில் அடுக்களைச் சுவரில் ஒரு கீறல் ஏற்பட்டது. அதில் இருந்து அழகும், வனப்பும் ஒருங்கே நிறைந்த ஒரு இளம் பெண் வெளிவந்தாள். அவள் கைகளில் ஒரு சிறிய குச்சி இருந்தது. அப்படி கண் இமைக்கும் நேரத்தில் வெளிப்பட்டவள் அந்த வாணலியில் கொதித்துக் கொண்டு இருந்த மீன்களின் பக்கத்தில் வந்து நின்றவளாய் "மீன்களே, இந்த நிலை உங்களுக்குத் தேவையா? இப்போதாவது எனது உடன் படிக்கையை ஏற்றுக் கொள்கிறீர்களா?" என்று கேட்டாள்.

"எங்கள் அனைவரையும் விட்டு விடுங்கள். நாங்கள் உங்கள் உடன்படிக்கை எதுவாயினும் அதற்கு சம்மதம் தெரிவிக்கிறோம்" என்று கூறின அந்த மீன்கள். இப்படியாகக் கொதித்துக் கொண்டு இருந்த மீன்கள் பேசுவதைப் பார்த்த அந்த சமையல்காரி பயந்து அலறினாள். மூர்ச்சை அடைந்து கீழே விழுந்தாள். இது இப்படி இருக்க, அடுக்களைச் சுவரில் இருந்து வெளிவந்த அந்த அழகிய பெண் அப்படியே வாணலியைக் கீழே தட்டி விட்டு விட்டு மீண்டும் வந்த வழியே சென்று மறைந்தாள். அவள் அப்படி மறைந்ததும் மீண்டும் அந்த அடுப்பில் காணப்பட்ட கீறலும் சரியானது.

மறுபுறம் வாணலியில் இருந்து அடுப்பில் விழுந்த மீன்கள் அனைத்தும் அந்த அடுப்பிலேயே கருகிப் போனது.

சமையல் காரியின் சத்தத்தைக் கேட்டு அவ்விடத்துக்கு ஓடி வந்த சேவகர்கள் அவளை மூர்ச்சையில் இருந்து விடுவித்து விவரத்தைக் கேட்டறிந்தனர். இந்த விஷயம் அமைச்சரிடம் சென்றது. அமைச்சர்

சமையல்காரியை அழைத்து விவரத்தை முழுவதுமாகக் கேட்டு அறிந்து கொண்டார். அத்துடன் அந்நாட்டு அரசரிடம் விவரத்தை எடுத்துச் சென்றார்.

சமையல் காரியை அரசர் விசாரித்தார். எனினும், அவள் கூறிய வார்த்தைகளை அரசர் நம்பமறுத்தார். ஆனால், அந்தச் சமையல்காரி இறைவனின் திருப்பெயரால் சத்தியம் செய்து கூறினாள்.

அப்போது அரசருக்கு ஒரு அற்புதமான யோசனை தோன்றியது அதன் அடிப்படையில் அரசர் மீண்டும் அந்த செம்படவனிடம் அதே வகை மீன்களை உடனே  வாங்கி வருமாறு கூறினார். அதன் படியே செம்படவனிடம் இருந்து மீண்டும் முன்பு மன்னருக்குக் கொடுக்கப்பட்ட அதே வகையான மீன்கள் அதிக விலைக்கு வாங்கப்பட்டன.

மீண்டும் அரசர் அந்த சமையல் காரியிடம் அந்த மீன்களைக் கொடுத்துச் சமைக்கச் சொன்னார். அக்கணம் அரசரும் அந்த சமையல்காரியின் அருகில் இருந்தபடி அங்கு நடப்பதை கண்காணிக்கத் தொடங்கினார்.

மீன்களை நன்கு சுத்தமாகக் கழுவிய சமையல்காரி முன்பு செய்தது போல அதனை நன்கு மசாலாவில் புரட்டி எடுத்து வாணலியில் கொதித்துக் கொண்டு இருந்த எண்ணெய்யில் ஒவ்வொன்றாகப் போடத் துவங்கினாள். அப்போது திடீர் என்று கூடி இருந்த அரசரும், அமைச்சரும், சேவகர்களும், சமையல் காரியும் கூட வியக்கும் வண்ணம். அடுப்பில் திடீர் என ஒரு கீறல் முன்போல ஏற்பட்டு இந்த முறை கரிய நிறம் கொண்ட அடிமை ஒருவன் வெளிப்பட்டான். அவன் வந்த மாத்திரத்தில் அடுப்பில் கொதித்துக் கொண்டு இருந்த மீன்களின் பக்கம் சென்று, "மீன்களே, இந்த நிலை உங்களுக்குத் தேவையா? இப்போதாவது எனது உடன் படிக்கையை ஏற்றுக் கொள்கிறீர்களா?" என்று கேட்டான்.

"எங்கள் அனைவரையும் விட்டு விடுங்கள். நாங்கள் உங்கள் உடன்படிக்கை எதுவாயினும் அதற்கு சம்மதம் தெரிவிக்கிறோம்" என்று கூறின அந்த மீன்கள். கொதித்துக் கொண்டு இருந்த மீன்கள் பேசுவதைப் பார்த்த அனைவரும் வியப்படைந்தனர்.

மறுபுறம் அந்த அடிமை அந்த வாணலியை உருட்டி விட்டான். முன் போலவே மீன்கள் அனைத்தும் அடுப்படியின் நெருப்பில் விழுந்து

கருகிப் போயின. அதன் பிறகு அந்தக் கருப்பு அடிமை அடுப்பில் காணப்பட்ட சுவரில் இருந்த கீறல் வழியாக சென்று விட்டான். முன் போலவே அந்தக் கீறல் மூடிக் கொண்டது.

மேற்கண்ட காட்சிகள் அனைத்தையும் கண்ட அனைவரும் பயத்தில் உறைந்தனர். சமையல்காரி குற்றம் அற்றவள் என்பதை உணர்ந்து கொண்டார் அரசர். பின்னர் அரசர் அமைச்சரிடம், "அந்த மீன் விஷயத்தில் ஏதோ மர்மம் உள்ளது. அதனைப் பற்றி அவசியம் நாம் விசாரித்து அறிய வேண்டும். சரி, தாங்கள் அந்தச் செம்படவனை முதலில் அழைத்து வரச் சொல்லுங்கள். அவனிடம் இருந்து நமது முதல் கட்ட விசாரணையை தொடங்குவோம்" என்றார்.

அதன் படி அந்தச் செம்படவன் சபைக்கு அழைக்கப்பட்டான். அவனிடம் அரசர் அந்த மீன்களைப் பற்றி விசாரித்தார். செம்படவன் அரசரிடம் முழு விவரத்தையும் கூறி முடித்தான். அத்துடன் மீன்கள் உள்ள இடத்தை அரசருக்குக் கொண்டு சென்று காட்டுவதாகவும் உறுதி அளித்தான்.

உடனே அரசர் தகுந்த பாதுக்காப்புடன் செம்படவனுடன் புறப்பட்டு அழகிய வண்ண மீன்கள் முன்பு காணக் கிடைத்த அந்த ஏரியை அடைந்தார்.

அந்த ஏரியின் அழகிலும், தெள்ளத் தெளிவான நீரில் மீன்கள் துள்ளி விளையாடும் காட்சியையும் கண்ட அரசர் மனம் மயங்கினார். மன்னரைத் தொடர்ந்து வந்த பரிவாரமும் கூட அந்த ஏரியின் அழகில் தங்களைப் பறி கொடுத்தனர். அதனால் அவர்கள் அனைவரும் களைப்பு நீங்கினர். பிறகு சுல்தான் தனது பரிவாரங்கள் அனைத்தையும் திருப்பி அரண்மனைக்கே அனுப்பி வைத்து விட்டு தான் இரண்டொரு நாளில் அரண்மனைக்கு மீண்டும் வருவதாக அமைச்சரிடம் கூறினார். பிறகு செம்படவனுக்கும் பரிசுகள் கொடுத்து அவனையும் அனுப்பி வைத்தார்.

சில மணி நேரங்கள் அந்த ஏரியின் அழகில் மகிழ்ந்து பொழுதைக் களித்த அரசர் அந்த ஏரியின் வரலாற்றை அறியத் துடித்தார். அங்கு யாரும் காணப்படாததால் சிறிது தூரம் சென்று அங்கு காணப்பட்ட மலைக் கிரமாத்தில் இருந்த முதியவர்களிடம் அந்த ஏரியைப் பற்றி விசாரித்தார். ஆனால், அவர்கள் யாருக்குமே அந்த அழகிய ஏரியைப் பற்றிய எந்த விவரமும் தெரியவில்லை. ஆனால், அரசரோ அந்த ஏரியைப் பற்றி

அறியாமல் தான் அவ்விடத்தை விட்டுப் போகப் போவதில்லை என்று தனது மனதிற்குள் தீர்மானித்தவராய் வெகு தூரம் நடந்தார். இரவு, பகல் கழிந்தது. அடுத்த நாள் இரவும் வந்தது, சென்ற வழிகளில் எல்லாம் யாருமே காணப்பட வில்லை. இந்த நிலையில் தூரத்தில் ஒரு அழகிய அரண்மனை இருப்பதைக் கண்டார் அரசர். நிலா வெளிச்சத்தில் அந்த அழகிய அரண்மனை கம்பீரமாக ஜொலித்தது. அந்த இடத்தை சுற்றி அந்த அரண்மனையைத் தவிர வேறு எந்த ஒரு வசிப்பிடமும் ஏன் ஆடு, மாடுகள் கூட இல்லை. அரசர் அந்த அரண்மனையை வெகு தூரம் கடந்து இறுதியில் அடைந்தார்.

அந்த அரண்மனைக் கதவுகள் அரசருக்காககவே திறந்திருப்பது போலக் காணப்பட்டது. அந்த அரண்மனைக்குள் அரசர் தைரியமாக நுழைந்தார். அவரைத் தடுக்கக் கூட அங்கு யாரும் இல்லை. அவர் அங்கு யாராவது இருப்பார்களா என்று குரல் கொடுத்தும் பார்த்தார். அவரது அந்தக் குரலுக்கு மறு மொழியும் இல்லை. எனினும், அரசர் எதைப் பற்றியும் கவலைப்படாமல் அந்த அரண்மனைக்குள் மேலும் பிரவேசித்தார். அப்போது எங்கோ ஒரு திசையில் இருந்து ஒரு துக்ககரமான குரல் ஒன்று வந்து கொண்டு இருப்பதை அரசர் செவிமடுத்தார். அக்குரல் வந்த திசையை நோக்கி விரைந்தார். அங்கு ஒரு அறை காணப்பட்டது. அதற்குள் நுழைந்தார். அந்த அறையில் இருந்த ஒரு அழகிய மஞ்சத்தில் சர்வ லட்சணம் பொருந்திய ஒரு இளைஞன் அமர்ந்து இருந்தான். ஆனால், அவனது முகத்தில் சிறிதும் மகிழ்ச்சி காணப்படவில்லை. அவன் எதையோ பறிகொடுத்தது போலக் காணப்பட்டான்.

அரசரைக் கண்ட மாத்திரத்தில் அந்த இளைஞன் முதலில் அவர் யாரோ, யவரோ என்று திகில் கொண்டான். ஆனால் அந்த அரசரோ அந்த இளைஞனை வணங்கி தன்னை அறிமுகம் செய்து கொண்டார். அத்துடன் தான் அங்கு வந்ததன் காரணத்தையும் தெரிவித்தார். அதனால் அந்த இளைஞன் சற்றே பயம் நீங்கினான். அத்துடன் தன்னை வணங்கிய அரசரிடம்," அரசே! என்னைத் தாங்கள் முதலில் மன்னிக்க வேண்டும். உண்மையில் எழுந்து நின்று வணக்கம் தெரிவிப்பது தான் முறையாகும். ஆனால், நானோ எழுந்து நிற்கக் கூட முடியாத நிலையில் தான் உள்ளேன்" என்றான்.

இளைஞனின் வார்த்தைகளைக் கேட்ட அரசர், அவனுக்கு கால்கள் விளைங்கவில்லையோ என்று கூட நினைத்தார். எனினும், அவனது

நிலைமையை அறிய அவர் ஆர்வம் கொண்டாலும் இங்கீதம் கருதி மேற்கொண்டு எதையும் அவனிடம் கேட்காமல் அமைதியாக இருந்தார்.

அரசர் தன்னைப் பற்றி அறியத் துடிக்கிறார் என்பதை குறிப்பால் உணர்ந்த அந்த இளைஞன் தன்னைப் பற்றிய விவரத்தை அவனாகவே அரசரிடம் இவ்வாறு கூறத் தொடங்கினான்.

"அரசே நான் இந்த நாட்டை முன்னொரு காலத்தில் ஆண்ட முகம்மது என்ற சுல்தானின் மகன் தான். அவர் ஏறக்குறைய பத்து ஆண்டுகள் இந்த நாட்டை நல்ல முறையில் ஆண்டு வந்தார். எனது தந்தை முகம்மது இறந்த பிறகு நான் இந்த நாட்டை ஆளத் தொடங்கினேன். அப்போது எனக்குத் திருமணமும் நடந்தது. என் மீது எனது மனைவி உயிரையே வைத்து இருந்தாள். ஐந்தாண்டு காலமாக என்னுடன் நல்லபடியாகத் தான் அவள் குடும்ப வாழ்க்கையை நடத்தினாள். ஆனால், ஐந்தாண்டுகளுக்குப் பிறகு அவளது நடத்தை மாறத் தொடங்கியது. எனக்கு ஆரம்பத்தில் இருந்தே அவள் மீது அதிக சந்தேகம் இருந்து வந்தது. இருந்தாலும் அவள் மீது நான் கொண்ட அன்பால் நான் எதையும் கேட்க விரும்பவில்லை.

இந்நிலையில், எனது மனைவியின் நடத்தையைப் பற்றி அவளது பணிப்பெண்களே எனது காதுபட தவறாகப் பேசத் தொடங்கினார்கள். அவர்கள் மூலமாக எனது மனைவி இரவு நேரங்களில் மதுவில் ஏதோ போதையைக் கலந்து கொடுத்து என்னை தினமும் மயங்கச் செய்து விட்டு வெளியில் எங்கோ சென்று அதிகாலையில் அவள் திரும்புவதை நான் அறிந்து கொண்டேன். அதனால் நான் சற்று சூதாரித்துக் கொண்டேன்.

அன்றைய இரவும் கூட எனது மனைவி ஆசையுடன் என்னை நெருங்கி எனக்கு மதுவை ஊற்றிக் கொடுத்தாள். மிகவும் இனிமையாகப் பேசினாள். ஆனால், நானோ அந்த மதுவைக் குடிக்காமல், அதனைக் குடித்து போதையில் தள்ளாடுவது போல பாசாங்கு செய்தேன். ஒரு கட்டத்தில் வேண்டும் என்றே கட்டிலில் விழுந்தேன். நான் போதையில் மயங்கி விழுந்து விட்டதாக எனது மனைவி நினைத்து விட்டு துள்ளிக் குதித்தபடி வெளியில் சென்றாள்.

அவள் சென்ற சில நிமிடங்களில் நான் கண் விளித்து, எனது மனைவிக்குத் தெரியாமல் அவளைப் பின் தொடர்ந்து சென்றேன். எனது

கைகளில் வாள் மட்டுமே அப்போது எடுத்துச் சென்றேன்.

எனது மனைவி அந்த இருட்டில் வெகு தூரம் நடந்து சென்றாள். அப்படிச் சென்றவள் சந்து பொந்துகள் வழியாகச் சென்று நகரத்தில் உள்ள கழிவுகள் எல்லாம் குன்று போலக் கொட்டி வைத்து இருக்கும் ஒரு பகுதியில் உள்ள குடிசைக்குள் நுழைந்தாள். அந்தக் குடிசையின் கதவைத் தட்டினாள். கதவு திறக்கப்பட்டது. அவள் சந்தோஷத்துடன் உள்ளே சென்றாள்.

மறுபுறம் உள்ளே என்ன நடக்கிறது என்பதைப் பார்ப்பதற்காகப் பக்கத்தில் உள்ள மரத்தில் ஏறி அமர்ந்து கொண்டு குடிசையின் மேலே உள்ள திறந்து கிடந்த இடைவெளி வழியாக நான் பார்க்கத் தொடங்கினேன். அங்கு ஒரு மண்ணெண்ணெய் விளக்கு மட்டும் எரிந்து கொண்டு இருந்தது. அதே சமயத்தில் அவ்விடத்தில் கருமை நிறம் கொண்ட கட்டான வாலிபன் ஒருவன் கட்டிலில் அமர்ந்து இருந்தான். அந்த வாலிபன் எனது மனைவியைத் தான் எதிர்பார்த்து காத்திருந்தான் போலும்!

உள்ளே நுழைந்த எனது மனைவி அவனிடம் பயந்து, பயந்து பேசினாள். அவள் தாமதமாக வந்ததால் அந்தக் கருமை நிறம் கொண்ட வாலிபன் எனது மனைவியைக் கடிந்து கொண்டான். அத்துடன் அவன் இழுத்த, இழுப்புக்கெல்லாம் அவள் வளைந்து கொடுத்தாள். அதிலே ஒரு வித இன்பத்தையும் அவள் கண்டாள்.

எனது மனைவி மீது ஒருவன் கைவைப்பதைக் கண்ட நான் அதற்கு மேலும் பொறுக்க முடியாமல், குடிசைக்குள் புலி போலக் குதித்தேன். குதித்த வேகத்தில் அங்கிருந்த விளக்கு அணைந்தது. எனது வாளை எடுத்து அந்தக் கருப்பு வாலிபன் இருந்த திசையை நோக்கி வீசினேன். அந்த இருட்டில் என்னால் வேறு எதையுமே சரியாகப் பார்க்க முடியவில்லை. அந்தக் கருப்பு வாலிபன் இறந்து விட்டான் என்று நானே நினைத்துக் கொண்டு ஏதும் அறியாதவன் போல விரைந்து சென்று எனது மாளிகையில் படுத்துக் கொண்டேன். அப்படிப் படுத்த நான் எனது மனைவியை உயிருடன் விட்டு விட்டு வந்து விட்டதை நினைத்து வருந்தினேன். எனினும், அவளை எனது கரத்தால் கொல்ல வேண்டும் என்று துடித்தேன். இப்படியாக அன்றைய தினம் இரவு கழிந்தது.

மறு நாள் காலை எனது அலுவலக வேலைகள் அனைத்தும் என்றும்

போலவே நடந்தது. ஆனால், அன்று முழுவதும் எனது மனைவி அதான் அந்தக் கிராதகி என்னை சந்திக்க வரவில்லை. பிற்பாடு இரவு நேரத்தில், தலையை மொட்டை அடித்துக் கொண்டு, கருப்பு உடையைத் தரித்துக் கொண்டு அவள் எனது அறைக்கு வந்தாள்.

அதைப் பற்றி அவளிடம் விசாரித்த போது, தனது நெருங்கிய உறவினர் இறந்து விட்டதாகவும் சில காலங்களுக்கு துக்கம் அனுஷ்டிக்க வேண்டும் என்றும் கூறினாள். நானும் அவளுக்கு சந்தேகம் வராதபடி அவளைப் பற்றி அறிந்திருந்தும் கூட மிக நயமாகப் பேசினேன். அவளும் பிரமாதமாகத் தான் நடித்தாள்.

பிறகு கனிவான குரலில் அந்தக் கிராதகி அரண்மனை நந்தவனத்தில் ஒரு சிறு மாளிகையை அமைத்துத் தருமாறு என்னிடம் வேண்டினாள். நான் கேட்டதற்கு அங்கு அவள் சில காலம் தங்கி துக்கம் அனுஷ்டிக்கப் போவதாகக் கூறினாள். நானும் அவளது விருப்பப்படியே ஒழிந்து போகட்டும் என்ற எண்ணத்தில் அந்தக் கிராதகிக்கு ஒரு மாளிகையைக் கட்டிக் கொடுத்தேன். அத்துடன் அவளுக்கு சந்தேகம் வராதபடி சில காலம் அவளது போக்கிலேயே நான் போனேன். எனினும், எனது ஆழ் மனதிற்குள் அவளைக் கொன்று புதைக்க வேண்டும் என்று மட்டும் தீர்மானித்து வைத்திருந்தேன். எதற்கும் ஒரு காலம் வர வேண்டும் அல்லவா? அந்தக் காலத்துக்காகத் தான் நானும் காத்துக் கொண்டு இருந்தேன்.

ஆனால் எனது மனைவி என்ற அந்தக் கிராதகியோ தனது கள்ளக் காதலனை யாருக்கும் தெரியாமல் புதிதாகக் கட்டப்பட்டு இருந்த நந்தவன மாளிகைக்கே கொண்டு வந்து விட்டாள். இந்த விஷயம் பிறகு தான் எனக்கே சில ராஜ விசுவாசிகள் மூலமாகத் தெரிந்தது. அதனை நான் கேள்விப்பட்ட மாத்திரத்தில் எனது ரத்தம் மேலும் கொதித்தது.

இந்த நிலையில் ஒரு நடுநிசி நேரத்தில் நானே அந்த நந்தவன மாளிகைக்குச் சென்றேன். எனது மனைவி அவளது கள்ளக் காதலனுடன் படுத்துக் கொண்டு இருந்தாள். எனது வாள் அந்தக் கருப்பு வாலிபனின் கழுத்தை அறுத்து இருந்ததால் அந்த வாலிபனால் சரியாகப் பேசக் கூட முடியவில்லை. அந்த நிலையிலும் அவன் எனது மனைவியை கட்டி அணைத்துக் கொண்டு இன்பத்தை அனுபவித்துக் கொண்டு இருந்தான். அதனைக் கண்ட நான் கோபத்தால் கர்ஜித்தேன். வாளை ஓங்கிக் கொண்டு இதற்கெல்லாம் முழு, முதற் காரணமான

எனது மனைவியை அந்த இடத்திலேயே கண்டம் துண்டமாக வெட்டப் பாய்ந்தேன்.

ஆனால், அதற்குள் எனது மனைவியாகிய அந்தக் கிராதகி சூதாரித்துக் கொண்டாள். என் மீது அவள் மந்திர நீரை ஊற்றி சைத்தானின் மந்திரத்தை சொல்லி என்னைப் பாதிக் கல்லாக மாற்றிவிட்டாள். அன்றைய தினம் முதற்கொண்டு என்னால் உட்காரவும் முடியாமல், எழுந்து இருக்கவும் முடியாமல் பெரும் துன்பத்தை அனுபவித்துக் கொண்டு இருக்கிறேன்.

அத்துடன் எனது நாட்டில் இருந்த அழகிய நான்கு தீவுகளை மலைகளாக மாற்றி, எனது தலை நகரத்தையும் ஏரியாக மாற்றி அத்துடன் எனது அருமை மக்களையும் கூட அந்த ஏரியில் வசிக்கும் மீன்களாக மாற்றிவிட்டாள். இதனால் எனது நகரமே பாழ் பட்டுப் போய்விட்டது. இத்துடன் நிற்காமல் அந்தக் கிராதகி மாலை வேளையில் எனது இருப்பிடத்துக்கு வந்து என்னை சவுக்கால் வேறு அடித்து விட்டுச் செல்கிறாள்" என்று தனது முழு கதையையும் அந்த மாளிகைக்கு வந்திருந்த அரசனிடம் கூறி முடித்தான் அந்த இளவரசன்.

இளவரசனின் கதையைக் கேட்ட அரசர் அவனுக்கு ஆறுதல் கூறினார். அத்துடன் அவனது துன்பங்களைத் தானே தீர்த்து வைப்பதாக வாக்குறுதி அளித்தார். அன்றைய தினம் இரவு அந்த இளவரசனுடன் அந்த மாளிகையிலேயே தங்கினார் அந்த அரசர். நள்ளிரவு நேரம் நெருங்கியது தனது உடைவாளை எடுத்துக் கொண்டு இளவரசனிடம் தற்காலிகமாக விடை பெற்ற அரசர் நேராகச் சென்று அந்தக் கிராதகியின் கள்ளக் காதலன் இருந்த இடத்தை அடைந்து அவனைக் கொன்றார். அந்தப் பிணத்தை தோளிலே சுமந்து கொண்டு சென்று ஒரு புதரில் போட்டு விட்டு மீண்டும் அந்த நந்தவன மாளிகைக்குத் திரும்பிப் போய், கிராதகியின் கள்ளக் காதலன் படுத்திருந்தது போன்று படுத்துக் கொண்டார் அந்த அரசர்.

இது இப்படி இருக்க அந்தக் கிராதகி சிறிது நேரத்தில் தனது கள்ளக் காதலனைப் பார்க்க ஆவலுடன் வந்தாள். அங்கு ஒரே ஒரு மங்கலான விளக்கு மட்டும் தான் எரிந்து கொண்டு இருந்தது.

அப்போது போர்த்திய வண்ணத்தில் படுத்திருந்த அரசர், மெல்லிய குரலில் அந்தக் கிராதகியிடம், "எப்போது பார்த்தாலும் முணு, முணுத்துக்

கொண்டு இருக்கும் உனது கணவனின் நிலை எனக்கே பரிதாபமாக இருக்கிறது. அவனை மீண்டும் பழைய நிலைக்கு மாற்றுவது எப்படி?" என்றார்.

"இதோ இந்தக் குடுவையில் இருக்கும் மந்திர நீரைத் தெளித்தால் போதும். எனது அந்த முன்னாள் கணவன் பழைய நிலையை அடைந்து விடுவான்?" என்றாள் கிராதகி.

"எனில் மீன்களாக இருக்கும் இந்த நாட்டு மக்களையும், ஏரியையும் மலைகளையும் கூட எவ்வாறு பழையபடி நகரங்களாகவும், தீவுகளாகும் மாற்ற?" என்று மீண்டும் ஒரு கேள்வியைக் கேட்டார் கிராதகியின் கள்ளக் காதலன் போல படுத்திருந்த அரசர்.

"அது ஒன்றும் பெரிய விஷயம் இல்லை. இந்த குடுவையில் மந்திர நீர் உற்பத்தியாகிக் கொண்டே இருக்கும். மனதில் என்ன நினைத்துத் தெளித்தாலும். தெளிப்பவர்களின் மனம் போல எல்லாம் நடக்கும்" என்றால் கிராதகி.

"எனில் நீ சொல்வது நிஜம் தானா. விஷயம் எல்லாம் இந்த மந்திர நீரில் தான் உள்ளதா?" என்றார் அரசர்.

"ஆம். ஆனால், இதைப் பற்றி நீங்கள் கேட்பது ஏனோ? தாங்கள் இப்படி எல்லாம் பேசுபவர் இல்லையே! உண்மையில் தாங்கள் எனது காதலர் தானா?" என்ற படி கிராதகி விளக்கை எடுத்துக் கொண்டு படுக்கையின் அருகே வந்தாள்.

சூதாரித்துக் கொண்ட அரசர், தனது வாளை எடுத்துக் கிராதகியின் தலையைப் பந்தாடினார். அவள் உயிர் அற்ற சடலமாக விழுந்தாள். பிறகு குடுவையில் இருந்த மந்திர நீரை எடுத்துக் கொண்டு சென்று பாதி கல்லாக இருந்த இளவரசன் மீது தெளித்து அவனைப் பழைய நிலைக்கு கொண்டு வந்தார் பெருந்தன்மை மிக்க அந்த அரசர். பிறகு ஏரியில் இருக்கும் மீன்கள் மீதும் ஏரியின் மீதும் மந்திர நீரைத் தெளித்து பழையபடி மீன்களை மனிதர்களாகவும், ஏரியை நகரமாகவும், அத்துடன் மலைகள் மீது மந்திர நீரைத் தெளித்து பழையபடி அந்த ஐந்து மலைகளையும் அழகிய தீவாகவும் மாற்றினார் அரசர்.

இப்படியாக அந்த நாட்டையும், மக்களையும் மீட்டு அந்த

இளவரசனிடம் கொடுத்து விட்டு விடை பெற்றார் அந்த நல்ல எண்ணம் கொண்ட அரசர். இளவரசனும் எண்ணற்ற பரிசுப் பொருட்களைக் கொடுத்து அந்த நல்ல அரசரை கௌரவித்தான். ஆனால், அந்த நல்ல எண்ணம் கொண்ட அரசனோ, இளவரசனுடன் அவனது பரிவாரங்களுடனும் தனது நாட்டிற்குச் சென்று செம்படவனை அழைத்து இளவரசனுக்கு அறிமுகம் செய்து வைத்து, "ஒருவகையில் இந்த செம்படவனால் தான் உண்மையில் எல்லாம் ஆனது. இவன் மட்டும் அரியவகை மீன்களை பிடித்து வராவிட்டால் எனக்கு எதுவும் தெரிந்து இருக்காது. அந்த அல்லாவே இவனை அனுப்பினார் போல!" என்று கூறி அவனுக்கு ஏராளமான பரிசுகளை கொடுத்து அந்த நிறைந்த அவையில் பலவாறு புகழ்ந்து அரசர் அந்த செம்படவனை கௌரவித்தார். அதைக் கண்டு அவையினோர் அனைவரும் மகிழ்ந்தனர்.

இப்படியாகக் கதையை முடித்தாள் ஷாரஜாத் அதைக் கேட்ட ஷாரியர் மிகவும் மகிழ்ந்தார். அப்போது துன்யாஜாத் முன்னதாகவே பாதிக் கதையிலேயே விடை பெற்று சென்று விட்டதால், ஷாரியாரும் - ஷாரஜாத்தும் ஆனந்தமாக சந்தோஷத்தில் ஈடுபட்டு சில நேரம் வரை களித்தனர்.

பிறகு ஷாரியர், "எனக்கு வேறு ஒரு அற்புதமான கதையைக் கூறு. அது நீ முன்பு சொன்னதை எல்லாம் விட அருமையாக இருக்க வேண்டும்" என்று ஷாரஜாத்திடம் கூறினார்.

அதன் படியே ஷாரஜாத் அலாவதீனும் அற்புத விளக்கும் என்ற அந்தக் கதையை கூறத் தொடங்கினாள்.

# இல்துமிஷின் தவமும், சம்சுதீனின் அருளும்

அலாவதீனும் அற்புத விளக்கும்

ஷாரஜாத் தனது கணவனிடம் தான் இப்போது சொல்லப் போகும் கதை இதற்கு முன்னாள் சொன்ன கதைகளை விட மிகவும் அற்புதமானது என்றாள். அதைக் கேட்ட ஷாரியர்," நீ சொல்லும் கதைகள் எல்லாமே மிக நன்றாகத் தான் இருக்கிறது. அத்துடன் இந்தக் கதையை நீ மிகவும் அற்புதமானது என்று சொல்வதால் நான் இதனை இன்னும் ஆர்வமுடன் கேட்க சித்தம் கொண்டு இருக்கிறேன். எனவே சீக்கிரம் சொல்லத் தொடங்கு" என்றார்.

ஷாரஜாத்தும் அலாவுதீனும் அற்புத விளக்கும் என்ற அந்தக் கதையை கூறத் தொடங்கினாள்.

அது ஒரு பொல்லாத ஊர். அந்த ஊரில் இருக்கும் அனைவருமே மாந்திரிகத்தில் கைதேர்ந்தவர்கள். அப்படிப் பட்ட ஊரில் ஒரு பொல்லாத மந்திரவாதி வசித்து வந்தான். அவன் பெயர் தான் இல்துமிஷ். அவன் உலகத்தை எல்லாம் தனக்கு அடிமைப் படுத்த வேண்டும் என்று நினைத்தான். எண்ணற்ற அரசர்களை தனது காலடியில் விழ வைக்க வேண்டும் என்பது தான் அவனது ஒரே நோக்கமாக இருந்தது. அதற்காகத் தான் இரவும், பகலும் பாடு பட்டு கடும் தவங்களை மேற்கொண்டான் இல்துமிஷ். கிட்டத்தட்ட ஆயிரம் இரவுகள் கண் விழித்து சம்சுதீன் என்னும் பூதத்தை வசியம் செய்தான். அந்த பூதமும் அந்த மந்திர வாதியின் யாகத்தில் மகிழ்ந்து அவனுக்கு முன்னாள் தோன்றியது.

அப்படித் தோன்றிய பூதம் மந்திரவாதி இல்துமிஷிடம்," இல்துமிஷ்! உனது அரும் தவத்தால் நான் அகம் மகிழ்ந்தேன். உனக்கு என்ன வரம் வேண்டும்" என்றான்.

அதைக் கேட்ட இல்துமிஷ், "சம்சுதீன் பூதங்களின் அமைச்சனே! நான் இந்த அகிலத்தை எல்லாம் ஆழ வேண்டும். எனக்குக் கேட்டதெல்லாம் கிடைக்க வேண்டும். அத்துடன் நான் பார்ப்பதை எல்லாம் அடைய வேண்டும். சுருங்கச் சொன்னால் நான் ஒட்டுமொத்த பூலோகத்தின் தலைவனாக இருக்க வேண்டும். அதற்கு எனக்கு நல்லதொரு வழியை நீ

காட்டு" என்றான்.

அதைக் கேட்ட சம்சுதீன், "இல்துமிஷ்! நீ கேட்கும் வரம் உனது பேராசையை வெளிப்படுத்தும் விதத்தில் உள்ளது. சுருங்கச் சொன்னால் உனது தவம் சுயநலத்தின் அடிப்படையில் அமைந்து உள்ளது. அத்துடன் அந்த வரத்தை என்னால் தர இயலாது" என்றான்.

"அப்போது நான் உன்னை நோக்கி இத்தனை காலங்களாக செய்த தவம் வீணா?" என்று கேட்டான் இல்துமிஷ்.

"நிச்சயம் வீணில்லை. தெரிந்தோ, தெரியாமலோ என்னை வணங்கும் மார்க்கத்தை நீ அறிந்து கொண்டு இத்தனை இரவுகளாக நீ என்னை பூஜித்ததால் உனது லட்சியத்தை அடைய ஒரு மார்கத்தை நான் உனக்குக் கூறுகிறேன்" என்றான் சம்சுதீன்.

அதைக் கேட்ட இல்துமிஷ் சந்தோஷத்துடன் "உடனே கூறுங்கள் சம்சுதீன்" என்றான்.

"பொறு இல்துமிஷ். அது அவ்வளவு சுலபம் அல்ல"

"எத்தனை கடினமான செயலாக இருந்தாலும் நான் அதனை நடத்தி முடிக்கிறேன். இந்த இல்துமிஷால் முடியாதது ஒன்றும் இல்லை" என்றான் இல்துமிஷ்.

"ஒ அப்படியா? எனில் கேள். இதோ எனது கைகளில் தெரிகிற காட்சியைப் பார். இந்த நகரத்தின் பெயர் "அல்-கலாஸ்". இது ஒரு சபிக்கப்பட்ட நகரம். இந்த நகரத்தின் எல்லையின் அடியில் ஒரு குகை புதைந்து உள்ளது. நான் உனக்கு சொல்லித் தரும் மந்திரங்களை நீ வாசனை திரவியங்களை நெருப்பில் போட்டபடி சொல்ல பூமி இரண்டாகப் பிளக்கும். அதற்குள் ஒரு குகையின் வழி காணப்படும். அந்த குகைக்குள் நீ நடந்து சென்றால். அதன் மறு முனையில் ஒரு விளக்கு இருக்கும். அந்த விளக்கு சாதாரண விளக்கு அல்ல. எங்கள் பூதங்களின் சக்கரவர்த்தி அந்த விளக்கிற்குள் சிறைபட்டு இருக்கிறார். அந்த விளக்கை எடுத்து யார் உரசுகிறார்களோ அப்போது அந்த விளக்கில் இருந்து எங்கள் பூதங்களின் சக்கரவர்த்தி விடுபடுவார். அத்துடன் அந்த விளக்கை வைத்து இருப்பவர்களுக்கு அவர் கட்டுப்பட்டு இருப்பார். அவர்கள் என்ன கேட்டாலும்

நிறைவேற்றுவார்'' என்று கூறினான் பூதங்களின் அமைச்சன் சம்சுதீன்.

அதைக் கேட்ட இல்துமிஷ்,'' இவ்வளவு தானா? இப்போதே நான் சென்று அந்த பூதங்களின் சக்கரவர்த்தியை விடுவித்து அத்துடன் அந்த விளக்கையும் நான் கைப்பற்றுகிறேன்'' என்றான்.

''கொஞ்சம் பொறு. உன்னால் அது முடியாது. காரணம் அந்த விளக்கிற்கு இன்றைய கால கட்டத்தில் நீ உடமை உள்ளவன் அல்ல. அதனை எடுக்க அலாவுதீன் என்பவனால் தான் இயலும். அவனே அதற்கு உரியவன்'' என்றான் சம்சுதீன்.

''அந்த அலாவுதீன் யார். அவன் எங்கு இருக்கிறான்?'' என்று கேட்டான் இல்துமிஷ்.

''அவன் இப்போது பாக்தாத் நகரத்தில் இருக்கிறான். காலம் சென்ற முகம்மது என்ற ஏழைத் தையல் காரனின் மகன் தான் இந்த அலாவுதீன்'' என்று பதில் அளித்தான் சம்சுதீன்.

''எனில் அவனை இப்போதே எனக்குக் காட்டிக் கொடு'' என்று கேட்டான் இல்துமிஷ்.

''இதோ பார்'' என்று தனது கைகளை நீட்ட, சம்சுதீனின் கைகளில் அலாவுதீனையும் அவனது இருப்பிடத்தையும் கண்டு கொண்டான் இல்துமிஷ். அதைக் கண்ட மாத்திரத்தில் தனக்கே அந்த அபூர்வ விளக்கு சொந்தம் என்று தீர்மானித்தும் விட்டான்.

அந்தத் தீர்மானத்துக்கு வலு சேர்க்கும் விதத்தில் சம்சுதீன் ஒரு மோதிரத்தை இல்துமிஷிடம் கொடுத்து, ''இல்துமிஷ்! இத்தனை காலங்கள் நீ என்னை நோக்கிக் கடும் தவம் செய்ததன் பலனாக இந்த மோதிரத்தை வைத்துக் கொள். இந்த மோதிரத்தை யார் வைத்து இருக்கிறார்களோ அவர்களுக்கு நான் அடிமை. அவர்கள் என்னை அழைக்க விரும்பினால் இந்த மோதிரத்தை உரச நான் வெளிப்படுவேன். அத்துடன் எனது சக்திக்கு உட்பட்டு அவர்கள் கேட்பதை நான் நிறைவேற்றித் தருவேன்'' என்று கூறினான் சம்சுதீன்.

இல்துமிஷ் அந்த மோதிரத்தை பய பக்தியுடன் வாங்கிக் கொண்டான். பிறகு சம்சுதீன் என்ற அந்த பூதத்திடம்,''சம்சுதீன் முன் பின் அறிமுகமே

இல்லாத நான் அலாவுதீனை அழைத்தால் அவன் எப்படி வருவான். அவனது வீட்டில் அவனை எப்படி என்னுடன் நம்பி அனுப்புவார்கள். இதற்கும் தாங்கள் தான் ஒரு யோசனையை சொல்ல வேண்டும். ஏனெனில் உங்களைப் போன்ற பூதங்கள் அனைவரும் காலத்தை கடந்தவர்கள்" என்று கூறினான்.

இல்துமிஷ் கூறியதைக் கேட்ட சம்சுதீன் சற்று யோசித்து விட்டு, இல்துமிஷிடம்," தாங்கள் அதற்கெல்லாம் கவலைப் பட வேண்டாம். நான் இதற்கு ஒரு அற்புதமான வழியை சொல்கிறேன் கேளுங்கள்! அலாவுதீனுக்கு அப்துல்லா என்ற சிறிய தந்தை இருந்தார். அவர் வெளிநாட்டுக்கு வேலை விஷயமாய் சென்ற சமயத்தில் ஒரு கப்பல் விபத்தில் இறந்து போனார். அப்போது அலாவுதீன் சிறு பிள்ளையாக இருந்தான். ஆனால், அவனது தாய்க்கு அப்துல்லாவைத் தெரியும். அதனால், அப்துல்லாவின் வடிவத்தை நான் தங்களுக்குத் தருகிறேன். நீங்கள் அந்த வடிவத்தில் சென்று அலாவுதீனை அழைக்க அவன் நிச்சயம் தங்களுடன் வருவான். இதனால் யாருக்கும் சந்தேகம் வராது. அப்படியே யாராவது கேட்டாலும் கூட, 'நான் தான் அப்துல்லா' என்று சாதியுங்கள்" என்றான்.

சம்சுதீனின் இந்த யோசனை இல்துமிஷுக்கு மகவும் பிடித்து இருந்தது. அதன் படியே சம்சுதீனின் துணையுடன் அலாவுதீனின் சிற்றப்பாவான அப்துல்லாவின் உருவத்தை எடுத்துக் கொண்டு பாக்தாத் நகரத்தை நோக்கியத் தனது பயணத்தை தொடர்ந்தான் இல்துமிஷ்.

## இல்துமிஷின் சூழ்ச்சி பலித்தது

சில நாட்கள் கடந்த மாத்திரத்தில் பாக்தாத் நகரத்தையும் அடைந்தான் அவன் (இல்துமிஷ்). முன்பு சம்சுதீன் காட்டிய வழியில் நடந்து அலாவுதீனின் வீட்டையும் கண்டு பிடித்து விட்டான் அவன். அத்துடன் வெளியில் நின்று இருந்த அலாவுதீனிடம் தன்னை அவனது சிற்றப்பா என்று கூறி நம்ப வைத்து அதில் வெற்றியும் பெற்றான்.

வெகுளியான அலாவதீனும் தனது சிற்றப்பா அப்துல்லா தான் வந்து உள்ளதாக நம்பினான். அதனால் பாசம் கண்களை மறைக்க, மாறுவேடத்தில் அங்கு வந்திருந்த அந்த துஷ்ட மந்திரவாதியை தனது இல்லத்திற்கு அழைத்துச் சென்றான் அலாவுதீன். அத்துடன் அவனைத் தனது தாயிடமும் அறிமுகம் செய்து வைத்தான். இறந்து விட்டதாகக் கருதப்பட்ட தனது கணவனின் தம்பி அப்துல்லா உயிருடன் நின்று கொண்டு இருப்பதைக் கண்ட அலாவுதீனின் தாய் ஆச்சர்யத்தில் திக்கு முக்காடிப் போனாள்.

ஏன்? தனது பாச வார்த்தைகளால் அவளையும் நம்பவைத்தான் அந்த மாறுவேட மந்திரவாதி. அத்துடன் தான் கொண்டு வந்திருந்த பரிசுப் பொருட்களையும் கூட அலாவுதீனிடம் கொடுத்து அவனை மகிழ்வித்தான் அந்த துஷ்ட மந்திரவாதி.

அலாவுதீனின் தாயாரிடம் தான் ஒரு பெரிய வியாபாரியாக பாரசீகத்தில் வாழ்ந்து வருவதாகவும், தான் அலாவுதீனை அவனது தந்தையின் ஸ்தானத்தில் இருந்து ஒரு பொறுப்புள்ள ஆளாக மாற்றத் துடிப்பதாகவும் கூறினான் அப்துல்லா ரூபத்தில் இருந்த இல்துமிஷ். அதனை உண்மை என்றே நம்பினர் அலாவுதீனும் அவனது தாயாரும்.

இப்படியாக சில நாட்கள் இல்துமிஷ் அலாவுதீனின் இல்லத்தில் தங்கினான். அங்கு இருக்கும் அலாவதீனுக்கும் அவனது தாய்க்கும் அவன் பெயரில் முழுவதுமாக நம்பிக்கை வரும்படியாக நடந்து கொண்டான். சில நாட்கள் சென்ற பிறகு அலாவுதீனை தன்னுடன் அழைத்துச் செல்ல விரும்புவதாகவும். அவனை ஒரு ஆளாக்கி தன்னைப் போலவே பெரிய வணிகனாக ஆக்கப் போவதாகவும் அலாவுதீனின் தாயாரிடம் கூறினான் அந்தப் பொல்லாத மந்திரவாதி. அலாவுதீனின் தாயாரும் தனது மகன் விளையாட்டுத் தனத்தை விட்டு விட்டு வாழ்வில்

முன்னேற வேண்டும் என விரும்பினாள். அதனால் அலாவுதீனை, அப்துல்லாவுடன் (இல்துமிஷ்) அனுப்ப ஒரு வழியாக ஒப்புக் கொண்டாள்.

அதன்படி அலாவுதீனும் வந்திருப்பது யார் என்று தெரியாமல் புறப்படத் தயார் ஆனான்.

மறுபுறம் அப்துல்லா ரூபத்தில் வந்திருந்த அந்த மந்திரவாதி அலாவுதீனை அழைத்துக் கொண்டு புறப்படத் தொடங்கினான். அப்போது அலாவுதீனின் தாயார் அவனை முத்தமிட்டு வழி அனுப்பி வைத்தாள்.

# அலாவுதீன் அபூர்வ விளக்கை கைப்பற்றிய கதை

அலாவுதீனும், அவனது சிற்றப்பா ரூபத்தில் இருந்த அந்தத் தீய மந்திரவாதியும் புறப்பட்டு, காடு, மலை மற்றும் கரடு முரடான பாதைகளை எல்லாம் கடந்து வெகு தூரம் சென்றனர். 'அல்- கலாஸ்' என்னும் பகுதியின் எல்லையை அடைந்தனர். அது தான் முன்பு சம்சுதீன் என்கிற அந்தப் பூதம் சொன்ன இடம். அதாவது சபிக்கப்பட்ட நகரம். அதன் அடியில் தான் ஒரு குகை புதைந்து உள்ளது. அந்தக் குகைக்குள் தான் அந்த மந்திரவாதி தேடிவந்த அந்த விளக்கு இருக்கிறது.

அலாவுதீனும், அந்தப் பொல்லாத மந்திரவாதியும் அந்த இடத்தை சென்று அடைந்த சமயத்தில் இரவு நேரம் நெருங்கி இருந்தது. அப்போது அந்த மந்திரவாதி அலாவுதீனிடம்," மகனே இனிமேல் நாம் நடக்க வேண்டாம். இங்கேயே தங்கலாம். அத்துடன் நீ இங்கு நடப்பதைப் பார் கொஞ்சம் வேடிக்கையாகத் தான் இருக்கும்" என்று கூறியபடி அலாவுதீனை ஒரு மரத்தின் அடியில் அமரச் செய்தான்.

பிறகு மீண்டும் அலாவுதீனிடம்," மகனே அலாவுதீன், கொஞ்சம் காய்ந்த சுள்ளிகளைப் பொறுக்கு; அவற்றில் நாம் தீ மூட்டுவோம், அதன் பின்னர் நீ இதுவரையில் காணாத அதிசயங்களை எல்லாம் நான் உனக்கு செய்து காட்டுகிறேன்" என்றான்.

அலாவுதீனும் சிறிய தந்தை ஏதோ சொல்கிறார் என்ற மரியாதைக்காக சில சுள்ளிகளை பொறுக்கி எடுத்து வந்து அந்த மந்திரவாதியிடம் அவன் யார் என்று தெரியாமல் கொடுத்தான்.

அலாவுதீன் கொடுத்த சுள்ளிகளை கையில் வாங்கிக் கொண்ட மந்திரவாதி பூமியில் வைத்து நெருப்பைப் பற்ற வைத்தான். அத்துடன் ஒரு சிமிழை எடுத்தான். சில மந்திரங்களை உச்சரித்தபடி அதில் இருந்து அவன் எடுத்துப் போட்ட நறுமணப் பொடி நெருப்பில் விழுந்ததும் புகைய ஆரம்பித்தது. அதனால் ஏற்பட்ட நறுமணப் புகை எங்கும் பரவியது.

சில மணி நேரத்தில் இடியைக் காட்டிலும் மிகப் பெரிய ஓசை ஒன்று எங்கும் எழுந்தது. மின்னலைக் காட்டிலும் ஒரு பெரிய வெளிச்சம் எங்கும் பரவியது. அதைக் கண்டு பயந்து போன அலாவுதீன் ஒரு கணம் ஓட

முற்பட்டான். அப்போது அவனைத் தடுத்து நிறுத்திய அந்த மந்திரவாதி ஓங்கி அலாவுதீனின் கன்னத்தில் ஒரு அடி அடித்தான். அந்த ஒரே அடியில் அலாவுதீன் நிலை குலைந்து போனான். அதனால் அதிர்ச்சியில் உறைந்து நின்றான்.

மறுபுறம் அந்த மந்திரவாதி தான் வந்த காரியத்தில் கண்ணாக இருந்தான். அத்துடன் மீண்டும் ஒரு முறை அவன் தனது கண்களை மூடிய படி மந்திர உச்சாடனம் செய்யத் தொடங்கினான். அந்த மந்திரத்தின் பலனாய் வானத்தில் மேகங்களே இல்லாமல் இடி ஓசை எழுந்தது. அவ்வாறு ஓசை எழுந்த சில நிமிடங்களில் பூமி இரண்டாகப் பிளந்தது. அப்போது அதனைக் கண்ட அலாவுதீன் மேலும் அலறினான்.

அப்துல்லாவின் ரூபத்தில் இருந்த மந்திரவாதி அலாவுதீனிடம்," மகனே அலாவுதீன் கவலை கொள்ளாதே. நமது கனவுகள் எல்லாம் பலிதம் ஆகப் போகிறது. இன்றோடு நல்ல காலம் பிறக்கப் போகிறது. அதோ பிளக்கப்பட்ட பூமிகளில் படிகள் இறங்குவதைப் பார். அதன் வழியாக இறங்கி நடந்தால் நீ ஒரு குகையைக் காண்பாய். அந்தக் குகையிலும் நீ இறங்கி அதன் கடைசி வரையில் சென்றால் ஒரு அழகான விளக்கைக் காண்பாய். அதனை நீ பத்திரமாக என்னிடம் எடுத்து வந்து கொடுக்க வேண்டும். அப்படி நீ கொடுத்தால் வாழ்வில் சகல விதமான நன்மைகளையும் பெறுவாய்" என்றான்.

அலாவுதீன் தன்னை ஆசுவாசப் படுத்திக் கொண்டு, "தனது சிற்றப்பா தான் தன்னுடன் இருக்கிறாரே தனக்கு வேறு என்ன கவலை?" என்று சற்றே ஆறுதல் அடைந்தான். இருந்தும் கூட அவனுக்குள் ஒரு வித பயம் இருந்து கொண்டு தான் இருந்தது. அதனை அறிந்த அந்த மந்திரவாதி அலாவுதீனின் பயத்தைப் போக்குவதற்காக தனது கையில் இருந்த மந்திர மோதிரத்தை அவனிடம் கொடுத்து அவனது விரல்களில் அணியச் சொன்னான். அந்த மந்திர மோதிரம் முன்பு சம்சுதீன் என்ற பூதத்தால் மந்திரவாதிக்கு அளிக்கப்பட்டது குறிப்பிடத்தக்கது.

அலாவுதீனும் அந்த மோதிரத்தை தனது விரலில் அணிந்து கொண்டான். அப்போது மாறு வேடத்தில் இருந்த அந்த மந்திரவாதி அலாவுதீனிடம், "நீ பயப்படாதே இந்த மோதிரம் சாதாரண மோதிரம் அல்ல. ஆபத்துக் காலத்தில் உன்னைக் காக்கக் கூடிய மோதிரம் இது. இதன் மகிமையை நீ போகப் போக புரிந்து கொள்வாய். இதனை நம்பி நீ அந்தக் குகைக்குள் சென்று வா" என்றான்.

ஆனால், அப்போதும் கூட அலாவுதீனின் பயம் தெளியவில்லை. பிறகு அந்த மந்திரவாதி ஒரு அற்புதமான திட்டத்தை தீட்டினான். அதன் அடிப்படையில் அலாவதீனிடம், "அலாவுதீன்! நான் படி இறங்கி அந்தக் குகை வரையில் உன்னை அழைத்துச் செல்கிறேன். நீ தைரியமாக வா. இவ்வளவு தூரம் வந்ததற்கு நீ அந்தக் குகைக்குள் எட்டிப் பார் அது போதும். நாம் திரும்பிவிடலாம்" என்றான்.

அதைக் கேட்ட அலாவுதீன் மிகவும் மகிழ்ந்தபடி, "சிற்றப்பா! மிக்க நன்றி. எனில் தாங்கள் என்னை அந்தக் குகைக்குள் இறங்குமாறு கட்டாயப் படுத்த மாட்டீர்கள் அல்லவா? நான் அந்தக் குகையை எட்டிப் பார்த்தால் போதும் தானே!" என்றான்.

"ஆம்! நீ எட்டிப் பார்த்தால் போதும்" என்றான் அந்த மந்திரவாதி.

உடனே மந்திரவாதியுடன் படியில் இறங்கி அந்தக் குகையின் வாயிலை அடைந்தான் அலாவுதீன். மந்திரவாதி ஒரு மந்திரத்தை சொல்ல அந்தக் குகையின் வாயில் தானாகத் திறந்தது. அதற்குள் அலாவுதீனை நன்றாக விளக்கு தெரியும் வரையில் எட்டிப் பார்க்கச் சொன்னான் அந்த மந்திரவாதி.

"சிற்றப்பா தானே எட்டிப் பார்க்கச் சொல்கிறார். அதில் என்ன வந்து விட்டது?" என்று சிந்தித்தபடி அலாவுதீனும் அந்தக் குகைக்குள் எட்டிப் பார்த்தான். அவன் நன்றாக கழுத்தை உள்ளே விட்டு அங்கு ஏதேனும் விளக்கு காணப்படுகிறதா? என்று பார்த்துக் கொண்டு இருந்தான்.

இந்த சமயத்திற்காகத் தான் அந்த மந்திரவாதியும் காத்துக் கொண்டு இருந்தான். அவன் சற்றும் தாமதிக்காமல் குகையின் வாயிலில் தலையை விட்டு எட்டிப் பார்த்துக் கொண்டு இருந்த அலாவுதீனை அந்தக் குகைக்குள் ஒரே தள்ளு தள்ளிவிட்டான். அவ்வளவு தான் அலாவுதீன் அந்தக் குகைக்குள் விழுந்து விட்டான்.

ஒரு முறை அந்தக் குகைக்குள் விழுந்து விட்டால் இன்னொருவர் உதவி இல்லாமல் அந்தக் குகையை விட்டு வெளியே வர இயலாது. அவ்வளவு பள்ளமான குகை அது. இந்த நிலையில் அந்தக் குகைக்குள் இருந்தபடி, "சிற்றப்பா என்னை ஏன் குகைக்குள் தள்ளி விட்டீர்கள்? தயவு கூர்ந்து நான் வெளியில் வர உதவுங்கள்" என்று கத்தினான் அலாவுதீன்.

அலாவுதீனின் இந்த வார்த்தைகளைக் கேட்ட அந்த மந்திரவாதி, "அலாவுதீன் நீ சென்று அந்த விளக்கை உடனடியாக எடுத்து வா. நீ போய் எடுத்து வந்தால் தான் நான் உன்னை இந்தக் குகைக்குள் இருந்து தூக்கி விடுவேன். ஒருவேளை நீ விளக்குடன் வராவிட்டால் உள்ளே கிடந்து மடிய வேண்டியது தான்" என்று கூறினான்.

அலாவுதீனுக்கு இப்போது வேறு வழி இல்லை. வாழ்வா, சாவா என்கிற நிலைக்குத் தள்ளப்பட்டான். அதனால் அவன் அந்த விளக்கை எடுத்து வர தீர்மானித்தவனாய் அந்தக் குகைக்குள் தனது பயணத்தை துவக்கினான். அந்தக் குகை முழுவதும் பாம்பும், தேளுமாக விஷ ஜந்துக்கள் நிறைந்து காணப்பட்டது. பயம் அவனது மனதைக் கவ்வ மெல்ல ஒவ்வொரு அடியையும் எடுத்து வைத்தான் அலாவுதீன்.

குகைக்குள் ஒரு குறிப்பிட்ட தூரத்தைக் கடந்ததும் பேய்களும், பிசாசுகளும் அலாவுதீனை பயமுறுத்தின. இருந்தாலும் அவனது கைகளில் இருந்த சம்சுதீனின் மோதிரத்திற்கு பயந்து அவனை அவைகள் பயமுறுத்துவதுடன் நிறுத்திக் கொண்டன. இப்படியாக குகைக்குள் இன்னும் சில தூரம் கடந்த அலாவுதீனை கொடிய விலங்குகள் துரத்தின. அலாவுதீன் அந்த விலங்குகளிடம் இருந்தும் ஒரு வகையாகத் தப்பித்தான்.

பிறகு மேற்கொண்டு சிறிது தூரம் சென்றான் அலாவுதீன். அங்கு ஒரு அழகான விளக்கு இருந்தது. அது தான் தனது சிற்றப்பா சொன்ன விளக்கு என்பதை யூகித்துக் கொண்டவனாய் அதனை பத்திரமாக எடுத்துக் கொண்டு மெல்ல குகையின் வாயிலை நோக்கி நடக்கத் தொடங்கினான் அலாவுதீன். இப்போது அவனை முன்பு பயமுறுத்திய வன விலங்குகளோ, பேய்களோ, பிசாசுகளோ அலாவுதீனின் வழியில் குறுக்கிடவில்லை. எந்தத் தடையுமே இல்லாமல் அலாவுதீன் அந்தக் குகையின் வாயிலை அடைந்தான்.

குகையின் வாயிலில் அந்த விளக்கிற்காகவே காத்துக் கொண்டு இருந்தான் அப்துல்லா வடிவில் இருந்த மந்திரவாதியான இல்துமிஷ். அவன் அலாவுதீனைக் கண்ட மாத்திரத்தில் காரியம் நல்ல படியாக முடிந்து விட்டதை யூகித்துக் கொண்டான். அத்துடன் அலாவுதீனிடம் அவன் கொண்டு வந்த அந்த அற்புத விளக்கைத் தன்னிடம் தருமாறு கேட்டான். அப்போது அலாவுதீன் தன்னைக் குகையில் இருந்து முதலில் தூக்கி விடுமாறு கோரிக்கை விடுத்தான். ஆனால், மாறு வேடத்தில்

இருந்த அந்த மந்திரவாதியோ அலாவுதீனின் வார்த்தைகளை காதில் வாங்கிக் கொள்ளாமல் விளக்கை வாங்குவதிலேயே குறியாக இருந்தான். இதனால் அலாவுதீன் சற்றே சூதாரித்துக் கொண்டவனாய், தன்னை குகைக்குள் இருந்து தூக்கி விட்டால் தான் விளக்கைத் தருவதாகக் கூறினான். இதனால் எரிச்சல் அடைந்த அந்த மந்திரவாதி அலாவுதீனை பல விதங்களில் எச்சரிக்கை செய்தான். ஆனால், அலாவுதீன் அந்த மந்திரவாதி எவ்வளவு எச்சரிக்கை செய்தும் கூட அந்த விளக்கைத் தரவே இல்லை.

ஆத்திரத்தின் உச்சிக்கே போன மந்திரவாதி தனது உண்மையான ரூபத்தை எடுத்துக் கொண்டு அலாவுதீனை மிரட்டினான். வந்தது தனது சிறிய தந்தை இல்லை என்பதை அறிந்த அலாவுதீன் மேலும் சூதாரித்துக் கொண்டான். தான் கையில் வைத்திருந்த அந்த விளக்கை பத்திரமாக பற்றிக் கொண்டான். இதைக் கண்ட மந்திரவாதி அலாவுதீனை அந்த குகைக்குள் வைத்தே மூடிவிடப் போவதாக பயமுறுத்தினான். அப்போதும் அசராமல் நின்று கொண்டு இருந்தான் அலாவுதீன். அவனது உள் மனம், "இந்த விளக்கில் ஏதோ ஒரு விஷயம் உள்ளது. இந்த மந்திரவாதியிடம் இதனைத் தந்து விடாதே!" என்று மீண்டும், மீண்டும் கூறிக் கொண்டே இருந்தது. அதனால் கடைசி வரையில் அலாவுதீன் அந்த விளக்கை அந்த மந்திரவாதியிடம் அவன் எவ்வளவு மிரட்டியும் கூடத் தரவே வில்லை.

ஒரு கட்டத்தில் வெறுப்பையும், கோபத்தையும் ஒருங்கே பெற்ற அந்த மந்திரவாதி குகையை மூடிவிட்டுச் சென்றான்.

## அலாவுதீன் சம்சுதீனை சந்தித்தல்

மந்திரவாதி குகையை மூடி விட்டுச் செல்ல, அதைக் கண்ட அலாவுதீன் அலறித் துடித்தான். "அய்யோ அம்மா!" என்று கத்தினான்.

அலாவுதீனின் நிலை இப்படி இருக்க எங்கோ உறங்கிக் கொண்டு இருந்த அவனது தாய், தனது மகனுக்கு ஏதோ ஆபத்து நேர்ந்ததாக உணர்ந்து கொண்டவளாய் துடி, துடித்து எழுந்தாள். அப்போது அவளுக்குத் துணையாக படுத்துக் கொண்டு இருந்த ஆயிஷா என்ற பக்கத்து வீட்டுப் பெண், அலாவுதீனின் அன்னையிடம் அவள் அலறி எழுந்த காரணத்தைக் கேட்டவளாய் அண்ணன் அலாவுதீனுக்கு ஏதும் ஆகாது என்று ஆறுதல் கூறினாள்.

ஆனால், அலாவுதீனின் தாய் பயந்தது போலவே அலாவுதீன் இப்போது அந்த ஆபத்தான குகைக்குள் இருந்தபடி அன்னையை நினைத்து அழுது கொண்டே இருந்தான். 'தன்னை விட்டால் தனது விதவைத் தாய்க்கு யார் துணை?' என்று தான் அலாவுதீன் அந்த நிலையிலும் தனது தாயை நினைத்துக் கலங்கித் தவித்தான். பிறகு அந்தக் குகைக்குள் அழுது, அழுதே ஓர் இரவைக் கழித்தான் அலாவுதீன்.

மிகவும் சோர்வு அடைந்தவனாய் அவன் காணப்பட்டான். அந்தக் குகைக்குள் இங்கும், அங்குமாக நடந்தான். செய்வதறியாது தவித்தான். அந்தக் குகைக்குள் இருந்த புழுதியால் அவனது உடல் எல்லாம் ஆங்காங்கே அரிக்கத் தொடங்கியது. அவனை அறியாமால் சொரியத் தொடங்கினான். அப்போது சம்சுதீனின் மோதிரம் அவனது தோளில் பட்டு உராயத் தொடங்கியது. சில கணங்களில் அதில் இருந்து ஒரு பேரொளி வெளிப்பட்டது. ஆம்! சம்சுதீன் அதில் இருந்து வெளி வந்தான். அலாவுதீனின் முன்னாள் ஒரு பெரிய தூண் போல நின்றான்.

அதைக் கண்ட அலாவுதீன் மேலும் அலறித் துடித்தான். தனக்கு ஏதோ பெரிய ஆபத்து வந்து விட்டது என்று நினைத்து எல்லாம் வல்ல இறைவனின் திருநாமத்தைக் கூறினான். அதைக் கண்ட அந்த பூதம் வெகுவாக சிரித்தபடி தனது உருவத்தை சுருக்கிக் கொண்டு, "உசூர்! நான் சம்சுதீன் என்ற பூதம். நான் தங்களது அடிமை. தங்களுக்கு சேவை செய்யத் தான் நான் இங்கு வந்து உள்ளேன். என்ன வேண்டும் சொல்லுங்கள்? நான் நிறைவேற்றித் தருகிறேன்" என்று கேட்டது.

அதைக் கண்ட அலாவுதீன் பிரமித்து நின்றான். அந்த பூதம் உண்மையில் உசூர் என்று தன்னைத் தான் அழைத்ததா? என்று கூட சிந்தித்தான். ஒரு கட்டத்தில் அந்த பூதத்திடமே கேட்டும் விட்டான் அலாவுதீன்.

உடனே சம்சுதீன் என்ற அந்த பூதம் அலாவுதீனிடம், "இந்த மோதிரம் யாரிடம் இருக்கிறதோ அவர்களுக்கு நான் அடிமை அவர்கள் என்ன சொன்னாலும் நான் அதன் படிச் செய்வேன். அதன் படி இப்போது தங்களுக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டது.

உடனே அலாவுதீன் தன்னை இந்தக் குகைக்குள் இருந்து விடுவித்துத் தனது தாயிடம் பத்திரமாக சேர்ப்பிக்குமாறு வேண்டினான். அதன் படியே சம்சுதீன் என்ற அந்தப் பூதம் பேர் உருவம் கொண்டு அலாவுதீனை பத்திரமாகத் தனது கைகளில் ஏந்திய படி வான் வழியே பறந்து சென்று பாக்தாத் நகரத்தில் அவனது வீட்டு மாடியில் விட்டு விட்டது.

அதனால் மனம் மகிழ்ந்தான் அலாவுதீன். அத்துடன் சம்சுதீன் மீது அவனுக்கு இருந்த பயமும் நீங்கியது. அதனால் சம்சுதீனிடம் நன்றி கூறி அவனை அனுப்பி வைத்தான். சம்சுதீனும் அலாவுதீனிடம் விடை பெற்று மீண்டும் தனது பூத லோகத்தை சென்று அடைந்தான்.

மறுபுறம் அலாவுதீன் தனது தாயைக் காண விரைந்து வீட்டினுள் ஓடினான். அவனைக் கண்ட அவனது தாய் அவனைக் கட்டி அணைத்துக் கொண்டாள்.

தாயாரைக் கண்டதும் தன்னுடைய துயரத்தை எல்லாம் அடக்கிக் கொண்டவனாய், "அம்மா, எனக்குப் பசி எடுக்கிறது. முதலில் சாப்பிடுவதற்கு ஏதாவது இருந்தால் கொஞ்சம் கொண்டு வந்து கொடு, அதன் பின்னர் நான் உன்னிடம் விரிவாகப் பேசுகிறேன்" என்று கூறியபடி தனக்கு இருந்த களைப்பினால் அப்படியே படுத்துவிட்டான்.

அலாவுதீனின் தாயும் அவனுக்கு ஆசை, ஆசையாக உணவு வகைகளை சமைத்தாள். தூங்கிக் கொண்டு இருந்த அலாவுதீனை எழுப்பி அத்தனை உணவு வகைகளையும் அவனுக்குப் பரிமாறினாள். அவனும் கூட அதனை உண்டு மகிழ்ந்தான். பிறகு அன்றைய தினம் தனது தாயிடம் அவன் எதுவும் கூற விரும்பாமல் அமைதியாக அன்றைய பொழுதைக்

கழித்தான். அலாவுதீனின் தாயும் தனது மகனாக எதுவானாலும் சொல்லட்டும் என்று அமைதியாக ஒன்றும் கேட்காமல் இருந்தாள். இப்படியே அன்றைய பொழுது கழிந்து மறு நாள் காலையும் விடிந்தது.

மறு நாள் காலையில் கண் விழித்த அலாவுதீன் தனது தாயிடம் நடந்த விஷயங்கள் அனைத்தையும் ஒன்று விடாமல் கூறினான். அனைத்து உண்மைகளையும் அறிந்து கொண்ட அலாவுதீனின் தாய் மிகவும் வருந்தினாள். அத்துடன் தனது மகனை பத்திரமாகக் கொண்டு வந்து சேர்ந்த இறைவனுக்கு நன்றிகளைத் தெரிவித்தாள்.

பிறகு அன்றைய தினம் அவளிடம் சமைக்கக் கூட எந்த உணவும் இல்லாத காரணத்தால் தனது மகனிடம், "மகனே, நான் நூற்று வைத்திருக்கும் இந்த நூலைக் கொண்டு போய்க் கொடுத்து அதற்குக் கிடைக்கும் காசிற்கு ஏதாவது சாமான்கள் வாங்கி வருகிறேன்" என்று கூறிப் புறப்பட்டாள்.

"தாயே தாங்கள் கஷ்டப் படத் தேவை இல்லை. என்னிடம் ஒரு விளக்கு இருக்கிறது; அது சின்ன விளக்குதான். அதன் எண்ணெய்ப் பிசுக்கைப் போக்க அழுத்தித் துடைத்தால் போதும், அது பார்ப்பதற்கு வெண்கலத்தாலான விளக்கு போலத் தான் தெரிகிறது. அதனை சுத்தப்படுத்தி நாம் கொண்டு போய் விற்றால் கொஞ்சம் காசு கிடைக்கும். அதனைக் கொண்டு இன்றைய பொழுதை நாம் ஓட்டலாம். இதோ அந்த விளக்கு" என்று கூறியபடி அந்த அதிசய விளக்கைத் தனது தாயிடம் கொடுத்தான்.

# அதிசய விளக்கால் அலாவுதீன் வாழ்க்கையில் ஏற்பட்ட திருப்பம்

அலாவுதீனின் தாயார் தனது மகனின் விருப்பப் படி அந்த விளக்கை எடுத்துக் கொண்டு அதனை சுத்தப்படுத்தக் கிளம்பினாள். அந்த அழுக்கடைந்த விளக்கை நன்றாகத் தேய்த்துக் கொண்டு போக வேண்டும் என்று எண்ணிக் கொண்டவளாய் கொஞ்சம் சாம்பலை எடுத்துத் துணியில் வைத்துத் தேய்க்க ஆரம்பிக்கவும் அதில் இருந்து ஒரு பெரிய பூதம் ஒன்று கிளம்பியது. அந்த பூதத்தைக் கண்ட அலாவுதீனின் தாய் பயந்து அலறினாள். அவளது அலறலைக் கேட்ட அலாவுதீன் அவ்விடத்திற்கு ஓடி வந்தான். அந்த சமயத்தில் அலாவுதீனும் அந்த பூதத்தைப் பார்த்து அதிர்ந்து போனான்.

அப்போது அந்தப் பூதம் பேசத் தொடங்கியது, "என்னிடம் என்ன எதிர்பார்க்கிறாய்? எது வேண்டும் என்றாலும் கேள், உடனே நான் கொண்டு வந்து தருகிறேன். இந்த விளக்கு யாரிடம் உள்ளதோ அவர்கள் சொல்லும் வேலையைச் செய்வது தான் எனது கடமை. அதன் படி எதை வேண்டுமானாலும் கேளுங்கள், உடனே கொண்டு வந்து தருகிறேன்" என்றது அந்தப் பூதம்.

அப்போது தான் அலாவுதீனுக்கு அந்த விளக்கின் மகத்துவம் புரியத் தொடங்கியது. உடனே அலாவுதீன் தனது தாயாரிடம் இருந்து அந்த விளக்கைப் பெற்றுக் கொண்டான். ஏற்கனவே ஒரு பூதத்தை பார்த்த அனுபவம் அவனுக்கு இருந்ததால் வந்திருந்த அந்த பூதத்திடம் தைரியமாக, "எங்கள் இருவருக்கும் உண்பதற்கு ஏதாவது கொண்டு வா. வாய்க்கு ருசியாக இருக்க வேண்டும். கொஞ்சம் புதுமையானதாகவும் இருக்க வேண்டும்" என்று கூறவும் இரண்டு பெரிய வட்டிலுடன் சிறிது நேரத்திற்குள் வந்தது அந்தப் பூதம். அந்த இரண்டு வட்டில்களிலும் விதவிதமான உணவுப் பொருட்கள் இருந்தன. அத்துடன் பன்னிரண்டு பொற் கிண்ணங்களை வேறு அந்தப் பூதம் கொண்டு வந்திருந்தது. அதிலும் கூட விதவிதமான தின்பண்டங்களும் இறைச்சி வறுவல், இறைச்சிக் குழம்பு வகைகள் என அனைத்தும் காணப்பட்டன. இரண்டு கூஜாக்களில் தூய்மையான முறையில் வடித்தெடுக்கப்பட்ட மதுவும் இரண்டு வெள்ளிக் கோப்பைகளும் இருந்தன. இவை அனைத்தையும் கண்ட அலாவுதீன் பேர் ஆனந்தம் கொண்டான். பிறகு பூதத்திற்கும் விடை கொடுத்து அனுப்பினான்.

பூதம் விதவிதமாகக் கொண்டு வந்த உணவு வகைகளைப் பார்த்த அலாவுதீனின் தாயார் உண்மையில் பிரமித்துப் போனார். அலாவுதீனும் அவனது தாயாரும் அது வரையிலும் சாப்பிடாத வகையில் தின்பண்டங்கள் அங்கு இருந்தன. தாயும் மகனும், பூதத்தால் கொண்டு வரப்பட்ட அந்த உணவுப் பொருட்களை நன்றாக விரும்பி உண்டனர். இவை அனைத்தும் இறைவனின் கருணை தான் என்று மீண்டும், மீண்டும் இறைவனுக்கு நன்றி கூறினார்கள் அவ்விருவரும்.

எனினும் என்ன தான் அந்தப் பூதத்தால் நன்மை ஏற்பட்டாலும் அலாவுதீனுடைய தாயாருக்கு அந்த பூதத்தின் மீது ஒரு வித பயம் இருந்து கொண்டு தான் இருந்தது. எனினும் அலாவுதீன் அவளுக்குத் தைரியம் அளித்ததால் அவள் மேற்கொண்டு எதையும் பேசவில்லை. அத்துடன் அந்தப் பூதம் கொண்டு வந்து வைத்து விட்டுப் போன உணவு வகைகளை உண்ட பின்னரும் உணவுப் பொருட்கள் மீதம் இருந்தன. அப்படியாக மீதமுள்ள உணவுப் பொருட்களை அலாவுதீனின் தாயார் இரண்டு தினங்கள் வைத்துக் கொண்டாள். அலாவுதீனும் அவனது தாயாரும் வறுமையில் துன்பப்பட்டவர்கள் அல்லவா? அதனால் அவர்கள் பூதம் கொண்டு வந்த உணவு வகைகள் எதையுமே வீணாக்க விரும்பவில்லை.

பின்னர் மூன்று தினங்கள் கடந்த பிறகு அனைத்து உணவுப் பொருட்களும் தீர்ந்து போயின. என்ன செய்வது என்று தவித்தனர் தாயும், மகனும். அலாவுதீன் சொகுசுப் பேர்வழி. அவன் உழைக்கத் தயாராக இல்லை. விளக்கை உரசி பூதத்தை அழைத்தால் அது வேண்டியதைக் கொண்டு வந்து தரும் தான். ஆனால், ஏனோ இது அலாவுதீனுக்குத் தோன்றவில்லை. ஏன்? அவனது தாய்க்கும் கூடத் தான். இந்த நிலையில் அலாவுதீனுக்கு ஒரு யோசனை தோன்றியது அதன் படி உணவுப் பொருட்கள் முன்பு வைக்கப்பட்டு இருந்த பொற் கிண்ணங்களை சந்தையில் விற்று வர நினைத்தான் அலாவுதீன். அதன் படி ஒரு நாளைக்கு ஒரு பொற் கிண்ணத்தை எடுத்து விற்பது என்ற முடிவுக்கு வந்தான் அவன். அதன் படியாக முதல் பொற் கிண்ணத்தை எடுத்துக் கொண்டு சந்தைக்குச் சென்றான். சந்தையில் ஒரு அடகுக் கடை இருந்தது. அந்த வியாபாரியிடம் கொண்டு போய் அந்தப் பொற் கிண்ணத்தைக் கொடுத்தான். அதற்குத் தகுந்த விலையைத் தருமாறு கூறினான்.

அலாவுதீன் பேசுவதில் இருந்தே அவனுக்கு உலக அறிவு என்பது

சிறிதும் இல்லை என்பதை உணர்ந்து கொண்டான் அந்த அடக்குக் கடை வியாபாரி. அத்துடன் அந்த வியாபாரி பேராசை குணம் கொண்டு இருந்ததால், அவன் அடிமாட்டு விலைக்கு அந்தப் பொற் கிண்ணத்தை எடுத்துக் கொண்டான். ஐந்நூறு தினார்களுக்கு மேல் கொடுக்க வேண்டிய அந்தப் பொற் கிண்ணத்திற்கு வெறும் ஒரு தினார் மட்டுமே கொடுத்து அனுப்பினான். அலாவுதீனும் அந்த ஒரு தினாரை சந்தோஷத்துடன் பெற்றுக் கொண்டு வீடு திரும்பினான். உழைத்து வாங்கி இருந்தால் தானே அவனுக்கு அருமை தெரியும்? என்ன செய்ய பூதத்தின் உதவியால் இலவசமாகக் கிடைத்த பொற் கிண்ணம் தானே. அதற்கு எவ்வளவு விலை கொடுத்தால் தான் அலாவுதீனுக்கு என்ன? அவனைப் பொருத்தவரையில் அன்றைய பொழுதை அவன் கழித்தால் அதுவே போதும் என்று அந்த ஒரு தினார்களைக் கொண்டு அவனுக்கு வேண்டிய உணவுப் பொருட்களை எல்லாம் வாங்கிக் கொண்டு சென்று தனது தாயிடம் கொடுத்தான். இப்படியே தினம் ஒரு பொற் கிண்ணத்தை அதே அடகுக் கடைக் காரனிடம் கொண்டு போய் கொடுத்து தினம் ஒவ்வொரு தினார்களைப் பெற்றுக் காலத்தை ஒட்டி வந்தான் அலாவுதீன். இறுதியில் அனைத்துப் பொற்க் கிண்ணங்களும் அலாவுதீனால் விற்கப்பட்டு விட்டது. எஞ்சி இருந்தது பரந்த பெரிய வெள்ளித் தட்டு தான்; அதையும் எடுத்துக் கொண்டு அந்தக் கொல்லைக்கார அடகு வியாபாரியிடம் தான் கொண்டு போய் கொடுத்தான் அலாவுதீன். அந்தப் பெரிய மிகக் கனமான வெள்ளித் தட்டுக்கள் இரண்டும் சுமார் இரண்டாயிரம் தினார்கள் போகும். ஆனால் அதற்கு அந்த பேராசை கொண்ட அடகு வியாபாரி வெறும் பத்து தினார்கள் மட்டுமே அலாவுதீனிடம் கொடுத்தான். அவனும் ஏன்? எதற்கு? என்று கேட்காமல் அதனை பெற்றுக் கொண்டு மறு பேச்சு பேசாமல் தனது தாயிடம் அந்தப் பத்து தினார்களைக் கொடுத்தான்.

அலாவுதீனின் தாயாருக்குக் கூட அந்த வெள்ளித் தட்டின் மகத்துவம் தெரியவில்லை. இப்படியாக அந்தப் பத்து தினார்களைக் கொண்டு கொஞ்ச நாள் குடும்பத்தை ஒட்டினர் அலாவுதீனும் அவனது தாயும்.

ஒரு கட்டத்தில் எதுவுமே மிச்சம் இல்லை என்கிற நிலையில், மீண்டும் அந்த அபூர்வ விளக்கின் நியாபகம் அலாவுதீனுக்கு வந்தது. அலாவுதீன் விளக்கை தேய்த்து உடனே பூதத்தை வர வழைத்தான். பூதமும் உடனுக்குடன் அலாவுதீனுக்கு முன்னாள் வந்து நின்றது. வழக்கம் போல," பிரபுவே! நான் தங்களுக்கு என்ன செய்ய வேண்டும், உத்தரவிடுங்கள்" என்று கேட்டுப் பணிந்து நின்றது.

"எனக்கு வேறு என்ன வேண்டும் வழக்கம் போல விதவிதமான உணவுப் பொருள்கள் தான். முன்னைப் போலவே கிண்ணங்களை வட்டிலில் வைத்து எடுத்து வர வேண்டும்; அத்துடன் கொண்டு வரும் உணவுப் பொருட்கள் அனைத்தும் மிகச் சுவையாக இருக்க வேண்டும்" என்று அலாவுதீன் பூதத்திற்கு ஆணை பிறப்பித்தான்.

"அப்படியே செய்கிறேன்" என்று கூறியபடி அந்தப் பூதம் நொடியில் அனைத்தையும் கொண்டு வந்து கொடுத்தது. அலாவுதீன் பூதத்திற்கு விடை கொடுத்து அனுப்பி வைத்தான். பிறகு வெளியில் சென்ற தனது தாய் வீடு திரும்பிய மாத்திரத்தில் அனைத்து உணவுப் பொருட்களையும் தனது தாயிடம் காட்டினான். அவனது தாயும் அதனைக் கண்டு இறைவனை வணங்கி பசி ஆறினாள்.

எனினும் அலாவுதீனின் தாய்க்கு மகன் இவ்வாறு சோம்பேறியாக சொந்த முயற்ச்சிகள் எதுவும் செய்யாமல் இருக்கிறானே என்ற கவலையும் மனதிற்குள் இருந்து வந்தது. அலாவுதீனுக்கு பல விதங்களில் அறிவுரை சொல்லிப் பார்த்தாள். ஆனால், அலாவுதீனோ உழைக்கத் தயாராக இல்லை.

இந்நிலையில் பூதம் மீண்டும் கொண்டு வந்து கொடுத்த அந்த உணவுப் பொருட்களை கிட்டத்தட்ட இரண்டு நாட்கள் வைத்து உண்டனர் தாயும், மகனும். மூன்றாவது நாளில் இருந்து மீண்டும் அதே பஞ்சப் பாட்டு தான். வழக்கம் போல பொற் கிண்ணங்களை கொண்டு போய் விற்க முடிவு செய்தான் அலாவுதீன். அதன் படி மீண்டும் அந்த பேராசை கொண்ட அடகுக் கடை வியாபாரியிடம் செல்ல ஒரு பொற் கிண்ணத்தை மட்டும் அன்றைய தினம் பத்திரமாக எடுத்துத் தனது பையில் வைத்துக் கொண்டு மெல்ல நடையைக் கட்டினான் அவன். எனினும், இந்த முறை அவன் கொஞ்சம் தயங்கித் தயங்கி தான் சென்றான். காரணம்,' இப்படியே பொற் கிண்ணங்களைக் கொண்டு போய் கொடுத்தால், இது எங்கிருந்து வந்தது என்ற கேள்வி எழுந்து விடுவோமோ?' என்று அவன் நினைத்தான். அதனால் தான் அலாவுதீன் பயந்து, பயந்து அந்தக் கிண்ணத்தைப் பையில் வைத்து மறைத்தபடி சென்று கொண்டு இருந்தான்.

அலாவுதீன் இவ்விதம் அடிக்கடி சென்று வருவதைப் பார்த்த ஒரு வயதான நகைக் கடைக்காரர் அலாவுதீனைப் பார்த்துக் கை தட்டிக் கூப்பிட்டார். அவனும் தனது துணிப் பையில் வைக்கப்பட்டு இருந்த

பொற் கிண்ணத்தை எடுத்துக் கொண்டு அதனை மறைத்தபடி அந்தப் பெரியவரிடம் சென்றான்.

அந்தப் பெரியவர் மிகவும் நல்லவர். அவர் நியாயமாக தனது தொழிலை இறைவனுக்கு பயந்து நடத்திக் கொண்டு இருப்பவர். அவர் அலாவுதீனின் மறைந்த அவனது தந்தையின் நண்பரும் கூட. ஒரு காலத்தில் அலாவுதீனின் குடும்பம் நன்றாக வாழ்ந்த சமயத்தில் வீட்டுக்குக் கூட வந்து இருந்தார் என்பதை எல்லாம் அலாவுதீன் நினைவு கூர்ந்த படி அவரது அருகில் சென்றான்.

அலாவுதீனைக் கண்ட அந்தப் பெரியவர் அவனிடம் மிகவும் அன்பாகப் பேசினார். பிறகு அவனிடம்," மகனே, நான் உனது அப்பாவின் நண்பர். இந்தப் பக்கமாக எதையோ பையில் போட்டு எடுத்துக் கொண்டு செல்வதும், வருவதுமாக இருக்கிறாயே. அப்படி எதைத் தான் நீ எடுத்துக் கொண்டு செல்கிறாய்? நான் அதனைத் தெரிந்து கொள்ளலாமா? ஒருவேளை நீ எதையாவது விற்கவோ வாங்கவோ வேண்டும் என்றால் என்னிடம் சொல். நான் உனக்கு உதவுகிறேன். காரணம் நீ சிறுவன், உலக அனுபவம் இல்லாதவன். உன்னைப் பிறர் ஏமாற்றக் கூடும் என்பதால் தான் நான் சொல்கிறேன். அத்துடன் என்னை நம்பு நான் உனது தந்தையின் நல்ல நண்பனும் கூட. நீ எனது மகனைப் போன்றவன். நான் உன்னை ஒரு போதும் ஏமாற்ற மாட்டேன்" என்று அந்தப் பெரியவர் இவ்வளவு சொன்ன பிறகு தான் அலாவுதீன் அந்தப் பசும் பொன்னில் செய்யப்பட அந்தப் பொற்க கிண்ணத்தை எடுத்து அந்தப் பெரியவரிடம் காட்டினான்.

அதனை வாங்கிப் பார்த்த அந்தப் பெரியவர் உண்மையில் அதிர்ந்து போனார். மேலும் அலாவுதீனிடம் அவன் அதனை எடுத்துச் செல்லும் நோக்கத்தையும் கேட்டு அறிந்து கொண்டார். அப்போது தான் அந்தப் பெரியவருக்கு, அலாவுதீனை அந்த அடகுக் கடைக்காரன் ஏமாற்றிய விஷயம் புரிந்தது. இருந்தும் அதனைச் சொல்லி அலாவுதீனை அவர் சங்கடப் படுத்த விரும்பவில்லை. அவர் அலாவுதீனிடம்," மகனே இந்தப் பொற் கிண்ணத்தின் மதிப்பு என்ன தெரியுமா? இது குறைந்தது ஐநூறு தினார்கள் மதிப்பு கொண்டது. நான் அறநூறு தினார்களுக்கு உன்னிடம் இருந்து இதனை வாங்கிக் கொள்ளட்டுமா? உனக்குத் தரச் சம்மதம் தானே!" என்று கேட்டார்.

அலாவுதீனுக்கு பெரியவர் சொன்னதைக் கேட்ட மாத்திரத்தில் ஒரே

மகிழ்ச்சி அந்தப் பொற் கிண்ணத்தை பெரியவரிடமே விற்று விட்டான். அத்துடன் அறநூறுதினார்களையும் அவன் பெற்றுக் கொண்டு வீட்டிற்குச் சென்று தனது அன்னையிடம் அதனைக் காட்டி மகிழ்ந்தான்.

அலாவுதீனின் வாழ்க்கையில் அப்போது தான் ஒரு பிடிப்பு ஏற்பட்டது. மேலும், முன்பு அவனது தாய் அவனுக்குக் கூறிய அறிவுரைகளின் பயனாக அலாவுதீன் நல்ல வகையில் சிந்திக்கத் தொடங்கினான். பொறுப்புடன் செயல்பட முடிவு செய்தான். அந்த அறநூறு தினார்களை வைத்துக் கொண்டு தைய்யல் கடையை ஆரம்பித்தான். குலத் தொழில் கற்காமலே வரும் என்பதைப் போல அலாவுதீன் குறுகிய நாட்களிலேயே அழகழகான வேலைப்பாட்டுடன் கூடிய ஆடைகளை மிகவும் எளிதாக செய்யக் கற்றுக் கொண்டான். அத்துடன் நல்லது நடக்கும் போது தொடர்ந்து நல்லவைகளே நடக்கும் என்பதற்கு ஏற்ப நல்ல நண்பர்கள் அவனுக்குக் கிடைத்தார்கள்.

அத்துடன் அவனுடைய பொற் கிண்ணத்தின் உண்மையான மதிப்பை உணர்ந்து அறுநூறு தினார்களைக் கொடுத்த அந்தப் பெரியவரைப் போல இன்னும் சில பெரியவர்களின் அன்பு அலாவுதீனுக்குக் கிடைத்தது. இதனால் அவனது நட்பு வட்டாரம் பெரிய மனிதர்களைக் கொண்டதாக அமைந்தது. அலாவுதீன் வாழ்க்கையில் அதன் பிறகு எல்லாமே நல்லதாகத் தான் நடந்து வந்தது.

# அலாவுதீன் இளவரசியை சந்தித்தல்

தினமும் காலையில் அலாவுதீன் தனது கடமைகளை எல்லாம் முடித்து விட்டு ஒழுங்காகத் தனது தொழிலை கவனிக்கத் தைய்யல் கடைக்குச் சென்றான். ஒழுங்காக எல்லோரும் போற்றும் விதத்தில் பொறுப்புடன் நடந்து வந்தான்.

அப்படித் தான் காலை வேளையில் ஒரு நாள் அவன் சென்று கொண்டு இருந்த சமயத்தில் மாளிகையில் இருந்து செய்தி அறிவிப்பவன் ஒருவன் பறை அடித்து இவ்விதம் கூறிக் கொண்டு சென்றான்.

"இது நமது சுல்தானின் அரண்மனையில் இருந்து அறிவிக்கப்படும் செய்தி. சுல்தானின் ஒரே மகளான சீமாட்டி பதர் அல்- புத்தூர் ஹம்மாவிற்கு (அக்காலத்தில் அரச குடும்பங்கள் மற்றும் செல்வந்தர்கள் சொகுசாக குளிப்பதற்காக கட்டி வைக்கப்பட்ட மண்டபம். அது அழகிய நீச்சல் குளத்துடன் காட்சியளிக்கும்) இன்னும் சற்று நேரத்தில் செல்லப் போகிறார். ஆகவே, வியாபாரிகள் அனைவரும் அவரவருடைய கடைகளைப் பூட்டி விட்டு அவரவர் வீடுகளிலேயே இருக்க வேண்டும். இதனை மீறி நடப்பவர்களுக்கு மரண தண்டனை விதிக்கப்படும்"

இவ்விதமாக அறிவிப்பாளன் முரசு கொட்டி அறிவித்துச் சென்று விட்டான். அந்தச் செய்தியை கேட்ட மாத்திரத்தில் இளவரசியை ஒரு முறையேனும் நேரில் சந்திக்க வேண்டும் என்ற ஆசை அலாவுதீனுக்கு வந்தது. அதனைத் தூண்டி விடும் விதத்தில் பொதுமக்களில் சிலர் அலாவுதீனின் காதில் படுமாறு இளவரசியின் அழகையும், வனப்பையும் பற்றி எடுத்துக் கூறினார்கள். அதனால் என்ன ஆனாலும் சரி, இன்று இளவரசியைப் பார்த்து விட்டுத் தான் போக வேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டான் அலாவுதீன்.

பதுங்கிப் பதுங்கி சென்று குளியல் கட்டடத்திற்குப் பக்கத்தில் இருந்த மரத்தடிக்குச் சென்று மறைந்து நின்று கொண்டான் அலாவுதீன்.

"அரசாங்கத்தின் அறிவிப்பு வெளியானதால் சாமான்ய மக்கள் நடமாட மாட்டார்கள். மரண தண்டனை அடைவதற்கு அவர்களுக்கு என்ன பைத்தியமா? எனவே, அந்தச் சமயத்தில் தெருக்களில் யாரும் நடமாட மாட்டார்கள்" என்று அலட்சியமாக இருந்தார்கள் காவலர்கள். எனவே,

அவர்கள் கொஞ்சம் மெத்தனமாக இருந்தார்கள். அதனை அலாவுதீன் தனக்கு சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டான்.

இளவரசியும் அரண்மனையை விட்டு வெளியில் வந்தாள். தெரு வழியாக ஒய்யாரமாக நடந்து சென்று ஹம்மாவிற்குள் நுழைந்தாள் அப்போது தனது முகத்திரையை விலக்கினாள். அவ்விதம் விலக்கப்பட்ட சமயத்தில் அலாவுதீன் அவளது முகத்தைப் பார்த்தான். ஊரார் பலர் இளவரசியின் அழகைப் பற்றிக் கூறியது உண்மை என்பதை அவன் உணர்ந்தான்.

இப்படியாக அவள் ஹம்மாவிற்குள் நுழையும் வரை மறைந்திருந்து பார்த்துக் கொண்டு இருந்த அவன், பின்னர் தன்னை மறைத்துக் கொண்டான்.இளவரசியும் குளித்து முடித்து விட்டு அவ்விடத்தை விட்டு மீண்டும் அரண்மனையை அடைந்தாள். அப்படியே அலாவுதீனும் மெல்ல அவ்விடத்தை விட்டு நகர்ந்தான். தனது வீட்டையும் அடைந்தான்.

மேலும் இளவரசி பதர் அல்புதுரைப் பார்த்ததில் இருந்து அவள் நினைவாகவே இருந்தான் அலாவுதீன். அலாவுதீனின் தாயார் அவனை அழைப்பது கூட அவனது காதுகளில் கேட்கவில்லை. எப்போதுமே இளவரசியின் நினைவில் தான் அலாவுதீன் இருந்தான். தனது மகனுக்கு என்ன ஆனது என்று கலங்கித் தவித்தாள் அலாவுதீனின் தாயார்.

அலாவுதீனோ உணவு, உறக்கம் என அனைத்தையும் வெறுத்தான். சில சமயங்களில் தாயாரைக் கூட அவன் கண்டு கொள்ளவில்லை. ஆரம்பத்தில் அலாவுதீனுக்கு ஏதோ உடல் நிலை சரி இல்லை என்று நினைத்த அவனது தாயார் மருத்துவரை அழைத்து வந்து கூட பார்த்தாள். ஆனால், மருத்துவரோ அலாவுதீனுக்கு உடல் ரீதியாக ஒன்றும் இல்லை என்று கூறிச் சென்று விட்டார். அலாவுதீனின் தாய் இன்னும் குழம்பிப் போனாள். மகனுக்கு என்ன தான் ஆயிருக்கும் என்று மேலும், மேலும் யோசித்துக் கவலைப் பட்டாள்.

# அலாவுதீன் இளவரசியை கைப்பிடிக்க நடத்திய போராட்டங்கள்

தன்னிடம் அதிக அளவு பாசம் கொண்ட தனது அன்புத் தாயை அவன் மேலும் ஏமாற்ற விரும்பவில்லை, மெல்லத் தனது தாயை அழைத்து அவளிடம்  தனது உள்ளத்தில் உள்ளதைக் கூறிவிட்டான் அலாவுதீன். மேலும் தான் மணந்து கொண்டால் இளவரசியைத் தான் மணந்து கொள்வேன் என்று அவன் கூற. அதனைக் கேட்ட அலாவுதீனின் தாயார், "இதெல்லாம் கனவில் கூட நடக்காதே! மன்னர் தனது மகளை அத்து மீறிப் பிறர் பார்த்தாலே தலையை வெட்டி எறிந்து விடுவார். அப்படி இருக்க அலாவுதீன் இப்படிச் சொல்கிறானே!" என்று நினைத்து நினைத்துப் புலம்பினாள்.

பிறகு அலாவுதீனை அழைத்து அவனிடமே பேசிப் பார்த்தாள் அலாவுதீனின் தாயார்.

"மகனே உனக்கு என்ன புத்தி பேதலித்து விட்டதா? ஏன் கனவிலும் நடக்காத ஒன்றைக் கூறி என்னைக் கலங்கடிக்கிறாய்?" என்றெல்லாம் கேட்டுக் கண்ணீர் வடிக்கத் தொடங்கினாள்.

ஆனால் அலாவுதீன், "தாயே நான் மணந்தால் சுல்தானின் மகளைத் தான் மணப்பெண். இல்லையேல் இந்த வாழ்க்கையை வாழாமல் நான் மரணிப்பேன். அதனால் நீ உடனே சென்று சுல்தானிடம் பெண் கேட்டு வா!" என்று தனது தாயிடம் கூறினான் அலாவுதீன்.

"சுல்தானின் பெண்ணைப் பெண் கேட்டுப் போவதற்கு நமக்கு ஒரு தகுதி வேண்டாமா அலாவுதீன். நமக்கு என்ன தகுதி உள்ளது? தவிர இந்த நாட்டு மன்னரை சந்திக்கச் சென்றாலே பரிசுப் பொருட்களுடன் போவது தான் மரியாதை. அந்தப் பரிசுப் பொருளைக் கொடுக்கக் கூட நமக்குத் தகுதி இல்லை. காரணம் நமது வீட்டில் சுல்தானுக்குப் பரிசு அளிக்கும் படியாக எந்த ஒரு விலையுயர்ந்த பரிசுப் பொருட்களும் இல்லையே!" என்றாள் அலாவுதீனின் தாய்.

உடனே அதனைக் கேட்ட அலாவுதீன்," நல்ல நேரத்தில் நினைவு படுத்தினீர்கள் தாயே. பரிசுப் பொருட்கள் தானே! இப்போதே பூதத்தின் உதவியால் நான் அதனை வரவழைத்துத் தருகிறேன்" என்று கூறியபடி

விளக்கை தேய்த்தான். விளக்கில் இருந்து வெளிவந்த பூதம், "உசூர்! தங்களது தேவையை நிறைவேற்றவே நான் வந்து உள்ளேன். எதுவானாலும் கேளுங்கள் உடனே நிறைவேற்றித் தருகிறேன்" என்றது.

உடனே அலாவுதீன் பூதத்திடம் அனைத்தையும் கூறி சுல்தானுக்கு பரிசளிக்க விலை உயர்ந்த ரத்தினக் கற்களை கொண்டு வந்து தருமாறு வேண்டினான். அதன் படியே பூதமும் மிகப்பெரும் தங்கக் கிண்ணங்கள் பலவற்றில் ரத்தினக் கற்களை கொண்டு வந்து கொடுத்தது. அதனைக் கண்ட அலாவுதீனின் தாய் மிரண்டு போய் அலாவுதீனிடம்," மகனே, இத்தனை ரத்தினக் கற்களையும் நான் தனி ஒரு ஆளாக சபைக்கு எடுத்துச் செல்வது என்பது முடியாத காரியம். அது மட்டும் அல்ல, நான் போட்டு இருக்கும் உடுப்புக்கும் இந்த ரத்தினக் கற்களுக்கும் சம்மந்தமே இல்லாமல் உள்ளது. நிச்சயம் இந்த உடுப்பை அணிந்த படி நான் இந்த ரத்தினக் கற்களை எடுத்துக் கொண்டு சென்றால் பார்ப்பவர்கள் 'எங்கிருந்து இதனைத் திருடிக் கொண்டு வந்தாய்?' என்று தான் கேள்வி கேட்பார்கள்" என்று கூறினாள்.

உடனே அலாவுதீன் மீண்டும் அந்த பூதத்திடன், "கிண்ணம், கிண்ணமாக ரத்தினக் கற்களை கொடுத்த நீ. அதனை சுமந்து செல்ல பணிப் பெண்களையும் கொடு. அத்துடன் உடனே எனது தாய் அணிந்து கொள்ள கவுரவமான விலை உயர்ந்த ஆடைகளையும் கொண்டு வந்து கொடு" என்று கட்டளை பிறப்பித்தான். அதன் படியே அந்தப் பூதம் பத்து பணிப்பெண்களை கொடுத்தது. அவர்கள் அழகில் சிறந்து விளங்கினார்கள். மேலும், ஒரே நொடியில் அலாவுதீனின் தாயாரின் உடை ஒரு நாட்டின் மகாராணின் உடையைப் போல மாறியது. அதனைக் கண்டு அவள் வியந்து போனாள். பிறகு அலாவுதீன் அந்த பூதத்திற்கு நன்றி தெரிவித்து அதற்கு விடை கொடுத்து அனுப்பி வைத்தான். அத்துடன் தனது தாயையும் அரண்மனை தர்பாருக்கு நம்பிக்கை வார்த்தைகள் பல கூறி அனுப்பி வைத்தான்.

பிறகு கைகளில் ரத்தினங்கள் தாங்கிய தங்கக் கிண்ணங்களுடன் பணிப்பெண்கள் பின்தொடர அலாவுதீனின் தாயார் அரண்மனையை அடைந்தாள். அவளது விலை மதிக்க முடியாத ஆடையைக் கண்ட காவலர்கள் யாரோ உயர்குடி பிரபுக்களின் வீட்டில் இருந்து அவள் வந்திருப்பதாக நினைத்தனர். அப்படித் தான் அவளை நடத்தினார்கள். அதனால் அவளை அவர்கள் காக்கக் கூட வைக்க வில்லை. உடனே அரண்மனை தர்பாருக்கு வழி காட்டினார்கள். அவளும் எந்தவித

தடைகளும் இல்லாமல் அரண்மனை தர்பாரை அடைந்தாள். அங்கு தான் சுல்தான் வழக்குகளை விசாரித்துக் கொண்டும் உடனுக்குடன் தீர்ப்பளித்துக் கொண்டும் இருந்தார். சுல்தானின் பார்வை அலாவுதீனின் தாயாரின் மீது விழுந்தது. அத்துடன் உடன் வந்த பணிப் பெண்களையும் கண்டார். உடனே தனது முக்கிய அமைச்சரை அழைத்தார். அந்த அமைச்சரும் சுல்தானின் ஆணைக்கு இணங்கி ஓடோடி வந்தார். அந்த அமைச்சரிடம் அலாவுதீனின் தாயாரை சுட்டிக் காட்டிய சுல்தான்,"அதோ நிற்கும் அந்தப் பெண் உயர் குடியில் பிறந்தவள் போல இருக்கிறாள். அதனால் உடனே அவளை தாமதிக்காமல் அழைத்து வாருங்கள். அவள் என்னைப் பார்க்கத் தான் வந்துள்ளாள் போல. அவள் வந்த காரணத்தை அறிய ஏனோ எனது மனம் துடிக்கிறது" என்று கூறினார்.

அமைச்சர் உடனே மன்னரின் ஆணைப்படி அலாவுதீனின் தாயாரை சகல மரியாதைகளுடன் மன்னரின் முன்னாள் கொண்டு போய் நிறுத்தினார். அவளும் மன்னரை முறைப்படி வணங்கி நின்றாள்.

மன்னர் அவளிடம் மிகுந்த பரிவாகப் பேசினார். அத்துடன் அவள் தன்னைத் தேடி வந்த காரணத்தையும் கேட்டார்.

அப்போது அலாவுதீனின் தாயார், "சுல்தான், நான் வந்த காரியம் மிகவும் முக்கியமானது. ஆனால் அதனை நான் இந்தச் சபையில் எல்லோர் முன்னிலையிலும் கூற இயலாது. அத்துடன் நான் தங்களிடம் அதைப் பற்றி தனியாகப் பேச விரும்புகிறேன்" என்றாள்.

அப்போதே அவளுடைய தைரியத்தைப் பாராட்டிய மன்னர் தனது பரிவாரங்களை வெளியில் அனுப்பி விட்டு முக்கிய ராஜ விசுவாசிகளை மட்டும் உடன் வைத்துக் கொண்டார். பின்னர் அலாவுதீனின் தாயாரிடம் அவள் அங்கு வந்த காரணத்தைப் பற்றிக் கூறுமாறு கேட்டார்.

அப்போதும் கூட அலாவுதீனின் தாயார் சற்றே தயங்கினாள். பின்னர் ஓரளவு தைரியத்தை வர வழைத்தவளாக சுல்தானிடம், "மன்னா முதலில் என்னைத் தாங்கள் மன்னிக்க வேண்டும், நான் இப்போது சொல்லப்போகும் விஷயம் தங்களுக்கு அளவு கடந்த ஆத்திரத்தைக் கூட உண்டாக்கலாம். அதனால் தான் தங்களிடம் முன்பே மன்னிப்புக் கேட்கிறேன்" என்று பீடிகை போட்டாள்.

அதைக் கேட்ட சுல்தான்," நீ ஒன்றும் கவலைப்படாதே நான் உன்னை மன்னித்து விட்டேன். தவிர அப்படியே நீ சொல்லும் விஷயம் எனக்கு ஆத்திரத்தை ஏற்படுத்தினாலும் என்னால் உனக்கு எந்த விதத் தீங்கும் வராது. இது நான் உனக்குத் தரும் வாக்குறுதி. இப்போதாவது நீ இங்கு வந்த நோக்கத்தை எனக்குக் கூறு" என்றார்.

மன்னரே இவ்வாறு கூறிய பின்னர் அலாவுதீனின் தாயாரின் மனதினில் இருந்த பயம் நீங்கியது. அவள் மன்னரிடம் அனைத்து விஷயங்களையும் கூறி முடித்தாள். பின்னர் தான் மன்னருக்குக் கொண்டு வந்த பரிசுப் பொருட்களை பற்றிக் கூட அவள் எடுத்துரைத்தார். அவற்றை எல்லாம் பொறுமையாகக் கேட்ட மன்னர் பலமாக சபையே நடுங்கும் படியாக நகைத்தார். 'மன்னர் ஏன் அவ்வாறு நகைத்தார்?' என்று காரணம் புரியாமல் தவித்தாள் அலாவுதீனின் தாயார். பின்னர் அவள் தன்னுடன் வந்த பணிப் பெண்களை பார்க்க அவளது குறிப்பை அறிந்த அந்தப் பெண்கள். ஓடோடி வந்து தாங்கள் தங்கக் கிண்ணத்தில் கொண்டு வந்த பரிசுகளை எல்லாம் அப்படியே மன்னரின் முன்னாள் வைத்து அதில் மூடி இருந்த கைக் குட்டைகளை ஒருசேர அப்புறப்படுத்தினார்கள்.

அப்படி அப்புறப் படுத்தியது தான் தாமதம், அந்த மாளிகை எங்கும் ஒளி வெள்ளம் பாய்ந்தது. அதனால் அங்கு கூடி இருந்த அனைவரது கண்களும் கூசியது. அந்தத் தங்கக் கிண்ணத்தில் வைக்கப்பட்டு இருந்த ஒவ்வொரு ரத்தினக் கல்லும் ஒவ்வொரு விதமான ஒளியை வீசியது. அதனால் மந்திரிகள் மட்டும் அல்ல அரசர் கூட அங்கு திகைத்து நின்றார்.

பின்னர் மன்னர் தனது மந்திரிகளிடம், "இது போன்று அற்புதமாக ஒளி வீசும் ரத்தினக் கற்களை நான் இது நாள் வரையில் பார்த்ததே இல்லை. உண்மையில் இவை இந்த பூமியில் கண்டெடுக்கப்பட்ட ரத்தினக் கற்கள் தானா? இது போன்ற விலை உயர்ந்த ரத்தினக் கற்களின் மதிப்பை இங்கு இருக்கும் யாராவது கூற முடியுமா? முதலில் இவை அனைத்தையும் உங்களில் யாராவது பார்த்து உள்ளீர்களா?" என்று கேட்டார்.

"இல்லை அரசே இது போன்ற உயர் ரக நவ ரத்தினக் கற்களை நாங்கள் இது நாள் வரையில் கண்டதே இல்லை. அது மட்டும் அல்ல, இதன் மதிப்பை யாராலும் வரையறுத்துக் கூறவும் முடியாது. இன்னும் வெளிப்படையாக சொல்ல வேண்டும் என்றால், இந்த ஒவ்வொரு

கற்களுக்கும் இந்த நாட்டையே தரலாம்" என்றனர் மந்திரிகள்.

பெரும் மகிழ்ச்சி அடைந்த சுல்தான் தனது மனதினில் உள்ளதை வெளிப்படையாகவே அலாவுதீனின் தாயாரிடம் இவ்வாறு கூறத் தொடங்கினார்.

"இப்படிப் பட்ட அபூர்வ ஒளி சிந்தும் அற்புதக் கற்களை எனக்குப் பரிசாக வழங்கியவன் தான் எனது மகள் அல்-புதுருக்கு ஏற்ற மணமகன் ஆவான். மேலும் இது போன்ற அற்புதக் கற்களை எனக்குப் பரிசாகத் தந்திருப்பவன் உண்மையில் சர்வ வல்லமை உள்ளவனாகத் தான் இருப்பான் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை. என்னைப் பொருத்தவரையில் அவனை விடவும் எனது மகளே உண்மையில் பேறு பெற்றவள் ஆவாள்; இதில் சந்தேகமே வேண்டாம்" என்றார்.

இந்த வகையில் மன்னர் பேசவும் முக்கிய மந்திரி ஒருவரின் முகம் ஒரு மாதிரியாகி விட்டது. அவர் நேராக மன்னரிடம் வந்தார். அப்படி வந்தவர் மன்னரிடம்," மன்னா! என்னைத் தாங்கள் மன்னிக்கவும், முன்பு ஒரு முறை எனது மகனுக்குத் தங்களது மகளை மணம் முடித்துத் தருவதாக வாக்களித்தீர்கள். இன்னும் மூன்று மாதங்கள் பொறுத்துக் கொள்ளுங்கள்; எனது மகன் இந்த அற்புதமான ரத்தினக் கற்களை விட மேலான ரத்தினக் கற்களைத் தேடிப் பிடித்துத் தங்களது காலடியில் கொண்டு வந்து வைப்பான்" என்றார்.

அதைக் கேட்ட சுல்தான் "மூன்று மாதங்கள் என்ன? முப்பது மாதங்கள் ஆனாலும் இந்தக் கற்களைப் போன்ற நவ ரத்தினக் கற்களை கண்டு பிடிக்க முடியாது" என்று தனது மனதினுள் நினைத்து சற்றே புன்னகைத்தபடி அமைச்சரின் கோரிக்கையை ஏற்றார்.

அதன் பிறகு அலாவுதீனின் தாயாரிடம், "அம்மா, நான் சொன்னது, சொன்னது தான்; இதில் எந்த ஒரு மாற்றமும் இல்லை. எனது மகளுக்கு செய்ய வேண்டிய சீர் வரிசைகளை எல்லாம் முறைப்படி செய்து முடிக்க மூன்று மாதங்கள் ஆகும். ஆகவே மூன்று மாதங்கள் வரையில் தங்களது மகனைப் பொறுத்துக் கொள்ளச் சொல்லுங்கள்" என்று கட்டளை பிறப்பித்தார்.

"எப்படியோ அரசர் தனது மகனுக்குத் தமது மகளைத் திருமணம் செய்து வைக்க ஒப்புக் கொண்டார். இது போதும்!" என்ற சந்தோஷத்தில்

அலாவுதீனுடைய அம்மா அரசரிடம் இருந்து விடை பெற்றுச் சென்றாள். அத்துடன் வெற்றிக் களிப்பில் அவள் வீர நடை போட்டாள். அவள் வீட்டை அடைந்த மாத்திரத்தில் அவளுடன் அது வரையில் வந்த பணிப் பெண்கள் அனைவரும் மறைந்து போயினர். ஆனால், அவர்களால் மன்னருக்கு அளிக்கப்பட ரத்தினங்கள் மறையவில்லை. அவை மன்னரின் ஆணைப்படி அரச கஜானாவில் பத்திரமாக சேர்க்கப்பட்டது.

இது இப்படி இருக்க தாயின் மகிழ்ச்சியான முகத்தைப் பார்த்த மாத்திரத்திலேயே அலாவுதீனுக்கு அனைத்தும் புரிந்து விட்டது. தவிர அலாவுதீன் கேட்காமலேயே அவனது தாய் வந்ததும் வராததுமாக அனைத்து விஷயங்களையும் அவனிடம் கூறி முடித்தாள். அதே சமயத்தில், அரசருக்கும் முக்கிய மந்திரிக்கும் இடையில் ஏதோ, ஒரு ஒப்பந்தம் உள்ளது என்ற உண்மையையும் அவள் சொல்லத் தவறவில்லை. மேலும், மன்னர் அவளிடம் மூன்று மாதங்கள் பொறுத்துக் கொள்ளத் தான் வேண்டும் என்று கூறியதையும் கூட அவள் அலாவுதீனிடம் கூறி முடித்தாள்.

இப்படியாகத் தனது தாயார் சொன்னதைக் கேட்ட அலாவுதீன் பெரிதும் மகிழ்ந்தான். முக்கிய மந்திரியின் மகனுக்குத் தனது மகளை தருவதாக அரசர் வாக்குக் கொடுத்து உள்ளதால் ஒருவேளை தனது மகனுக்கு முக்கிய மந்திரியால் ஏதேனும் ஆபத்து நேர்ந்துவிடுமோ என்று அச்சம் கொண்டு அலாவுதீனிடம் அதனைப் பற்றிக் கூறினாள் அவனது தாய். எனினும், அலாவுதீன் அதனைப் பற்றி எல்லாம் சிறிதும் கவலைப் பட வில்லை. அவன் நினைப்பு எல்லாம் இளவரசியைப் பற்றியது மட்டும் தான். அத்துடன் இளவரசியை அடைய இன்னும் மூன்று மாதங்கள் காத்துக் கொண்டு இருக்க வேண்டுமே என்று அலாவுதீன் மிகவும் வருந்தினான்.

மூன்று மாதங்களில் இரண்டு மாதங்களைப் பொறுமையுடன் கழித்தான் அலாவுதீன். ஒருவழியாக மூன்றாம் மாதமும் பிறந்து விட்டது.

அப்படி இருக்கும் சமயத்தில் ஒரு நாள் கடைத் தெருவுக்குச் சென்ற அலாவுதீனின் தாயாரின் கண்களுக்கு வீதி எங்கும் மக்கள் அலங்காரம் செய்து கொண்டு இருக்கும் காட்சி தென்பட்டது. அவள் சென்று அங்கு கூடி இருந்த மக்களிடம் காரணம் கேட்டாள். அப்போது அங்கு கூடியிருந்தவர்களில் ஒரு பெரியவர்," அம்மா! ஊரே அறிந்த விஷயத்தை தாங்கள் அறியவில்லையா? இன்றைய தினம் மன்னர் மகளுக்கும்,

முக்கிய மந்திரியின் மகனுக்கும் திருமணம் நடக்கவிருக்கிறது" என்று கூறினார்.

அதனைக் கேட்ட அலாவுதீனின் தாயார் மிகவும் பதற்றம் அடைந்தாள். மிகுந்த சோகத்துடன் வீடு வந்து சேர்ந்தாள். வந்ததும் வராததுமாக அலாவுதீனிடம் விஷயத்தைக் கூறி வருந்தினாள். அதைக் கேட்ட அலாவுதீன் மிகவும் பதற்றம் அடைந்தான். பின்னர் அவன் நிதானத்திற்கு வந்தான். பிறகு தனது தாயிடம், "அம்மா நீ இதற்கெல்லாம் கவலை கொள்ளாதே! அவர்கள் இருவரது திருமணமும் நடைபெறட்டும் வாக்களித்துத் தவறிய நமது அரசருக்கு நான் சரியான பாடத்தை கற்றுத் தருகிறேன்" என்றான்.

அலாவுதீன் இவ்வாறு சொன்னாலும் அவனது தாய் மனதளவில் மிகுந்த வேதனை அடைந்தாள். எப்படியோ அரசரின் மனதை பாவி மந்திரி பேசிப் பேசி கரைத்து விட்டாரே என்று எண்ணி எண்ணி அழுதாள். பிறகு இரவு நேரம் வந்தது அலாவுதீனுக்கு உணவு படைத்தாள் அவனது தாய். அலாவுதீன் அவனது தாயே ஆச்சர்யப் படும் வகையில் பொறுமையாக உணவை உண்டான். அவன் முகத்தில் எந்த ஒரு பதற்றமும் இல்லை. உணவை நல்லபடியாக முடித்துக் கொண்டு நேராகத் தனது அறைக்குச் சென்றான். அரைக் கதவைத் திறந்தான் அற்புத விளக்கை எடுத்துத் தேய்த்தான். அதில் இருந்து உடனே வெளிப்பட்டது பூதம்.

அது அவ்வாறு வெளிப்பட்ட மாத்திரத்தில்,"உசூர் நான் தங்களுக்கு என்ன செய்ய வேண்டும்? ஆணையிடுங்கள் செய்து முடிக்கிறேன்" என்று வழக்கம் போலக் கேட்டு நின்றது அந்தப் பூதம். அலாவுதீன் அந்த பூதத்திடம்," நான் சொல்வதை சற்று நிதானமாகக் கேள். இந்த நாட்டின் சுல்தான் அவரது மகளை எனக்குத் திருமணம் செய்து தருவதாகக் கூறினார். அதற்கு மூன்று மாதங்கள் அவகாசமும் கேட்டார். ஆனால் மூன்று மாதங்கள் கடந்து விட்ட நிலையில் அவர் தனது வாக்கை காப்பாற்ற தவறி விட்டார். இன்றைய தினம் இரவு மந்திரி மகனுக்கும், மன்னர் மகளுக்கும் திருமணம். அவர்கள் திருமணம் முடிந்து பள்ளியறைக்குள் சென்றதும் அவர்கள் இருவரையும் தூக்கிக் கொண்டு வந்து விட வேண்டும்" என்று கூறினான்.

"சரி அப்படியே செய்கிறேன்" என்று கூறி விட்டு விடை பெற்றுச் சென்றது பூதம்.

அப்படிச் சென்ற பூதம் அரண்மனையில் திருமணம் முடியும் வரையில் காத்துக் கொண்டு இருந்தது. அரச குமாரிக்கும், மந்திரி குமாரனுக்கும் திருமணம் நல்ல படியாக முடிந்தது. அத்துடன் அரண்மனையில் நடக்க வேண்டிய சடங்குகள் அனைத்தும் நல்ல முறையில் முடிவடைந்தது. மண மகளை ஆடம்பரமாக மணமகனின் அறைக்கு அழைத்து வந்தனர். மணமகன் தனது அறையில் கனவுகளுடன் காத்திருந்தான். மணமகளின் தோழிகள் அவளை அந்த அறையில் விட்டு விட்டுச் சென்றனர். அப்போது மணமகன் மணமகளை நெருங்குவதற்கு முன்னமே பூதம் அவர்கள் இருவரையும் மயங்கச் செய்து தூக்கிக் கொண்டு அலாவுதீனின் வீட்டிற்கு கொண்டு வந்து விட்டது. அத்துடன் அங்கு அலாவுதீனின் அடுத்த ஆணைக்காகக் காத்துக் கொண்டும் இருந்தது. அலாவுதீனும் அவ்விடத்துக்கு வந்து சேர்ந்தான்.

அவனிடம் பூதம், "உசூர்! அடுத்து என்ன செய்ய வேண்டும்? உத்தரவுவிடுங்கள்" என்றது.

"மணமகனாக அலங்கரிக்கப் பட்டு இருக்கும் இவனைக் கொண்டு போய் கழிவறைத் தொட்டியில் போடு, அரசகுமாரியை எனது அறைக்கு அழைத்துச் செல்" என்று பூதத்திற்கு ஆணை பிறப்பித்தான் அலாவுதீன். அந்த பூதமும் அதன் படியே செய்தது.

அரண்மனையில் சொகுசு மன்றத்தில் படுத்து இருக்க வேண்டியவள் சாதாரணக் கட்டிலில் படுத்து இருந்தாள். அலாவுதீன் அவள் அருகில் சென்று, "இளவரசி நீ பயந்து விடாதே, மூன்று மாதங்களுக்கு முன்னர் உன்னை எனக்குத் திருமணம் செய்து தருவதாக எனது அன்னையிடம் வாக்குறுதி கொடுத்தார் உனது தந்தை; ஆனால் இப்போதோ அந்த வாக்கை அவர் காப்பாற்றத் தவறி விட்டார். வேண்டும் என்றால் உனது தந்தையிடமே நீ சென்று கேள். நான் சொன்னது உண்மையா? பொய்யா? என்று. மேலும் அதனால் தான் நான் உன் விஷயத்தில் இவ்விதம் செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டது. அதற்காக நான் வருந்துகிறேன். எனினும், நாளை காலை வரையில் நீ இந்த அறைக்குள் நிம்மதியாகத் தூங்கலாம். உனக்கு எந்த ஒரு ஆபத்தும் வராது. விடிவதற்குள் உன்னை பத்திரமாக உனது மாளிகையில் கொண்டு போய் சேர்கிறேன்" என்று கூறி விட்டுச் சென்று விட்டான்.

பின்னர் அடுத்த நாள் காலையில் பொழுது விடிவதற்கு சற்று முன்னாள் விளக்கை உரசி பூதத்தை வர வழைத்தான் அலாவுதீன். பூதமும்

அலாவுதீனின் முன்னாள் தோன்றி அவனது ஆணையை வேண்டி நின்றது. அப்போது பூதத்திடம் அலாவுதீன், "இந்த இளவரசியையும் அவளை மணந்தவனையும் அரண்மனைக்குக் கொண்டு போய் சேர்த்து விடு. அதாவது எந்த அறையில் இவர்கள் இருவரையும் எடுத்து வந்தாயோ அங்கேயே இவர்களை கொண்டு போய் சேர்த்து விடு" என்று கூறவும். பூதமும் அப்படியே செய்வதாகக் கூறி அரச குமாரியையும், மந்திரி குமாரனையும் எந்த இடத்தில் இருந்து தூக்கி வந்ததோ அதே இடத்திலேயே கொண்டு போய் சேர்த்தது. அரச குமாரிக்கு நடந்தது அனைத்துமே ஆச்சர்யமாக இருந்தது. மந்திரி குமாரன் இரவு முழுவதும் குளிரில் நடுங்கிய படி பேசும் திறன் அற்றவனாக முடங்கிக் கிடந்தான்.

மறுபுறம் அரசனுக்கும், அரசிக்கும் இரவு நடந்தது எதுவுமே தெரியாது. அவர்கள் இருவரும் தங்கள் மகள் சந்தோஷமாக இரவைக் கழித்து இருப்பாள் என்று நினைத்தபடி மகளைக் காண வந்தனர். ஆனால் இளவரசியோ தனது தாயைக் கட்டிப் பிடித்து கதறி அழுதாள். ஆனால், அந்த நிலையில் கூட அவள் ஏனோ அலாவுதீனைப் பற்றி எதையும் தனது தாய், தந்தையிடம் கூற வில்லை. மாறாக தங்கள் மஞ்சத்தை யாரோ எங்கோ கவர்ந்து சென்றதாகக் கூறினாள். அத்துடன் இரவு முழுவதும் எங்கோ தனியான அறையில் தூங்கியதாகவும். தன்னைக் காக்க வேண்டிய தனது கணவனான மந்திரி குமாரன் தன்னைக் காக்கத் தவறியதாகவும் கூறினாள். அதைக் கேட்ட அரசர் உடனே கோபம் கொண்டு மந்திரி குமாரனை அழைத்து விசாரித்தார். அவனோ தனக்கு அதைப் பற்றி எல்லாம் எதுவும் தெரியாது. ஒரு வேளை இளவரசி கனவு கண்டு இருக்கலாம் என்றபடி கூறி அனைத்தையும் மறைத்து விட்டான்.

அதைக் கேட்ட சுல்தானும் அவரது மனைவியும் உண்மையில் தங்களது மகள் ஏதோ கனவு கண்டு தான் உளறியிறுக்கிறாள் என்று எண்ணிக் கொண்டு அமைதி அடைந்தனர். இதனால் அன்றைய தினமும் திருமணக் கேளிக்கைகள் நடந்தேறியது. ஏனோ மந்திரி குமாரன் குற்ற உணர்வில் அரச குமாரியின் முகத்தைக் கூட பார்க்க நாணியவனாய்த் தனது மாளிகைக்குச் சென்று விட்டான்.

அன்றைய தினமும் இரவு நேரம் நெருங்க நெருங்க இளவரசியின் மனதினில் பயம் அதிகரித்து விட்டது. நேற்றைய இரவு போலவே ஆகிவிடுமோ என்று அவள் நினைத்து, நினைத்து பயந்தாள். மந்திரி குமாரனும் இளவரசியின் நிலையில் தான் இருந்தான். எனினும் துணிச்சலை வர வழைத்துக் கொண்டு தனது படுக்கை அறைக்குள்

நுழைந்தான். அங்கு அப்போது அவனுக்காக இளவரசியும் காத்துக் கொண்டு இருந்தாள்.

அந்த நேரத்தில் தனது வீட்டில் இருந்த அலாவுதீன் அதிசய விளக்கை எடுத்துத் தேய்த்துப் பூதத்தை வரவழைத்து முந்திய இரவு போலவே இருவரையும் தூக்கி வரக் கூறினான். அதன் படியே பூதமும் செய்தது. அரச குமாரி முந்திய நாள் இருந்த அதே அறையில் தங்க வைக்கப்பட்டாள். மந்திரி குமாரனை ஒரு தண்ணீர்த் தொட்டியின் பக்கத்தில் கிடத்தியது பூதம். அன்றைய தினம் இரவு அலாவுதீன் இளவரசியைக் காணச் செல்லவில்லை. அடுத்த நாள் காலை விடிவதற்குள் அலாவுதீனின் ஆணைப்படி இளவரசியையும், மந்திரி குமாரனையும் பழையபடி அரண்மனையின் அதே அறையில் கொண்டு போய் கிடத்தியது அந்தப் பூதம்.

இளவரசி அரண்மனை மஞ்சத்தில் கண்ணீர் வடித்த படி அமர்ந்து இருந்தாள். பயத்தின் உச்சகட்டத்தில் இருந்த மந்திரி குமாரன் தள்ளாடியபடி நடந்து சென்று தனது மாளிகையை அடைந்தான். அன்றைய தினமும் விடி காலையில் இளவரசியின் தாயார் அவளது மகளைக் காண அறைக்குச் சென்றாள். மணமகன் அங்கு காணப்படாததை நினைத்து ஆச்சர்யம் அடைந்தாள். தனது மகளிடம் நடந்ததைக் கேட்டு விசாரித்தாள். தாயிடம் அனைத்தையும் கூறி அழுதாள் இளவரசி. அந்த இரண்டு தினங்களில் இளவரசி முழுவதுமாக மெலிந்து போய் விட்டாள். அதனைக் கண்ட அரசிக்கே மகளின் நிலை பரிதாபமாக இருந்தது.

தனது அன்பு மகளின் துயரத்தைக் கண்ட அரசி ஓடிச் சென்று விஷயத்தை அரசரிடம் தெரிவித்தாள். அதைக் கேட்ட அரசர் திகைத்தார். அவருக்கு எதுவுமே புரியவில்லை, உடனே தனது சம்மந்தியை (அதாவது முக்கிய மந்திரியை) அழைத்து வருமாறு சேவகர்களிடம் கூறினார்.

ஆனால் இதற்கு முன்னமே மந்திரி குமாரன் தனது தந்தையிடம், "அப்பா, நான் இனி இளவரசியுடன் வாழப் போவதில்லை, இந்தத் திருமணத்தில் இருந்து எனக்கு விலக்கு அளித்து விடுமாறு சுல்தானிடம் கூறுங்கள். நான் இனி அங்கு செல்லவே போவதில்லை; இரண்டு தினங்களில் நான் பட்ட பாடு போதும்" என்று தனது தந்தையிடம் கூறிக் கண்ணீர் விட்டு அழுதான்.

அப்போது மன்னரிடம் இருந்து வந்த சேவகர்கள் மந்திரியை மன்னர் பார்ப்பதாக அழைத்தனர். அதன் படியே மந்திரி தனது குமாரனுடன் அரசரைக் காணப் புறப்பட்டுச் சென்றார். அப்போது மன்னர் தனது மகளின் நிலையைப் பற்றி மந்திரியிடம் கேட்பதற்கு முன்னமே மந்திரியார் முந்திக் கொண்டார். அவர் மன்னரிடம்," இந்தத் திருமணத்தில் இருந்து தயவு செய்து எனது மகனுக்கு விலக்களிக்க வேண்டும். அப்படித் தாங்கள் விலக்கு அளிக்காவிட்டால் எனது மகன் இறந்து போவதாகக் கூறுகிறான்" என்றார்.

அதைக் கேட்ட அரசருக்கு என்ன சொல்வது என்றே தெரியவில்லை அவர் மிகவும் திகைத்து நின்றார். மந்திரிகுமாரனிடம் பேசிப் பார்த்தார். ஆனால் பிரயோஜனம் இல்லை "இளவரசியுடன் வாழ்வது தற்கொலைக்கு சமானம் அதற்கு நான் சாகவே சாகலாம்" என்றான் மந்திரி குமாரன். "தனது மகளின் வாழ்க்கை இப்படியா வீணாக வேண்டும்?" என்று வருந்தினார் சுல்தான். எனினும் தனது மகளுடன் வாழப் பிடிக்காத மண மகனை எப்படி வாழ வைப்பது. அதுவும் அவன் தற்கொலை செய்து கொள்வதாகக் கூறும் போது! அதனால் அரசர் வெகு நேரம் யோசித்து ஒரு முடிவுக்கு வந்தார். மகளிடமும் இதைப் பற்றிப் பேசிப் பார்த்தார். சுல்தானின் மகளும் திருமண முறிவுக்கு சந்தோஷமாக சம்மதம் தெரிவித்தாள். அதன் விளைவாக திருமணக் கொண்டாட்டங்கள் அனைத்தும் உடனுக்குடன் நிறுத்தப்பட்டது. இளவரசிக்கும், மந்திரிகுமாரனுக்கும் பெரியோர்கள் முன்னிலையில் மண முறிவு அளிக்கப்பட்டது. இது அலாவுதீனின் காதுகளை வந்து அடைந்த மாத்திரத்தில் அவன் ஆனந்தத்தில் துள்ளிக் குதித்தான்.

அன்றைய தினம் இரவு இளவரசி நன்றாக உறங்கினாள். காலையில் உற்சாகத்துடன் விழித்தாள். எந்த ஒரு பூதமும் அவளை துன்புறுத்த வில்லை. இளவரசியின் முகத்தில் இருந்த தெளிவைக் கண்ட அரசியும், அரசரும் நிம்மதி அடைந்தனர். தங்கள் மகளின் திருமணம் முறிந்து விட்டதே என்று வருந்திய அரசரும் அவரது மனைவியும் மீண்டும் கொஞ்சம் கொஞ்சமாக பழைய நிலைக்கு வந்தனர். அதனால் சகஜமான சூழ்நிலை திரும்பியது. எல்லோரும் அவர் அவர் வேலையைப் பார்க்கச் சென்றனர். மந்திரியின் மகனும் கூட, 'நல்லவேளையாக இளவரசியிடம் இருந்து தப்பினோம். அவளை மணந்து இரண்டு நாட்களாக நிம்மதி இல்லாமல் இருந்தோம். இப்போது தப்பித்து விட்டோம்' என்று மனதில் நினைத்து மகிழ்ந்தான். ஆனால் முக்கிய மந்திரிக்கு இந்தத் திருமண முறிவு மிகப் பெரும் ஏமாற்றத்தை கொடுத்தது.

அன்றைய தினம் மன்னர் அலாவுதீனின் தாயாருக்கு அளித்த அந்த மூன்று மாதத் தவணை முடிவுக்கு வந்தது. அலாவுதீன் தனது தாயை தேற்றி மன்னரின் அரண்மனைக்கு அவளை மீண்டும் பெண் கேட்டு அனுப்பி வைத்தான். அன்றைய தினம் எந்தப் பரிசுப் பொருட்களையும் உடன் எடுத்துச் செல்லாமல் சாதாரண உடையுடன் அலாவுதீனின் தாயார் அரண்மனையை அடைந்தாள். மன்னரை வெகு நேரம் காத்திருந்து பிறகு சந்தித்தாள்.

அலாவுதீனின் தாயாரைப் பார்த்த சுல்தானுக்கு அவர் முன்பு அவர்களுக்கு அளித்த வாக்குறுதி நினைவுக்கு வந்தது. மறுபுறம் சுல்தானைப் பார்த்த அலாவுதீனின் தாய் அவரை மிகவும் பணிந்து வணங்கினாள். அவளது வணக்கத்தை ஏற்றுக் கொண்டார் அரசர். பின்னர் மன்னரின் அனுமதியுடன் தான் வந்த நோக்கத்தை அரசரிடம் தெரியப் படுத்தினாள். அத்துடன் அரசர் மறந்து போனதைப் போல இருந்த வாக்கையும் கூட அவருக்கு நினைவு படுத்தினாள். ஆனால், உண்மையில் மன்னர் எதையுமே மறக்கவில்லை. சென்ற முறை உயர்க் குடிப் பெண் போல வந்திருந்த அலாவுதீனின் தாயார் இந்த முறை சாதாரண உடுப்பை அணிந்த படி வந்திருந்தாள். அதனை கண்ட அரசர் "போயும், போயும் இவளுடனா நான் சம்மந்தம் வைத்துக் கொள்ள வேண்டும். இந்த சம்மந்தம் நடக்கக் கூடாதே! ஏனெனில் இவளைப் பார்க்கவே ஏழ்மையாக இருப்பதைப் போலத் தெரிகிறது. இவளோ மூன்று மாதத்திற்கு முன்னர் நான் சொன்னதை மறக்காமல் நினைவில் வைத்துக் கொண்டு வந்து நிற்கிறாள். இவளை ஏதாவது கூறி நாம் தவிர்க்க வேண்டுமே?" என்று சிந்தித்த அரசர் அலாவுதீனின் தாயை சற்று நேரம் வெளியில் நிற்கச் சொல்லிவிட்டுத் தனது முக்கிய மந்திரியை அழைத்துப் பேசினார். அவரிடம் தனது எண்ணத்தை வெளிப்படுத்தினார். மந்திரியோ தனது மகனுக்குக் கிடைக்காத பேறு இந்த மூதாட்டியின் மகனுக்கும் கிடைக்க விடக் கூடாது என்ற எண்ணம் கொண்டு இருந்தார். அவர் மன்னரிடம்," அரசே! தாங்கள் நான் சொல்வதைப் போலச் சொல்லுங்கள். அதன் படி நாற்பது அழகிய பொற் கிண்ணங்களில் நவரத்தினங்களை ஏந்தி நாற்பது அழகிகள் வர வேண்டும். அவர்களைத் தொடர்ந்து நாற்பது கருப்பு நிற அடிமைப் பெண்கள் வர வேண்டும். இவ்விதம் வருவதற்கு இவள் மகன் தயார் என்றால் நமது இளவரசியைத் திருமணம் செய்து கொடுக்கலாம். உண்மையில் இது இயலாத காரியம் என்பதால் தான் நான் இப்படிக் கூறுகிறேன். எனவே நிச்சயம் அந்த ஏழைப் பெண்ணால் இது முடியாது. அதனால் தாங்கள் தைரியமாகக் கூறுங்கள்" என்றார்.

அரசருக்கும் தனது முக்கிய மந்திரியின் ஆலோசனை சரி என்று தான் பட்டது. இதைப் போல செய்ய பேரரசன் ஒருவனைத் தவிர யாராலும் முடியாது என்று சிந்தித்தபடி அலாவுதீனின் தாயாரை அழைத்து அவளிடம் அந்த நிபந்தனையைக் கூறினார்.

அதைக் கேட்ட அலாவுதீனின் தாயார், "அரசே! தாங்கள் சொன்னபடியே நான் செய்கிறேன். ஆனால், அப்படி நான் செய்து விட்டால், தாங்கள் கண்டிப்பாகத் தங்கள் மகளைத் தருவீர்கள் தானே? இதில் எந்த மாற்றமும் இல்லையே? சொன்ன சொல்லைக் காப்பாற்றுவீர்கள் தானே!" என்று கேட்டாள்.

அலாவுதீனின் தாயார் சொன்ன இந்த வார்த்தைகளைக் கேட்ட அரசர், "நான் என்றுமே சொன்ன சொல்லைத் தவறியது இல்லை. நான் சொன்னபடி நாற்பது அழகிய பொற் கிண்ணங்களில் நவரத்தினங்களை ஏந்தி நாற்பது அழகிகள் வர வேண்டும். அவர்களைத் தொடர்ந்து நாற்பது கருப்பு நிற அடிமைப் பெண்கள் வர வேண்டும். இவ்விதம் உனது மகனால் செய்ய முடிந்தால் நான் உடனே எனது மகளை அவனுக்குத் திருமணம் செய்து வைப்பேன்" என்றார்.

விடை பெற்ற அலாவுதீனின் தாயார் சோர்வு கொண்ட முகத்துடன் தனது வீட்டை அடைந்தாள். அதனால் அலாவுதீன் சற்றே கலவரம் அடைந்தவனாகத் தனது தாயாரிடம் நடந்ததை விசாரித்தான். அவனது தாயாரும் அரசவையில் நடந்த அனைத்து விஷயங்களையும் கூறி முடித்தாள். அவை அனைத்தையும் பொறுமையாகக் கேட்ட அலாவுதீன் தனது தாயாருக்கு ஆறுதல் அளித்தான். பிறகு தாயும், மகனும் உணவு உண்டனர். உண்ட களைப்பு தொண்டனுக்கும் உண்டு அல்லவா? அலாவுதீனின் தாயார் மட்டும் இதில் விதி விலக்கா என்ன? சாப்பிட்டு முடித்த அவனது தாயார் சிறிது நேரம் படுக்கை அறையில் கண் அசந்தாள்.

இந்த வேளையை பயன்படுத்திக் கொண்ட அலாவுதீன் நேராகச் சென்று தான் பத்திரமாக மறைத்து வைத்து இருந்த விளக்கை எடுத்தான். அதனை தேய்த்து பூதத்தை வரவழைத்தான். அந்தப் பூதமும் வந்து அலாவுதீனின் முன்னாள் நின்று," உசூர்! தங்கள் சித்தம் எதுவானாலும் நான் அதனை நிறைவேற்றித் தரத் தயாராக இருக்கிறேன். சொல்லுங்கள் தங்களுக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டது.

அதைக் கேட்ட அலாவுதீன் பூதத்திடன் இவ்வாறு தனது கோரிக்கையை சொல்லத் தொடங்கினான்.

"முன்பு நீ தந்த ரத்தினங்களை விட உயர்ந்த ரத்தினங்கள் நிரப்பப்பட்ட தூய பொன்னாலான நாற்பது பெரிய கிண்ணங்கள் வேண்டும்; அவைகளைத் தலையில் சுமந்து செல்வதற்கு நாற்பது வெள்ளை நிற அடிமைப் பெண்கள் நல்ல அழகிகளாக இருக்க வேண்டும். அந்த அழகிகளுக்குப் பணிவிடை செய்ய நாற்பது கருப்பு நிற அடிமைப் பெண்கள் வர வேண்டும்; இவற்றை எல்லாம் நீ உடனே கொண்டு வர வேண்டும்" என்று அலாவுதீன் கூறவும் பூதம் உடனடியாக அலாவுதீன் கேட்ட அனைத்தையும் கொடுத்தது. உடனே பூதத்திற்கு விடை கொடுத்து அனுப்பி வைத்தான் அலாவுதீன்.

அலாவுதீனின் தாயார் கண் விழித்த மாத்திரத்தில் அலாவுதீன் அழகிய ஆடைகளை தனது தாயாருக்கு வழங்கினான். அத்துடன் மன்னர் கேட்டதை தான் தயார் செய்து விட்டதாகக் கூறி உடனே அரண்மனைக்குச் சென்று மன்னரிடம் அவற்றை அளித்து விட்டு," அலாவுதீனால், இதை மட்டும் அல்ல, இதற்கு மேலாகவும் எதையும் செய்ய முடியும்" என்று கூறி விட்டு வருமாறு வேண்டினான்.

அலாவுதீனின் தாயாரும் விலை ஏறப்பட்ட நவ ரத்தினங்களை எடுத்து வந்த படி அடிமைப் பெண்கள் தொடர அரண்மனையை அடைந்தாள். ஏற்கனவே இரு முறை அரண்மனைக்கு வந்து இருந்ததால் பரிட்சயம் அடைந்த காவலர்கள் அலாவுதீனின் தாயாரை உள்ளே அனுமதித்தனர். நேராகச் சென்று மீண்டும் அரசருக்கு நவ ரத்தினங்களை பரிசு அளித்தாள். அலாவுதீனின் தாயாருடன் வந்த அழகிகளைப் பார்த்த அரசர் பிரமித்துப் போனார். அத்துடன் மன்னர் கேட்ட அனைத்தையும் வெறும் மூன்று மணிநேரத்திற்குள் அலாவுதீனின் தாயார் ஏற்பாடு செய்ததை நினைத்து சுல்தான் வியந்து போனார். அவருக்கு நடப்பதெல்லாம் கனவா? இல்லை நினைவா? என்றே தெரியவில்லை. ஆச்சர்யத்தின் எல்லையைக் கடந்து கொண்டு இருந்தார். பொறமைக் கார மந்திரியோ மனதினில் புகைந்து கொண்டார்.

சற்று நேரம் ஆழ்ந்து யோசித்த சுல்தான் மனதினில் அலாவுதீன் போன்றவன் தனக்கு மருமகனாக வந்தால் அதனால் தனக்குத் தான் பெருமை என்று யோசித்து முடிவு எடுத்தார். அவனே தனது மகளை மணம் முடிக்கத் தகுதி உடையவன் என்று தன்னை அறியாமல் வாய்

விட்டே அவையில் கூறினார். இதனைத் தனது காதால் கேட்ட முக்கிய மந்திரி மீண்டும் இந்தத் திருமணத்தை எவ்வாறு நடக்க விடாமல் தடுப்பது என்று மனதிற்குள் யோசித்தார். ஆனால் மன்னரோ அலாவுதீனுக்கு தனது மகளை மணம் முடித்து வைக்கத் தான் முழு மனதுடன் சம்மதம் தெரிவிப்பதாக அலாவுதீனின் தாயாரிடம் கூறினார். அத்துடன் அலாவுதீனை உடனே அரண்மனைக்கு அழைத்து வருமாறு வேண்டினார். மேலும் தனது சேவகர்களை அழைத்து அலாவுதீன்-பதர் அல் புதுரின் திருமணத்துக்கான அனைத்து ஏற்பாடுகளையும் செய்யுமாறு கூறினார்.

## அலாவுதீன் இளவரசியைத் திருமணம் செய்து கொள்ளுதல்

அலாவுதீனால் அனுப்பப்பட்ட நவ இரத்தினங்களின் அழகைக் கண்ட இளவரசி பிரமித்துப் போனாள். தனக்கு ஊழியம் செய்வதற்காக வந்திருந்த அழகிய பெண்களைப் பார்த்து அகம் மகிழ்ந்தாள். தனது அருமை மகளின் முகத்தில் அதுவரையில் காணாத மகிழ்ச்சியைக் கண்ட அவளது பெற்றோர்கள் மிகுந்த ஆச்சர்யம் அடைந்தார்கள். அவர்களும் அதனால் மகிழ்ந்து களி கூறினார்கள். சுல்தான் மனதினில் ஆரம்பத்திலேயே தனது மகளை அலாவுதீனுக்கே மணம் முடித்து வைத்து இருந்திருக்கலாம் என்ற அந்த எண்ணமும் அப்போது தோன்றி மறைந்தது.

இதற்கிடையே தனது வீட்டை அடைந்த அலாவுதீனின் தாயார் விஷயத்தை அலாவுதீனிடம் கூறி மகிழ்ந்தாள். அதைக் கேட்ட அலாவுதீன் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தான். தனது ஆசைப்படி எல்லாமே தனது வாழ்வில் நடந்து கொண்டு இருப்பதை நினைத்து அல்லாவை பிரார்த்தனை செய்தான். பிறகு அரசவைக்கு செல்லத் தீர்மானித்தான். ஆனால், மன்னரே ஆச்சர்யப்படும் வகையில் தான் மன்னரை சந்திக்க வேண்டுமே என்று யோசித்தவனாய் முதல் வேலையாக விளக்கை தேய்த்து பூதத்தை வர வழைத்தான். பூதமும்,"சொல்லுங்கள் உசூர். அடியேன் கணப் பொழுதில் செய்து முடிக்கிறேன்" என்றபடி வந்து நின்றது.

உடனே அலாவுதீன் பூதத்திடம், "அன்பு பூதமே! எந்த மன்னரும் இதுவரையில் அணியாத சிறந்த உடை ஒன்று வேண்டும். பின்னர் நான் குளிப்பதற்கு ஒரு நல்ல ஹம்மாவிற்கு அழைத்துச் செல்ல வேண்டும். அத்துடன் நான் குளிக்கும் வரையில் அவ்விடத்திலே இருந்து எனக்கு நீ உதவ வேண்டும். பின்னர் குளித்து முடித்ததும் பத்திரமாக என்னைக் கொண்டு வந்து வீட்டில் விட்டு விட வேண்டும். இதுவே இப்போதைக்கு உனக்கான எனது கட்டளை" என்று கூறி முடித்தான்.

பூதமும் உடனுக்குடன் அலாவுதீனின் மேற்கண்ட கட்டளையை நிறைவேற்றியது. அதன் படி அலாவுதீனை ஒரு நல்ல ஹம்மாவிற்கு அழைத்துச் சென்றது. தனது உருவத்தை சாதாரண மனிதன் போல மாற்றிக் கொண்டு அலாவுதீனுக்கு உதவி செய்தது. பிறகு அலாவுதீன்

குளித்து முடித்த மாத்திரத்தில் அவனை மீண்டும் கொண்டு வந்து வீட்டில் விட்டது.

இப்படியாக அலாவுதீனின் முதல் கட்டளையை நிறைவேற்றிய அந்தப் பூதம் அலாவுதீனிடம் பணிந்த படி, "பிரபு தங்களுக்கு வேறு ஏதேனும் வேண்டுமா?" என்று கேட்டது.

"ஆமாம் வேண்டும். உடனுக்குடன் நாற்பத்தெட்டு வீரர்களைக் கொண்டு வர வேண்டும். அவர்கள் அனைவரும் ஒரே விதமான சீருடையை அணிந்து இருக்க வேண்டும். அவர்கள் அத்தனை பேரிடமும் போருக்கு உரிய ஆயுதங்கள் இருக்க வேண்டும். மேலும், அவர்கள் அத்தனை பேரும் குதிரைகளில் தான் வர வேண்டும். அந்தக் குதிரைகள் கூட எந்த மன்னரிடம் இல்லாத பலமான குதிரைகளாக இருக்க வேண்டும். அத்துடன் அவர்களுக்கு நடுவில் நான் ராஜ குமாரன் போலச் செல்ல ஏதுவாக எனக்கு ஒரு தனி குதிரை வேண்டும். மேலும், நான் ஏறிச் செல்லும் அந்தக் குதிரையின் இருக்கையும் பிறவும் பொன்னாலும் நவரத்தினகள் போன்றவைகளாலும் பொதிந்து இருக்க வேண்டும். அத்துடன் எனக்கு நாற்பத்தி எட்டாயிரம் பொற்காசுகளும் வேண்டும். ஆயிரம் பொற்காசை ஒருவர் வைத்துக் கொண்டு போவோர் வருவோருக்குக் கொடுக்க வேண்டும் என்பதால் நாற்பத்தெட்டு வெள்ளை நிற அடிமைகளும் வேண்டும். மேலும் எனது தாயாருக்கு உடுத்துவதற்கு மிகவும் வேலைப்பாடு உடைய ஆடைகள் வேண்டும். அத்துடன் எனது அம்மாவுடன் செல்வதற்கு பன்னிரண்டு அழகிகள் வேண்டும். அவர்கள் ஒவ்வொருவரிடமும் தங்கத்தாலான தட்டில் கற்கண்டு, மற்றும் பழ வகைகள் இருக்க வேண்டும்" இப்படியாக ஒரு பட்டியலையே தயார் செய்து பூதத்திடம் கூறி முடித்தான் அலாவுதீன். அலாவுதீனின் ஆணைப்படி அந்த பூதம் கணப் பொழுதில் எல்லாவற்றையும் தயார் செய்து அவனுக்காக அளித்தது.

அலாவுதீன் தனக்காக ஏற்பாடு செய்யப்பட்டு இருந்த அந்த அழகிய குதிரையின் மீது ஏறிக் கொண்டான் இவ்விதமாக ஊர்வலம் புறப்பட்டுப் போனது. அவனுக்கு முன்னாலும் பின்னாலும் குதிரைகளில் வீரர்கள் அமர்ந்து இருந்தனர். மறுபுறம், பொற்காசுகளை வாரி வாரி இறைப்பவர்கள் அலாவுதீனுக்கு முன்னால் சென்று கொண்டு இருந்தார்கள். அப்போது அலாவுதீனின் ஈகையை அனைவரும் கண்டு பாராட்டினார்கள். அலாவுதீனை வாழ்த்தவும் செய்தார்கள். அலாவுதீன் அரண்மனையை நோக்கித் தனது பரிவாரங்களுடம் வந்து கொண்டு

இருப்பதை அறிந்தார் மன்னர். அதைக் கேட்ட மாத்திரத்தில் அவரே சென்று அலாவுதீனை வரவேற்க அரண்மனை வாயிலுக்கு வந்து நின்றார்.

அரண்மனை வாயிலை அடைந்த அலாவுதீன் குதிரையை விட்டு இறங்குவதற்கு உதவியாக இரண்டு பக்கங்களிலும் இருவர் நின்றவண்ணம் கடிவாளங்களைப் பற்றிப் பிடித்துக் கொண்டனர். சிலர் அவனுக்குக் கைலாகு கொடுத்து இறங்குவதற்கு உதவினர். இவ்விதம் அவன் இறங்கவும் அவனை அங்கிருந்து அரசரிடம் அழைத்துச் சென்றனர்.

சுல்தான் சகல மரியாதையுடன் அலாவுதீனை அழைத்துச் சென்றார். ராஜ உடையில் இருந்த அலாவுதீனைக் கண்டு மெய் சிலிர்த்தார். அலாவுதீனுடன் அவனது தாயாரும் வந்திருப்பதை அறிந்த சுல்தான் அவர்களையும் சகல மரியாதைகளுடன் அரண்மனைக்கு அழைத்துச் சென்றார். அனைவரும் அங்கு ஆனந்தமாகப் பேசி மகிழ்ந்தனர். அலாவுதீன் அனைவரிடமும் பணிவன்புடன் நடந்து கொண்டான்.

பின்னர் அலாவுதீனுக்கு அரண்மனையில் அற்புதமான உணவு வகைகளை பரிமாறினார் சுல்தான். இந்த உலகத்தில் இருந்த அனைத்து வகையான உணவுப் பண்டங்களையும் சுல்தான் உணவு மேஜையில் தயாராக முன்னமே வைக்கச் சொல்லி இருந்தார். அதனை அலாவுதீன் சந்தோஷமாக உண்டு களித்தான். அப்போது முக்கிய மந்திரிகளும், அரசாங்க அதிகாரிகளும் உடன் இருந்தனர்.

இது ஒரு புறம் இருக்க உணவு உட்கொள்ளும் போதே சுல்தான் அலாவுதீனிடம் பேச்சுக் கொடுத்தார். சுல்தான் கேட்ட அனைத்துக் கேள்விகளுக்கும் அலாவுதீன் மிகச் சுருக்கமாகவும் இனிமையாகவும் பதில் அளித்தான். இப்படியாக திருமண விருந்து அனைவரும் சந்தோஷப் படும் விதமாக இருந்தது.

திருமண விருந்து முடிந்த பிறகு சுல்தான் மதத் தலைவர்களையும், சாட்சிகளையும் அழைத்து வரக் கட்டளை பிறப்பித்தார். அவர்கள் அனைவரும் வந்த மாத்திரத்தில் அலாவுதீனுக்கும் பதர் அல் - புதுருக்கும் இடையில் திருமணம் நடைபெற்று அதற்கான திருமண ஒப்பந்தம் பெரியோர்கள் பலர் முன்னிலையில் கையெழுத்தானது. ஒரு வழியாக அலாவுதீனை முறைப்படி தனது மருமகனாக ஆக்கிக் கொண்டார்

சுல்தான்.

பின்னர் திருமணம் முடிந்த கையோடு அலாவுதீன் சுல்தானிடம் தான் இளவரசிக்காக ஒரு அற்புத மாளிகையை கட்டப் போவதாகக் கூறினான். அதனைக் கேட்ட சுல்தான் மிகவும் மகிழ்ந்தார். அத்துடன் சுல்தான் தனது மாளிகையில் முன்னாள் உள்ள காலி இடங்களைக் காட்டி இவ்விடங்களில் எந்த இடம் பிடிக்கிறதோ அந்த இடத்தை மாளிகை கட்டத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம் என்றார். அலாவுதீனும் உடனே அதற்கு உரிய வேலையைத் தான் ஆரம்பிக்கப் போவதாகக் கூறி சுல்தானின் அனுமதியைப் பெற்றுக் கொண்டு தனது வீட்டை அடைந்தான்.

அப்படியாகத் தனது வீட்டை அடைந்த அலாவுதீன் நேராகத் தனது அறையை அடைந்தான். அங்கு யாருக்கும் தெரியாமல் மறைத்து வைக்கப்பட்டு இருந்த விளக்கை எடுத்துத் தேய்த்து பூதத்தை வர வழைத்தான். அந்தப் பூதமும் உடனுக்குடன் அலாவுதீனின் முன்னாள் வந்து நின்றது. வழக்கம் போல என்ன செய்ய வேண்டும் என்று கேட்டது.

உடனே அலாவுதீன் அந்த பூதத்திடம் தனக்கு ஒரு அற்புதமான மாளிகையை உடனே கட்டித் தர வேண்டும் என்றும் அந்த அரண்மனை அரசரின் அரண்மனையை ஒட்டி உள்ள இடத்தில் கட்டப்பட வேண்டும் என்றும் கூறினான். அத்துடன் அந்த மாளிகை யாருக்கும் சந்தேகம் ஏற்படாத படி சிறந்த வேலையாட்களைக் கொண்டு ஏழு நாளைக்குள் கட்டப்பட்டு விட வேண்டும் என்றும் கூறினான்.

அதன் படியே அந்தப் பூதம் யாருக்கும் சந்தேகம் வராதபடியாக அத்துடன் எல்லோரும் நம்பும் படியாக ஏழு நாட்களுக்குள் ஒரு அற்புதமான மாளிகையை கட்டி முடித்தது. இப்படியாக அந்த அற்புத மாளிகை கட்டப்பட்டு விட்டது. அந்த மாளிகையின் ஒவ்வொரு அறைகளும் மிகவும் நேர்த்தியாக அமைக்கப்பட்டு இருந்தது. ஒரு சிறந்த மாளிகையில் என்னென்ன இருக்க வேண்டுமோ அந்த அனைத்து அம்சங்களுமே அலாவுதீனால் கட்டப் பட்ட அந்த மாளிகையில் இருந்தது. இன்னும் சொல்லப் போனால் அந்த மாளிகையைப் பார்க்கையில் அதைத் தான் அரண்மனை என்று எல்லோரும் கூறும்படி இருந்தது. உண்மையிலேயே சுல்தானின் அரண்மனை அலாவுதீன் கட்டிய மாளிகையின் முன்னாள் ஒரு விருந்தினர் மாளிகை போலத் தான்

காட்சி தந்தது. ஒரு வகையில் அதனை நினைத்து சுல்தானே மனதளவில் வெட்கினார்.

இப்படியாக மாளிகை கட்டப்பட்டு முடித்த பின்னர் அலாவுதீன் தனது புது மனைவியுடன் அந்த மாளிகையில் ஒரு வரவேற்பு நிகழ்ச்சியை ஏற்பாடு செய்தான். அன்றைய தினம் நகரம் எங்கும் அலங்கரிக்கப்பட்டது. அந்த நிகழ்ச்சியில் கலந்து கொண்டு அதனை சிறப்பிக்க அனைத்து நாட்டு அரசர்களும், ஆளுநர்களும் அழைக்கப் பட்டு இருந்தனர். அத்துடன் பொதுமக்களும் அனுமதிக்கப்பட்டனர். அப்போது மக்கள் அனைவருக்கும் அலாவுதீன் உடன் வந்தவர்கள் பொற்காசுகளை அளித்து கௌரவித்தனர். வரவேற்பு முடிந்த பின்னர் அலாவுதீனை முக்கிய அதிகாரிகள் சுல்தானின் ஹம்மாமிற்கு அழைத்துச் சென்றார்கள். அங்கு அலாவுதீன் குளித்து முடித்த பின்னர் அவனது உடலில் வாசனைத் திரவியங்கள் அனைத்தும் கொண்டு வந்து பூசப்பட்டது. அற்புதமான ஆடையை அணிந்து கொண்டு ராஜ குமாரன் போலக் காணப்பட்டான் அலாவுதீன். அவனது தாயும் கூட அப்போது தனது மகனைக் கண்டு ஆனந்தம் கொண்டாள்.

பின்னர் அன்றைய தினம் இரவு சகல மரியாதைகளுடன் அலாவுதீன் மீண்டும் அரண்மனைக்கு அழைக்கப்பட்டான். அந்த அரண்மனையின் மேற்தட்டில் தான் இளவரசியின் படுக்கை அறை இருந்தது. அதன் அருகில் இருந்த அறையில் தான் இளவரசிக்கு அலங்காரங்கள் செய்யப்பட்டது. அலாவுதீன் இளவரசியின் படுக்கை அறையில் அவளுக்காக காத்திருந்தான். அப்போது இளவரசி அங்கு தோழிகள் புடை சூழ அழைத்து வரப்பட்டாள். அந்த அறையில் விடப்பட்டாள்.

அப்போது அலாவுதீன் மணமகளின் முகத்திரையை விலக்கினான். அத்துடன் அவனது அன்புக்கு இனிய அவளைக் கட்டி அணைத்து மகிழ்ந்தான். தனது ஆசை நிறைவேறியதை எண்ணி ஆனந்தம் கொண்டு அன்றைய இரவுப் பொழுதை இளவரசியுடன் சந்தோஷமாகக் கழித்தான்.

அடுத்த நாள் காலையும் விடிந்தது. அலாவுதீனும், இளவரசியும் குளித்து முடித்து அலங்காரம் செய்து கொண்டு சுல்தானையும், அவரது மனைவியையும் காணச் சென்றனர். மகளின் முகத்தில் மகிழ்ச்சியைக் கண்ட சுல்தானின் மனைவி ஆனந்தம் கொண்டாள். பிற்பாடு அன்றைய தினம் முழுவதுமே விருந்தும், கேளிக்கையுமாக இருந்தது.

சுல்தான் தனது முக்கிய மந்திரியை அழைத்து அலாவுதீன் கட்டிய மாளிகையை சுற்றிக் காட்டி மகிழ்ந்தார். அலாவுதீன் கட்டிய மாளிகையை பார்த்த அந்த முக்கிய மந்திரி சுல்தானிடம், "அரசே! இது போன்ற அழகிய மாளிகையை மந்திர வித்தைத் தெரிந்தவர்கள் தான் கட்ட முடியும்" என்று கூறினார். அதனைக் கேட்ட அரசர் முக்கிய மந்திரி பொறாமையால் தான் இது போன்ற வார்த்தைகளை பேசுவதாக சிந்தித்தபடி அதனைக் காதில் வாங்கியும் வாங்காதது போல இருந்தார்.

மறுபுறம் அலாவுதீன் அந்த நாட்டுத் தளபதிகளை சந்தித்து அவர்களுடன் நல்ல உறவை வளர்த்துக் கொண்டான். அவர்களுக்குப் பரிசுகள் பல கொடுத்து கௌரவித்தான். அத்துடன் அவர்களிடம் இருந்து எண்ணற்ற போர்க் கலைகளையும் கற்றுக் கொள்ளத் தொடங்கினான்.

சில மாதங்கள் கழிந்தது எதிரிகள் பாக்தாத் நகரத்தை முற்றுகையிட்ட சமயம் சுல்தான் உடல் நலக் குறைவால் அவதிப் பட்டுக் கொண்டு இருந்தார். அதனால் தனது மருமகனின் தலைமையில் படைகளை அனுப்பி வைத்தார். அலாவுதீன் அனைத்துப் போர்க் கலைகளிலும் மிகுந்த தேர்ச்சி பெற்று இருந்ததால் மிக எளிதாக எதிரிகளை வீழ்த்தி அவர்களைக் கொன்று குவித்தான். எதிரிகளை தோற்கடித்து அவர்களின் எல்லை வரையில் ஓட, ஓட விரட்டி அடித்தான். அத்துடன் எதிரிகளின் பொருட்களையும் கவர்ந்தான். அந்தப் பொருட்களில் ஆடு, மாடுகள், பொன் ஆபாரணங்கள் என அனைத்தும் அடங்கும்.

அலாவுதீன் வெற்றியுடன் திரும்பியதை அறிந்த சுல்தான் அவனை முத்தம் இட்டு வரவேற்றார். அத்துடன் அலாவுதீனின் வெற்றியை பறை சாற்றும் விதத்தில் வெற்றி விழாவைக் கொண்டாட உத்தரவு பிறப்பித்தார். அதன் படி நகர வீதிகள் அனைத்தும் அலங்கரிக்கப்பட்டு மக்கள் பலர் அலாவுதீனின் வெற்றியை வாயாரப் புகழ்ந்தனர். அனைத்துத் தரப்பு மக்களின் அதாரவும் அலாவுதீனுக்கு இருந்தது. காரணம் தன்னிடம் இருந்த பொன்னையும், பொருளையும் ஏழை மக்களுக்கு கொடுத்து அவர்களின் அன்பை ஏற்கனவே பெற்று இருந்தான் அலாவுதீன். அதனால் பாக்தாத் மக்கள் அலாவுதீனை தங்களுள் ஒருவனாகக் கருதினார்கள். இதன் காரணமாக அலாவுதீனின் வெற்றி விழாவை மக்களே தங்கள் வீட்டு விழாவாகக் கருதி அதனைக் கொண்டாடி மகிழ்ந்தனர். இப்படியாக அலாவுதீனின் வாழ்வு சிறந்து விளங்கிக் கொண்டு இருந்தது.

# இல்துமிஷ் மீண்டும் அலாவுதீன் வாழ்க்கையில் வருதல்

வாழ்வில் இன்பமும், துன்பமும் மாறி, மாறி வரும் என்ற ஆன்றோர்களின் வாக்கின் படி அலாவுதீனின் வாழ்விலும் துன்ப காலம் மந்திரவாதி இல்துமிஷ் மூலமாக மீண்டும் தலை எடுக்கத் தொடங்கியது.

ஆம்! இல்துமிஷ், "அற்புத விளக்கை தவற விட்டு விட்டோமே! எவ்வளவு முயற்சி செய்தும் கூட அதனைத் தன்னால் பெற முடியவில்லையே" என்று பெரிதும் வருந்திய வண்ணம் இருந்தான். எனினும் அவனது மனதில் எப்படியும் அந்த அபூர்வ விளக்கை அடைந்தே ஆக வேண்டும் என்ற ஆசை வேரூன்றி இருந்தது. மறுபக்கம் அலாவுதீன் தான் அந்த விளக்கை எடுக்க முடியும் என்று விதி இருக்கும் பட்சத்தில் அலாவுதீன் அந்தக் குகைக்குள் மடிந்து இருப்பானா? இல்லைப் பிழைத்து இருப்பானா? என்ற கேள்வியும் கூட இல்துமிஷ் இன் மனதில் எழுந்தது.

உடனே தனது மந்திர சக்திகளை ஒன்று திரட்டினான். அதனைக் கொண்டு ஒரு பூதக் கண்ணாடியை உருவாக்கினான். அது உள்ளதை உள்ளபடி சொல்லக் கூடிய பூதக்கண்ணாடி. அதில் நடந்ததையும், நடப்பதையும் காணமுடியும். அவ்வளவு வல்லமை கொண்டது அந்தக் கண்ணாடி. ஆனால், நடக்கப் போவதை அந்தக் கண்ணாடி காட்டாது என்பது குறிப்பிடத்தக்கது.

அந்த பூதக் கண்ணாடியிடம் அலாவுதீன் உயிருடன் இருக்கிறானா? இல்லையா? என்று இல்துமிஷ் கேட்க. அந்தக் கண்ணாடி அலாவுதீன் வாழ்க்கையில் நடந்த அனைத்தையும் காண்பிக்கத் தொடங்கியது. அதனைக் கொண்டு அலாவுதீன் பூதத்தின் உதவியுடன் மரண குகையில் இருந்து தப்பித்து தற்போது அவனது நாட்டின் இளவரசியையே மணந்து சுகமாக வாழ்ந்து கொண்டு இருப்பதை அறிந்து வயிறு எறிந்தான் இல்துமிஷ்.

எனினும் அலாவுதீனிடம் இருந்து எப்படியேனும் விளக்கை தட்டிப் பறித்து விடலாம் என்ற எண்ணம் கொண்டான் இல்துமிஷ். அப்படி அவன் கொண்ட எண்ணத்தால் மகிழ்ந்தான். பிறகு நம்பிக்கையுடன் பாக்தாத் நகரத்தை அடைந்தான். அங்கு தான் அலாவுதீன் அந்நாட்டு

இளவரசியை மணந்து கொண்டு ராஜ வாழ்க்கை வாழ்ந்து கொண்டு இருந்தான்.

பாக்தாத் நகரத்தை அடைந்த மந்திரவாதி ஒரு சொகுசு சத்திரத்தில் தங்கினான். அங்கு வந்து போகின்றவர்களை சிநேகம் பிடித்துக் கொண்டு அலாவுதீன் பற்றி தினம் ஒரு செய்தியை அறிந்து கொண்டான். அவனுக்கு அலாவுதீன் பற்றி அவன் எதிர்பார்த்ததை விட நிறையத் தகவல்கள் கிடைத்தது. பாக்தாத் நகரம் முழுவதுமே அலாவுதீனின் புகழ் தான் பாடப்பட்டது.

பிறகு அந்த ஊர் மக்களை விசாரித்து, அவர்களின் உதவியுடன் அலாவுதீன் கட்டிய மாளிகைக்கு செல்லும் மார்க்கத்தையும் அறிந்து கொண்டான் அந்த மந்திரவாதி இல்துமிஷ். அத்துடன் அவன் அந்த மாளிகையை அடைந்த மாத்திரத்தில் அவன் அதன் அழகில் பிரமித்துப் போனான். இதெல்லாம் அற்புத விளக்கின் மகிமை தான் என்பதை தெள்ளத் தெளிவாக உணர்ந்து கொண்டான். உடனே அந்த விளக்கை எவ்வாறு கைப்பற்றுவது என்று இரவு பகலாக திட்டம் வகுத்தான் அந்தத் தீய மந்திரவாதி. அத்துடன் தனது மந்திர சக்தியால் அந்த விளக்கு மாளிகையில் தான் உள்ளது என்பதையும் அறிந்து கொண்டான் அவன்.

பின்னர் பித்தளைப் பாத்திரங்கள் தயாரிக்கும் பட்டறைக்குச் சென்றான். அற்புத விளக்கின் மாதிரியைக் காட்டி அதைப் போலவே ஐம்பது விளக்குகளை தயார் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டான். அதுவும் அவை அனைத்தும் இரண்டு தினங்களுக்குள் கிடைக்க வேண்டும் என்றும் கூறினான். மேலும் அந்தப் பட்டறையை நடத்துபவர் கேட்ட கூலியை விட இரண்டு மடங்கு கூலியை தருவதாகக் கூறி அதிகத் தொகையை முன்பணமாக அவரிடம் கொடுத்தான் அந்த மந்திரவாதி. அதனை வாங்கிக் கொண்டு இரண்டே நாட்களில் அந்த மந்திரவாதி தன்னிடம் காட்டியே அதே மாதிரியான வகையைச் சேர்ந்த ஐம்பது விளக்குகளை செய்து கொடுத்து விட்டார் பட்டறையின் உரிமையாளர். இப்படியாக அந்த ஐம்பது போலி விளக்குகளை பெற்றுக் கொண்ட மந்திரவாதி விளக்கு விற்பவன் போலத் தனது கோலத்தை மாற்றிக் கொண்டான். அலாவுதீன் வேட்டைக்குச் சென்ற சமயத்தில் அவனது மாளிகையை சுற்றி, சுற்றி வந்து "பழைய விளக்குகளை கொடுங்கள். புது விளக்குகளைப் பெற்றுக் கொள்ளுங்கள்" என்றபடி கூவிக் கொண்டே வந்தான்.

அதனைக் கேட்ட சிலர் "என்ன பைத்தியக்காரன் இவன் யாராவது பழைய விளக்குகளுக்கு புது விளக்குகளைத் தருவார்களா?" என்று தங்களுக்குள் பேசிக் கொண்டனர். விஷயம் அப்படியே பரவி இளவரசியின் காதுகளை வந்து அடைந்தது. இளவரசி தனது தோழிகளிடம்," நமது அரண்மனையில் ஏதேனும் பழைய விளக்கு இருக்கிறதா?" என்று கேட்டாள்.

"ஆம் ஓரிடத்தில் நாங்கள் சுத்தம் செய்யும் சமயத்தில் ஒரு பழைய விளக்கைக் கண்டோம். அது தூசி படிந்து தேய்ந்து போய் இருந்தது" என்றனர் இளவரசியின் தோழிகள்.

"அப்படியா சந்தோஷம். அந்த ஒன்றுக்கும் உதவாத விளக்கை கொண்டு போய் அந்த விளக்கு விற்பவரிடம் கொடுத்து அதற்கு ஈடாக உடனுக்குடன் புது விளக்கை பெற்றுக் கொண்டு வாருங்கள்" என்று இளவரசி ஆணையிட. அதன் படியே அவளது தோழிகள் அந்த அபூர்வ விளக்கின் மகிமையை அறியாது அதனைப் பழைய உதவாத விளக்கு என்று கருதி அந்த விளக்கு வியாபாரியிடம் (மாறுவடத்தில் இருந்த மந்திரவாதி இல்துமிஷிடம்) கொடுத்தனர். இப்படியாக அந்த அபூர்வ விளக்கு அந்த மந்திரவாதியின் கைக்கு மாறியது.

மந்திரவாதியும் இதற்காகத் தானே ஆசைப்பட்டான். அவனது இத்தனை ஆண்டு காலத் தவம் நிறைவேறியதை நினைத்து சந்தோஷம் அடைந்தான். அலாவுதீனின் கவனக் குறைவு இப்போது மந்திரவாதியின் நல்ல காலத்துக்கு வழி வகுத்து விட்டது. எல்லாம் உண்மையில் அலாவுதீனின் போறாத காலம் தான். இன்னும் சொல்லப் போனால் அவனது பெரும் தவறு தான். ஆம்! பத்திரமாக பாதுக்காத்து வைக்க வேண்டிய பொக்கிஷத்தை வசதி வாய்ப்புகள் வந்த பிறகு அலட்சியமாக எல்லோர் கைகளிலும் சிக்குமாறு வைத்தது உண்மையில் யாருடைய தவறு? அலாவுதீனின் தவறு தானே!

அலாவுதீன் செய்த இந்தத் தவறு அவன் வாழ்க்கையையே அதல பாதாளத்துக்கு கொண்டு செல்லப் போகும் தவறு என்பதை காலம் அவனுக்கு உணர்த்தக் காத்துக் கொண்டு இருந்த நிலையில் தனது கைகளுக்கு வந்து சேர்ந்த அந்த அதிசய விளக்கை அந்த மந்திரவாதி பத்திரமாகத் தனது சட்டைப் பையில் வைத்துக் கொண்டான்.

அபூர்வ விளக்கு கிடைத்த பிறகு இன்னும் எதற்கு விளக்கு வியாபாரம்?

ஆம்! அவன் விளக்குகள் வைக்கப்பட்டு இருந்த வண்டியை நடு ரோட்டிலேயே வைத்து விட்டு. சத்திரத்தையும் காலி செய்தான்.

பிறகு சிறிது தூரம் சென்ற பிறகு அந்த விளக்கை தேய்த்து பூதத்தை வரவழைத்தான். உடனுக்குடன் பூதமும் முன்பு அலாவுதீனுக்கு முன்னாள் தோன்றியது போல அந்த மந்திரவாதியின் முன்னாலும் தோன்றியது. இப்போது அந்த பூதத்தின் சட்டப்படி விளக்கு மந்திரவாதியின் கைகளில் இருப்பதால் அந்த மந்திரவாதி தான் அந்த பூதத்தின் புது எஜமானன். அலாவுதீன் அல்ல. அதனால் அந்த மந்திரவாதி என்ன சொல்கிறானோ அதனை அந்தப் பூதம் கேட்டுத் தான் ஆக வேண்டும். அந்த வகையில் அந்த மந்திரவாதியின் ஆணைக்காகக் காத்துக் கொண்டு இருந்தது அந்தப் பூதம்.

உடனே அந்த மந்திரவாதி பூதத்திற்கு இவ்வாறு ஆணையைப் பிறப்பித்தான்.

"ஏ பூதமே, அலாவுதீனுடைய மாளிகையை அப்படியே இருந்த இடம் தெரியாமல் பெயர்த்து எடுத்துச் சென்று என்னுடைய நாட்டில் என்னுடைய நகரத்தில் உள்ள பெரிய தோப்பில் கொண்டு வைக்க வேண்டும். அத்துடன் அந்த மாளிகையுடன் அதில் இருப்பவர்கள் அனைவரையும் கொண்டு போய்விட வேண்டும். யாரையும் விட்டு வைக்கக் கூடாது; என்னையும் பிறகு அந்த இடத்திற்கு கொண்டு சென்று விட வேண்டும்" என்றான்.

பூதத்திடம் இல்துமிஷ் என்ற அந்த மந்திரவாதி கட்டளையிட்ட ஒரு சில நிமிடங்களில் பூதம் அந்தக் கட்டளையை நிறைவேற்றத் தொடங்கியது. அதன் படி அலாவுதீனின் அந்த மாளிகையை பெயர்த்து எடுத்து அதனைப் பத்திரமாக அதில் உள்ளவர்களுடன் அப்படியே கொண்டு போய் மந்திரவாதி வசிக்கும் ஆப்கானிய பிரதேசத்தின் காந்தகார நகரத்தில் உள்ள அவனது பெரிய தோப்பில் ஒரு சரியான இடத்தில் வைத்து விட்டது. அதன் பிறகு அந்த மந்திரவாதியையும் அங்கு கொண்டு போய் சேர்த்து விட்டது. இப்படியாக அலாவுதீன் கட்டிய அந்த மாளிகை ஒரு கணத்தில் அவனது அலட்சியத்தால் இடம் பெயர்ந்தது.

ஒவ்வொரு நாள் காலையிலும் சுல்தான் எழுந்ததும் எழும்பாததுமாக முதல் வேலையாகத் தனது மகளின் மாளிகையைப் பார்த்து மகிழ்வது

வழக்கம். அன்றைய தினமும் அவர் கண் விழித்தபடி மாளிகை இருக்கும் திசையை நோக்கி நடந்தார். அந்த இடம் வெற்று இடமாக இருந்தது. ஒரு வேளைத் தான் கண்டது கனவோ என்று நினைத்தபடி மீண்டும், மீண்டும் கண்களை கசக்கிப் பார்த்தார். பிறகு தான் சுல்தானுக்குப் புரிந்தது அவர் கண்டது அனைத்தும் நிஜமே. ஆம்! உண்மையில் அந்த மாளிகை மறைந்து தான் போயிருந்தது. இன்னும் சொல்லப் போனால் அது இருந்த சுவடு கூடத் தெரியவில்லை. அதைக் கண்ட மன்னர் மயங்கி விழுந்தார். பிறகு சிறிது நேரத்தில் அவராகவே மயக்கம் தெளிந்து "தனது மகளின் நிலை என்ன ஆனதோ?" என்று புலம்பித் தவித்தார். அவர் கண்களில் இருந்து கண்ணீர் அருவி போலப் பெருக்கெடுத்து ஓடியது. அவருக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை. அப்போது மன்னருக்கு அவருடைய முக்கிய மந்திரின் நினைவு வரவே உடனே அவரை அழைத்து வருமாறு தனது சேவகர்களுக்கு கட்டளை பிறப்பித்தார். அதன் படியே அந்த சேவகர்கள் சென்று முக்கிய மந்திரியை உடனுக்குடன் அழைத்து வந்தனர். அவர் ஓடோடி வந்து மன்னரின் நிலையைக் கண்டார். மனம் கலங்கி அந்த நிலைக்கான காரணத்தைக் கேட்டார். அப்போது மன்னர் முக்கிய மந்திரியிடம்," தாங்கள் அலாவுதீனின் மாளிகை பக்கம் சென்று பார்த்தீர்களா?" என்று கேட்டார்.

"இல்லை அரசே. அங்கு போக வேண்டிய அவசியம் எனக்கு ஏதும் இல்லையே!" என்றார்.

அப்போது மன்னர்," தாங்கள் ஒருவேளை அந்தப் பக்கம் போய் இருந்தால் தங்களுக்கே தெரிந்து இருக்கும்" என்றார் அரசர்.

"ஏன்?என்ன?" என்று கேட்டபடி உடனே முக்கிய மந்திரி அலாவுதீனின் மாளிகை இருந்த திசை பக்கமாக ஓடிச் சென்று பார்த்தார். அந்த மாளிகை இருந்த சுவடு கூடத் தெரியவில்லை. அதனைக் கண்ட மாத்திரத்தில் அதிர்ந்தார். அரசர் சோகமாக அழுது கொண்டு இருக்கும் காரணத்தை இப்படியாக அறிந்தார்.

பின்னர் அரசருக்கு ஆறுதல் சொல்லத் தெரியாமல் மௌனமாக இருந்த முக்கிய மந்திரியின் மனதில் அலாவுதீனை பலி வாங்க இது ஒரு நல்ல வாய்ப்பு என்று பட்டது. உடனே அரசரிடம், "வேந்தே! முன்பே இந்த மாளிகை பற்றிய விஷயத்தை நான் உங்களிடம் மாயா ஜாலம் என்று கூறிய போதெல்லாம் ஏதோ நான் பொறாமையால் கூறியதாக

எண்ணிக் கொண்டு என் மீது கோபப்பட்டீர்கள். இப்போதாதவது நான் சொன்னது அனைத்தும் உண்மை என்று தங்களுக்குப் புரிகிறதா?" என்றார்.

"ஆம்! மந்திரியாரே தாங்கள் சொல்வது அனைத்தும் உண்மை தான். அலாவுதீன் மோசக்காரன். ஏதேதோ மந்திர ஜாலங்கள் செய்து என்னை ஏமாற்றி இருக்கிறான். இப்போது அந்த அயோக்கியன் எங்கு சென்று இருக்கிறான்?" என்று கேட்டார்.

"அந்த மோசக்காரன் வேட்டைக்குச் சென்று இருக்கிறான் அரசே. அவனை நாம் விடக் கூடாது" என்று கூறினார் முக்கிய மந்திரி.

உடனே சுல்தான் தலைமைத் தளபதியை அழைத்து வரச் செய்து, "அலாவுதீன் வேட்டைக்குச் சென்று இருக்கிறானாம், உடனே சென்று அவன் கைகளைப் பின்புறமாகச் சேர்த்துக் கட்டிச் சங்கிலியால் அவனை பிணைத்து வீதி வழியாக ஊர்வலமாக இழுத்து வாருங்கள்" என்று ஆணை பிறப்பித்தார்.

அதன் படியே தலைமைத் தளபதிகள் அலாவுதீனைத் தேடிக் கானகம் சென்றனர். அத்துடன் அலாவுதீனைக் கண்ட மாத்திரத்தில் அவனிடம் தயங்கித் தயங்கி சுல்தானின் ஆணையைக் கூறினார்கள். அவன் மீது அவர்கள் பேரன்பு கொண்டு இருந்ததால் தாங்கள் செய்யப் போகும் செயலுக்காக அவனிடம் மன்னிப்பும் வேண்டி நின்றனர்.

தலைமைத் தளபதிகள் அனைவரும் சுல்தானின் ஆணையைத் தன்னிடம் கூறிய மாத்திரத்தில் அதிர்ந்து போனான் அலாவுதீன். பின்னர் தன்னைக் கைது செய்ய வந்திருந்த தளபதிகளிடம், "என்ன காரணத்திற்காக என்னை இவ்விதம் சங்கிலியால் பிணைத்து வீதி வழியாக ஊர்வலமாக கொண்டு செல்ல வேண்டும் என்று சுல்தான் கூறினார் என்பது பற்றி உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டார்.

அவர்கள், "பிரபுவே அதெல்லாம் எங்களுக்குத் தெரியாது. சுல்தான் எங்களிடம் தங்கள் கைகளைப் பின்புறமாக சேர்த்துக் கட்டிச் சங்கிலியால் பிணைத்து வீதி வழியாக ஊர்வலமாக இழுத்து வருமாறு ஆணையிட்டு உள்ளார். அதனை நாங்கள் நிறைவேற்றாவிட்டால் எங்கள் தலைக்கு ஆபத்து வந்த சேரும்" என்றனர்.

தலைமைத் தளபதிகளின் நிலைமையை புரிந்து கொண்ட அலாவுதீன், "நான் மன சாட்சியுடன் சொல்கிறேன். நான் எந்த ஒரு ராஜ துரோக குற்றத்தையும் செய்யவில்லை. அப்படி நான் ஏதேனும் ராஜத் துரோக குற்றங்களை செய்திருந்தால் தானே எனக்கு இது போன்ற தண்டனையை மன்னர் வழங்கி இருக்க வேண்டும். சரி, நீங்கள் பாவம் என்ன செய்வீர்கள். மன்னரின் கட்டளை எதுவாயினும் அதனைத் தாங்கள் நிறைவேற்றித் தான் ஆக வேண்டும். உங்களுக்கு அளிக்கப்பட்ட ஆணையை நிறைவேற்றுங்கள்" என்று கூறவும்.

அதன் படியே அலாவுதீனின் கைகளை பின்புறமாகக் கட்டி வீதி வழியாக ஊர்வலமாக அரண்மனை நோக்கி இழுத்துச் சென்றனர். அலாவுதீனின் கரங்கள் பின்புறமாக சங்கிலியால் கட்டப் பட்டு இருப்பதைக் கண்ட பொதுமக்கள் அனைவரும் அவன் மீது தாங்கள் கொண்ட அன்பினால் கொதித்துப் போனார்கள். அத்துடன் தத்தமது ஆயுதங்களை எடுத்துக் கொண்டு அலாவுதீனை மன்னர் கொலை செய்து விடுவாரோ என்ற பயத்தில் அரண்மனையை நோக்கி பொதுமக்கள் விரைந்தனர். அரண்மனையை ஏராளாமான காவலர்கள் பாதுகாத்து நின்றனர். இதனால் சுல்தானின் காவலர்களுக்கும், பொதுமக்களுக்கும் இடையே தள்ளு முள்ளு ஏற்பட்டது.

மறுபுறம் அலாவதீனுடன் அரண்மனையை அடைந்த படைத் தளபதிகள் மன்னருக்கு அலாவுதீனை கைது செய்த விவரத்தைச் சொன்னார்கள். உடனே அரச தர்பாருக்கு வந்த சுல்தான் கோபத்துடன் அலாவுதீனைப் பார்த்த மட்டில் அவனைக் கண்டம் துண்டமாக வெட்டிப் போடும் படியாக அரண்மனை ஆஸ்தான  கொலையாளிகளுக்கு ஆணையிட்டார்.

இந்தச் செய்தியை சில நொடியில் எப்படியோ அறிந்து கொண்ட அரண்மனை வாயிலில் இருந்த பொதுமக்கள் அரண்மனையை தாக்க முற்பட்டார்கள்.

"அலாவுதீன் மீது ஒரு சிறு துரும்பு பட்டாலும் அரண்மனையை தகர்த்து எறிந்து விடுவோம்" என்று கூறி ஆவேசம் அடைந்தார்கள். அத்துடன் அரண்மனை மீது கற்களை வீசினார்கள். அரண்மனைக் காவலாளிகளாலும், தளபதிகளாலும் மக்களைக் கட்டுப் படுத்த முடியவில்லை. ஒரு புரட்சியே வெடிக்கும் சூழல் உருவானது. அதனைக் கண்டு பீதி அடைந்த முக்கிய மந்திரி அரசரிடம் ஓடிச் சென்று, "அரசே,

தங்களது ஆணையைத் திரும்பப் பெறுங்கள்; நிலைமை மிகவும் மோசமாக உள்ளது. அலாவுதீனுக்காக தங்கள் உயிரையும் கொடுக்கத் துணிந்து விட்டார்கள் மக்கள். அத்துடன் அலாவுதீனுக்கு ஏதேனும் நேர்ந்தால் இந்த அரண்மனை மட்டும் அல்ல இந்த நாடே குழப்பத்தில் அழியும் போல் இருக்கிறது. மக்கள் ஒவ்வொருவரும் வெறி பிடித்தபடி இருக்கிறார்கள். ஒருவேளை புரட்சி வெடித்தால் தங்கள் சிம்மாசனத்துக்கே அது ஆபத்தைத் தரும். எனவே காலம் தாழ்த்தாமல் அலாவுதீன் விஷயத்தில் தங்கள் ஆணையைத் திரும்பப் பெறுங்கள்" என்று கூறினார்.

முக்கிய மந்திரியின் வார்த்தைகளைக் கேட்ட மன்னர் நிலைமையைப் புரிந்து கொண்டார். அலாவுதீனுக்காக தன்னையும் தூக்கி ஏறிய மக்கள் தயார் என்பதை அவர் அறிந்து கொண்டார். அதனை நினைத்த மாத்திரத்தில் பயம் அவரது மனதைக் கவ்வியது. அத்துடன் பயத்தில் வியர்வையால் குளித்தார் சுல்தான். அத்துடன் அலாவுதீனின் விஷயத்தில் கொஞ்சம் பணிந்து போக முன்வந்தார். மக்களை சமாதானப் படுத்தவும் தீர்மானித்தார்.

பிறகு மன்னரே சென்று மக்களிடம் பேசினார். அலாவுதீனுக்கு மரண தண்டனை அளிக்க மாட்டேன் என்று உறுதி கூறினார். அத்துடன் தான் அலாவுதீனைக் கைது செய்த காரணத்தையும் மக்களிடம் கூற வேண்டிய நிர்பந்தம் வந்ததால் அதையும் கூறினார்.

உடனே அலாவுதீன் மீதான வழக்கை மக்கள் முன்னாள் நடத்த வேண்டும் என்று கோரிக்கை வைத்தனர் மக்கள். அதற்கு மன்னர் சம்மதம் தெரிவித்தார். மக்கள் முன்னாள் விசாரணை நடந்தது. அலாவுதீனோ, "அல்லாவின் மீது ஆணையாக சொல்கிறேன் என் மீது எந்தத் தவறும் இல்லை. நான் அப்பாவி. எனக்கு எதுவுமே தெரியாது" என்று கூறினான்.

அதைக் கேட்ட சுல்தான் வெகுண்டார். அவர் அலாவுதீனிடம்,"உண்மையிலேயே உனக்கு எதுவும் தெரியாதா? தெரியாதென்றால் இந்த ஜன்னல் வழியே உனது மாளிகை இருக்கிறதா என்று பார்!" என்று கூறவும். அவ்வாறே ஜன்னல் வெளியே பார்த்த அலாவுதீனுக்கு அப்போது தான் எல்லாமே புரிந்தது. மாளிகை இல்லை என்பதைப் பார்த்த அவன் என்ன நடந்து இருக்கும் என்பதை யூகித்துக் கொண்டான். எனினும், அதனை வெளியே காட்டிக் கொள்ளாமல்

அமைதியாக இருந்தான். பிறகு சுல்தானிடம்," அரசே! மாளிகை காணாமல் போனதற்கும் எனக்கும் எந்தச் சம்மந்தமும் இல்லை. இதில் ஏதோ சதி நடந்து இருக்கிறது" என்றான்.

"அந்தச் சதி என்ன என்று உனக்குத் தெரியாதா?" என்று கேட்டார் சுல்தான்.

"மீண்டும் சொல்கிறேன் அல்லாவின் மீது ஆணையாக எனக்கு எதுவும் தெரியாது. அதனால் தான் நான் வேட்டைக்குச் சென்றேன். இப்படி ஆகும் என்று தெரிந்திருந்தால் நான் வேட்டைக்குச் சென்று இருப்பேனா?" என்று திருப்பிக் கேட்டான் அலாவுதீன்.

"அலாவுதீன் மேற்கொண்டு நாம் விவாதித்துப் பயன் இல்லை. மாளிகையை விடு. அதைப் போன்று ஆயிரம் மாளிகைகளை என்னால் கட்ட முடியும். ஆனால் எனது அன்பு மகளின் நிலை என்ன?" என்றார் சுல்தான்.

"சுல்தான் அவர்களே இளவரசி தங்கள் மகள் மட்டும் அல்ல எனது அன்புக்கு உரிய மனைவியும் கூட. அவளைக் கண்டு பிடிக்கும் மிகப் பெரிய பொறுப்பு எனக்கும் உண்டு. உங்களை விட நான் தங்களது மகளின் மீது அதிக அன்பை வைத்து இருக்கிறேன். அதனை அவளும் அறிவாள். என்னைத் தாங்கள் சற்று முன்னர் கண்டம் துண்டமாக வெட்டி எறியச் சொன்னீர்களே இதனை உங்கள் மகள் அறிந்தால் நிச்சயம் உங்களை அவள் மன்னிக்க மாட்டாள். காரணம் அவ்வளவு அன்பை அவள் என் மீது வைத்து இருக்கிறாள். இன்னும் முப்பது நாட்களுக்குள் எனது மனைவியை நான் எங்கு இருந்தாலும் அழைத்து வருவேன். அத்துடன் இன்று உங்களுடைய சுய ரூபத்தையும் நான் அறிந்து கொண்டேன். நேற்று வரையில் நீங்கள் என் மீது காட்டிய பாசம் எல்லாம் வெறும் வேஷம் என்பதை எனக்குத் தாங்கள் புரிய வைத்து விட்டீர்கள்" என்று கூறி முடித்த அலாவுதீன். அங்குக் கூடி இருந்த பொது மக்களிடம் தனது உயிரைக் காப்பாற்றியதற்கு நன்றி தெரிவித்தான். அத்துடன் தான் அரசுக்கோ அல்லது அந்த நாட்டுக்கோ எந்த வித துரோகத்தையும் செய்ய வில்லை என்பதை மீண்டும், மீண்டும் பொதுமக்கள் முன்னிலையில் சத்தியம் செய்து எடுத்துக் கூறினான். பிறகு பொதுமக்களிடம் விடை பெற்று சுல்தானிடமும் நான் வந்தால் தங்கள் மகளுடன் தான் வருவேன். இல்லையேல் அலாவுதீன் இறந்து விட்டான் என்று வைத்துக் கொள்ளுங்கள் என்று கூறினான்.

சுல்தானும் அலாவுதீன் கூறிய வார்த்தைகள் மீது நம்பிக்கை கொண்டார். அது மட்டும் அல்ல, அப்போது அவருக்கு இருந்த சூழ்நிலையில் தனது மகளின் உயிரைக் காக்க அவர் யாராவது ஒருவரை நம்பித் தான் ஆக வேண்டும். அலாவுதீனின் வீரத்தின் மீது சுல்தானுக்கு நம்பிக்கை இருந்தது. இருந்தாலும் முக்கிய மந்திரி சுல்தானின் காதுகளில் கிசு கிசுக்க உடனே அலாவுதீனை நிற்கச் சொல்லிய சுல்தான், "அலாவுதீன் நீ அவ்வளவு நல்லவன் என்றால் நீ திரும்பி வரும் வரையில் உனது தாயை என்னிடம் பணையமாக ஒப்படைத்து விடு" என்றார். அதன்படியே தனது தாயைக் கொண்டு வந்து ஒப்படைத்தான் அலாவுதீன்.

உடனே சுல்தான்," அலாவுதீன் எனது மகள் எனக்கு முக்கியம். ஒரு வேளை நீ முப்பது நாளைக்குள் திரும்பி வராவிட்டால் உனது தாயின் உயிருக்கு நான் பொறுப்பல்ல" என்றார்.

அதனைக் கேட்ட அலாவுதீன் கண் கலங்கி நின்றான். பிறகு என்ன செய்ய தனது ஆருயிர் மனைவியைத் தேடிப் புறப்பட்டான். அவன் அதீத புத்திசாலியாக இருந்ததால் எந்த ஒரு மாயக் கண்ணாடியின் துணையும் இல்லாமல் இவை அனைத்தும் அந்த மந்திரவாதியின் வேலை தான் என்பதைப் புரிந்து கொண்டான். அதற்கு வலு சேர்க்கும் விதத்தில் அக்கம் பக்கத்தினர் சிலர் அலாவுதீனிடம் ஒரு விளக்கு வியாபாரி அவனது மாளிகையை சுற்றி, சுற்றி வந்ததையும் மாளிகையில் இருந்த இளவரசியின் தோழிகள் ஒரு பழைய விளக்கை கொண்டு வந்து அந்த விளக்கு விற்பவனிடம் கொடுத்து அதற்கு ஈடாக ஒரு புது விளக்கை வாங்கிக் கொண்டு அரண்மனைக்குள் சென்றதையும் கூறினர். அதைக் கேட்ட அலாவுதீன் மேலும் தெளிவடைந்தான். அத்துடன் அவனது கவனக் குறைவால் வந்த வினை தான் இவை அனைத்தும் என்பதை அவன் புரிந்து கொண்டான்.

சுல்தான் கொடுத்த தவணை நாட்களான முப்பது நாட்களில் இரண்டாவது நாள் வந்தது. அலாவுதீனுக்கு தனது மனைவியை எங்கு சென்று தேடுவது என்றே தெரியவில்லை. இன்னும் சொல்லப் போனால் அவன் மந்திரவாதி விளக்கை மட்டும் எடுத்துக் கொண்டு போயிருந்தால் கூட இவ்வளவு பெரிதாகக் கவலைப் பட்டு இருக்க மாட்டான். ஆனால் துஷ்ட மந்திரவாதி தனது ஆருயிர் மனைவியையும் மாளிகையுடன் கவர்ந்து சென்றதால் அலாவுதீன் அதிக துக்கம் கொண்டான். அத்துடன் இந்தப் பிரச்சனையில் இருந்து அவனைக் காப்பாற்ற எல்லாம் வல்ல

இறைவன் ஒருவனால் தான் முடியும் என்பதை உணர்ந்து கொண்டான் அலாவுதீன். அதனை உணர்ந்து கொண்டவனாக அல்லாவைத் தொழுது வழிபட வேண்டித் தனது கை கால்களைக் கழுவினான். அப்போது அவன் தன்னை அறியாமலேயே தனது கை விரலில் உள்ள மோதிரத்தை அழுத்தித் துடைத்தான் அதில் இருந்து சம்சுதீன் என்ற பூதம் வெளிவந்தது. அந்தப் பூதம் தான் முன்பு அலாவுதீனை அந்த இருண்ட குகைக்குள் இருந்து காப்பாற்றியது என்பது குறிப்பிடத்தக்கது.

இப்போதும் அதே பூதம் தான் அலாவுதீனைக் காக்க முன் வந்தது. அது அவன் முன்னாள் தூண் போல நின்றபடி,"உசூர்! தங்களுக்கு நான் என்ன செய்ய வேண்டும்? சொல்லுங்கள் உடனடியாக அதனை நான் செய்து முடிக்கிறேன்" என்று கேட்டு நின்றது.

"எனது அற்புத மாளிகையையும் அதில் இருந்த எனது மனைவியையும் மந்திரவாதி ஒருவன் அபகரித்துச் சென்று விட்டான். அவனிடம் இருந்து எனது மனைவியையும் எனது மாளிகையையும் மீட்டுத் தர வேண்டும்" என்று சம்சுதீன் என்ற அந்த பூதத்திடம் வேண்டுகோள் விடுத்தான் அலாவுதீன்.

அலாவுதீனின் வார்த்தைகளைக் கேட்ட சம்சுதீன் பூதம், "மன்னிக்க வேண்டும் உசூர். இது எனது சக்திக்கு மீறிய செயல். காரணம், அந்த மாளிகையை தூக்கிச் சென்றவர் எங்கள் பூத லோகத்தின் சக்கரவர்த்தி. மாய வித்தைகளில் அவர் முன்னாள் நான் சின்னப் பையன். அவர் அந்த விளக்கின் கட்டுப்பாட்டில் உள்ளார். விளக்கோ மந்திரவாதியின் கட்டுப்பாட்டில் உள்ளது. எனவே தெரிந்தோ தெரியாமலோ அந்த மந்திரவாதியின் கட்டுப்பாட்டில் இருக்கிறார் எங்கள் பூத லோகத்தின் சக்கரவர்த்தி. அவரால் தான் மீண்டும் அந்த மாளிகையை தங்கள் மனைவியுடன் கொண்டு வந்து பழைய இடத்தில் வைக்க முடியும்" என்றது.

அதனைக் கேட்ட அலாவுதீன் மீண்டும் அந்த பூதத்திடம், "சம்சுதீன்! தாங்கள் என்னை அந்த மாளிகை தற்போது இருக்கும் இடத்துக்கு அருகாமையிலாவது கொண்டு சென்று சேர்க்க முடியுமா?" என்று கேட்டான்.

"அது என்னால் முடியும் உசூர். இது போன்ற சின்னச் சின்ன வேலைகளை செய்ய நான் காத்திருக்கிறேன். மற்றபடி அந்த அபூர்வ

விளக்கில் இருந்து வெளிப்பட்ட அந்த பூதத்திடம் எதிர்பார்த்ததை எல்லாம் என்னிடம் தயை கூர்ந்து எதிர்பார்க்காதீர்கள்" என்றது சம்சுதீன் பூதம்.

அலாவுதீனும் அதற்கு ஒப்புக் கொண்டான். பிறகு பூதம் அலாவுதீனின் பழைய மாளிகைக்கு மிக அருகில் கொண்டு போய் அவனை பத்திரமாக இறக்கி விட்டது. அலாவுதீன் அந்த இடத்தைப் பற்றி பூதத்திடம் கேட்க. ஆப்கானிய பிரதேசத்தின் காந்தகார நகரத்தில் உள்ள மந்திரவாதியின் தோப்பில் தான் அந்த மாளிகை இருப்பதை அலாவுதீனிடம் கூறியது அந்தப் பூதம். பிறகு அந்தப் பூதம் அலாவுதீனிடம் இருந்து விடைபெற்றுச் சென்றது.

இப்படியாகத் தனது மனைவி எங்கு இருக்கிறாள் என்று கண்டு பிடித்ததில் அலாவுதீனுக்கு அப்படி ஒரு மகிழ்ச்சி அத்துடன் தனக்கு சின்னச் சின்ன வேலைகளில் கை கொடுக்க சம்சுதீன் பூதம் இருப்பதை நினைக்கும் போது அவனது மனதில் இன்னும் கூட இறைவன் தனக்கு அருள் செய்து கொண்டு இருக்கிறார் என்பதை உணர்ந்தபடியாக எல்லாம் வல்ல இறைவனுக்கு நன்றியைத் தெரிவித்தான். பிறகு தனது மாளிகை சற்று தூரத்தில் இருப்பதைக் கண்டான். எப்படியும் தனது மனைவியை பார்த்து விடலாம் என்ற நம்பிக்கை அலாவுதீனுக்கு அப்போது வந்தது. அந்த நம்பிக்கையிலேயே அன்றைய இரவுப் பொழுதை கழித்தான் அலாவுதீன். பின்னர் அடுத்த நாள் காலை விடிந்ததும் அந்த நகரத்தின் பக்கத்தில் ஓடிக் கொண்டு இருந்த நதிக் கரைக்குச் சென்று குளித்து முடித்துக் காலை வேலைத் தொழுகையைப் புரிந்து விட்டு அதன் பின்னர் துணிந்து சென்று இளவரசி வசித்து வந்த மாளிகையில் உள்ள அந்தப் புரத்தின் பக்கத்தில் உள்ள ஜன்னல் பக்கமாக வெளியே உள்ள தோட்டத்தில் அமர்ந்து கொண்டான்.

# அலாவுதீன் கொடிய இல்துமிஷ்ஷை கொலை செய்தல்

அந்தப் பொல்லாத மந்திரவாதியின் பராமரிப்பில் அந்த மாளிகை இருந்தாலும் இளவரசியின் பழைய பணிப் பெண்கள் அனைவரும் அவளுடனே கூட அந்த மாளிகையில் தங்கி இருந்தனர். அவர்கள் அனைவரும் இளவரசியிடம் மிகுந்த பாசத்துடன் நடந்து கொண்டனர். அது இளவரசிக்கு மிகவும் ஆறுதலாக இருந்தது. அலாவுதீன் இளவரசியின் அந்தப்புர ஜன்னல் ஓரமாக உட்கார்ந்து இருந்ததைக் கண்ட இளவரசியின் பணிப் பெண் ஒருத்தி ஓடிச் சென்று இளவரசியிடம் விஷயத்தைக் கூறினாள். உடனே அதைக் கேட்ட இளவரசி ஓடி வந்து அலாவுதீனைப் பார்த்தாள். அலாவுதீனும் தனது ஆருயிர் மனைவியைக் கண்டான். இருவரும் சிறிது நேரம் ஆனந்தக் கண்ணீரை வடித்தனர். இளவரசிக்கும் மந்திரவாதியிடம் இருந்து இனி தான் தப்பி விடலாம் என்ற எண்ணம் பிறந்தது.

அலாவுதீன் தனது ஆருயிர் மனைவியிடம் கொடிய மந்திரவாதியைப் பற்றி விசாரித்தான். அதனைக் கேட்ட இளவரசி, "அந்தக் கொடியவன் இங்கு இல்லை. அவன் வருவதற்கு நேரமாகும். தவிர அந்த துஷ்டன் ஒவ்வொரு நாள் காலையிலும் வந்து என்னை பார்த்து விட்டுப் போகிறான். அத்துடன் நான் அவனைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று வற்புறுத்துகிறான். எனக்குப் பத்து நாட்கள் அவகாசம் கொடுத்து உள்ளான். அதற்குள் நான் அவனைத் திருமணம் செய்து கொள்ளவில்லை என்றால் அவன் என்னைக் கட்டாயமாக மணந்து கொள்ளப் போவதாகக் கூறுகிறான். தினம், தினம் என்னிடம் வந்து மிக மோசமான வார்த்தைகளை பேசி மகிழ்கிறான்" என்றெல்லாம் சொல்லி அழுதாள்.

அதனைக் கேட்ட அலாவுதீன் தனது மனைவியிடம் அந்த அற்புத விளக்கைப் பற்றிக் கூறினான். அவளும் தான் செய்த தவறை உணர்ந்தவளாய் அலாவுதீனிடம் மன்னிப்பு வேண்டினாள். அலாவுதீனும் அவளை அன்புடன் மன்னித்தான். பிறகு தனது ஆருயிர் மனைவியிடம், "கண்ணே! அந்த துஷ்ட மந்திரவாதியின் கைகளில் அற்புத விளக்கு இருக்கும் வரையில் நாம் அவனை எதுவும் செய்ய முடியாது. அதனை நாம் கைப்பற்றி ஆக வேண்டும். அது சரி, அவன் அந்த அபூர்வ விளக்கை எங்கு வைத்து உள்ளான்? உனக்கு அதைப்

பற்றி ஏதாவது தெரியுமா?" என்று கேட்டான்.

"தெரியும் அன்பே! அந்த துஷ்டன் அந்த அற்புத விளக்கை எப்போதுமே தன்னுடைய சட்டைப் பையில் தான் வைத்து இருப்பான். அதாவது சட்டையின் உட்பக்கம் உள்ள பையில் தான் அவன் வைத்து இருக்கிறான்" என்றாள் இளவரசி.

உடனே அலாவுதீனின் மனதில் வேகமாக ஒரு அற்புதத் திட்டம் தயார் ஆனது. அதன்படித் தனது கையில் இருந்த மோதிரத்தை உரசினான். வழக்கம் போல அதில் இருந்து சம்சுதீன் பூதம் வெளிவந்தது. அதைக் கண்ட இளவரசி சற்றே அதிர்ந்து போனாள். எனினும் அலாவுதீன் அவளைத் தேற்றி, "இதுவும் நமக்கு வேண்டிய பூதம் தான்" என்றான். அதைக் கேட்டு இளவரசி வியந்து போனாள். அத்துடன் இனி தனது மனைவியிடம் எதையும் மறைப்பதில்லை என்ற முடிவுக்கு வந்தான் அலாவுதீன்.

பிறகு சம்சுதீனிடம்,"எனக்கு உடனே விவசாயி போன்ற உடையையும் உருவ அமைப்பையும் கொடு. மேலும் உடனே எனக்கு "பங்க" என்ற போதைப் பொருளும் வேண்டும்" என்று கேட்டான்.

அதன் படியே சம்சுதீன் பூதம் அலாவுதீன் கேட்ட அனைத்தையுமே கொண்டு வந்து கொடுத்தது. பிறகு தனது மனைவியிடம் பூதம் கொடுத்த "பங்க" என்ற போதைப் பொருளைக் கொடுத்தான் அலாவுதீன். அத்துடன் அவளைப் பார்த்து, "அன்பே நான் சொல்வதை கவனமாகக் கேள். நான் இந்த விவசாயி உடையில் பக்கத்தில் உள்ள தோட்டத்தில் இருப்பேன். ஒருவேளை அந்த துஷ்ட மந்திரவாதி என்னை தூரத்தில் இருந்து கண்டாலுமே கூட உண்மையில் ஒரு விவாசாயி தான் நிற்கிறான் என்று நினைப்பான். மறுபுறம் நீ செய்ய வேண்டியது எல்லாம் உன்னிடம் உள்ள நல்ல உடைகளில் ஒன்றை அணிந்து கொண்டு அவனிடம் அன்பு கொண்டவள் போல நடி. அவன் உனது நடிப்பை உண்மை என்றே நம்ப வேண்டும். அந்த அளவுக்கு நீ அவனிடம் நடிக்க வேண்டும். பிறகு அவன் அசந்து இருக்கும் நேரமாகப் பார்த்து மது வகைகளை அவனுக்கு நீ பரிமாற வேண்டும். அத்துடன் அந்த மதுவில் நீ இந்த "பங்க" என்ற போதைப் பொருளையும் அவனுக்குத் தெரியாமல் கலந்து விட வேண்டும். அந்த மந்திரவாதி மயங்கிப் போகும் அளவுக்கு நீ அவனைக் கொண்டு வர வேண்டும். அவன் மயங்கியவுடன் உனது பணிப் பெண்கள் மூலமாக நீ எனக்குத்

தகவல் தர வேண்டும். நான் உடனே வந்து ஆக வேண்டிய அனைத்தையும் கவனித்துக் கொள்வேன்" என்றான்.

அலாவுதீனின் மேற்கண்ட வார்த்தைகளைக் கேட்ட இளவரசி அது தான் சரியான வழி என்ற முடிவுக்கு வந்தாள். பிறகு அன்புடன் அலாவுதீனுக்கு சாப்பிட உணவுப் பதார்த்தங்களை ரகசியமாகக் கொண்டு வந்து கொடுத்தாள். பசியுடன் இருந்த அலாவுதீனுக்கு அந்த உணவு வகைகள் யாவும் தேவாமிருதமாக இருந்தது. அதனை அவன் உண்டு மகிழ்ந்தான். பிறகு மெல்ல தான் முன்பு சொன்ன திட்டத்தின் படி அருகில் இருந்த தோட்டத்திற்குச் சென்றான். அங்கு இளவரசியின் நல்ல செய்திக்காக காத்துக் கொண்டு இருந்தான்.

மறுபுறம் இளவரசி தன்னை அழகாக அலங்கரித்துக் கொண்டாள். பின்னர் வாசனைப் பொருட்களை தனது உடல் எங்கும் பூசிக் கொண்டாள். அத்துடன் மந்திரவாதியை மயக்கத்தில் ஆழ்த்த தனது நம்பிக்கைக்கு உரிய பணிப்பெண்ணிடம் "பங்க" என்ற அந்தப் போதைப் பொருளை கொடுத்து அதனை என்ன செய்ய வேண்டும், எப்படிக் கலக்க வேண்டும் என்பதை எல்லாம் கூறித் தயாராக வைத்து இருந்தாள். அதே சமயத்தில் வழக்கம் போல இளவரசியைக் கண்டு ஆசை வார்த்தைகளைக் கூற மந்திரவாதி அவ்விடத்திற்கு வந்தான்.

இளவரசி இருந்த அறையில் இருந்து ஒரு இனிய நறுமணம் வரவும் மந்திரவாதி தன்னை மறந்தவனாய் உள்ளே சென்றான். இளவரசியோ அந்த மந்திரவாதியைக் கவரும் விதத்தில் அற்புதமான ஆடையை அணிந்து இருந்தாள். மேலும் அவள் மந்திரவாதியை புன்னகையுடன் வரவேற்றாள். அதைக் கண்ட மந்திரவாதி தான் காண்பது கனவா? அல்லது நிஜமா? என்பதை அறியாமல் திகைத்துப் போய் நின்றான். பிறகு எல்லாமே நிஜம் தான் என்பதை உணர்ந்தவனாக இளவரசியிடம்," என்ன இளவரசி, ஒரு வழியாக உனது மனதை மாற்றிக் கொண்டாயா?" என்றான்.

மந்திரவாதியின் வார்த்தைகளைக் கேட்ட இளவரசி, "மனம் மாறாமல் பிறகு என்ன செய்ய? எப்படியும் எனது கணவர் இங்கு வரப் போவதில்லை. அத்துடன் நான் இங்கு இருப்பதை எனது தந்தையால் கூட அறிய முடியாது. இந்நிலையில் நான் தங்களை பகைத்துக் கொண்டு என்ன செய்ய? அதனால் தான் தங்களுக்குப் பணிந்து போகத் தீர்மானித்து விட்டேன். என்னிடம் தாங்கள் உண்மையாக நடந்து

கொண்டால் உங்களை விட்டு நான் எப்போதுமே பிரிய மாட்டேன்" என்றாள்.

அதைக் கேட்ட மந்திரவாதி ஆனந்தம் கொண்டான். அத்துடன் இளவரசியிடம், "இப்போதாவது உனக்கு புத்தி வந்ததே" என்று கூறி மகிழ்ந்தான். பிறகு தான் வெளியில் இருந்து வந்த களைப்பு நீங்க குடிக்க எதையாவது கொண்டு வந்து தருமாறு இளவரசியிடம் அவனாகவே கேட்டான். இதைக் கண்ட இளவரசி "பழம் நழுவி அதுவாகே பாலில் விழுகிறதே! பலி ஆடு தானாகவே வந்து தலையை கொடுக்கிறதே!" என்று சிந்தித்தபடி தனது தோழியிடம் சென்று முன்னமே பேசியபடி மது பாணத்துக்குள் "பங்க" என்ற போதைப் பொருளைக் கலந்து கொண்டு வந்து மந்திரவாதியின் வாயில் அவளாகவே ஊட்டிவிட்டாள். இளவரசி அப்படி ஊட்டிய மாத்திரத்தில் அந்த மந்திரவாதியும் கணக்கில்லா மதுக் கோப்பைகளைக் கொண்டு வருமாறு கூறி அனைத்தையும் சந்தோஷமாகப் பருகித் தீர்த்தான். ஒரு கட்டத்தில் போதை தலைக்கு ஏறிய அந்த மந்திரவாதி அப்படியே மயங்கித் தரையில் விழுந்தான்.

மந்திரவாதியின் நிலை இப்படி இருக்க, தயாராக நின்ற இன்னொரு விசுவாசம் உள்ள பணிப்பெண் இளவரசியின் ஆணைப்படி தோட்டத்துக்குச் சென்று அலாவுதீனை அழைத்து வந்து விட்டாள். அலாவுதீன் கணப் பொழுதில், மந்திரவாதியின் நெஞ்சுப் பைக்குள் கையை விட்டு விளக்கை எடுத்து விட்டான். அதன் பின்னர் தனது வாளை எடுத்து அந்த மந்திரவாதியை கண்டம் துண்டமாக வெட்டிப் போட்டான். அதன் பிறகு தான் அலாவுதீன் நிம்மதி அடைந்தான்.

பிறகு அதிசய விளக்கை தேய்த்து பூதத்தை வரவழைத்தான் அலாவுதீன். அந்த மாளிகையை எடுத்துக் கொண்டு போய் பாக்தாத் நகரத்தில் தனது சொந்த உழைப்பில் வாங்கிய தான் காட்டும் நிலத்தில் வைக்குமாறு பூதத்திடம் கூறினான். அதன் படியே அந்தப் பூதம் அலாவுதீன் காட்டிய அவனது சொந்த நிலத்தில் அந்த மாளிகையை பத்திரமாகக் கொண்டு சென்று வைத்தது.

பின்னர் "வேறு எதாவாது வேண்டுமா உசூர்" என்று அலாவுதீனிடம் கேட்டது அந்தப் பூதம்.

உடனே அலாவுதீன், "ஆம் எனக்கு ஒரு லட்சம் பொற்காசுகள் கொண்ட மூட்டை ஒன்று வேண்டும்" என்றான். அதன் படியே அந்தப் பூதமும்

அதனைக் கொண்டு வந்து கொடுத்தது. அந்தப் பொற் காசுகளை பாக்தாத் நகர ஏழை மக்களுக்கு வாரி, வாரி வழங்கினான் அலாவுதீன். அதனை அனைவரும் மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்டனர்.

பின்னர் இளவரசியிடம் அலாவுதீன் அவளது தந்தை (அவள் மந்திரவாதியால் கடத்தப்பட்ட சமயத்தில்) அவனை முன்பு அவமானம் செய்து கீழ்த்தனமாக நடத்திய விதத்தை எல்லாம் எடுத்துக் கூறினான். சுல்தான் தனக்குக் கொடுத்த தவணைக் காலம் முடிய இன்னும் இருபத்தி ஐந்து நாட்கள் உள்ள நிலையில் அதற்குள்ளாகவே பாக்தாத் நகரத்தை அடைந்த அலாவுதீன். சுல்தானின் முகத்தைக் கூட பார்க்க விரும்பாமல் தான் வந்த செய்தியைக் கூட தெரியப்படுத்தாமல் இருந்தான்.

அதனைக் கண்ட ஊர் மக்கள் பலவாறாகப் பேசிக் கொண்டார்கள். ஒரு சிலர் அலாவுதீனை மிகவும் கேவலமான முறையில் நடத்தியதால் அவன் இனிமேல் சுல்தானின் மாளிகைக்குச் செல்லப் போவதில்லை என்ற படி எல்லாம் பேசிக் கொண்டனர்.

அலாவுதீன் தனது மகளை அழைத்துக் கொண்டு பத்திரமாக வந்து சேர்ந்ததை அறிந்த சுல்தான் அலாவுதீன் தவறு இழைக்காதவன் என்பதை உணர்ந்தவராக தான் முன்பு அவனை நடத்திய விதத்திற்கு வருந்தினார். அத்துடன் மருமகன் அலாவுதீன் இனிமேல் தன்னுடன் பேச மாட்டான் என்பதையும் அவர் உணர்ந்து கொண்டார். இளவரசி பதர் அல் புதூரும் தனது கணவரை தவறாகப் புரிந்து கொண்டு கைது செய்து அவமானப் படுத்திய தனது தந்தையை வெறுத்தாள்.

ஊர் மக்களோ, "அலாவுதீன் தன்மானம் உள்ளவன். ரோஷக்காரன். சுல்தான் இப்படி நடந்து கொண்ட விதத்திற்கு எந்த மருமகன் தான் அவருடன் மீண்டும் உறவாடுவான்" என்று கூறி அலாவுதீனின் நிலையை ஆதரித்தனர்.

மறுபக்கம் தனது கணவரின் உயிரைக் காப்பாற்றிய நாட்டு மக்களுக்கு நன்றி தெரிவிக்கும் விதமாக ஒரு பெரிய விருந்தை ஏற்பாடு செய்தாள் இளவரசி. நாட்டு மக்கள் அனைவரும் அந்த விருந்தில் கலந்து கொண்டனர். விருந்தை நல்ல முறையில் திட்டமிட்டு ஏற்பாடு செய்து இருந்ததால் விருந்தில் கலந்து கொண்டவர்கள் அனைவரும் திருப்தியுடன் உணவு உண்டனர். அந்த விருந்துக்கு அழைக்கப் படாமலேயே இளவரசியின் தந்தையான சுல்தான் கலந்து கொண்டார்.

வீட்டிற்கு வந்தவரை வெளியே போகும் படிச் சொல்ல அலாவுதீனுக்கும் மனம் இல்லை, இளவரசிக்கும் மனம் வர வில்லை. எனினும், சுல்தானை வர வேற்காமல் கோபத்துடன் காட்சி அளித்தாள் இளவரசி. சுல்தான் இளவரசியிடம் மன்னிப்பு வேண்டினார். ஆனால், இளவரசி சுல்தானை (தனது தந்தையை) மன்னிப்பதாக இல்லை.

எனினும் இதற்கு இடையில் இளவரசி பாக்தாத் நாட்டு மக்களுக்கு அளித்த விருந்து நிகழ்ச்சி அற்புதமான முறையில் நடந்து முடிந்தது. உணவு உண்ட அனைவரும் இளவரசியையும், அலாவுதீனையும் வாழ்த்தி விட்டுச் சென்றனர்.

இப்படியாக அலாவுதீன் பாக்தாத் நகரத்தில் மீண்டும் புகழ் அடைந்து வந்தான். கொடிய இல்துமிஷ் இறந்து விட்டான் தனக்கு இனிமேல் எந்தப் பிரச்சனையும் இல்லை என்று நிம்மதி அடைந்தான். ஆனால், அவனுக்கு இன்னொரு சோதனை காத்துக் கொண்டு இருந்தது .

# இல்துமிஷின் தம்பி அம்ஜத் கானும் அலாவுதீனும்

இல்துமிஷுக்கு ஒரு தம்பி இருந்தான் அவன் பெயர் அம்ஜத் கான். அவன் மந்திர தந்திரங்களில் கை தேர்ந்தவன். இல்துமிஷ் அளவுக்குத் திறமைசாலி. சில சமயங்களில் மந்திர வித்தைகளில் இல்துமிஷ்ஷையே அவன் ஆச்சர்யப்படும் படியாக செய்ததும் உண்டு.

அவ்வளவு திறமை சாலியான அம்ஜத் கான் தனது சகோதரன் இல்துமிஷ் இறந்து விட்டதை அறிந்தான். அத்துடன் அவனைக் கொன்ற அலாவுதீனை பழிவாங்கத் துடித்தான். அவனது குடும்பத்தையே அழிக்கக் கங்கணம் கட்டிக் கொண்டான். விரைந்து பாக்தாத் நகரத்தை அடைந்தான். அந்த ஊரில் ஒரு விடுதியில் தங்கி அலாவுதீன் பற்றிய செய்திகளை சேகரித்தான்.

ஒரு நாள் அம்ஜத் கான் சந்தையில் சென்று கொண்டு இருந்த சமயம். அங்கு ஒரு இடத்தில் மக்கள் கூடி இருப்பதைப் பார்த்தான். அருகில் இருந்தவர்களிடம் அது பற்றி விசாரித்தான். "பாத்திமா வந்து இருக்கிறார். அவரிடம் ஆசி பெறுவதற்காக அவ்விடத்தில் மக்கள் கூடி உள்ளனர்" என்றார் கூட்டத்தில் இருந்த ஒருவர்.

"யார் பாத்திமா? அவர்கள் எந்த விதத்தில் சிறப்பு வாய்ந்தவர்கள்?" என்று அங்கு கூடி இருப்பவர்களிடம் கேட்டான் அம்ஜத் கான்.

"பாத்திமா அல்லாவின் அருள் பெற்றவள். அப்படித் தான் இந்த ஊர் மக்கள் நம்புகின்றனர். அவர்கள் கை வைத்து ஆசிர்வதித்தால் எப்படிப் பட்ட நோயும் குணமாகும். அதனால் தான் இத்தனை பேர் கூடி நிற்கிறோம்" என்றார் மற்றொருவர்.

இப்படியாக அந்தக் கூட்டத்தில் இருந்த அனைவருமே பாத்திமாவிடம் ஆசிர்வாதத்தைப் பெற்றனர். மந்திரவாதி அம்ஜத் கான் அந்தப் பாத்திமாவை தொடர்ந்து சென்றான். அவள் மலை உச்சியில் தனித்து இருந்த தனது குடிலை அடைந்தாள். மந்திரவாதி அம்ஜத் கானும் அந்தக் குடிலுக்குள் சென்றான். அவனைப் பார்த்த பாத்திமா, "இவனும் நம்மிடம் ஆசிர்வாதம் பெறுவதற்காகத் தான் வந்துள்ளான் போல" என்று நினைத்துக் கொடிய எண்ணம் கொண்ட அம்ஜத் கானை ஆசிர்வாதம் செய்யத் தொடங்கினாள். பாத்திமா அவனை ஆசிர்வாதம்

செய்து கொண்டு இருந்த சமயம் தனது குறு வாளை எடுத்துப் பாத்திமாவை பல இடங்களில் குத்திக் கொன்றான். பிறகு தனது மந்திர சக்தியைக் கொண்டு தன்னைப் பாத்திமா போலவே உரு மாற்றிக் கொண்டான். தள்ளாடிய நடையையும் பழகிக் கொண்டான். அன்றைய தினம் பாத்திமாவின் பிணத்தை அகற்றி விட்டு அவளது குடிலில் தங்கிய வண்ணம். அவள் சமைத்த உணவு வகைகளை தின்றான். அத்துடன் ஒரு வாரம் முழுவதும் பாத்திமாவின் பழக்க வழக்கங்கள் அனைத்தையும் தனது மந்திர சக்தி மூலமாக அறிந்து கொண்டான் அவற்றையும் பழகிக் கொண்டான்.

நான்கு நாட்கள் கழிந்தது. பாத்திமாவின் உருவத்துக்கு மாறிய மந்திரவாதி அலாவுதீன் இருந்த அரண்மனைக்கு அருகாமையில் சென்றான். அங்கு கூடி இருந்த மக்கள் அனைவரும் உண்மையாகவே பாத்திமா தான் வந்து இருக்கிறார் என்று நினைத்து அவளிடம் ஆசிர்வாதம் பெற நான் முந்தி, நீ முந்தி என்று முந்தி அடித்துக் கொண்டனர். அதனைக் கண்ட மந்திரவாதி மனதிற்குள் சிரித்துக் கொண்டான். மக்கள் கூடியதும் ஒரு வித இரைச்சல் ஏற்படும் அல்லவா? அப்படித் தான் பெரும் இரைச்சல் அவ்விடத்தை ஆக்கிரமித்தது. அந்த இரைச்சலைக் கேட்ட இளவரசி தனது பணிப் பெண்களிடம், "வெளியில் என்ன இரைச்சல் ஒரு வேளை ஏதேனும் கலவரமா? சென்று பார்த்து வாருங்கள்" என்று கூறினாள்.

அதன் படியே இளவரசியின் தோழிகள் வெளியில் சென்று பாத்திமா வந்திருக்கும் செய்தியை இளவரசிக்குத் தெரிவித்தனர். அந்தப் பாத்திமா மீது இளவரசிக்கும் மிகவும் மரியாதை இருந்தது. சிறு வயதில் ஒரு சமயம் இளவரசிக்கு கடும் நோய் வந்த சமயத்தில் இந்தப் பாத்திமாவின் அருளால் அந்த நோய் நீங்கியதாக சுல்தான் முன்பு ஒருமுறை அவளிடம் கூறியதை இப்போது இளவரசி நினைத்துப் பார்த்தாள். மேலும், இவ்வளவு அருள் பெற்றப் பாத்திமாவை எப்போதும் தன்னுடனேயே வைத்துக் கொண்டால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று இளவரசிக்குத் தோன்றியது. உடனே அங்கு கூடி இருக்கும் மக்கள் யாருக்கும் எந்தத் தொந்தரவும் இல்லாத படி அவர்கள் பாத்திமாவிடம் ஆசிர்வாதம் பெற்ற பிறகு பாத்திமாவை அழைத்து வருமாறு தனது தோழிகளிடம் கூறினாள் அவள்.

அதன் படியே இளவரசியின் தோழிகள் பாத்திமாவை அழைத்து வர உடனுக்குடன் அவ்விடத்துக்கு விரைந்தார்கள். அங்கு கூடி

இருப்பவர்கள் அனைவரும் பாத்திமாவிடம் (பாத்திமா உருவில் இருந்த மந்திரவாதியிடம்) ஆசிர்வாதம் பெறும் வரையில் காத்திருந்து இளவரசி அழைப்பதாகப் பாத்திமாவை அரண்மனைக்கு அழைத்து வந்தனர். பாத்திமா உருவில் இருந்த அந்த மந்திரவாதியும் அரண்மனையை அடைந்தான். இதற்காகத் தானே அவனும் காத்துக் கொண்டு இருந்தான்.

அரண்மனையை அடைந்த அந்த மந்திரவாதி "அலாவுதீனை குடும்பத்துடன் ஒழித்துக் கட்ட வேண்டும்" என்று தீர்மானம் செய்து கொண்டான்.

மறுபுறம் அப்பாவி இளவரசி வந்திருப்பது பாத்திமா தான் என்று நம்பிக் கொண்டு எழுந்து நின்று அந்த மந்திரவாதிக்கு வணக்கம் தெரிவித்தாள். பாத்திமா உருவில் இருந்த அந்த மந்திரவாதியும் இளவரசிக்கு ஆசி கூறினான். பாத்திமா பெண் தானே என்று நினைத்த இளவரசி பாத்திமா மீது கொண்ட மரியாதையின் காரணமாக தனது ஆசனத்துக்கு அருகிலேயே உட்காரவைத்துக் கொண்டு அன்புடன் உபசரித்தாள். பணிப்பெண்கள் ஓடிச் சென்று பாத்திமா குடிக்க பழ ரசங்களைக் கொண்டு வந்து கொடுத்தனர். அத்துடன் இளவரசி தங்களது மாளிகையில் ஒரு சிறிய அறையிலேயே தங்கிக் கொள்ளுமாறு பாத்திமாவை மீண்டும், மீண்டும் உருக்கமாகக் கேட்டுக் கொண்டே இருந்தாள்.

இளவரசியின் நினைப்பு யாதெனில் தனது மாளிகையில் பாத்திமா தங்கினால் அதனால் தனது அரண்மனைக்கே பெருமை வந்து சேரும் என்பது தான். அதனால் தான் மீண்டும், மீண்டும் வந்திருப்பது யார் என்று அறியாமல் இளவரசி பாத்திமா உருவத்தில் இருந்த மந்திரவாதியிடம் அந்த மாளிகையிலேயே தங்கி விடுமாறு கெஞ்சிக் கொண்டு இருந்தாள்.

மந்திரவாதிக்கோ மனதிற்குள் ஏக குஷி. தான் நினைத்ததை முடிப்பதற்குச் சிரமப்பட வேண்டுமோ என்று எண்ணி இருந்த அந்தக் கொடிய நெஞ்சம் படைத்த மந்திரவாதிக்கு எல்லாம் கை கூடி வருவது போலத் தெரிந்தது. இறுதியில் அவன் அந்த மாளிகையிலேயே தங்க ஒப்புக் கொண்டான். அதைக் கேட்டு இளவரசி சந்தோஷம் அடைந்தாள். பின்னர் மந்திரவாதியின் உருவத்தில் இருந்த பாத்திமாவிற்கு உணவு பரிமாறப்பட்டது. தனி அறையை சுத்தம் செய்து தருமாறு தனது

தோழிகளிடம் இளவரசி கூற, அதற்கான ஏற்பாடுகள் உனக்குடன் நடந்தது.

'அலாவுதீன் அந்த மாளிகையில் எங்காவது காணப் படுகிறானா?' என்று அந்த பாத்திமா உருவில் இருந்த மந்திரவாதி கண்களை சுழற்றி சுழற்றிப் பார்த்தான். அதனைக் கண்ட அந்த இளவரசி, "தாங்கள் ஏன் இப்படி எங்கள் மாளிகையை பார்க்கின்றீர்கள்?" என்று பாத்திமாவிடம் கேட்டாள்.

உடனே பாத்திமா உருவில் இருந்த அந்த மந்திரவாதி இளவரசியிடம்," ஒன்றும் இல்லை அம்மா, இந்த மாளிகையில் ஒரே ஒரு சின்னக் குறை உள்ளது. அந்தக் குறை நீங்க வேண்டும்; ஆம் அது நீக்கப்பட வேண்டும்" என்றான்.

"அந்தக் குறை நீங்க நாங்கள் என்னம்மா செய்ய வேண்டும்?" என்று கேட்டாள் அப்பாவி இளவரசி.

"ஒன்றும் பெரிதாக அல்ல. "ருக்" என்னும் பறவையைப் பற்றிக் கேள்விப்பட்டு இருக்கிறாயா, அதன் முட்டையைக் கொண்டு வந்து இந்த மாளிகை விதானத்தில் கட்டித் தொங்கவிட்டால் போதும், இந்த மாளிகை சுத்தமாகி விடும். இதில் இருக்கும் குறைகள் எல்லாம் சரியாகி விடும். ஆம், நிச்சயமாக சரியாகி விடும். அத்துடன் நல்ல விஷயங்கள் எல்லாம் இந்த மாளிகையில் நடந்தேறும்" என்றான் பாத்திமா உருவில் இருந்த அந்த மந்திரவாதி.

உடனே இளவரசி," அம்மா! நான் "ருக்" என்ற அந்தப் பறவையைப் பற்றிக் கேள்விப்பட்டதே இல்லை. தயை கூர்ந்து எனக்கு அதைப் பற்றிச் சொல்லுங்கள். அது எங்கு இருக்கும்" என்று கேட்டாள்.

"இளவரசி நன்றாகக் கேள் "ருக்" என்னும் அந்தப் பறவை ராட்சப் பறவை. இந்தப் பறவை ஒட்டகத்தையும் ஏன் யானையைக் கூட தனது கால் நகத்தால் தூக்கிச் செல்லக் கூடியது. "கொல்கொத்தா" என்ற மலையில் தான் இந்தப் பறவையை அதிகம் காண முடியும். அது இஸ்ரேல் நாட்டில் உள்ளது. அந்த முட்டையை மட்டும் உங்கள் அரண்மனை சேவகர்களை வைத்துக் கொண்டு வந்து விடுங்கள். பிறகு பாருங்கள் உங்கள் மாளிகையின் வளர்ச்சியை" என்று இளவரசியிடம் மறுமொழியாகக் கூறினான் அந்த மாறுவேடம் தாங்கிய மந்திரவாதி.

இளவரசி நன்றாக அதனைக் கேட்டுக் கொண்டாள். பிறகு பாத்திமா வடிவில் இருந்த மந்திரவாதியை மாளிகையின் அறையில் கொண்டு சென்று விட்டாள்.

மாலை வேளையில் வேட்டைக்குச் சென்ற அலாவுதீன் தனது மாளிகைக்குத் திரும்பினான். அவனை இளவரசி அன்புடன் வரவேற்றாள். அத்துடன் பாத்திமா வந்து மாளிகையில் தங்கி இருக்கும் விஷயத்தை அலாவுதீனிடம் கூறி மகிழ்ந்தாள். மேலும் மந்திரவாதி உருவில் இருந்த பாத்திமா தன்னிடம் கூறிய அனைத்து விஷயங்களையும் அலாவுதீனிடம் கூறி முடித்தாள். அந்த வகையில் அலாவுதீன் "ருக்" என்ற அந்தப் பறவையைப் பற்றி அறிந்து கொண்டான். அதனைப் பற்றிக் கேள்விப்பட்டு வியந்தான். அவனுக்கு "ருக்" என்ற பறவையின் முட்டையை மாளிகைக்கு கொண்டு வருவது எளிதான செயல் இல்லை என்று தோன்றியது. அப்படித் தோன்றிய மாத்திரத்தில் தனது தனி அறைக்குச் சென்று விளக்கை எடுத்துத் தேய்த்தான்; உடனே பூதம் விளக்கில் இருந்து வெளிப்பட்டது. அத்துடன் அவ்வாறு வெளிவந்த பூதம் அலாவுதீனின் கட்டளைக்காகக் காத்துக் கொண்டு இருந்தது.

அந்த பூதத்திடம் அலாவுதீன், "எனக்குப் புரியாத ஒன்றைத் தெரியாத ஒன்றை உன்னிடம் கேட்கப் போகிறேன். "ருக்" என்று ஒரு பறவை உள்ளதா? அப்படி ஒரு பறவை இருப்பது உண்மை தானா?அதன் முட்டையை உன்னால் கொண்டு வர முடியுமா? அதனை அரண்மனை விதானத்தில் கட்டினால் நல்லதா?" என்றெல்லாம் கேட்டான்.

அதனைக் கேட்ட பூதம் அதிர்ச்சி அடைந்து நின்றது. அது நாள் வரையில் அந்தப் பூதம் அவ்வாறு அதிர்ச்சி அடைந்து அலாவுதீன் பார்த்ததே இல்லை. பூதத்திடமே அலாவுதீன் அதைப் பற்றிக் கேட்டான்.

அப்போது அந்தப் பூதம் அலாவுதீனிடம், "உசூர், யாரோ உங்களை அழிப்பதற்காகத் தான் "ருக்" என்ற அந்தப் பறவையின் முட்டையை அரண்மனை விதானத்தில் கொண்டு வந்து கட்டுமாறு உங்களைத் தவறாக வழி காட்டி உள்ளார்கள். அந்த முட்டை இந்த அரண்மனைக்கு வந்தால் இந்த அரண்மனை மட்டும் அல்ல தங்கள் சந்ததியே அழிந்து விடும். ஆம்! மந்திரவாதிகள் தீய காரியங்களை செய்யத் தான் அந்த முட்டையை கேட்பார்கள். அந்த முட்டை இங்கு வந்தால் அரண்மனையில் இருக்கும் நல்ல சக்திகள் எல்லாம் ஓடி விடும். ஏன்

நீங்கள் விளக்கை தேய்த்தால் எந்நாளும் கூட உங்கள் கட்டளைக்கு அடி பணிந்து இங்கு வர இயலாது. அவ்வளவு தீய சக்திகளை தன்னகத்தே கொண்டது அந்த முட்டை. சுருக்கமாகச் சொல்லப் போனால் அந்த முட்டையை இங்கு கொண்டு வருவது என்பது சொந்தக் காசில் சூனியம் வைப்பது போன்றது" என்று முழு விவரத்தையும் அலாவுதீனிடம் கூறி முடித்தது அந்தப் பூதம். அதைக் கேட்ட அலாவுதீன் திடுக்கிட்டான். பிறகு சற்று நேரம் யோசித்த அலாவுதீன் மீண்டும் அந்த பூதத்திடம்," அன்பு பூதமே! பாத்திமா போன்ற இறை அருள் பெற்ற மங்கை ஏன் அந்த முட்டையைக் கொண்டு வருமாறு எனது மனைவியிடம் கூற வேண்டும். பாத்திமா ஏன் அவ்விதம் எனது அழிவை விரும்ப வேண்டும்" என்று வினவினான்.

அதைக் கேட்ட பூதம் அலாவுதீனிடம் சத்தியத்தை கூறத் தொடங்கியது. "உசூர் வந்திருப்பது பாத்திமா அல்ல. தாங்கள் கொலை செய்தீர்களே இல்துமிஷ் அவனது உடன் பிறந்த தம்பியான அம்ஜத் கான் தான் தங்களை அழிக்கக் கங்கணம் கட்டிக் கொண்டு இங்கு வந்து உள்ளான். மேலும் உங்களை மட்டும் அல்ல. உங்கள் குடும்பத்தையே அவன் அழிக்க இங்கு வந்து உள்ளான். ஏன்? தனது ஆறாத கொலை வெறியால் உண்மையான பாத்திமா அம்மையாரையே அவன் கொலை செய்து விட்டு அவர்களது ரூபத்தை எடுத்துக் கொண்டு இங்கு வந்து நாடகம் ஆடிக் கொண்டு இருக்கிறான்" என்று கூறி முடித்தது.

அனைத்து உண்மைகளையும் கேட்ட அலாவுதீனுக்கு தலை சுற்றியது. அவனுக்குத் தலைவலியே வந்து விட்டது. "வந்திருக்கும் அம்ஜத் கானைப் போல இன்னும் எத்தனை தம்பிகள் இல்துமிஷ்ஷுக்கு இருப்பார்கள்? இன்னும் எத்தனை பேர் இதுபோலக் கிளம்பி உள்ளார்களோ?" என்று அவன் நினைத்த போது அவனது தலைவலி இன்னும் அதிகமானது. துடித்துப் போனான் அலாவுதீன்.

தலைவலியால் தனது ஆருயிர் கணவர் துடித்துக் கொண்டு இருக்கிறார் என்பதை அறிந்த இளவரசி "நோய் தீர்க்கும் வள்ளல் பாத்திமா அம்மையார் கை வைத்தால் எல்லாம் சரியாகி விடும் அவர்களை உடனே அழைத்துக் கொண்டு போய் தனது ஆருயிர் கணவருக்காக ஜெபிக்கச் சொல்லுங்கள்" என்று தனது தோழிகளிடம் கூறினாள். அதன் படியே இளவரசியின் தோழிகள் பாத்திமாவை சந்தித்து விஷயத்தைக் கூறினார்கள். பாத்திமாவும் அலாவுதீனைக் காணத் தயார் ஆனாள். பிறகு இளவரசியே சென்று அலாவுதீனுக்கு ஆறுதல் கூறி பாத்திமா

அம்மையாரை தான் அழைத்து வரச் சொல்லி இருப்பதைக் கூறினாள். தவிர பாத்திமாவின் கை பட்ட மாத்திரத்தில் எல்லாம் சரியாகி விடும் என்று தனது கணவரிடம் கூறினாள்.

அலாவுதீன் தனது மனைவியிடம் அவள் பயந்து விடுவாள் என்று எதையுமே கூறாமல் அமைதியாக இருந்தான். அத்துடன் மனைவியின் வார்த்தைகளுக்கு அவன் பதில் வார்த்தைகள் ஏதும் சொல்லாமல் அமைதியாக இருந்தான். அந்த நேரத்தில் போலி பாத்திமா அலாவுதீனைக் காண அவ்விடத்துக்கு வந்தாள். அனைத்து விஷயங்களையும் அலாவுதீன் அறிந்து இருந்தாலுமே, அதனை பாத்திமாவிடம் அவன் காட்டிக் கொள்ளவில்லை. உண்மையான பாத்திமாவை வணங்குவது போன்றே அவளை வணங்கினான். அதைக் கண்ட மந்திரவாதிக்கு ஒரே மகிழ்ச்சி; அலாவுதீன் தன்னைப் பாத்திமா என்று நம்பிக் கொண்டு இருப்பதாக எண்ணி மன நிறைவை அடைந்தான். பின்னர் அலாவுதீனின் தலைவலி தீர தனியாக இறைவனிடம் தான் ஜபிக்க விரும்புவதாக அந்தப் போலி பாத்திமா இளவரசியிடம் கூறினாள்.

அப்பாவி இளவரசியும் அலாவுதீனைப் போலி பாத்திமாவிடம் தனியாக விட்டு விட்டுத் தனது தோழிகளை அழைத்துக் கொண்டு மெல்ல வெளியே நகர்ந்தாள். இப்போது அந்த அறையில் போலி பாத்திமாவும், அலாவுதீனும் தான் இருந்தனர்.

அந்தப் போலி பாத்திமா அலாவுதீனைக் கொல்ல இதுவே சரியான தருணம் என்று முடிவு செய்து குறு வாளை மறைத்து வைத்தபடி அலாவுதீனை நெருங்கினாள். அலாவுதீன் அப்போதே சுதாரித்துக் கொண்டான். மேலும் போலி பாத்திமா குறு வாளால் அலாவுதீனை கொல்ல முற்படுகையில் அலாவுதீன் முந்திக் கொண்டு போலி பாத்திமாவை கொன்று தீர்த்தான். போலி பாத்திமா அலறிக் கொண்டே கீழே விழுந்து மடிந்தாள். அவளது உயிர் போன மறுகணம் மந்திரவாதியின் நிஜ உருவம் வெளிப்பட்டது. அலாவுதீனின் அறையில் அலறல் சத்தத்தைக் கேட்ட இளவரசி ஓடோடி வந்தாள். கீழே ஒரு ஆண் பிணம் கிடப்பதைப் பார்த்து அதிர்ந்தாள். அப்போது தான் அலாவுதீன் இளவரசியிடம் அனைத்து உண்மைகளையும் சுருக்கமாகக் கூறி முடித்தான். அந்த சமயத்தில் தான் இளவரசியும் தான் எவ்வளவு பெரிய தவறை செய்து விட்டு இருக்கிறோம் என்பதை உணர்ந்தாள். அதற்காக அலாவுதீனிடம் கண்ணீர் மல்க மன்னிப்பும் வேண்டினாள். அலாவுதீன்

அவளது கண்ணீரைத் துடைத்து, "இனிமேல் கவனமாக இரு. நடந்தது அனைத்தும் அல்லாவின் கருணையால் நல்லதாகவே முடிந்தது. இனி ஒரு பயமும் இருக்காது" என்று ஆறுதல் கூறினான்.

பிறகு அம்ஜத் கானின் சடலத்தை அப்புறப்படுத்தினான் அலாவுதீன். பாத்திமா இறந்த செய்தியைக் கேட்ட மாத்திரத்தில் ஊர் மக்கள் அனைவரும் வருந்தினர். அலாவுதீன் ஊர் மக்களின் துயரத்தைப் போக்கிய பாத்திமாவுக்கு அவள் வாழ்ந்த இடத்தில் நினைவு மண்டபத்தை எழுப்பினான். அங்கு வந்து பிரார்த்தனை செய்த மக்களின் நோய் நீங்கியது கண்டு பொது மக்கள் பாத்திமாவை தெய்வப் பிறவி என்றே துதித்தனர். அதனால் அலாவுதீனுக்கும் நல்ல பெயர் கிடைத்தது. காலங்கள் கடந்தது அலாவுதீனுக்கும், இளவரசிக்கும் ஆண் குழந்தை பிறந்தது. அதற்கு இப்ராகிம் என்று பெயர் சூட்டி மகிழ்ந்தனர். அதனைக் கேள்விப்பட்ட சுல்தான் மகிழ்ந்தார். பிறகு சில காலம் பேரனுடன் சந்தோஷமாக நாட்களை கழித்த சுல்தான். வயோதிகம் காரணமாக இறந்தார்.

பாக்தாத் நகரத்து மக்கள் ஆட்சிப் பொறுப்பை அலாவுதீன் தான் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கூறி அவனது மாளிகையின் முன்னாள் திரண்டு நின்று வேண்டினார்கள். அலாவுதீனும் மக்களின் தீர்ப்பை ஏற்றுக் கொண்டு மன்னனாக முடி சூடிக் கொண்டான் அத்துடன் இளவரசி ராணியாக அறிவிக்கப்பட்டாள். அந்த வைபவத்தில் அலாவுதீனின் தாயாரும் கலந்து கொண்டு அலாவுதீனை வாழ்த்தினாள். இப்படியாக அலாவுதீனின் வாழ்க்கை அன்றைய தினம் முதற்கொண்டு சிறந்து விளங்கியது. பாக்தாத் நகரத்தின் மக்கள் அவனது புகழ் பாடி மகிழ்ந்தனர் என்று அலாவுதீனின் கதையை ஷாரஜாத் பல நாள் இரவுகளாக மன்னர் ஷாரியரிடம் தொடர்ந்து கூறி முடித்தாள்.

கதையை முழுவதுமாகக் கேட்டு முடித்த ஷாரியர்," அலாவுதீன் கதை மிகவும் அருமையாக உள்ளது" என்று கூறி ஷாரஜாத்தைப் பாராட்டினான். அப்போது ஷாரஜாத் ஷாரியரிடம், "இது என்ன பிரமாதம் 'அலிபாபாவும் நாற்பது திருடர்களும்' என்ற கதையை நான் அடுத்து சொல்லவிருக்கிறேன். அந்தக் கதை இதைக் காட்டிலும் பிரமாதமானது" என்றாள்.

உடனே அந்தக் கதையையும் சொல் என்று ஆவலுடன் கேட்கத் தயார் ஆனான் ஷாரியர். ஷாரஜாத்தும் ‘அலிபாபாவும் நாற்பது திருடர்களும்’

என்ற அந்தக் கதையை சொல்லத் தொடங்கினாள்.

# அலிபாபா கள்வர் குகையைப் பற்றி அறிதல்

பாரசீக நாட்டில் முன்னொரு காலத்தில் இரண்டு சகோதரர்கள் வாழ்ந்து வந்தனர். மூத்தவன் பெயர் காசிம், இளையவன் பெயர் அலிபாபா. இவர்களது தந்தையான முகம்மது காலமான சமயத்தில் போதிய சொத்துக்களை சகோதரர்கள் இருவருக்கும் வைத்து விட்டுத் தான் சென்றார். அந்தச் சொத்துக்களை சகோதரர்கள் இருவரும் சமமாக பிரித்துக் கொண்டாலும், பேராசை கொண்ட காசிம் தந்திரமாக அலிபாபாவை ஏமாற்றி அத்தனை சொத்துக்களையும் எழுதி வாங்கிக் கொண்டான். காசிமின் இந்த செயலுக்கு அவனது மனைவியான ரசியா பேகமும் உடந்தை.

ரசியா பேகம் நல்ல வசதியான இடத்தில் இருந்து வந்த பெண். அதனால் காசிமிடம் ஏராளமான பணம் குவிந்து இருந்தது. இருந்தாலுமே அவன் அடுத்தவன் பணத்துக்கு அநியாயமாக ஆசைப் படும் மோசக்காரனாக இருந்தான். அது மட்டும் அல்ல ஏராளமான பணம் அவனிடத்தில் கொட்டிக் கிடந்தாலும் காசிம் கருமியாக இருந்தான். அத்துடன் பெண் பித்தனாகவும் காசிம் காணப்பட்டான்.

ஆனால், காசிமின் தம்பியான அலிபாபாவோ நற்குணங்களின் இருப்பிடமாக இருந்தான். ஏழை, எளிய மக்களுக்கு தன்னாலான அனைத்து உதவிகளையும் செய்தான். இறை நம்பிக்கை அதிகம் கொண்டவன். பெண் ஆசை இல்லாதவன். அண்ணன் காசிம் தன்னை ஏமாற்றி இருந்தாலுமே கூட தினம், தினம் காசிமின் மனம் மாற வேண்டும். அவன் திருந்த வேண்டும் என்று இறைவனிடம் அலிபாபா வேண்டி வந்தான். அத்துடன் தன்மானத்துடன் விறகு வெட்டித் தனது பிழைப்பை நடத்தி வந்தான் அலிபாபா. தனது அண்ணன் பணக்காரனாக இருந்தாலுமே கூட அலிபாபா அவனது வீட்டு வாசலில் என்றுமே உதவி கேட்டு நின்றதில்லை.

அலிபாபா விறகு வெட்டி வந்த பணத்தில் ஒரு சிறு குடிலைக் கட்டிக் கொண்டான். மூன்று கழுதைகளை வாங்கிக் கொண்டான். இது தான் அலிபாபாவின் சொத்துக்கள். அத்துடன் தினம் விறகு வெட்ட அவன் காட்டிற்குச் செல்லும் சமயத்தில் விறகை சுமக்க அந்த மூன்று கழுதைகளையும் அலிபாபா உடன் அழைத்துச் செல்வான். இப்படித்

தான் அவன் மிகவும் எளிமையாக வாழ்ந்து வந்தான்.

இப்படியாக அலிபாபா ஒரு நாள் விறகு வெட்ட காட்டிற்குச் சென்ற சமயத்தில் ஒரு பெரிய சத்தத்தைக் கேட்டான். சிறிது நேரத்தில் ஒரு பெரிய தூசு மண்டலம் வானில் எழுந்ததை அவன் பார்த்தான். அந்த திசையை நோக்கிச் சென்றான். நாற்பது குதிரைகளில் அமர்ந்தபடி சிலர் அதிவேகமாக வந்து ஒரு குகையின் வாயிலில் நின்று கொண்டு இருப்பதைக் கண்டான். அவர்கள் "திறவாய் சிம் சிம்" என்று சொல்ல அந்தக் குகையின் பாறைகள் போன்ற அமைப்பு மெல்ல விலகி அந்தக் குகை மெல்லத் திறக்கத் தொடங்கியது. பிறகு அந்த நாற்பது வீரர்களும் எண்ணற்ற மூட்டைகளில் தங்கம், வைரம், அழகான உடைகள் எனப் பலதரப்பட்ட செல்வங்களை வைத்து இருந்ததை பார்த்தான் அலிபாபா. அத்துடன் அந்த நாற்பது பேரும் தங்களுக்குள் பேசிக் கொண்டு இருப்பதை கவனித்த அலிபாபா அவர்கள் பேச்சில் இருந்து அவர்கள் அனைவருமே எதற்கும் துணிந்த கொள்ளையர்கள் தான் என்று அறிந்து கொண்டான். அத்துடன் அவர்கள் அனைவரும் அந்தக் குகைக்குள் சென்றனர். அவர்கள் அவ்வாறு சென்ற மறு நிமிடம் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள நினைத்த அலிபாபா சத்தம் போடாமல், காலணிகளைக் கூட மறைவான இடத்தில் வைத்து விட்டு மெல்ல ஓடிச் சென்று புதர்களுக்கு ஊடே சென்று கொண்டு இருந்த ஒற்றை அடிப் பாதையில் தனது கழுதைகளையும் அனுப்பி விட்டு அங்கு நின்ற பெரிய மரம் ஒன்றில் ஏறி அமர்ந்து கொண்டான். அலிபாபாவால் அங்கு நடப்பவை எல்லாவற்றையும் தெள்ளத் தெளிவாகக் காண முடிந்தது.

இதற்கு இடையில் அந்தக் குகைக்குள் சென்றவர்கள் வெகு நேரம் கழித்துத் திரும்ப வெறும் கையுடன் வந்தார்கள். அதன் மூலம் கொள்ளையர்கள் நாற்பது பேரும் தம்முடன் கொண்டு வந்த கொள்ளை அடித்த பொருட்களை எல்லாம் அந்தக் குகையில் கொண்டு வைக்கத் தான் உள்ளே சென்று இருக்கிறார்கள் என்பதை அலிபாபா தெரிந்து கொண்டான். பிறகு அந்தக் குகையை விட்டு வெளியே வந்த கொள்ளையர்கள் "மூடுக சிம் சிம்" என்று சொல்ல அந்தக் குகை உடனே மூடிக் கொண்டது. அதன் பிறகு அவர்கள் எல்லோரும் தத்தமது குதிரைகளில் விரைந்து சென்றார்கள். முன்னே செல்பவன் தான் அந்தக் கூட்டத்தின் தலைவனாக இருக்க வேண்டும் என்பதை அலிபாபா யூகித்துக் கொண்டான். அந்தக் கொள்ளையர்கள் அனைவருமே சென்று விட்டார்கள் என்பதை உறுதி செய்த பின்னர் தான் அலிபாபா மரத்தில் இருந்து இறங்கினான்.

# அலிபாபா செல்வங்களை கள்வர் குகையில் இருந்து கவர்தல்

கள்வர் குகையின் வாயிலை அடைந்த அலிபாபா அங்கு நின்றபடி "திறவாய் சிம் சிம்" என்று கூறியதும் உடனே அந்தக் குகையின் வாயில் திறந்து கொண்டது. அந்தக் குகையினுள் சென்றான் அலிபாபா. அந்தக் குகை ஒரு பெரிய கூடத்தைப் போலக் காட்சி அளித்தது. அங்கு பொற் கட்டிகளும், மணியும், நகையும் போதும் போதும் என்ற அளவுக்குக் கொட்டிக் கிடந்தது. அலிபாபா காலத்தை வீணாக்க விரும்பாமல் அங்கு காணப்பட்ட பொற்காசுகளை எடுத்து சிந்தாமல் சிதறாமல் இரண்டு மூட்டைகளைக் கட்டினான். வேறு எந்தப் பொருளையும் அலிபாபா தொடவும் இல்லை கலைக்கவும் இல்லை. கொள்ளையர்கள் வைத்து விட்டுப் போனது போன்றே மற்ற அனைத்தும் காணப்பட்டது. பிறகு பேராசை குணம் இல்லாத அலிபாபா அந்த இரண்டு மூட்டை பொற் காசுகளை மட்டும் எடுத்துக் கொண்டு மெல்ல நடந்து சென்று குகையின் வாயிலை அடைந்தான். பின்னர் "மூடுக சிம் சிம்" என்று அந்த மந்திரத்தை சொல்ல அந்தக் குகையின் வாசல் மூடிக் கொண்டது தான் வந்த சுவடே தெரியாமல் அலிபாபா பொற்காசுகளைக் கொண்ட மூட்டையை கழுதையின் மீது ஏற்றியபடி தனது வீட்டை அடைந்தான்.

இப்படியாகத் தனது வீட்டை அடைந்த அலிபாபா, தொழுவத்திற்குச் செல்லும் பாதை வழியாகக் கழுதைகள் இரண்டையும் ஒட்டிக் கொண்டு சென்றான். பின்னர் பொன் மூட்டைகளை மெல்ல எடுத்து வந்து வீட்டின் ஒரு அறையில் பத்திரமாக வைத்தான். அப்படி அலிபாபா பொன் மூட்டைகளை வைத்த மாத்திரத்தில் அதில் இருந்து எழும்பிய சத்தம் அவனது மனைவிக்கு சந்தேகத்தை ஏற்படுத்தியது. அடுப்பபடியில் இருந்து விரைந்து வந்தவள் அலிபாபா கொண்டு வந்த மூட்டைகளைப் பார்த்தாள்.

"உள்ளே இருப்பவை பொற் காசுகள் தானே?" என்று அலிபாபாவிடம் கேட்டாள்

"ஆம் நூர்ஜஹான்! ஆனால் உனக்கு எப்படி இது தெரிந்தது?" என்று கேட்டான் அலிபாபா.

"மூட்டைக்குள் நாணயங்கள் ஒன்றுடன் ஒன்று சேர்ந்து குலுங்கும்

சத்தத்தைக் கேட்டேன் அதன் மூலமாக அறிந்து கொண்டேன்" என்று கூறினாள் அலிபாபாவின் ஆருயிர் மனைவியான நூர்ஜஹான். தனது மனைவியின் புத்திசாலித்தனத்தைக் கண்டு ஆச்சர்யம் அடைந்தான் அலிபாபா.

நூர்ஜஹானோ அலிபாபாவை சந்தேகம் வரும் படியாகப் பார்த்தாள். அதனை அவளது பார்வையிலேயே உணர்ந்து கொண்டான் அலிபாபா. அத்துடன் நூர்ஜஹானிடம் நடந்த அனைத்து உண்மைகளையும் கூறினாள். அதைக் கேட்ட நூர்ஜஹான் "கொள்ளையர்கள் விஷயத்தில் கொஞ்சம் கவனமாக இருங்கள்" என்று தனது ஆருயிர் கணவரான அலிபாபாவை எச்சரிக்கை செய்தாள். தனது மனைவி கூறிய வார்த்தையில் இருந்த உண்மையை உணர்ந்த அலிபாபா, "இதற்கு மேல் நான் அந்தக் குகையின் பக்கம் செல்ல மாட்டேன். நமக்கு கிடைத்த இந்த செல்வத்தை வைத்தே நாம் சந்தோஷமாக வாழ்வோம்" என்றான். அதைக் கேட்டு அவனது மனைவியும் மகிழ்ந்தாள்.

பிறகு அலிபாபாவும், நூர்ஜஹானும் ஒன்றாக உணவு அருந்தினார்கள். அப்போது நன்றாகவே இருட்டியும் விட்டது. இந்த சமயத்திற்காகத் தான் அலிபாபாவும் காத்துக் கொண்டு இருந்தான். தனது மனைவியிடம் தான் அந்தப் பொற் காசுகளை பத்திரமாக நமது சின்னஞ் சிறய தோட்டத்தில் இரவோடு இரவாக புதைத்து பத்திரப் படுத்தி வைப்போம். அத்துடன் இப்போதைக்குப் புழக்கத்திற்கு சில நாணயங்களை எடுத்து வைத்துக் கொள்வோம் என்றான்.

அதைக் கேட்ட அலிபாபாவின் மனைவியான நூர்ஜஹான், "அவசரப் படாதீர்கள். நம்மிடம் உள்ள தங்க நாணயத்தின் இருப்பு நமக்குத் தெரிய வேண்டாமா? அப்போது தானே நாம் அதனை எப்படிப் பயனுள்ளதாக செலவழிக்கலாம் என்பதைத் திட்டம் இட முடியும். அதனால் நான் ஓடிச் சென்று தங்கள் அண்ணியாரிடம் இருந்து "படியை" அளப்பதற்கு வாங்கிக் கொண்டு வந்து விடுகிறேன்" என்றாள்.

"அண்ணியாரும், அண்ணனும் பேராசை கொண்டவர்கள் அதனால் அவர்களிடம் எதுவும் சொல்லிவிடாதே" என்று எச்சரிக்கை செய்தான் அலிபாபா.

"கவலைப் படாதீர்கள். நான் எதையும் சொல்ல மாட்டேன்" என்று கூறியபடி நூர்ஜஹான் காசிமின் வீட்டை அடைந்தாள். காசிமின்

மனைவியான ரசியா பேகம், நூர்ஜஹான் வந்த விஷயத்தைப் பற்றிக் கேட்டறிந்தாள். பிறகு இந்த இரவு நேரத்தில் எதை அளப்பதற்குப் படி கேட்கிறாள் என்பதை அறிவதற்காக வீட்டின் உள்ளே சென்று கொஞ்சம் சக்கைப் பிசினை (பலாப்பழத்தின் பிசினை) படியின் அடியில் தடவிக் கொடுத்தாள். எதை அளந்தாலும் படியில் ஒட்டிக் கொள்ளும் நாம் அதன் மூலமாக விஷயத்தை சுலபமாக அறிந்து கொள்ளலாம் என்ற எண்ணத்தில் தான் ரசியா இவ்வாறு செய்தாள். இதனை அறியாத நூர்ஜஹானும் நன்றியுடன் அளக்கும் அந்தப் படியைப் பெற்றுக் கொண்டு தனது வீட்டிற்கு ஓடினாள்.

பிறகு கள்வர் குகையில் இருந்து கொண்டு வந்த பொற் காசுகளை அந்தப் "படி" யின் உதவியால் அளந்து, அளந்து ஒரு மூட்டையில் கட்டி பத்திரமாக அதனைத் தோட்டத்தில் புதைத்தனர் அலிபாபாவும் அவனது மனைவியும். அதில் மட்டுமே கவனம் செலுத்தியதால் அலிபாபாவும் அவனது மனைவியும் "படி" யில் தடவப் பட்டு இருந்த அந்தப் பிசினைப் பற்றி அறியத் தவறிவிட்டனர். தவிர அவர்கள் வழக்கப்படி இரவில் இன்னொருவர் படியை வைத்து இருக்கக் கூடாது என்பதால் அவசர அவசரமாக அலிபாபாவின் மனைவியான நூர்ஜஹான் காசிமின் மனைவியான ரசியா பேகத்திடம் ஓடிச் சென்று ஒரே இரவில் அவள் கொடுத்த "படி" யை ஒப்படைத்தாள். பிறகு மீண்டும் விரைந்து வந்து தனது வீட்டை அடைந்தாள்.

# அலிபாபாவின் அண்ணன் காசிமின் பேராசையும் அவன் மரணமும்

காசிமின் மனைவி வீட்டிற்குள் "படி"யை எடுத்துச் சென்று அதனுள் பார்க்கவும் ஒரு தங்க நாணயம் அதில் ஒட்டிக் கிடந்தது. அதனை எடுத்துப் பார்த்த அவளுக்கு ஒரே ஆச்சர்யம்.

"பொன் நாணயங்களை அளக்கும் அளவுக்கு அலிபாபா பணக்காரன் ஆகி விட்டானா? அவனுக்கு அவ்வளவு பொற்காசுகள் எங்கு இருந்து வந்திருக்கும். இத்துடன் இதனை விடக் கூடாது" என்று தனது மனதுக்குள் கூறிக் கொண்டவளாக தனது அன்புக் கணவர் காசிம், வீட்டை அடைந்த மாத்திரத்தில் அவரிடமும் இதுபற்றிக் கூறி ஆச்சர்யம் அடைந்தாள். காசிமும் அதைக் கேட்டு வியந்தான். பிறகு காசிமின் மனைவி அவனிடம், "தங்கள் தம்பியான அலிபாபாவிடம் எப்படி அவ்வளவு பொற்காசுகள் வந்தது எப்படியாவது சென்று தெரிந்து விட்டு வாருங்கள்" என்று கூறி அனுப்பினாள். அதன் அடிப்படையில் காசிமும் அலிபாபாவைத் தேடி அந்த ரகசியத்தைப் பற்றி எப்படியாவது அறிந்தாக வேண்டும் என்ற எண்ணத்தில் கிளம்பினான். சிறிது நேரத்திற்கெல்லாம் அலிபாபாவின் வீட்டை அடைந்தான் காசிம்.

காசிம் அலிபாபாவின் வீட்டை அடைந்த நேரத்தில் அலிபாபாவின் மனைவி அந்தக் கொள்ளையர்களின் குகை இருக்கும் சரியான இடத்தைக் கேட்டுக் கொண்டு இருக்க அலிபாபா அதனைத் தனது மனைவியிடம் விளக்கிக் கொண்டு இருந்தான். அதனைக் காசிம் முழுவதுமாக ஒட்டுக் கேட்டு முடித்தான்.

பின்னர் முகத்தில் புன்னகையை வர வழைத்துக் கொண்டு "தம்பி அலிபாபா" என்று அன்புடன் கூறிய படி காசிம் அலிபாபாவின் வீட்டினுள் நுழைந்தான். வீடு தேடி வந்தத் தனது அண்ணனை அலிபாபா அன்புடன் வரவேற்றான்.

வந்ததும் வராததுமாக காசிம் அலிபாபாவிடம், "தம்பி, என்னிடமும் நீ சொல்லக் கூடாதா, நானும் வந்திருப்பேனே உனக்கு உண்மையில் எப்படித் தங்க நாணயங்கள் கொட்டிக் கிடந்த அந்தப் பொக்கிஷ குகையைப் பற்றித் தெரிந்தது" என்று கேட்டான்.

மேற்கண்ட இந்த வார்த்தையை காசிம் சொன்ன மாத்திரத்தில் அலிபாபாவுக்கு புரிந்து விட்டது. "அண்ணனுக்கு முக்கால் வாசி உண்மை தெரிந்து விட்டது. இனியும் மறைத்துப் பிரயோஜனம் இல்லை" என்று தனது மனதினுள் சிந்தித்தவனாய் காசிமிடம் அனைத்து உண்மைகளையும் கூறி முடித்தான். தனது தம்பி கூறிய அனைத்தையும் நன்றாகக் கேட்டுக் கொண்டான் காசிம். பிறகு வந்த வேலை நல்லபடியாக முடிந்தவுடன் "அலிபாபா போன்ற ஏழைப் பிச்சைக் காரனின் வீட்டில் கை நினைப்பது கூட தரித்திரம் தான்" என்று மனதினில் நினைத்தவனாய் அலிபாபாவிடம் விடைகூட பெறாமல் வேகமாகக் கிளம்பினான் காசிம். தனது மாளிகையை அடைந்தான்.

அன்றைய இரவு முழுவதும் காசிம் தூங்கக் கூட இல்லை. "அலிபாபா எடுத்து வந்ததை விட அதிக செல்வங்களை எடுத்து வர வேண்டும். அவன் இரண்டு கழுதைகளில் செல்வத்தை கொண்டு வந்தான். நாம் பன்னிரண்டு கழுதைகளில் செல்வங்களைக் கொண்டு வர வேண்டும். அந்த செல்வங்களைக் கொண்டு இதை விடப் பெரிய மாளிகையை கட்ட வேண்டும். இந்த ஊருக்கே ராஜாவாக வேண்டும்" என்றெல்லாம் மனக் கோட்டை கட்டிக் கொண்டு இருந்தான் காசிம்.

தனது தம்பி கூறியதை மனத்தில் கொண்டவனாய் மறுநாள் காசிம் பன்னிரண்டு கழுதைகளை வாடகைக்கு எடுத்துக் கொண்டு சென்றான். அலிபாபா இரண்டு கழுதைகள் நிறையத் தானே செல்வத்தை கொண்டு வந்தான், நாம் பன்னிரண்டு கழுதைகள் நிறைய செல்வங்களை வாரிக் கொண்டு வந்து விடலாம் என்ற  பேராசையில் தான் பன்னிரண்டு கழுதைகளை வாடகைக்கு எடுத்துக் கொண்டு இருப்பத்தி நான்கு கோணிப் பைகளையும் உடன் எடுத்துக் கொண்டு சென்றான்.

அலிபாபா தன்னிடம் சொன்ன படி அவன் தனக்குக் கூறிய அதே பாதை வழியாகச் சென்றான். செல்லும் சமயத்தில் "திறவாய் சிம் சிம்" என்றும் "மூடுக சிம் சிம்" என்றும் மனதிற்குள் திரும்பத் திரும்ப சொல்லியபடி சென்றான் காசிம். ஆனால், ஏனோ அந்த வார்த்தைகளை அவன் ஒரு குறிப்பில் குறித்துக் கொள்ள வேண்டும் என்று கூடத் தோன்றவில்லை. அது அவனது விதி என்று தான் சொல்ல வேண்டும்.

கள்வர் குகையின் வாயிலை அடைந்த காசிம் தான் கொண்டு வந்த பன்னிரண்டு கழுதைகளையும் சற்றும் யோசிக்காமல்  குகையின் வாயிலில் கட்டி வைத்தான். பிறகு அலிபாபா தன்னிடம் சொன்ன படி

"திறவாய் சிம் சிம்" என்று கூறக் குகையின் வாயில் திறந்தது. அதற்குள் காசிம் உள்ளே சென்றான் அந்தக் குகையின் கதவு தானாக மூடிக் கொண்டது.

குகைக்குள் சென்ற காசிம் அங்கு மலை போல காணப்பட்ட ரத்தினங்களைக் கண்டு மலைத்துப் போனான். விலை உயர்ந்து ஆடைகள் அனைத்தும் அங்கு பல தலைமுறைகளுக்குக் கொட்டிக் கிடந்தன. கணக்கில்லா மூட்டைகளில் பொற்காசுகள் காணப்பட்டன. அதனை வாரி, வாரி கொடுத்தாலும் ஒரு நாட்டுக்கே பல வருடங்கள் கொடுத்துக் கொண்டே இருக்கலாம். இதைத் தவிர வெள்ளிச் சாமான்கள் கணக்கில்லாமல் அடுக்கி வைக்கப் பட்டு இருந்தது. அதைப் பார்த்த காசிம் தான் எதற்காக வந்தோம் என்பதையே சில மணி நேரங்களுக்கு மறந்து ஆனந்தத் தாண்டம் ஆடினான்.

பிறகு ஓடிச் சென்று பொற்காசுகளை எடுத்து எடுத்து மழை போல தன் மேல் வாரி இறைத்து விளையாடினான். அதனால் பொற்காசுகள் எங்கும் சிதறியது. அங்கு காணப்பட்ட நகைகளை எல்லாம் எடுத்துப் போட்டுக் கொண்டான். அப்போது காசிமின் வாயெல்லாம் பல்லாக இருந்தது. பிறகு தான் கொண்டு வந்த இருபத்தி நான்கு கோணிப் பைகளிலும் தங்கக் காசுகளையும், வெள்ளிச் சாமான்களையும், வைரக் கற்களையும், உயர் ரக ஆடைகளையும் இன்னும் பலப் பல விலை உயர்ந்த பொருட்களையும் அடைத்தான். அத்தனையையும் அவன் ஒரு ஆள் தூக்கிக் கொண்டு போக முடியுமா என்று கூட அவன் அப்போது யோசிக்க வில்லை. பேராசை காசிம்மின் கண்களை மட்டும் அல்ல அவனது புத்தியையும் மறைத்தது.

இப்படியாக கஷ்டப்பட்டு தான் கோணியில் அடைத்த செல்வங்களை எல்லாம் பல மணி நேரம் பாடுபட்டுத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு சென்று ஒவ்வொன்றாக குகையின் வாயில் கதவின் அருகில் வைத்தான் காசிம். அந்தக் களைப்பில் அப்படியே சிறிது நேரம் அமர்ந்து விட்டான். பிறகு களைப்பு நீங்கி "திற குகையே" என்று கத்தினான் குகை திறக்கவில்லை. காரணம் காசிம் அந்தக் குகை துறக்க உண்மையில் சொல்ல வேண்டிய வார்த்தையை மறந்து விட்டான். பிறகு வாய்க்கு வந்த அத்தனை வார்த்தைகளையும் சொன்னான் குகை திறக்கவே இல்லை. சரியாகச் சொல்ல வேண்டியதை உச்சரித்தால் தானே குகை திறக்கும்!

காசிம் அலறித் துடித்தான். இனி என்ன ஆகப் போகிறதோ என்று அழுதான், கத்தினான். ஆனால் அவனைக் காக்க யாரும் அந்தக் குகைக்குள் இல்லை. இப்படி இருக்கும் சமயத்தில், எண்ணற்ற குதிரைகளின் காலடி ஓசையைக் கேட்டான்.

கொள்ளையர்கள் வந்து விட்டதை அவன் உணர்ந்தான். உடனே தான் மூட்டை, மூட்டையாகக் கட்டிய செல்வங்களை எல்லாம் குகையின் வாயிலிலேயே போட்டு விட்டு குகைக்குள் ஓடிச் சென்று ஒரு மறைவான இடத்தில் ஒளிந்து கொண்டான். இது இப்படி இருக்க குகையின் வாயிலை அடைந்த கொள்ளையர்கள், தங்கள் குகையின் பக்கத்தில் மேய்ந்து கொண்டு இருந்த கழுதைகளைப் பார்த்ததுமே அதிர்ச்சி அடைந்தனர். எவனோ ஒருவன் உள்ளே எப்படியோ நுழைந்து விட்டான் போல இருக்கிறதே என்ற எண்ணியவர்களாய் "திறவாய் சிம் சிம்" என்ற அந்த மந்திரச் சொல்லைக் கூறினர். உடனே அந்தக் குகையின் வாயில் திறந்தது. நாற்பது கொள்ளையர்களும் விரைந்து அந்தக் குகைக்குள் சென்றனர். உள்ளே பொற்காசுகள் அனைத்தும் ஆங்காங்கே இறைந்து கிடப்பதைக் கண்டான் அந்தக் கொள்ளையர்களின் தலைவன். உடனே தனது சகாக்ககளை அந்த குகை முழுவதும் சல்லடை போட்டுத் தேடச் சொன்னான். அவர்களும் தேடினர் இறுதியில் காசிம் அகப்பட்டுக் கொண்டான். அவனைத் தர தரவென்று இழுத்து வந்து தங்கள் தலைவர் முன்னாள் நிறுத்தினார்கள் கொள்ளையர்கள்.

கொள்ளைக் கூட்டத்தின் தலைவன் காசிமை வெறி கொண்டு பார்த்தான். அந்தப் பார்வையிலேயே காசிம் கதி கலங்கிப் போனான். தான் தெரியாமல் குகைக்குள் வந்து விட்டதாகவும், தனக்கு எந்த செல்வங்களும் வேண்டாம் என்றும், உயிருடன் விட்டால் அது ஒன்றே போதும் என்றும் கொள்ளைக் கூட்டத்தின் தலைவனின் கால்களில் விழுந்து கெஞ்சினான் காசிம். ஆனால், அந்தக் கொள்ளைக் கூட்டத்தின் தலைவன் காசிமை விடுவதாக இல்லை. தனது சகாக்களிடம் அவனை நான்கு துண்டுகளாக வெட்டி எறியுமாறு கூற, அவர்களும் வாழைக் காயை வெட்டுவது போல காசிமின் உடலை நான்கு துண்டுகளாக வெட்டி எறிந்தனர். அத்துடன் நிற்காமல், இனிமேல் யாராவது இந்தக் குகைக்குள் வந்தால் அவர்களுக்கு இது ஒரு எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்ற எண்ணத்தில் நான்கு துண்டுகள் ஆக்கப்பட்ட காசிமின் உடலை நான்கு மூலைகளில் கட்டித் தொங்கவிட்டனர். அதன் பின்னர் தான் அவர்கள் அமைதி அடைந்து தாங்கள் கொண்டு வந்த கொள்ளைப்

பொருட்களை பத்திரமாக குகைக்குள் வைத்து விட்டு குகையின் வாயிலை நாற்பது பேரும் அடைந்தனர். பிறகு மீண்டும் "மூடுக சிம் சிம்" என்று சொல்ல அந்தக் குகை மூடிக் கொண்டது. மற்றபடி அலிபாபா அதற்கு முன் கொண்டு சென்ற இரண்டு மூட்டைகள் பற்றி எல்லாம் அவர்களுக்குத் தெரியவில்லை. காசிம் தான் அங்குக் கொஞ்சம் இங்குக் கொஞ்சமாகப் பேராசை பிடித்து வாரிக் கொட்டிச் சிதறியது தான் நிறைய அளவில் எடுத்தது போன்று இருந்தது.

இது ஒரு புறம் இருக்க காசிமின் வருகையை அவனுடைய மனைவி ஆவலுடன் எதிர்பார்த்துக் காத்துக் கொண்டு இருந்தாள். போன கணவன் தங்க வேட்டை நடத்தி பொன்னையும், பொருளையும் எடுத்து வருவான் என்று ஆசை ஆசையாக இங்கும், அங்குமாக உலாவிக் கொண்டு இருந்தாள். அவளது கால்கள் தரையில் நிற்கவில்லை என்று தான் சொல்ல வேண்டும். எனினும், நேரம் தான் போய்க் கொண்டே இருந்ததே தவிர காசிம் வந்த பாடு இல்லை. அதிகாலையே கள்வர் குகையைத் தேடிச் செற்ற காசிம் வெகு நேரம் ஆகியும் திரும்பாததால் அவனது மனைவி மிகவும் கவலை கொண்டாள். கண் கலங்கித் தவித்தாள். இறுதியில் அலிபாபாவின் வீட்டுக் கதவைத் தட்டினாள்.

அலிபாபாவோ, "இந்த நேரத்தில் யார் வந்து இருப்பார்கள்?" என்ற கேள்வியுடன் கதவைத் திறந்தான். கலங்கிய கண்களுடன் அவனது அண்ணியார் நின்று கொண்டு இருந்தார்கள். எந்த அண்ணியார் அவனை ஒரு காலத்தில் ஏளனப் படுத்தினார்களோ அதே அண்ணியார் இப்போது உதவி கேட்டு அலிபாபாவின் வீட்டு வாசலில் நின்று கொண்டு இருந்தார்கள்.

வீடு தேடி வந்த தனது அண்ணியாரை அன்புடன் வரவேற்றான் அலிபாபா. அவனிடம் அழுதுகொண்டே, "அலிபாபா, கள்வர் குகைக்கு சென்ற உனது அண்ணன் இதுவரையில் வரவில்லை. அது எனக்கு மிகுந்த கவலையாக உள்ளது. அத்துடன் அவருக்கு என்ன நேர்ந்ததோ என்ற அந்தக் கவலை இப்போது என்னைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தின்று கொண்டு இருக்கிறது. எனக்கு தயவு செய்து உதவி செய்" என்றாள்.

அண்ணியின் வார்த்தையைக் கேட்ட அலிபாபா, "அண்ணனுக்கு ஏதும் ஆகாது. அவர் வந்து விடுவார். கவலைப் படாதீர்கள். அவர் நிறைய செல்வங்களை அள்ளிக் கொண்டு வர வேண்டும் என்று நினைத்து

இருப்பார் அதனால் சுமக்க முடியாமல் கழுதைகள் மெதுவாக வந்து கொண்டு இருக்கும். அவ்வளவு தான்" என்று அறுதல் கூறி அனுப்பி வைத்தான். அலிபாபா அவ்வாறு சொல்லிய மாத்திரத்தில் அவனது அண்ணியார் சிறிதே தைரியம் கொண்டாள். பிறகு இருள் சூழ்ந்து இருந்ததால் அலிபாபாவே தனது அண்ணியாரை அவளது வீடு வரையில் கொண்டு போய் விட்டான்.

பிறகு தனது வீட்டுக்குத் திரும்பிய அலிபாபா அண்ணனை நினைத்துக் கவலை கொண்டான். அந்த இரவு வேளையில் அவனால் சரியாகத் தூங்கக் கூட முடியவில்லை. இன்னும் சொல்லப் போனால் இவ்வளவு நேரம் ஆகியும் தனது அண்ணன் வர வில்லை என்றால் அவருக்கு ஏதோ ஒரு ஆபத்து நேர்ந்திருக்கும் என்று அவனது உள் மனம் அவனிடம் சொல்லியது. அத்துடன் ஒருவேளை தனது அண்ணனுக்கு ஏதேனும் அசம்பாவிதம் நடந்து இருந்தால் அவனது பிணத்தைப் பகலில் கொண்டு வர முடியாது; நிச்சயமாக அனைவருக்கும் தெரிந்து போய் விடும் என்று எண்ணிய அலிபாபா ஒரு முடிவுக்கு வந்தான். தனது மனைவி நூர்ஜஹானை அழைத்து அவளிடம் சொல்லி விட்டு அந்த இரவு வேளையில் தனது இரு கழுதைகளுடன் புறப்பட்டுச் சென்றான். அன்றைய தினம் அமாவாசையாக இருந்தாலுமே வானம் தெளிவாக இருந்ததால் அவன் இருட்டைப் பற்றிக் கவலை கொள்ள வில்லை. குகையினுள் இரவு, பகலாக பெரிய எண்ணெய் விளக்குகள் எரிந்து கொண்டு இருந்ததைப் பார்த்தவன் ஆனதினால் அலிபாபா குகையினுள் செல்வதற்கும் அஞ்சவில்லை. எனினும், அவனது கவலை எல்லாம் அவனது அண்ணனைப் பற்றியே இருந்தது. நிச்சயம் தனது அண்ணன் உயிருடன் இல்லை என்பதை மட்டும் அவனது மனம் திரும்பத் திரும்ப அவனிடம் சொல்லிக் கொண்டே இருந்தது.

அந்த மன நிலையில் தான் அலிபாபா கள்வர் குகையின் வாயிலை அடைந்தான் "திறவாய் சிம் சிம்" என்று அவன் சொல்ல, அந்தக் குகையின் வாயில் வழக்கம் போலத் திறந்து கொண்டது. தனது அருமை அண்ணனின் பெயரைச் சொல்லி அழைத்த வண்ணம் உள்ளே சென்றான் அலிபாபா. ஒரு இடத்தில் ரத்தம் ஆறு போலப் பாய்ந்து உறைந்து கிடந்தததைக் கண்டான். அது வந்த வழியைப் பின் பற்றி சென்ற அலிபாபா தனது அண்ணனின் நான்கு துண்டுகளான உடலைக் கண்டான். அந்தக் கோரக் காட்சியை கண்ட மட்டில் அழுது துடித்தான். பிறகு முதல் வேலையாக அந்த நான்கு துண்டான உடலை ஒன்றாக சேர்த்து வைத்துக் கட்டினான். அதனை ஒரு மூட்டைக்குள்

அடைத்தான்.  குகையின் வாயிலை அடைந்தான். பின்னர் அந்தக் குகையின் வாயிலை மூடும் மந்திரத்தை அலிபாபா உச்சரிக்கவும் அந்தக் குகையின் வாயில் கதவு மூடிக் கொண்டது.

வருத்தத்துடன் தனது உடன் பிறந்தவனின் துண்டாடப் பட்ட உடலை கழுதையின் மீது மூட்டையில் வைத்து ஏற்றியவண்ணம் அண்ணனின் வீட்டை அடைந்தான் அலிபாபா. அங்கு வெளித் திண்ணையில் படுத்து இருந்த அண்ணன் வீட்டுப் பணிப் பெண்ணான "மெர்ஜியானாவை" மெல்ல அழைத்து வெளியே கூட்டி வந்து விஷயத்தை சொல்லிக் கொண்டு இருந்த போது பேசும் குரல் கேட்டுக் காசிமின் மனைவி எழுந்து வந்து விட்டாள். தனது கணவர் கொள்ளைக் காரர்களால் கொல்லப்பட்டதை அறிந்தாள். அதனால் அதிர்ந்தாள். கண்ணீர் அவள் கண்களை முட்டிக் கொண்டு வந்தது. வாய் உலர்ந்து போனது. அதைக் கண்ட அலிபாபா அண்ணனின் உடல் துண்டாடப் பட்டு இருப்பதால் அழுது புலம்பி ஊரைக் கூட்டி விடக் கூடாது என்றும், பின்னர் பெரிய வழக்காகி விடும் என்றும் கூறினான். எனவே அவள் தனது அழுகையை கட்டுப் படுத்திக் கொண்டாள்

# மொர்ஜியானாவின் அறிவுக் கூர்மை

அலிபாபாவின் அண்ணன் இறந்து விட்ட சோகம் ஒரு புறம் இருக்க அண்ணனின் பணிப்பெண் "மொர்ஜியானா" அறிவும், திறமையும், அழகும் ஒருங்கே கொண்டவள். அதனால் எப்படிப்பட்ட பிரச்சனையையும் அவள் எளிதில் சமாளித்து விடுவாள். இது அலிபாபாவிற்கும் தெரியும். அதனால் அவளை அணுகி, "மொர்ஜியானா! நீ எனக்கு ஒரு பெரும் உதவியை செய்ய வேண்டும். அது யாதெனில், வெட்டப்பட்ட எனது அருமை அண்ணனின் உடலை அப்படியே அடக்கம் செய்ய முடியாது. அதனால் நீ என் பொருட்டு அதனைத் தைத்து விட யாரையாவது அழைத்து வர வேண்டும். அதாவது இன்னும் விளக்கமாகச் சொல்ல வேண்டும் எனில் ஓட்டுப் போட்டு துண்டாடப்படாத உடல் போன்று நீ செய்ய வேண்டும். அது உனது கையில் தான் உள்ளது, இதோ இந்தத் தங்க காசுகளை வைத்துக் கொண்டு ஆக வேண்டிய வேலையைப் பார்" என்று கூறியபடி மொர்ஜியானாவிடம் கொஞ்சம் பொற்காசுகளைக் கொடுத்தான் அலிபாபா.

எனினும் மொர்ஜியானா கொஞ்சம் தயங்கினாள். அவள் எங்கே போக மறுத்து விடுவாளோ என்று நினைத்துக் கவலை கொண்ட காசிமின் மனைவி அவளிடம்," மொர்ஜியானா! எனது பேராசையாலும் விதி வசத்தாலும் எனது கணவருக்கு இப்படி ஆகி விட்டது. எனது கணவர் இப்படி வெட்டப் பட்டு இறந்து விட்டார் என்ற செய்தி யாருக்கும் தெரியக் கூடாது. அது அவருக்கு இழுக்கைத் தரும். அதனால் இதனை மிகவும் ரகசியமாக வைத்துக் கொண்டே ஆக வேண்டும். அதனால் தயவு செய்து என்னை உனது சகோதரியாக பாவித்து எனக்காக அலிபாபா சொன்னபடி இந்த உடலை தைக்க யாரையாவது அழைத்து வா" என்றாள்.

எப்போதுமே ஆணவத்துடன் காணப்படும் காசிமின் மனைவி ரசியா மிகவும் பணிந்து கேட்பதைப் பார்த்த மொர்ஜியானா ஆச்சர்யம் அடைந்தாள். ஆம்! அன்றைய தினம் இறந்தது காசிம் மட்டும் அல்ல, காசிமின் மனைவி ரசியா வின் ஆணவமும் தான். தனது கணவர் காசிம் இறந்ததற்கு தானும் ஒரு காரணம் என்பதை ரசியா நன்கு உணர்ந்து இருந்தாள். இதனை அவளது பேச்சில் இருந்தே அறிந்து கொண்டாள் மொர்ஜியானா. இனியும் தாமதிக்கக் கூடாது என்று முடிவு செய்த

மெர்ஜியானா அலிபாபா சொன்னபடி அந்த இரவில் தனது முகத்தை முக்காடு இட்டு மறைத்தபடி பாபா முஸ்தபா என்ற தையற்காரர் வீட்டிற்குச் சென்றாள்.

பாபா முஸ்தபா சவ சேலையைத் தைத்துக் கொடுக்கும் பழக்கம் உள்ளவர். அவரிடம் ஒரு பொற்காசைக் கொடுத்த மெர்ஜியானா காசிமின் உயரம் பற்றி எண்ணியவளாய், அவரிடம் "பெரியவரே! கிட்டத்தட்ட ஆறடிக்கு ஒரு சவச் சேலையைத் தைத்துக் கொடுக்க வேண்டும்" என்றாள். அவரும் உடனே தைத்துத் தருவதாக வாக்களித்தார். பிறகு தான் சற்று நேரத்தில் வெளியில் சென்று வருவதாகக் கூறிய மெர்ஜியானா மீண்டும் அந்தத் தையல் காரரின் வீட்டை அடைந்தாள். அவரிடம் பேச்சுக் கொடுக்கத் தொடங்கினாள்.

"இந்த இரவு வேளையில் நான் கேட்டுக் கொண்டதும் உடனே இரவு வேளை என்று கூட பார்க்காமல் எனக்காக சவச் சேலையை செய்து தர முனைப்புடன் தயார் ஆனதற்கு மிக்க நன்றி" என்றாள்.

அதற்கு முஸ்தபா," அடப் போமா! சாவு என்ன இரவு, பகல் என்றெல்லாம் சொல்லிவிட்டுத் தான் வருகிறதா என்ன? மேலும் நான் உனக்கு ஒன்றைக் கூறுகிறேன் கேள். இந்த இரவு வேளையில் சவச் சேலையை தைக்க நான் ஒப்புக் கொண்டது உண்மையில் உனக்காக அல்ல நீ கொடுத்த பொற் காசுக்காக. இன்னும் இரண்டு பொற்காசுகளைக் கொடுத்தால் இதை விடப் பெரிய வேலையைக் கூட இந்த முஸ்தபா கண நேரத்தில் செய்து விடுவான்" என்று தனது பெருமையைக் கூறினான்.

அதைக் கேட்ட மெர்ஜியானா,"அப்படியா! ஒரு பொற்காசுக்கே இப்படி எனில் நான் நான்கு பொற்காசுகளை உங்களுக்குக் கொடுத்தால் எதை வேண்டுமானாலும் செய்வீர்களா?" என்றாள்.

"நான்கு பொற்காசுகள் என்றால் நான் என்ன வேண்டுமானாலும் செய்வேனே! உயிரைத் தவிர நீ எதைக் கேட்டாலும் கொடுப்பேனே" என்றான் முஸ்தபா.

"உங்கள் உயிர் எல்லாம் எனக்கு வேண்டாம். ஒரு பேச்சுக்கு கிழிந்த சதையைக் கூட தைத்துத் தருவீர்களா?" என்று கேட்டாள் மெர்ஜியானா.

"ஐந்து பொற்காசுகளாகக் கொடுத்தீர்கள் என்றால் கிழிந்த சதை என்ன வெட்டுப் பட்ட உடலைக் கூட இந்த முஸ்தபா நேர்த்தியாகத் தைத்து ஒட்டித் தருவான்" என்றான் அந்தத் தையல்காரன் முஸ்தபா.

"ம்ம்... அது தான் எனக்கும் வேண்டும். தங்களுக்கு நான் ஐந்தல்ல பத்து பொற்காசுகளைத் தருகிறேன். ஏன்? எதற்கு என்றெல்லாம் கேட்காமல் தாங்கள் கண்களை கட்டியபடி இதோ தாங்கள் தைத்து வைத்துள்ள இந்த சவச் சேலையையும், ஊசி, நூலையும் மேலும் தைக்கத் தேவையான உங்கள் இதர பொருட்களையும் உடன் எடுத்துக் கொண்டு என்னுடன் வாருங்கள்" என்று பாபா முஸ்தபாவிடம் கூறினாள் மெர்ஜியானா.

"பத்து பொற்காசு தருவியா?" என்றார் முஸ்தபா.

பத்து பொற்காசுகளை எடுத்து முஸ்தபா பார்க்கும் படியாக மேஜை மீது வைத்தாள் மெர்ஜியானா. அதைப் பார்த்த முஸ்தபா ஆவலுடன் அதனை எடுக்கப் பாய்ந்த சமயத்தில் மெர்ஜியானா மீண்டும் அந்தக் காசை எடுத்து பத்திரமாக சுருக்குப் பையில் பூட்டி முடிந்து கொண்டு," வேலை முடிந்த பிறகு தான் இந்தப் பத்து தங்கக் காசுகளும் உமக்கு சொந்தம்" என்றாள்.

"அதான் காசை காட்டிட்டியே! வா போகலாம். எனக்குத் தேவையான பொருட்களை எல்லாம் நான் பத்திரமாக எடுத்துக் கொண்டேன். இப்போது நீ எனது கண்ணைக் கட்டலாம்" என்றான் முஸ்தபா.

அதன்படியே முஸ்தபாவின் கண்களை ஒரு கறுப்புத் துணியால் கட்டி அந்த நள்ளிரவு வேளையில் யாருமே அறியாதபடி முஸ்தபாவை காசிமின் அரண்மனைக்கு அழைத்துச் சென்றாள் மெர்ஜியானா. செல்லும் வழியில் முஸ்தபா ஒரு வார்த்தை கூட பேசாமல் வந்து கொண்டு இருந்தார். இதைப் பார்த்த மெர்ஜியானாவுக்கு பெரிய வியப்பாக இருந்தது. காரணம் முஸ்தபா எப்போது பார்த்தாலும் சதா பேசிக் கொண்டே இருக்கும் இயல்பு உடையவர். ஆனால், இப்போதோ அவர் அமைதியாக வந்து கொண்டு இருந்தார். "இதுவும் நன்மைக்கே" என்று நினைத்த மெர்ஜியானா காசிமின் வீட்டுப் படியை அடைந்தாள். வீட்டினுள் உள்ளே சென்றாள். பாபா முஸ்தபாவின் கண்களைக் கட்டிய அந்தக் கறுப்புத் துணியை நீக்கினாள். அது மந்தமான வெளிச்சத்தைக் கொண்ட அறையாக இருந்தது. அங்கு இருப்பவர்களின் முகங்களில் முக

முடி காணப்பட்டது. இவ்வளவு ஏன்? இறந்து கிடந்த காசிமின் முகத்திற்கு கூட முக முடி போடப்பட்டு இருந்தது. எனினும், அதைப் பற்றி எல்லாம் கேட்க விரும்பாத பாபா முஸ்தபா தனக்குப் பொற்காசுகள் வந்தால் போதும் என்ற நோக்கில் துண்டு, துண்டுகளாகக் கிடந்த காசிமின் உடலை ஓட்ட வைத்து மிகவும் நேர்த்தியாக தைத்துக் கொடுத்தார். இப்படியாக அந்தத் தைய்யல் காரரின் வேலை முடிந்த மாத்திரத்தில் மீண்டும் அவரது கண்கள் கட்டப்பட்டன. பிறகு மீண்டும் மெர்ஜியானா அந்த நள்ளிரவில் அந்தத் தைய்யல் காரரை அவரது கண்கள் மூடிய நிலையில் அவரது வீடு வரை கொண்டு போய் விட்டாள். அப்போதும் கூட பாபா முஸ்தபா வந்த வழி நெடுகும் ஒரு வார்த்தை கூட பேசாமல் வந்தார். சரி, பெரியவர் பயத்தின் காரணமாக ஏதும் பேசவில்லை போலும் என்று நினைத்தாள் மெர்ஜியானா. ஆனால், உண்மை அது அல்ல பாபா முஸ்தபா தனது வீட்டிற்கும், காசிமின் வீட்டிற்கும் இடையே  ஒவ்வொரு அடியையும் எண்ணிக் கொண்டே வந்தார். முஸ்தபாவின் வீடு வந்ததும் அவரது கைகளில் பொற் காசுகளை கொடுத்து விட்டு மெல்ல நகர்ந்து ஓடினாள் மெர்ஜியானா.

பாபா முஸ்தபா தனது கண்களைத் திறந்து பார்த்த சமயத்தில் அங்கு யாருமே இல்லை. அவரது கையில் மட்டும் பத்து பொற்காசுகள் இருந்தது.

இந்நிலையில் அடுத்த கட்ட நடவடிக்கையாக காசிமின் உடலை சுத்தம் செய்து வாசனைத் திரவியங்களை தெளித்து அதனை அடக்கம் செய்யத் தயார் செய்தாள் மெர்ஜியானா. அக்கம், பக்கத்தினர் பலர் காசிம் இறந்து விட்டதை கேள்விப்பட்டு துக்கம் விசாரிக்க அவரது மாளிகை போன்ற அந்த வீட்டிற்கு வந்தார்கள். வந்தவர்களிடம் காசிம் மாரடைப்பால் இறந்து விட்டார் என்று அவர்கள் நம்பும் விதமாகக் கூறினான் அலிபாபா. இதற்கு இடையில் ஈமச் சடங்குகளை முறைப்படி செய்ய இமாமை அழைத்து வந்தாள் மெர்ஜியானா. அனைத்து சடங்குகளும் முடிக்கப்பட்டு காசிமின் உடல் சவப்பெட்டியில் வைத்து சகல மரியாதைகளுடன் எடுத்துச் செல்லப்பட்டு ஒரு கல்லறையில் புதைக்கப்பட்டது.

காசிமின் வீட்டில் விதவையான காசிமின் மனைவிக்கு அக்கம் பக்கத்துப் பெண்கள் அனைவரும் ஆறுதல் சொல்லிவிட்டுக் கலைந்து போயினர். பணிப்பெண் மெர்ஜியானாவின் அறிவு கூர்மையால் காசிம் வெட்டப்பட்டு இறந்தான் என்ற செய்தி மூடி மறைக்கப்பட்டது.

இதனால் காசிமின் மனைவியும் அவனது தம்பியான அலிபாபாவும் அந்தத் துயரத்திலும் கூட நிம்மதி அடைந்தார்கள். அன்றைய தினம் முதல் அலிபாபாவை அவனது மனைவியுடன் சில காலம் தனது வீட்டிலேயே தங்கும் படியாகக் கேட்டாள் காசிமின் மனைவி. அண்ணியின் சொல் படி அலிபாபாவும் அவ்விடத்திலேயே தங்கினான்.

# மொர்ஜியானா 39 திருடர்களை ஒழித்தல்

காசிம் அடக்கம் செய்யப்பட்டு சில தினங்கள் கழிந்தன.

கொள்ளைக்காரர்கள் சில தினங்கள் பொறுத்து ஒரு நாள் தங்கள் கள்வர் குகைக்கு கொள்ளையடித்த பொக்கிஷங்களுடன் வருகை தந்தனர். குகைக்குள் பிரவேசித்த கொள்ளையர்கள் அங்கு, நான்கு துண்டங்களாக வெட்டப் பட்டுத் தொங்கவிடப்பட்ட காசிமின் உடலைக் காணமல் திகைத்துப் போனார்கள். அப்போதே அவர்கள் நாற்பது பேர்களும் கூடி ஆலோசனை செய்தனர்.

"வெட்டுப் பட்டவனின் உடலை யாரோ ஒருவன் குகைக்குள் வந்து எடுத்துச் சென்று இருக்கிறான் என்றால் இறந்தவன் ஒருவனைத் தவிர இன்னொருவனுக்கும் இந்தக் குகை பற்றிய ரகசியம் தெரிந்து இருக்கிறது" என்று கொள்ளைக்காரர்களின் தலைவன் கூற. உடன் இருந்த முப்பத்தி ஒன்பது கள்வர்களில் ஒருவன்," ஆம் உசூர், எவ்வளவு துணிச்சல் இருந்தால் நமது குகைக்குள் வந்து வெட்டப்பட்ட அந்த உடலை எடுத்துச் சென்று இருப்பார்கள். அவர்கள் யாராக இருந்தாலும் சரி. அவர்களை விடக் கூடாது. அப்படி ஒரு வேலை நாம் விட்டு விட்டால் அது நமக்குத் தான் ஆபத்து. நாம் கஷ்டப்பட்டு கொஞ்சம், கொஞ்சமாக சேர்த்து வைத்த பொருள்களுக்கு ஆபத்து வந்து சேரும்" என்றான்.

அதைக் கேட்ட கொள்ளையர்களின் தலைவன் ஒரு முடிவுக்கு வந்தான். அதன் படி ஒரு மூன்று நாட்களுக்கு அனைத்துக் கொள்ளையர்களும் கொள்ளை அடிப்பதை நிறுத்தி விட்டு ஆளுக்கொரு திசையாக அந்தக் குகையை சுற்றி இருந்த நகரங்களுக்குச் சென்றனர். பல இடங்களில் பல்வேறு விதமாக வேவு பார்த்தனர். துப்புத் துலக்கினர். இந்த வகையில் அலிபாபாவின் ஊருக்கும் ஒரு கொள்ளையன் மாறு வேடத்தில் வந்தான். அவன் அந்த ஊருக்கு வந்த வேளை ஒரு அதிகாலை வேளை. அந்த நேரத்தில் பாபா முஸ்தபாவின் கடை மட்டுமே திறந்து இருந்தது. அந்த ஊரில் பிறப்பும், இறப்பும் சகஜம் என்பதால் பாபா முஸ்தபாவுக்கு மட்டும் எப்போதுமே வேலை இருந்து கொண்டே இருக்கும். அன்றும் அப்படித் தான் தனது கடையில் அமர்ந்த படி ஊசி நூலை தைக்க வசதியாக கோர்த்துக் கொண்டு இருந்தார் பாபா முஸ்தபா.

"பாபா முஸ்தபாவிடம் பேச்சுக் கொடுத்துப் பார்க்கலாம்" என்ற முடிவுக்கு வந்த கொள்ளையன். மெல்ல அவரிடம் சென்று, "இன்னும் சரியாக விடியக் கூட இல்லை. அதனால் போதிய வெளிச்சம் கூட இல்லை இந்த நிலையில் எவ்வாறு தங்களுக்கு ஊசியின் துவாரம் தெரிகிறது?" என்று கேட்டான்.

"எனக்கா தெரியாது? இருட்டு அறையில் கூட நான் ஒரு சிறு விளக்குக் கூட இல்லாமல் எதை வேண்டுமானாலும் தைக்கக் கற்றுக் கொண்டவன். இவ்வளவு ஏன்? அண்மையில் வெட்டுப் பட்ட ஒரு உடலைக் கூட நான் தைத்து இருக்கிறேன் தெரியுமா!" என்று கூறி பெருமைப் பட்டான் முஸ்தபா.

"உண்மையாகத் தான் சொல்கிறீர்களா? உயிர் அற்ற சடலத்தைக் கூட தைத்து இருக்கிறீர்களா?" என்று கேட்டான் அந்தக் கொள்ளையன்.

முஸ்தபா "ஆம்" என்று கூறினார். பிறகு சற்று நேரம் யோசித்த பிறகு," நீ சின்னப் பையன் உன்னிடம் அதைப் பற்றி எல்லாம் கூறக் கூடாது. சரி நீ உனது வேலையைப் போய்ப் பார்" என்றார்.

விஷயத்தை வாங்கிக் கொண்ட கொள்ளையன் தனது சகாக்களிடம் சொல்ல விரைந்தான். மூன்று நாட்கள் முடிந்திருந்த நிலையில் அனைத்துக் கொள்ளையர்களும் மீண்டும் அந்தக் கள்வர் குகையின் வாசலில் ஒன்று கூடினர். அப்போது விரைந்து வந்த அந்தக் கொள்ளையன் பாபா முஸ்தபா கூறிய அனைத்து விஷயங்களையும் கொள்ளைக் கூட்டத் தலைவனிடம் கூறினான்.

அதைக் கேட்ட அந்தக் கொள்ளைக் கூட்டத் தலைவன் மகிழ்ச்சி அடைந்தான். பிறகு தனது சகாக்களை மாறு வேடத்தில் அவ்வூருக்கு அழைத்துச் சென்றான். அவ்வாறு சென்ற கொள்ளையர்கள் முதல் வேலையாக முஸ்தபாவின் வீட்டை அடைந்தனர். அவரிடம் விசாரிக்க வேண்டிய விதத்தில் விசாரித்தான் அந்தக் கொள்ளைக் கூட்டத்தின் தலைவன். அடி தாங்கமால் முஸ்தபாவும் தனது கண்களை ஒரு பெண் வந்து கட்டி பத்துப் பொற்காசுகளை கொடுப்பதாக சொன்னது முதல் நான்கு துண்டுகளான பிணத்தை தைத்தது வரையிலான அனைத்து விஷயத்தையும் கூறி முடித்தான். பிறகு கொள்ளைக் கூட்டத்தின் தலைவன் முஸ்தபாவிடம் அந்தக் குறிப்பிட்ட வீட்டை தங்களிடம் காட்டுமாறு கூறினான்.

அதைக் கேட்ட பாபா முஸ்தபா," அந்தப் பெண் எனது கண்களை கட்டி அழைத்துச் சென்றாள். எனினும் நான் எனது வீட்டில் இருந்து அந்தக் குறிப்பிட்ட வீடு வரையிலான அடிகளை எண்ணிக் கொண்டே சென்றேன். நான் திரும்ப வரும் போதும் அப்படித் தான் செய்தேன். எனது ஒவ்வொரு காலடியையும் எண்ணிக் கொண்டே வந்தேன். அதனால் என்னால் உங்களுக்கு அந்த வீட்டை நிச்சயம் காட்டமுடியும். ஆனால் என்னை மட்டும் எதுவும் செய்து விடாதீர்கள்" என்று கூறினான்

"நீ அந்தக் குறிப்பிட்ட வீட்டை எங்களுக்குக் காட்டிக் கொடுத்தால் போதும். உன்னை நாங்கள் எதுவும் செய்யமாட்டோம்" என்றான் அந்தக் கொள்ளையர்களின் தலைவன்.

அதன் படியே பாபா முஸ்தபா தன்னுடன் ஒரே ஒரு ஆளை மட்டும் அனுப்புமாறு கூற அந்தக் கொள்ளைக் கூட்டத்தின் தலைவன் முஸ்தபாவுடன் ஒரு கொள்ளையனை மட்டும் அனுப்பி வைத்தான். அவனும் முஸ்தபா கண்களை மூடிக் கொண்டு நடக்க அவர் கைகளை பிடித்தபடி அவருடன் சென்றான். முஸ்தபாவுக்கு அந்த ஊர் தெருக்கள் அனைத்துமே அத்துப்படி காதுகளில் விழும் ஓசையை வைத்தே அந்தத் தெருவின் ஓசையை அவர் கண்டு பிடித்து விடுவார். அதனால் அலிபாபாவின் வீட்டை கண்டு பிடிப்பது முஸ்தபாவுக்கு ஒன்றும் பெரிய காரியமாக இல்லை. முஸ்தபா தனது அடிக் கணக்கு முடிந்தவுடன் ஒரு வீட்டின் வாசலில் நின்றார். கண்ணைத் திறந்து அந்தக் குறிப்பிட்ட வீட்டை அந்தக் கொள்ளையனுக்கு அடையாளம் காட்டினர். உடனே அந்தக் கொள்ளையன் அந்தக் குறிப்பிட்ட வீட்டின் கதவில் சுண்ணாம்பை வைத்து ஒரு பெருக்கல் குறியீட்டை அடையாளத்துக்கு போட்டு விட்டு, "இரவு நேரம் வரட்டும் வீட்டில் இருப்பவர்களை ஒரு கை பார்த்துக் கொள்ளலாம்" என்று தனது மனதினில் தீர்மானித்தவனாய் சென்றான்.

இந்தக் காட்சியை சந்தைக்கு சென்று வீடு திரும்பிக் கொண்டு இருந்த மெர்ஜியானா சற்று தூரத்தில் இருந்து பார்த்தாள். அவளுக்கு எல்லாமே புரிந்து விட்டது. என்ன செய்வது என்று யோசித்தாள். வீட்டில் இருந்த யாரிடமும் இது பற்றிக் கூற விரும்பாமல் சூரியன் அஸ்தமித்து இரவு வேளை வந்து கொண்டு இருந்த சமயம் நள்ளிரவுக்கு முன்னாள் அதாவது அந்த ஊர் கொஞ்சம் அடங்கியதும் தனது கதவில் இருந்த குறியீட்டைப் போன்றே அந்த தெருவில் இருந்த அனைத்து வீடுகளின் வாசல் கதவுகளிலும் அதே போன்ற ஒரு குறியீட்டை சுண்ணாம்பைப்

பயன்படுத்தி போட்டு விட்டு ஒன்றும் தெரியாதது போல படுக்கச் சென்றாள்.

இந்நிலையில் முஸ்தபாவுடன் சென்ற அந்தக் கொள்ளையன் தனது தலைவனிடம் சென்று தான் அந்தக் குறிப்பிட்ட வீட்டை கண்டு பிடித்து விட்டதாகவும் அடையாளத்துக்கு அதில் ஒரு பெருக்கல் குறியை போட்டு இருப்பதாகவும் கூறினான். அதைக் கேட்ட கொள்ளைக் கூட்டத்துத் தலைவன் அந்தக் கொள்ளையனை வெகுவாகப் பாராட்டினான். பிறகு யாருக்கும் சந்தேகம் வராதபடி அன்றைய தினம் நள்ளிரவு வேளையில் அந்த வீட்டுக்குச் சென்று அங்கு இருப்பவர்களை கொன்று விடலாம் என்று ஏகமனதாக முடிவு செய்யப்பட்டது. அதன் அடிப்படையில் நள்ளிரவில் கிளம்பினர் கொள்ளையர்கள் குறிப்பிட்ட அந்தத் தெருவை அடைந்த மாத்திரத்தில் ஒரு கணம் திகைத்து நின்றனர். காரணம் அந்தத் தெருவில் இருந்த அனைத்து வீடுகளிலுமே பெருக்கல் குறியீடு சுண்ணாம்பினால் போடப்பட்டு இருந்தது. அதைக் கண்ட கொள்ளையர்களின் தலைவன் வெகுண்டு எழுந்து முன்பு முஸ்தபாவுடன் உளவு பார்க்கச் சென்று குறியீடு போட்ட அந்தக் கொள்ளையனை கோபத்தில் நைய்யப் புடைத்தான்.

அன்றைய தினம் மேற்கண்ட காரணத்தால் ஏமாற்றத்துடன் முஸ்தபாவின் வீட்டுக்கு மீண்டும் சென்று சேர்ந்தனர் கொள்ளையர்கள். பிறகு அன்றைய தினம் அந்தக் கொள்ளைக் கூட்டத்தின் தலைவனே முஸ்தபாவுடன் சென்றான். அதே போல முஸ்தபா தனது கண்களை மூடிக் கொண்டு யாருக்கும் சந்தேகம் வராதபடி அடிக் கணக்கின் அடிப்படையில் தெருவில் நடந்து சென்றான். ஒரு குறிப்பிட்ட அடியை எண்ணி முடித்த மாத்திரத்தில் அவ்விடத்தில் நின்று அலிபாபாவின் வீட்டை அந்தக் கொள்ளைக்காரத் தலைவனிடம் காட்டினான் முஸ்தபா. அந்த வீட்டை நன்கு மனதில் பதித்து வைத்துக் கொண்டான் அந்தக் கொள்ளை கூட்டத்தின் தலைவன். பிறகு முஸ்தபாவின் வீட்டை அடைந்த அந்தக் கொள்ளைக் கூட்டத்தின் தலைவன் தனது சாகாக்களிடம் அந்தக் குறிப்பிட்ட வீட்டைத் தான் கண்டு பிடித்து விட்டதாகவும் விரைவில் அந்த வீட்டில் உள்ள அனைவரையும் கொன்று ஒழித்து விடப் போவதாகவும் கூறினான். அதைக் கேட்ட அனைவரும் ஆனந்தம் கொண்டனர்.

பிறகு சிறிது நேரத்தில் அந்தக் கொள்ளைக் கூட்டத்தின் தலைவன் ஒரு அற்புதமான திட்டத்தை வகுத்தான். அதன்படி இருபது கோவேறு

கழுதைகளை வாங்கி வரும்படியாகக் கூறினான். அதன் பிறகு ஒரு பெரிய தோல் ஜாடி நிறையக் கடுகு எண்ணெயையும் அதே போன்று முப்பத்தி ஒன்பது காலி ஜாடிகளையும் வாங்கி வரக் கூறினான். ஒவ்வொரு ஜாடியிலும் ஒவ்வொருவர் இருந்து கொள்ளும் அளவில் அந்தத் தோல் ஜாடி இருக்க வேண்டும் என்றும் கூறினான். கொள்ளைக் காரத் தலைவன் சொன்னது போலவே எல்லாப் பொருட்களும் வந்து சேர்ந்தன. பிறகு மேலும் தனது திட்டத்தை விரிவாகக் கூறத் தொடங்கினான் அந்தக் கொள்ளைக் கூட்டத்தின் தலைவன், "நீங்கள் முப்பத்தி ஒன்பது பேரும் ஒவ்வொரு ஜாடியினுள்ளும் வசதியாக அமர்ந்து கொள்ள வேண்டும்; உடன் அனைவரும் தங்கள், தங்கள் உடை வாளை வைத்துக் கொள்ள வேண்டும். இருபதாவது கழுதையின் மீது உள்ள ஒரு புறத்தில் உள்ள ஒரு ஜாடியில் ஒருவர் தான் இருப்பார். இன்னொரு ஜாடியில் நிறைய எண்ணெய் இருக்கும் என்று கூறினேன் அல்லவா, எண்ணெய் வணிகனின் தோற்றத்தில் நான் கழுதைகள் அனைத்தையும் ஒட்டிக் கொண்டு நகரத்திற்குப் போவேன். குறிப்பிட்ட அவனுடைய வீடு வந்ததும் அந்த வீட்டு உரிமையாளரிடம் அன்று இரவு தங்கிப் போவதற்கு அனுமதி கேட்பேன். அதன் பிறகு நள்ளிரவு வேளையில் நல்ல சந்தர்ப்பத்திற்காகக் காத்திருந்து நான் குரல் கொடுப்பேன் அல்லது சூழ்நிலையைப் பொறுத்து தொடர்ச்சியாக எனது கையை மூன்று முறைத் தட்டுவேன். அப்போது நீங்கள் அனைவரும் குபீர் என்று பாய்ந்து வந்து அவனைக் கொன்று விட வேண்டும். அங்குள்ள செல்வங்களையும் நாம் விட்டு வைக்கக் கூடாது. அவை அனைத்தையும் நமது கோவேறுக் கழுதையின் மீது ஏற்றிக் கொண்டு வந்து விட வேண்டும்" என்று முடித்தான்.

தனது தலைவனின் இந்தத் திட்டத்தைக் கேட்ட கொள்ளையர்கள் அனைவரும் அற்புதமான திட்டம் என்று கூறி மகிழ்ந்தனர். தலைவனின் அறிவே அறிவு தான் என்று வேறு சிலர் கூறிப் பாராட்டினார்கள்.

பிறகு கொள்ளையர்களின் தலைவன் தான் சொன்னத் திட்டத்தை செயல்படுத்தத் தொடங்கினான். அதன் அடிப்படையில் ஒரு பெரிய வணிகன் போன்று உடை அணிந்து இருபது கோவேறு கழுதைகளின் மீதும் ஜாடிகளை ஏற்றினான். அதாவது ஒவ்வொரு கழுதையின் மீது இரண்டு ஜாடிகள் வீதம் ஏற்றினான். மொத்தம் முப்பத்தி ஒன்பது ஜாடிகளில் ஆயுதங்களுடன் கொள்ளைக்காரர்கள் இருந்தார்கள். ஒரு ஜாடியில் மட்டும் கடுகு எண்ணெய் இருந்தது. இரவு வந்ததும் கோவேறு கழுதைகளை ஒட்டிக் கொண்டு தலைவன் போனான். அலிபாபாவின்

வீட்டின் முன்னால் அவற்றை நிறுத்தினான். அந்த சமயத்தில் தான் இரவு வேளை உணவை முடித்துவிட்டு அலிபாபா வீட்டின் முன்னாள் உலவிக் கொண்டு இருந்தான்.

அலிபாபாவைக் கண்ட மாத்திரத்தில் இவன் தான் அந்த வீட்டின் தலைவனாக இருக்க வேண்டும் என்று நம்பிய கொள்ளைக் காரத் தலைவன். அவன் அருகில் சென்று அவனை வணங்கிய படி, "நான் ஒரு வியாபாரி. ஒவ்வொரு பெரிய நகரத்திற்கும் கடுகு எண்ணெய்யை விநியோகிப்பேன். தரத்தில் சிறந்த எங்கள் எண்ணெய்யைத் தான் எல்லோரும் விரும்பி வாங்குவார்கள். அந்த அளவுக்கு அருகில் உள்ள ஊர்களில் எங்களது எண்ணெய்க்கு மவுசு அதிகம். தற்போது இரவு நேரம் வந்து விட்டதால் கொள்ளையர்களின் நடமாட்டம் அதிகம் இருக்கலாம் என்று அஞ்சுகிறேன். அதனால் தயவு செய்து இன்று ஒரு நாள் இரவு மட்டும் தாங்கள் இங்கு தங்குவதற்கு அனுமதி அளிக்க வேண்டுகிறேன். கேட்பவர்களுக்கு, கேட்டபடி உதவி செய்யும் குணம் கொண்டவர் என்று தங்களைப் பற்றி அக்கம் பக்கத்தினர் கூறக் கேட்டு இருக்கிறேன். அதனால் எனக்கும் தாங்கள் தான் உதவி செய்ய வேண்டும்" என்று மிகுந்த பணிவுடன் கேட்டுக் கொண்டான் அந்தக் கொள்ளையன்.

சற்று நேரம் யோசித்த அலிபாபா வணிகனின் வேஷத்தில் வந்திருப்பவன் யார் என்று அறியாததால் அந்தக் கொள்ளையனை உண்மையான வணிகன் என்றே நினைத்துக் கொண்டு தனது வீட்டில் தங்க இடம் கொடுத்தான். பிறகு அலிபாபாவின் அனுமதியுடன் அந்த மாறுவேடத்தில் இருந்த கொள்ளைக்காரன் தான் கொண்டு வந்த கழுதைகள் அனைத்தையும் தொழுவத்தில் அடைத்துக் கொண்டான். அத்துடன் அவைகளுக்கு ஆகாரமும், தண்ணீரும் வைத்தான்.

இந்த சமயத்தில் அலிபாபா மெர்ஜியானவை அழைத்து, "நமது வீட்டில் தங்க ஒரு விருந்தாளி வந்து உள்ளார். அவர் வசதியாகத் தங்க அனைத்து ஏற்பாடுகளையும் செய்து கொடு" என்றான். அதன் படியே செய்வதாக கூறிவிட்டுச் சென்றாள் மெர்ஜியானா.

பின்னர் மாறுவேடத்தில் இருந்த அந்தக் கொள்ளைக்காரன் மீண்டும் அலிபாபாவிடம் வந்து பேச்சுக் கொடுத்தான். அப்போது அன்று இரவு தன்னுடனே உணவு உண்ண வேண்டும் என்று கூறினான் அலிபாபா.

"அவசியம் உணவு உண்கிறேன் பிரபு. ஆனால் ஒரு வேண்டுகோள். எனக்குத் தாங்கள் அளிக்கும் எந்த உணவிலும் உப்பு சிறிதளவு கூட இருக்கக் கூடாது" என்று அலிபாபாவிடம் வேண்டினான் அந்தக் கொள்ளையன். அலிபாபாவும் அதற்கு ஒப்புக் கொண்டு கொள்ளைக் காரத் தலைவனிடம் இருந்து விடை பெற்று மெர்ஜியானாவை சந்தித்து, "மெர்ஜியானா! இன்னொரு முக்கியமான விஷயம் அந்த வணிகர் நமது வீட்டில் உணவு உண்ண ஒரு வேண்டுகோள் வைத்து உள்ளார். அதன் படி நீ அவருக்குப் பரிமாறும் எந்த உணவிலும் உப்பு இருக்கக் கூடாது. சரிதானே!" என்று அலிபாபா சொல்ல அதற்கு ஒப்புக் கொண்டு அப்படியே சமைக்கத் தொடங்கினாள் மெர்ஜியானா. இருந்தும் அவளது மனதில் சந்தேகம் நிழல் ஆடியது.

"ஏன் அந்த வணிகர் உப்பிட்ட உணவை உண்ண மறுக்கிறார்? இதில் ஏதோ நிச்சயம் விஷயம் உள்ளது. உண்மையில் ஒரு வீட்டுக்குக் கெடுதல் செய்ய நினைப்பவர்கள் தான் அந்த வீட்டின் உப்பைத் திண்ண மறுப்பார்கள். அப்படி இருக்க இந்த வணிகர் நமக்கு ஏதோ பெரிய கெடுதலை செய்ய இருக்கிறாரா? அப்படிச் செய்ய வேண்டிய அவசியம் தான் என்ன?" என்று தனது மனதிற்குள் பல விதங்களில் கேள்விகள் எழுப்பி அதனால் சிந்தனை வயப்பட்டாள் மெர்ஜியானா. பிறகு வேகவேகமாக அலிபாபா சொன்னபடியே சமைத்து முடித்தாள் அவள். உணவு வேலையும் முடிந்தது. உப்பிலாத உணவைக் கூட வேண்டிய மட்டும் அதிகமாக உண்டான் அந்தக் கொள்ளையன். அப்போது அலிபாபா அடுத்த நாள் காலையில் என்ன செய்ய வேண்டும் என்பதை மெர்ஜியானாவிடம் கூறிவிட்டு அவன் தனது வழியில் ஓய்வு எடுக்கச் சென்று விட்டான்.

அலிபாபாவின் நிலை இப்படி இருக்க உணவை முடித்துக் கொண்ட அந்தக் கொள்ளையன் தொழுவத்தின் பக்கமாகச் சென்றான். அதனைக் கண்டு கொண்ட மெர்ஜியானாவும் சந்தேகம் கொண்டு அவனைப் பின் தொடர்ந்து சென்றாள். தொழுவத்திற்குச் சென்ற தலைவன் அந்த ஜாடிகள் பக்கத்தில் நின்று மெல்லத் தான் பேசினான். அவன் ஜாடிக்குள் இருக்கும் கொள்ளையர் ஒவ்வொருவரிடமும் சென்று ,"இன்று இரவு அதாவது நள்ளிரவில் எனது குரலைக் கேட்டதும் தோல் ஜாடியானதால் மேல் பாகத்தில் இருந்து அடிப் பாகம் வரை உங்களிடமுள்ள கத்தியால் கிழித்து விட்டு வெளியேற வேண்டும்" என்றான்.

இப்படி ஒவ்வொரு ஜாடியிடமும் சென்று மாறுவேடத்தில் இருந்த அந்தக்

கொள்ளைக் கூட்டத்தின் தலைவன் பேசிக் கொண்டு இருப்பதை கவனித்தாள் மெர்ஜியானா. ஆனால், அவள் சற்று தூரத்தில் இருந்ததால் அந்த வணிகன் என்ன பேசிக் கொண்டு இருக்கிறான் என்பதை கேட்கவே முடியவில்லை.

அதே சமயத்தில் மெர்ஜியானா இன்னொன்றையும் கவனிக்கத் தவற வில்லை, அது யாதெனில் அந்த வணிகன் பெரிய பெரிய ஜாடிகளைக் கொண்டு வந்து அடிக்கி வைத்து இருந்தான். அதில் முதல் ஜாடியின் மூடியில் மட்டுமே எண்ணெய்ப் பிசு பிசுப்பு காணப் பட்டது. மற்ற ஜாடிகளில் சிறிதும் எண்ணெய்ப் பிசுபிசுப்பு இல்லை. அத்துடன் எண்ணெய் பிசு பிசுப்பு காணப்பட்ட அந்த ஜாடியில் மட்டும் ஓட்டை இல்லை. மற்ற ஜாடிகள் அனைத்திலும் மூச்சு விட ஏதுவாக ஒரு சிறு துவாரம் இருந்தது. இதை விட அனைத்துமே தோல் ஜாடிகளாக இருந்ததால் உள்ளே இருப்பவர்கள் நெளியும் சமயத்தில் அந்த ஜாடிகள் உப்பின; அப்போது அந்த இடம் கொஞ்சம் புடைத்துக் காணப்பட்டது. மேற்கண்ட இவற்றை எல்லாம் நன்கு நுணுக்கமாகக் கவனித்து விட்டாள் மெர்ஜியானா. அவளுக்கு எல்லாமே தவறாகப் பட்டது. பிறகு அந்த கொள்ளைக் கூட்டத்தின் தலைவன் தொழுவத்தில் இருந்து புறப்பட்ட சமயத்தில் மெர்ஜியானா அவனது கண்களில் படாதவாறு மெல்ல நகர்ந்து சென்றாள்.

கொள்ளைக் கூட்டத்தின் தலைவன் தனது அறையை அடைந்ததும் மெர்ஜியானா அந்தத் தலைவனிடம், "தங்களுக்குப் படுக்கை தயாராக இருக்கிறது. குடிப்பதற்குத் தண்ணீரும் கூஜாவில் வைத்து இருக்கிறேன்" என்று கூறவும், நன்றி கூறியவனாய் படுத்துக் கொண்டான் அவன்.

பின்னர் மெர்ஜியானா அந்தத் தொழுவத்திற்குச் சென்றாள். அவளது காலடி ஓசையை கேட்டதும் தலைவன் தான் வந்து உள்ளான் என்று எண்ணிக் கொண்டகொள்ளையர்களில் ஒருவன் "தலைவா, நாம் பாய்வதற்கு ஏற்ற வேளை வந்து விட்டதா?" என்று கேட்டான். அந்தத் தோல் ஜாடியில் போட்டு இருந்த ஓட்டைகள் மூலம் மெர்ஜியானா தெள்ளத் தெளிவாக அந்த வார்த்தையைக் கேட்டாள். உடனே, அவள் தனது தொண்டையை இறுக்கிக் கொண்டு மெல்லிய குரலில் "சத்தம் போடாதே! நேரம் இன்னும் வரவில்லை" என்றாள்.

பிறகு மெர்ஜியானா தனது அறைக்குச் சென்றாள். அந்த வணிகனின் முகத்தை அவளுக்கு எங்கோ பார்த்தது போலத் தான் இருந்தது. அவள்

நன்கு யோசித்தாள். அப்போது அவளுக்கு சிறு வயதில் நடந்த சம்பவங்கள் அனைத்தும் நினைவுக்கு வந்தது.

'அது ஒரு அழகிய மலைக் கிராமம். தனது தாய், தந்தையுடன் சந்தோஷமாக ஓடி விளையாடி மகிழ்ந்து கொண்டு இருந்தாள் மெர்ஜியானா. அப்போது சிறுமியாக இருந்த அவளை ஆசையுடன் அணைத்தபடி உணவு ஊட்டிக் கொண்டு இருந்தாள் மெர்ஜியானாவின் தாய். அப்போது திடீர் என்று எண்ணற்ற குதிரைகளின் காலடி ஓசையைக் கேட்டனர் அந்தக் கிராமத்து மக்கள். சிறிது நேரத்தில் எங்கும் புழுதி பறந்தது. நாற்பது பேர் கொண்ட ஒரு கொள்ளைக் காரக் கும்பல் அந்தக் கிராமத்துக்குள் புகுந்து அனைவரையும் கொன்று தீர்த்தது. கையில் கிடைத்த பொருள்களை எல்லாம் அள்ளிச் சென்றது. அந்தத் தாக்குதலில் இருந்து தப்ப முயன்றனர் மெர்ஜியானாவின் குடும்பத்தினர். ஆனால் சூதாரித்துக் கொண்ட கொள்ளைக் கூட்டத்தின் தலைவன் மெர்ஜியானாவின் தாய், தந்தையரை உயிருடன் எரித்து விட்டுச் சென்றான். மெர்ஜியானாவை ஒரு கூடையில் இருக்கச் செய்து விட்டு 'என்ன நடந்தாலும் வெளியில் வரக் கூடாது' என்று கூறிவிட்டு அவளது தந்தை சென்று இருந்ததால், மெர்ஜியானா மட்டுமே அந்த மலைக் கிராமத்தில் கொள்ளையர்களின் தாக்குதலில் இருந்து தப்பித்தாள்'

மேற்கண்ட இந்த சம்பவத்தை நினைத்துப் பார்த்தாள் மெர்ஜியானா. இப்போதோ அதே கொள்ளைக் கூட்டத்தின் தலைவன் தான் மாறு வேடத்தில் வந்து உள்ளான். அவனது முகத்தை மெர்ஜியானாவினால் சில வருடங்கள் கடந்தும் கூட மறக்கவே முடியவில்லை. அவள் எத்தனையோ இரவுகள் தூங்காமல் இந்தச் சம்பவத்தை நினைத்து நினைத்து அழுதும் இருக்கிறாள். அந்த நிலையில் காலம் இப்போது அந்தக் கொள்ளையனை அவனது கூட்டத்துடன் பழி வாங்க மெர்ஜியானாவுக்கு ஒரு அருமையான சந்தர்ப்பத்தை கொடுத்து இருந்தது. அதற்காக எல்லாம் வல்ல இறைவனுக்கு நன்றி தெரிவித்தாள் மெர்ஜியானா.

பிறகு இனிமேலும் காத்துக் கொண்டு இருக்கக் கூடாது என்று எண்ணிய மெர்ஜியானா அடுப்பின் மேல் ஒரு பெரிய வாணலியை வைத்து அதில் அவன் கொண்டு வந்த கடு எண்ணெய்யை ஊற்றி அடுப்பைப் பற்ற வைத்தாள். நன்றாகக் காய்ந்த விறகு மத மத என்று எரிந்தது. எண்ணெய் நன்றாகக் காய்ந்ததும் ஒவ்வொரு பெரிய குவளையிலும் கொதிக்கும்

எண்ணெய்யை நிரப்பி வரிசையாக ஒவ்வொரு ஜாடியிலும் ஊற்றி மூடியை அடைத்து வைத்து விட்டாள். இவ்விதமாக ஒரு ஜாடி எண்ணெய்யையும் கொதிக்க வைத்து எல்லா ஜாடிகளிலும் ஊற்றிய பின்னர் தான் அவள் நிம்மதி அடைந்தாள். இப்படியாக அந்தக் கொதிக்கும் எண்ணெய்யில் அவ்விதமே அவிந்து அந்த முப்பத்தி ஒன்பது பேர்களும் பிணமாகி விட்டனர்.

மெர்ஜியானா, இவ்வாறாக அந்தக் கொள்ளைக் கூட்டத்திற்கே ஒரு முடிவை கட்டி விட்டு மெல்லத் தனது அறைக்குச் சென்று படுத்துக் கொண்டாள். அப்போதில் இருந்து சரியாக ஒரு மணிநேரம் கழிந்தது. சரியாகப் பன்னிரண்டு மணிக்கு எழுந்தான் கொள்ளைக் கூட்டத்தின் தலைவன். அவன் ஜன்னலைத் திறந்து பார்த்த சமயம் எங்கும் இருள் பரவி இருந்தது. ஒரு வித மயான அமைதியை அவன் உணர்ந்தான். உடனே அவன் இதுவே தனது சகாக்களை அழைக்க சரியான சந்தர்பம் என்பதை உணர்ந்தவனாய் கூப்பிட்டுப் பார்த்தான் பிறகு தனது கைகளை தட்டினான். ஆனால், பதிலுக்கு எந்த ஒரு ஓசையும் வரவில்லை. திடுக்கிட்டு மீண்டும் ஒரு முறைத் தனது கைகளைத் தட்டினான் மெல்ல கூப்பிட்டும் பார்த்தான் அந்தக் கொள்ளையர்களின் தலைவன் இந்த முறையும் கூட எந்த வித பதிலும் இல்லை. அதனால் சந்தேகம் அடைந்த அந்தக் கொள்ளைக் கூட்டத்தின் தலைவன் ஜாடிகள் இருந்த கொட்டகைக்குச் சென்றான். ஜாடியை நெருங்கும் சமயத்தில் கொதித்த எண்ணெய்யின் வாசனையையும் உடன் ஏதோ ஒரு துர் வாடையையும் ஒருங்கே வீசுவதை உணர்ந்தான். அதனால் பதற்றத்துடன் ஒவ்வொரு ஜாடியையும் திறந்து பார்த்தான். அவனது சகாக்கள் அத்தனை பேருமே அவிந்த நிலையில் இறந்து போய் இருப்பதைக் கண்டான். இதற்கு மேல் அங்கு இருந்தால் தனது உயிருக்கும் ஆபத்து வந்து சேரும் என்பதை உணர்ந்தவனாக விரைந்து அவ்விடத்தை விட்டு ஓடிச் சென்று மறைந்தான்.

# மொர்ஜியானா காசிமின் மகனைக் கைப்பிடித்தல்

மொர்ஜியானா கொள்ளைக் கூட்டத்தின் தலைவனை கொல்லுதலும் காசிமின் மகனைக் கைப்பிடித்தலும்

இப்படியாக இரவில் நடந்த எந்த நிகழ்ச்சி பற்றியும் அலிபாபாவுக்குத் தெரியாது. அதிகாலையில் எழுந்த அலிபாபா அவன் அன்றைய தினம் வெளியூர் செல்லத் திட்டமிட்டு இருந்ததால் சுறுசுறுப்பாக ஹம்மாவிற்கு குளிக்கச் சென்று விட்டான். அவன் அப்படியாக குளித்து விட்டுத் திரும்பிய பின்னரும் கூட அந்த ஜாடிகள் அவ்விடத்திலேயே இருந்தன. உடனே அலிபாபா தனது விசுவாசமான வேலை ஆளான மொர்ஜியானாவை அழைத்து அந்த வியாபாரியைப் பற்றி விசாரித்தான். மொர்ஜியானா அலிபாபாவிடம் முந்தய இரவு நடந்த அனைத்து விஷயத்தையும் பற்றி விளக்கமாக எடுத்துச் சொன்னாள். அத்துடன் மாறுவேடத்தில் வந்திருந்தவன் தான் கொள்ளைக் கூட்டத்தின் தலைவன் என்ற உண்மையையும் எடுத்துக் கூறினாள். அதனை அலிபாபா முதலில் நம்பவில்லை. எனினும் மொர்ஜியானா அலிபாபாவுக்கு அனைத்தையும் புரியவைத்தாள். அவன் மீண்டு வந்த ஆபத்தைப் பற்றி எடுத்துச் சொன்னாள். அத்துடன் அலிபாபவை அழைத்துக் கொண்டு சென்று ஒரு ஜாடியைச் சுட்டிக் காட்டி "இதில் என்ன இருக்கிறது என்று நீங்களே திறந்து பாருங்கள்" என்றாள். அலிபாபா அந்த ஜாடியைத் திறந்த மாத்திரத்தில் அலறி விட்டான். காரணம் அந்த ஜாடிக்குள் ஒரு மனிதன் வெந்த நிலையில் இருந்தான். இப்படியே அனைத்து ஜாடியிலும் ஒரு பிணம் வெந்த நிலையில் இருந்ததைக் கண்ட அலிபாபா வாயடைத்துப் போனான். மொர்ஜியானாவின் அறிவித் திறமையால் தனது உயிர் காக்கப் பட்டதை எண்ணி நிம்மதி அடைந்தான். அத்துடன் அவளுக்குப் பல்வேறு விதத்தில் நன்றிகளைத் தெரிவித்தான்.

அப்போது மொர்ஜியானா அலிபாபாவிடம், "உணர்ச்சி வசப் படாதீர்கள். அக்கம் பக்கத்தில் உள்ளவர்களுக்கு தெரிவதற்கு உள்ளாக இந்தப் பிணங்களை நாம் அப்புறப்படுத்தி ஆக வேண்டும்" என்றாள்.

அதன்படி அலிபாபாவும் அவனது மிகுந்த நெருங்கிய நண்பனான வாய்பேச முடியாத அப்துல்லாவும் தோட்டத்தில் மிகவும் ஆழமாகவும், அகலமாகவும் ஒரு பள்ளத்தைத் தோண்டி அதில் இறந்த

கொள்ளையர்கள் அனைவரையும் அவர்களது ஆயுதங்களுடன் புதைத்தனர். பிறகு தோல் ஜாடிகளையும் கூட இன்னொரு பள்ளத்தில் புதைத்து விட்டனர். அத்துடன் கொள்ளைக் கூட்டத்தின் தலைவன் ஒட்டி வந்த இருபது கோவேறு கழுதைகளையும் சந்தைக்கு ஒன்று இரண்டாக ஓட்டிச் சென்று, ஓட்டிச் சென்று அலிபாபா அவை அனைத்தையும் நல்ல விலைக்கு விற்றுத் தீர்த்தான். அதன் பின்னர் தான் மெர்ஜியானா நிம்மதி அடைந்தாள்.

எனினும், அவள் மனதில் மீண்டும் அந்த கொள்ளைக் கூட்டத்தின் தலைவனைப் பற்றிய அச்சம் இருந்து கொண்டு தான் இருந்தது. அவன் எப்படியும் திரும்பி வருவான் என்று எதிர்பார்த்தாள் மெர்ஜியானா. அத்துடன் அலிபாபாவையும் சில நாட்களுக்கு குறிப்பாக இரவில் எங்கும் செல்ல வேண்டாம் என்று அறிவுறுத்தினாள். மெர்ஜியானாவின் அறிவுரைப்படியே நடந்து கொண்டான் அலிபாபா.

அலிபாபாவின் நிலை இப்படி இருக்க, தப்பிச் சென்ற கொள்ளையனோ தனது கள்வர் குகையில் சிறிது காலம் பதுங்கி இருந்தான். அங்கேயே ஓய்வு எடுத்த படி எப்படியாவது அலிபாபாவை கொன்று விட வேண்டும் என்று திட்டம் வகுத்துக் கொண்டு இருந்தான். அந்தக் கொள்ளையனின் மனம் அமைதி அடையவில்லை. தான் பல நாட்கள் போட்ட திட்டத்தை அந்தக் கொள்ளைக் கூட்டத்தின் தலைவன் செயல் படுத்தத் தொடங்கினான். அவனிடம் ஏராளமான செல்வங்கள் இருந்ததால் நகரத்திற்குச் சென்று ஒரு பெரிய கடையை வாடைக்கு எடுத்துக் கொண்டு தன்னை ஒரு இரத்தின வியாபாரி என்று கூறிய வண்ணம் "குவாஜா ஹசன்" என்ற பெயரில் வியாபாரத்தை நடத்தி வந்தான். தன்னிடம் உள்ள செல்வதை எல்லாம் செலவு செய்து எண்ணற்ற வர்த்தகர்களை நண்பனாக்கிக் கொண்டான் அந்தக் கொள்ளைக் கூட்டத்தின் தலைவன். அவனது ஒரே நோக்கம் அலிபாபாவை அவனது குடும்பத்துடன் கொல்வதே ஆகும்.

அலிபாபாவின் அண்ணனின் மகனான காசிமின் மகன் வியாபாரம் செய்து வந்த கடையும் அந்த மாறுவேடத்தில் இருந்த கொள்ளைக் காரன் திறந்து இருந்த கடையும் எதிர் எதிரே தான் இருந்தது. அதனால் காசிமின் மகனுக்கும், அந்தக் கொள்ளைக்காரத் தலைவனுக்கும் இடையே நல்ல பழக்கம் ஏற்பட்டது. கொள்ளைக்காரத் தலைவன் காசிமின் மகனிடம் தேன் ஒழுகப் பேசினான். அவனைக் துருப்புச் சீட்டாக பயன்படுத்தி அலிபாபாவையும் அவனது குடும்பத்தையும்

அழிக்க வேண்டும் என்பது தான் அந்தக் கொள்ளையனின் தலையான நோக்கமாக இருந்தது.

காசிமின் மகனும் வந்திருப்பவன் உண்மையிலேயே ஒரு வியாபாரி தான் என்று நம்பியபடி தனது குடும்பத்து விஷயங்களைக் கூட அவனிடம் பகிர்ந்து கொண்டான். காசிமின் மகனை அடிக்கடி பார்க்க அவனது கடைக்கு வந்து செல்வான் அலிபாபா. அதனைப் பார்த்த அந்தக் கொள்ளைக் காரன் ஒன்றுமே தெரியாதது போல அலிபாபாவை யார் என்று கேட்டான். உடனே காசிமின் மகன் "அவர் எனது மதிப்பிற்குரிய சிறிய தந்தை அலிபாபா" என்று கூறினான்.

இப்படியாக வியாபாரியின் வேஷத்தில் இருந்த அந்தக் கொள்ளைக்காரனுக்கும், காசிமின் மகனுக்கும் நெருங்கிய நட்பு உருவானது. அந்தக் கொள்ளைக்காரனைப் பொருத்தவரையில் அனைத்துமே அலிபாபாவை கொல்ல வேண்டும் என்ற நோக்கத்தில் நடத்தப்பட்ட நாடகம் தான். இந்நிலையில் அவன் அடிக்கடி காசிமின் மகனுக்கு விருந்து வழங்கிச் சிறப்பித்து வந்தான். காசிமின் மகனுக்கும் "குவாஜா ஹசன்" தனக்கு அளித்த விருந்துக்கு பதில் விருந்து தர வேண்டும் என்ற ஆசை வந்தது. அந்த ஆசையை சிற்றப்பா அலிபாபாவிடம் கூற தனது அண்ணன் மகனின் ஆசைக்கு சந்தோஷமாக சம்மதம் தெரிவித்தான் அலிபாபா.

உடனே குவாஜ ஹசனை யார் என்று தெரியாமல் அவனை விருந்துக்கு அழைத்தான் காசிமின் மகன். அலிபாபாவின் வீட்டை அடைந்த குவாஜ ஹசன் அலிபாபாவை பார்த்த மட்டில் அவன் தன்னை கண்டு பிடித்து விடுவானோ என்று நினைத்தான். ஆனால் அலிபாபாவால் அவனைக் கண்டு பிடிக்க முடியவில்லை. காரணம் ஏற்கனவே ஒரு முறை அந்தக் கொள்ளைக் கூட்டத்துத் தலைவனை ஒரு இரவு நேரத்தில் தான் அலிபாபா வரவேற்று இருந்தான். மேலும், அப்போது அவன் வந்த தோற்றத்துக்கும், இப்போது அவன் கொண்ட தோற்றத்துக்கும் இடையே நிறைய வித்யாசம் இருந்தது. அதனால் தான் அலிபாபாவால் அந்தக் கொள்ளையனை அடையாளம் காண முடியவில்லை. அத்துடன் அலிபாபாவே குவாஜ ஹசனை முகம் மலர தனது வீட்டினுள் அழைத்துச் சென்றான். அவனுக்கு ஆசனம் அளித்தான். குடிக்கப் பழ ரசங்களை கொண்டு வரச் சொல்லி கொடுத்தான்.

அப்போது குவாஜ ஹசன் அலிபாபாவிடம் அவனது அண்ணன்

மகனைப் பற்றி மிகவும் பெருமையாகப் பேசினான். அதனைக் கேட்ட அலிபாபா மிகவும் மகிழ்ந்தான். பிறகு குவாஜ ஹசனிடம் அலிபாபா, "அன்பரே, முதன் முதலாக எங்களது வீட்டிற்கு வந்து உள்ளீர்கள் கட்டாயம் தாங்கள் உணவுண்டு ஓய்வெடுத்து விட்டுத் தான் செல்ல வேண்டும்" என்று மிகவும் தாழ்மையுடன் கட்டாயப்படுத்திக் கேட்டான். குவாஜ ஹசனும் அதற்கு சம்மதம் தெரிவித்தான். அத்துடன்," அலிபாபாவே தனக்கும் தனது குடும்பத்தினர் சாவுக்கும் நாள் குறித்து விட்டான்" என்று மனதிற்குள் நினைத்து சிரித்துக் கொண்டான் குவாஜ ஹசன்.

மெர்ஜியானா சுவையான உணவு வகைகளைப் பரிமாறி அனைவரையும் உண்ண அழைத்தாள். அலிபாபாவும் குவாஜ ஹசனை அழைத்துக் கொண்டு உணவு உண்ண வந்தான். குவாஜ ஹசனின் நடை, பாவனை என அனைத்துமே மெர்ஜியானாவுக்கு சந்தேகத்தை எழுப்பியது. அவனை எங்கோ பார்த்தது போல உணர்ந்தாள் மெர்ஜியானா. உணவு பரிமாறும் சமயத்தில் அவனது வெறிப்பிடித்த கண்களைக் கண்டு வந்திருப்பது கொள்ளைக் கூட்டத்தின் தலைவன் தான் என்பதை உணர்ந்து கொண்டாள்.

ஆம். மெர்ஜியானாவால் அந்தக் கொள்ளைக் கூட்டத்தின் தலைவனை எப்படி மறக்க முடியும் தனது குடும்பத்தை மட்டும் அல்ல தான் வாழ்ந்த கிராமத்தையே அழித்தவன் ஆயிற்றே அவன். அப்படிப் பட்டவன் எந்த ரூபத்தில் வந்தாலும் அவளால் அடையாளம் கண்டு விட முடியுமே! அந்த வகையில் தான் அந்தக் கொள்ளைக் கூட்டத்தின் தலைவனை மெர்ஜியானா அடையாளம் கண்டாள். இருந்தும் அதனை வெளியில் அப்போதைக்கு காட்டிக் கொள்ளாமல் அமைதியாக அவனுக்கு உணவு பரிமாறினாள். அத்துடன் அந்தக் கொள்ளைக் கூட்டத்தின் தலைவனை எப்படித் தீர்த்துக் கட்ட வேண்டும் என்று தனது மனதிற்குள் சிந்தித்துக் கொண்டு இருக்க அந்தக் கொள்ளைக் கூட்டத்தின் தலைவனும் அலிபாபாவை எப்படித் தீர்த்துக் கட்ட வேண்டும் என்று யோசித்துக் கொண்டு இருந்தான்.

இந்நிலையில் மெர்ஜியானா வேகமாக உணவு உண்டு முடித்ததும் ஆடும் பெண்கள் அணிவது போன்ற அழகிய உடையை அவசர அவசரமாக உடுத்திக் கொண்டாள். நல்ல விலை உயர்ந்த மெல்லிய கைக் குட்டை ஒன்றை எடுத்து முகத்தை மூடிக் கொண்டாள். அவளது தலையில் ஒரு அழாகான தலைப் பாகையை சூடிக் கொண்டாள்.

பொன்னாலும், வெள்ளியாலும், வைரத்தாலும் அழகு செய்யப்பட இடைப்பட்டியில் ஒரு அருமையான கூறிய கத்தியை வைத்துக் கொண்டாள். பின்னர் அங்கு நின்று கொண்டு இருந்த அப்துல்லாவிடம் "தாங்கள் உடனே சென்று ஜால்ராவை கொண்டு வாருங்கள். ஆடிப் பாடி விருந்துக்கு வந்தவரை மகிழ்விப்போம்" என்றாள்.

அப்துல்லாவும் ஓடிச் சென்று ஜால்ராவை எடுத்து வந்தான். அதன் பிறகு அப்துல்லாவும், மெர்ஜியானாவும் அலிபாபாவிடம் விருந்தினரை மகிழ்விக்க ஆடிப் பாட நினைக்கிறோம் என்று கூற. அலிபாபாவும் மிகுந்த மகிழ்ச்சியுடன் அதற்கு சம்மதம் தெரிவித்தான்.

அதனைக் கேட்ட மாத்திரத்தில் "நல்ல பொழுது போக்காக இருக்கும் போலிருக்கிறதே" என்று கூறி மாறுவேடத்தில் இருந்த கொள்ளையனும் மகிழ்ச்சி அடைந்தான். இந்நிலையில் மெர்ஜியானா ஆடத் தொடங்கினாள். அப்போது தான் அலிபாபாவுக்கே ஒரு விஷயம் புரிந்தது அதாவது மெர்ஜியானா அறிவில் மட்டும் அல்ல ஆடல் பாடலிலும் சிறந்தவள் என்று. அப்படி அருமையாக ஆடினாள் மெர்ஜியானா. அதற்குத் தகுந்தபடி அப்துல்லா ஜால்ரா அடித்துக் கொண்டு இருந்தான். மெர்ஜியானா அவர்கள் இருவரின் எதிரில் செல்வதும் வருவதுமாக இருந்தாள். அத்துடன் அவர்களிடம் ஆடிக் கொண்டே அன்பளிப்பு வாங்குவதற்குப் போய் நின்றாள். முதலில் அலிபாபா ஒரு பொற்காசைக் கொடுத்தான். பின்னர் அவனுடைய அண்ணனின் மகன் ஒரு பொற்காசை எடுத்து மெர்ஜியானாவுக்குக் கொடுத்தான். அந்த இரண்டு பொற் காசுகளையும் வாங்கி அப்துல்லாவிடம் கொடுத்து விட்டுப் புன்னகையுடன் திருடர்களின் தலைவனிடமும் போய் நின்றாள். அந்தத் திருடர்களின் தலைவன் மெல்லக் குனிந்து பணப் பையை எடுக்க முற்பட்ட சமயத்தில் அந்த சந்தர்ப்பத்துக்காகத் தான் மெர்ஜியானாவும் காத்துக் கொண்டு இருந்தாள். கொள்ளைக் காரனின் தலைவன் குனிந்து பணப் பையை எடுக்கும் நேரத்தில் தனது இடையில் இருந்த கத்தியை எடுத்து அவனது கழுத்தில் ஆழமாகப் பாய்ச்சி விட்டாள். அடுத்த கணம் அந்தக் கொள்ளைக்காரத் தலைவன் அலறித் துடித்தபடி கீழே விழுந்து மாண்டான்.

இந்தக் காட்சியைக் கண்ட அலிபாபா அதிர்ந்து போனான். அவன் மெர்ஜியானாவிடம்," மெர்ஜியானா! நீ என்ன செய்து விட்டாய். நமது விருந்தாளியை நீ கொன்று விட்டது சரியா? ஏன் இப்படிச் செய்தாய்?"

என்று கேட்டான். காசிமின் மகனும் கூட மெர்ஜியானா மீது ஆத்திரம் கொண்டான்.

உடனே மெர்ஜியானா அலிபாபாவிடமும், காசிமின் மகனிடமும் இவ்வாறு உண்மையை எடுத்துச் சொன்னாள்.

"இவன் முதலில் நீங்கள் எல்லோரும் நினைப்பது போல இரத்தின வியாபாரியே இல்லை. இவன் கொள்ளைக் காரர்களின் தலைவன். எனது எஜமானரான காசிமைக் கொன்றவன். இப்போது அலிபாபாவையும் கொல்ல மாறுவேடத்தில் வந்து உள்ளான். இதோ இவன் ஒளித்து வைத்திருந்த இவனது குறு வாள்" என்று கூறியபடி அந்தக் கொள்ளைக்காரன் மறைத்து வைத்திருந்த குறு வாளை அலிபாபாவிடம் எடுத்துக் கொடுத்தாள். அத்துடன் அந்தக் கொள்ளையனின் மாறு வேடத்தையும் கலைத்தாள். அப்போது தான் அலிபாபாவிற்கு அனைத்து உண்மைகளும் புரிந்தது. "ஆம்! மெர்ஜியானா உண்மை தான் இவன் தான் அன்றும் எண்ணெய் வியாபாரி என்று நம்மிடம் பொய் சொல்லி வந்தவன். எனக்கு இப்போது தான் இவனது முகம் நினைவுக்கு வருகிறது" என்று கூறினான் அலிபாபா.

அத்துடன் தன்னைப் பேர் ஆபத்தில் இருந்து காத்த மெர்ஜியானாவை புகழ்ந்து உரைத்தான் அலிபாபா.

பின்னர் தனது அண்ணன் மகனிடம்,"மெர்ஜியானாவைப் போன்ற அறிவும், திறமையும், துணிவும், பணிவும், பண்பும், ஒழுக்கமும், நல்ல அன்பும் கொண்ட பெண்ணை இந்த உலகத்தில் நீ பார்க்கவே முடியாது. இவள் பலமுறை ஆபத்துக் காலங்களில் இருந்து நம்மைக் காத்தவள். அப்படிப் பட்ட இவளை நீ ஏன் மணந்து கொள்ளக் கூடாது? அப்படி நீ இவளை மணந்து கொண்டால் நிச்சயம் வாழ்வில் முன்னேற்றம் அடைவாய்" என்று கூறவும். அவன் மகிழ்ச்சியுடன் மெர்ஜியானாவை திருமணம் செய்து கொள்ள ஒப்புக் கொண்டான். அத்துடன் அவனும் மெர்ஜியானாவை புகழ்ந்து உரைத்தான். அத்துடன்," இனி மற்றவர்களுடன் பழகும் போது எப்போதுமே எச்சரிக்கையுடன் பழகுவேன்" என்றும் அலிபாபாவிடம் அவனது அண்ணனின் மகன் கூறினான்.

அதன் பின்னர் அந்தக் கொடியவனின் உடலை யாருக்கும் தெரியாமல்

பத்திரமாக எடுத்துச் சென்று அவனது சகாக்களை புதைத்த இடத்திற்கு பக்கத்திலேயே ஆழக் குழி தோண்டிப் புதைத்து விட்டார்கள். அப்போது மெர்ஜியானா அலிபாபாவிடம்," இனிமேல் தாங்கள் எங்கு வேண்டும் என்றாலும் சென்று வரலாம். தங்களுக்கு வந்த ஆபத்து இன்றுடன் நீங்கி விட்டது" என்று கூற,

"ஆம் மெர்ஜியானா! நீ சொல்வது முற்றிலும் உண்மை தான்" என்று கூறி அலிபாபா மகிழ்ந்தான். அப்போது அங்கு இருந்த அனைவரின் முகத்திலுமே ஒரு மகிழ்ச்சிப் பெருக்கு காணப்பட்டது. அப்போது முதல் அலிபாபாவிற்கு அனைத்தும் நன்மையாகத் தான் நடந்தது. இதற்குள் காசிம் இறந்து ஐம்பது நாட்களுக்கு மேல் ஆகிவிட்டன. காசிமின் மனைவி சிறிது, சிறிதாக தனது கணவன் இறந்த சோகத்தை மறந்தாள். அவளுக்குள் இருந்த ஆடம்பரம், அகம்பாவம் என அனைத்துமே காசிமுடனேயே மறித்து விட்டது. மறுபுறம் அந்த சோக சூழ்நிலையை ஆனந்தமாக மாற்ற அலிபாபா தானே முன்னிருந்து தனது அண்ணன் மகனுக்கு மெர்ஜியானாவைத் திருமணம் செய்து வைத்து மகிழ்ந்தான். தனது வீட்டில் வேலை பார்த்த பணிப் பெண் என்றெல்லாம் பார்க்காமல் மெர்ஜியானாவை சந்தோஷமாக வரவேற்றாள் காசிமின் மனைவி. அத்துடன் அவளைத் தனது மகளாகவே பாவித்தாள். அன்புடன் பழகினாள்.

நாளடைவில் காசிமின் மகன் வியாபாரத்தை நல்ல முறையில் நடத்திப் பெரும் லாபத்தை சம்பாதித்தான். அதனால் காசிமின் கடை பெரிய கடையாக மாற்றப்பட்டது. மெர்ஜியானாவும் காசிமின் மகனை மணந்து கொண்டு இல்லறத்தில் வாழ்ந்து சந்தோஷமாக அவன் சந்ததியை பெருக்கினாள்.

காசிமின் பிணத்தைத் தூக்கி வந்ததில் இருந்து அலிபாபா பயந்தவனாய் அந்தக் குகைக்குப் போகவே இல்லை. ஆனால், அந்தத் திருடர்களின் கூட்டத்தில் இருந்த அத்தனை பேர்களும் மடிந்த பின்னர். துணிச்சலுடன் அலிபாபா அந்தக் குகைக்குள் சென்று வந்தான். அத்துடன் வேண்டிய மட்டும் பொற் காசுகளை அவன் கொண்டு வந்தான். அத்துடன் அலிபாபாவின் அடுத்தடுத்த தலைமுறைக்கும் கூட அந்தக் குகையின் ரகசியம் பற்றி அனைத்தும் சொல்லித் தரப்பட்டது. அதனால், அவன் சந்ததியே செழித்து விளங்கியது. பத்து தலைமுறையாக தாரளாமாக செலவு செய்தும் கூட அந்தச் செல்வங்கள் குகைக்குள் குறையவே இல்லை என்பது அலிபாபாவின் வம்சத்தினரை

# சிந்துபாத்தின் ஆரம்ப கால வாழ்க்கை

இவ்வாறு ஷாரஜாத் அலிபாபாவின் கதையை பல இரவுகள் தொடர்ந்து சொல்லி முடித்தாள். அதனைக் கேட்ட மன்னர் மகிழ்ந்தார்.

பிறகு சிறிது நேரம் கழித்து ஷாரஜாத்திடம் மன்னர் "இதை விட ஒரு அற்புதமான கதை இருந்தால் சொல்லேன்!" என்று கேட்டார்.

அதனைக் கேட்ட ஷாரஜாத்,"மன்னரே இதை விட ஒரு அற்புதமான கதையை சொல்கிறேன் கேளுங்கள். நான் சொல்லப் போகும் கதையில் வரும் சிந்துபாத்தின் வீரதீரச் செயல்களை கேட்டால் நிச்சயம் தாங்கள் வியந்து விடுவீர்கள்" என்று கூற.

"உடனே அந்தக் கதையையும் கூறு" என்று கேட்டுக் கொண்டார் மன்னர்.

ஷாரஜாத்தும் கடலோடி சிந்துபாத்தின் ஆபத்தான கடற்ப் பயணங்களை கொண்ட அந்த சுவாரஸ்யமான கதைத் தொகுப்பை இவ்வாறு சொல்லத் தொடங்கினாள்.

சிந்துபாத்தின் ஆரம்ப கால வாழ்க்கை:

பாக்தாத் நகரத்தில் ஆயிஷா, ஆஸிம் என்ற தம்பதியர்கள் வாழ்ந்து வந்தனர். ஆஸிம் ஒரு வணிகன். "திரை கடல் ஓடியும் திரவியம் தேடு" என்ற பலமொழிக்கு ஏற்ப பல நாடுகளுக்கு சென்று வியாபாரம் செய்து அதன் மூலம் எண்ணற்ற பொருள்களை சம்பாதித்தான். பாக்தாத் நகரத்திலேயே விரல் விட்டு எண்ணக் கூடிய மிகப் பெரும் பணக்காரர்களுள் ஆஸிமும் ஒருவன். இறைவன் ஆஸிமுக்கு செல்வத்தில் ஒரு குறையும் வைக்கவில்லை. ஆனால் வாழ்க்கையில் ஒரு பெரும் குறையை வைத்து இருந்தான். ஆம்! ஆயிஷா, ஆஸிம் தம்பதிகள் இருவருக்கும் திருமணமாகி பத்து ஆண்டுகள் கழிந்தும் குழந்தை வரம் கிட்டவில்லை என்பது தான் அந்தப் பெரும் குறை. அப்பெரும் குறையை தீர்க்க ஆயிஷா, ஆஸிம் தம்பதியர் பல புனிதத் தலங்களுக்கு சென்றனர். இறுதியில் எருசலேமில் இருந்த புகழ் பெற்ற மசூதிக்கு வந்து சேர்ந்தனர். அங்கு தங்களால் ஆன தான தர்மங்களை செய்து மகிழ்ந்தனர். அந்த ஊரில் இருந்து கிளம்பும் சமயத்தில் பாபாஜான் என்ற மிகப் பெரும்

சுஃபி துறவியை சந்தித்தனர். அவரிடம் கண்கள் கலங்க தம்பதியர் இருவரும் தங்களின் குறையை எடுத்துக் கூறி அழுதனர். பாபாஜான் அவ்வூரிலேயே மிகவும் மதிக்கத்தக்க ஞானி. அவர் அனைத்து சாஸ்திரங்களையும் அறிந்தவர். இன்னும் சொல்லப் போனால் அவரை ஜெருசலேமின் ஒரு ஜாதிப் பிரிவினர் இறைத் தூதராகவே நினைத்தே வழிபட்டனர்.

ஆயிஷா, ஆஸிம் ஆகிய இந்த இரு தம்பதிகளின் குறையையும் கேட்ட பாபாஜான் இறைவனை மனதில் நினைத்து கண்களைத் திறந்தவராக அவர்களிடம் "நீங்கள் அழ வேண்டாம். உங்கள் அழுகைக் காலங்கள் எல்லாம் முடிந்து விட்டது. விரையில் இறைவன் உங்களுக்கு புத்தியும், பலமும், நிறைந்த உடன் அதிர்ஷ்டமும் கொண்ட ஒரு ஆண் குழந்தையை தர இருக்கிறான்" என்ற நல்ல செய்தியை சொல்லி விட்டு நகர்ந்தார். அந்த வார்த்தையை கேட்ட தம்பதியர் இருவரும் மகிழ்ந்தனர். அந்த மகிழ்ச்சியுடன் மீண்டும் பாக்தாத் நகரம் திரும்பினர்.

சில மாதங்கள் கழிந்தது பாபாஜான் சொன்னபடியே ஆயிஷா ஒரு அழகான ஆண் குழந்தையை பெற்று எடுத்து ஆசிமின் கைகளில் ஒப்படைத்தாள். அத்துடன் அந்தக் குழந்தையை பத்திரமாகப் பார்த்துக் கொள்ளுமாறு கூறிவிட்டு மரணித்தாள். ஆயிஷாவின் பிரிவை ஆசிமினால் தாங்க இயலவில்லை. ஆஸிம் ஒரு கணம் "ஏதேனும் செய்து தாமும் இறந்து விடலாமா?" என்று கூட யோசித்தான். எனினும் தனக்குப் பிறந்த குழந்தையை நல்ல படியாக வளர்க்கும் பொறுப்பு அவனுக்கு இருந்ததால் அக்குழந்தைக்காக வாழத் தொடங்கினான். மேலும் அப்பிள்ளைக்கு சிந்துபாத் என்று பெயரிட்டு வளர்த்து வந்தான்.

சிந்துபாத் பார்ப்பதற்கு அழகாகவும், சற்றே மெலிந்த திரேகத்துடன் காணப்பட்டாலும் மிகவும் பலசாலியாகவும், அறிவாளியாகவும் திகழ்ந்தான். எதையும் ஒரு முறை பார்த்த மாத்திரத்திலேயே மனதில் பதித்துக் கொண்டான். தாராள மனதுடன் இருந்தான். அவனது மறைந்த தாயார் ஆயிஷாவைப் போலவே ஏழைகளுக்கு வாரி வழங்கும் வள்ளலாக இருந்தான். ஆனால், அதே சமயத்தில் அவனிடம் அதிகம், அதிகமாக விளையாட்டு புத்தியும் இருந்தது. தாய் இல்லாப் பிள்ளை என்ற பாசத்தில் ஆஸிம் அவனை ஒரு நாள் கூட அடித்தது இல்லை. சிந்துபாத்திற்காக அவன் இன்னொரு திருமணத்திற்கும் சம்மதிக்க வில்லை. இதனால் சிந்துபாத் சிறு வயதில் இருந்தே மிகவும் ஆடம்பரமாக வளர்ந்தான். அத்துடன் அவனுக்கு கஷ்டம், எளிமை என்ற

வார்த்தையின் பொருள் கூடத் தெரியவில்லை. தனது விருப்பம் போல செல்வத்தை தண்ணீராக செலவழித்தான். இன்னும் சொல்லப் போனால் "குன்றித் தின்னால் குன்றும் காணாது" என்ற பழமொழி அவனுக்குப் புரியவில்லை. இந்நிலையில் சிந்துபாத்தின் தந்தை ஆஸிம் காலமானார். இப்போது சிந்துபாத்தை கேட்கவும் ஆள் இல்லை. வரவை மீறி செலவு செய்து வந்தான். அதிகப்படியான செலவுகள் கடைசியில் எதில் கொண்டு போய் விடும் என்று சொல்லத் தேவை இல்லை. ஒரு பழமொழி சொல்வார்கள், செக்களவு பொன் இருந்தாலும், செதுக்கிச் செதுக்கித் தின்றால் எத்தனை காலத்திற்கு வரும் என்று. அதே கதை தான். வருமானம் இல்லா விட்டால் என்ன செய்ய முடியும்? உழைக்காமல் எத்தனை நாட்கள் உண்ண முடியும்? உயர்ந்த வகை ஆடைகளை உடுத்திட முடியும்? ஆம்! கடைசியில் அது தான் நடந்தது தனது ஈகைப் பண்பாலும், அதிகப்படியான செலவுகளாலும் எல்லா செல்வங்களையும் இழந்து விட்டான் சிந்துபாத். அதன் விளைவு மாளிகை கூரை வீடாக மாறியது. தங்கத் தட்டுக்கள் மற்பாண்டமாய் மாறிப் போயின. முன்பு தேடித் தேடி வந்த உறவுகள் அனைத்தும் இப்போது வறண்ட குளத்தை பார்க்க விரும்பாத பறவைகள் போல ஓடி ஒழிந்தன.

சிந்துபாத்துக்கு அப்போது தான் வாழ்க்கை புரிந்தது. "துன்பம்" என்ற சொல்லை ஏட்டில் மட்டுமே படித்தவன் இப்போது முதன் முறையாக அதனை அனுபவத்தில் கண்டான். தந்தை ஆசானாக இருந்து சொல்லித் தர வேண்டிய பல உண்மைகளை அவனது அனுபவம் என்ற ஆசான் மூலமாக குறுகிய காலத்தில் சிந்துபாத் கற்றுத் தேர்ந்தான். இறுதியாக கப்பல் கட்டுபவர்களிடம் வேலைக்கு சேர்ந்தான். எதையும் பார்த்தவுடனேயே கற்றுத் தேர்ந்து விடும் அறிவு கொண்ட சிந்துபாத் விரைவில் கப்பல் கட்டும் தொழில் நுட்பத்தை கற்றுத் தேறினான். இப்போது அவனே தனியாகச் சென்று கப்பலைகளை சொந்தமாகக் கட்டி விற்கத் தொடங்கினான். முதலில் சிறு, சிறு கப்பல்களை செய்து விற்றவன். இப்போது வருவாய் பெருகியதன் காரணமாக சில பெரிய கப்பல்களையும் செய்து விற்றான். அதனால் கையில் கொஞ்சம் அதிகமாகவே காசு புரண்டது. அதைக் கொண்டு ஒரு மிகப் பெரும் மாளிகையை கட்டிக் கொண்டான். தந்தை காலத்தில் சேர்த்து வைத்த சொத்துக்கள் அனைத்தையும் மீண்டும் மீட்டு எடுக்க வேண்டும் என்ற எண்ணம் சிந்துபாத்தின் மனதில் நிழல் ஆடியது. அது கனவாய் அவனைத் தூங்க விடாமல் நச்சரித்தது. அதன் விளைவு தனது தந்தையைப் போலவே சிந்துபாத்தும் கடல் கடந்து வியாபாரம் செய்ய

வேண்டும் என்று ஆசை கொண்டான்.

சிந்துபாத்தின் கப்பல் கட்டும் தொழில் நன்றாக வளர்ந்ததால் எண்ணற்ற செல்வந்தர்களின் அறிமுகம் அவனுக்குக் கிடைத்தது. அத்துடன் அவன் கேட்டால் கடனாக அவனை நம்பி எத்தனை தினார்களை வேண்டும் ஆனாலும் அள்ளிக் கொடுக்க பிரபுக்கள் காத்திருந்தனர். அத்துணை நம்பிக்கையை சிந்துபாத் குறுகிய காலத்திலேயே அவ்வூர் உயர் குடி பிரப்புக்களிடம் இருந்து பெற்றுவிட்டான். தான் கஷ்டப்பட்டு உருவாக்கிய கப்பல் கட்டும் தொழிற்சாலையை தனக்கு வேண்டிய ஒரு உயர் குடிப் பிரபுவிடம் ஒப்படைத்து விட்டு அவரிடம் இருந்து அதற்கு ஈடாக எண்ணற்ற பொற்காசுகளை பெற்றான் சிந்துபாத். தான் பெற்ற பொற்காசுகளைக் கொண்டு வர்த்தகத்துக்கு தேவையான எண்ணற்ற அறிய பொருள்களை வாங்கிக் கொண்டு அதனை வெளி நாட்டில் நல்ல விலைக்கு விற்க வேண்டி தனக்கு அறிமுகமான சில வியாபாரிகளுடன் தனது முதல் கப்பல் பயணத்திற்கு ஆயத்தம் ஆனான் சிந்துபாத்.

# சிந்துபாத்தின் முதல் கப்பல் பயணம்

சிந்துபாத் தனக்குத் தெரிந்த சில நல்ல வர்த்தகர்களின் உதவியுடன் தான் வியாபாரத்திற்கு வாங்கிய வணிகப் பொருள்களையும் ஏற்றிக் கொண்டு தனது முதல் கப்பல் பயணத்தை தொடங்கினான்.

சில் என்று தென்றல் தழுவ பாய்மரத்தின் உதவியுடன் கப்பல் கடலின் அலைகளில் மெல்ல நகரத் தொடங்கியது. வெற்றி அடைந்த அரசனை அரண்மனைக்குள் வரவேற்கும் பணிப் பெண்களைப் போல, கடலில் மிதந்த கப்பலை வரவேற்றது நிலவின் ஒளி. அதற்கு மேலும் அழகு சேர்க்கும் விதத்தில் வானில் தோரணமாய் காட்சி அளித்தது விண்மீன்களின் கூட்டம். இந்நிலையில் கப்பலில் ஆடல், பாடல்களுடன் இனிய கானம் ஒலிக்க. அதற்கு நடனம் ஆடுவது போல துள்ளி எழுந்தன கடல் வாழ் உயிரினங்கள் சில. இக்காட்சிகள் அனைத்தும் சிந்துபாத்தின் மனதைக் கவர்ந்தது. அதில் அவன் மனம் நெகிழ்ந்தது. அதனால் அவன் நா கவிதை பாடியது. இப்படியாக ஆடல், பாடல் என்ற விதத்தில் அந்த இரவு அற்புதமாகக் கழிந்தது.

அடுத்த நாள் காலையும் மெல்ல விடியத் துவங்கியது. சூரியனின் கதிர்கள் வானத்தில் வர்ண ஜாலத்தை நிகழ்த்திய தருணம் சிந்துபாத் கண் விழித்தான். அந்த அற்புதமான காட்சியை கண்டு ரசித்தான். அன்றும் கப்பலில் அனைவரும் ஆட்டம், பாட்டம் கொண்டாட்டம் என்று தான் இருந்தனர். இப்படியே மூன்று நாட்கள் கடந்தது. இறுதியில் கப்பல் ஒரு குட்டித் தீவை அடைந்து நின்றது. அவ்விடத்தில் கப்பலின் நங்கூரம் பாய்ச்சப்பட்டது. கப்பலில் இருந்து தீவுக்கு இறங்கி வர வேண்டுமே, அதற்காக சில பலகைகளை கப்பல் தலைவன் பரப்ப, அதன் மீது பத்திரமாக இறங்கி தீவுக்குள் நடந்தனர் வர்த்தகர்கள். அவர்களைப் பின் தொடர்ந்து சென்றான் சிந்துபாத். சிந்துபாத்தைப் பொறுத்தவரையில் இவை அனைத்துமே அவனுக்குப் புதிய அனுபவம் தான்.

அந்தக் குறிப்பிட்ட குட்டித் தீவில் இறங்கியதும் அவரவர், அவரவர் பணியை பார்க்கத் தொடங்கினார்கள். சிலர் குமுட்டி அடுப்புகளைப் பற்ற வைத்து தீ மூட்டினார்கள்; சிலர் துணிமணிகளை துவைக்க ஆரம்பித்தார்கள். மறுபுறம் கப்பல் பணியாளர்களோ எந்த விதமான கவலையும் இன்றி உண்பதிலும், உல்லாசமாகக் குடித்து ஆடிப் பாடி

மகிழ்வதிலும் நேரத்தை செலவு செய்தார்கள்.

இவ்விதமாக அனைவரும் அவரவர் பணிகளை ஆள் நடமாட்டம் இல்லாத அந்தக் குட்டித் தீவில் செய்து கொண்டு இருந்தார்கள். அந்த சமயம் அவர்களுக்குள் ஒருவன் மூச்சிரைக்க திடீரென்று பயந்து அலறி இப்படியாகக் குரல் கொடுக்கத் தொடங்கினான். "உடனே அனைவரும் கப்பலுக்கு சென்று விடுங்கள்; உங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். இல்லையேல் நாம் அனைவரும் அழிந்து விடுவோம். காரணம் இந்தத் தீவின் பெயர் "மரணத் தீவு". இப்போது தான் இந்தத் தீவைப் பற்றிய செய்தியை அங்கு இருக்கும் ஒரு கல் வெட்டில் படித்தேன். உண்மையில் இது "இவான்" என்ற பூதத்திற்கு சொந்தமான தீவு. அவனுக்கு உணவே இந்தத் தீவில் தஞ்சம் அடையும் நம்மைப் போன்ற அப்பாவி மனிதர்கள் தான். அவன் இந்நேரம் மனித நடமாட்டத்தையும், மனித வாடையையும் உணர்ந்து இருப்பான். அந்த "இவான்" எழுந்து நம்மை எல்லாம் உண்பதற்குள் நாம் இங்கு இருந்து ஓடி விட வேண்டும்" என்று கதறியபடி கூறிக் கொண்டு இருந்தான்.

அதைக் கேட்டு அங்கு கூடி இருந்த வணிகர்கள் அனைவரும் முதலில் பரிகாசம் செய்தனர். அவர்கள் யாருமே அந்தச் செய்தியை உண்மை என்று நம்பவில்லை. அந்த நேரத்தில் திடீர் என்று அந்தத் தீவு நில நடுக்கம் வந்தது போலக் குலுங்கத் தொடங்கியது. வணிகர்கள் யாருக்குமே ஒன்றும் புரியவில்லை. அப்போது எங்கிருந்தோ ஒரு சிரிப்பு ஒலி பயங்கரமாகக் கேட்டது. ஒரு பெரிய உருவம் கொண்ட பூதம் அவ்விடத்தில் வந்தது. அதன் உயரம் ஆகாயத்தை தொடும் அளவுக்கு இருந்தது. அந்த பூதத்தைக் கண்ட வணிகர்கள் அனைவரும் வேகமாக கப்பலை நோக்கி ஒடத் தொடங்கினார்கள். எல்லோரும் கப்பலை நோக்கி ஒரே நேரத்தில் ஓடியதால் கூட்ட நெரிசலில் கீழே பலர் விழுந்தனர். அவர்களை அந்தப் பூதம் பிடித்து நற நறவென்று கடித்துக் குதறி சதை வேறு எலும்பு வேறு ரத்தம் வேறாக பிரித்து எறிந்தது. அதைக் கண்ட வணிகர்கள் மேலும் அலறியபடி கப்பலில் ஏறத் தொடங்கினார்கள். சிலரோ கப்பலில் ஏறும் சமயத்தில் கீழ் இருந்த பலகைகள் கவிழ்ந்ததால் கடலில் விழுந்து தத்தளித்தனர். அப்படிக் கடலில் தவறி விழுந்தவர்களுள் சிந்துபாத்தும் ஒருவன். ஆனால் அந்தக் கப்பல் தலைவனோ எதைப் பற்றியும் கவலைப் படாமல் எஞ்சிய வணிகர்கள் மட்டும் கப்பலில் ஏற அதி விரைவாக அந்தக் கப்பலை கடலில் செலுத்தத் தொடங்கினான். மறுபுறம் அந்தப் பூதத்திற்கு போதும், போதும் என்ற அளவுக்கு நர மாமிசம் கிடைத்ததால் ஒரு

கட்டத்திற்கு மேல் அது கப்பலை தொடருவதை நிறுத்திக் கொண்டது. சந்தோஷமாக உண்டு கழித்த பூதம் மீண்டும் அந்தத் தீவில் தனது இருப்பிடம் நோக்கித் திரும்பியது. உண்ட களைப்பு தொண்டனுக்கும் உண்டு அல்லவா? இதில் பூதம் மட்டும் விதி விலக்கா என்ன? உண்ட களைப்பில் ஆழ்ந்த நித்திரையில் ஆழ்ந்தது பூதம். பூதத்தின் நிலை இப்படி இருக்க சிந்துபாத்தின் நிலையையும் அவனுடன் சேர்ந்து கடலில் விழுந்த மற்ற வணிகர்களின் நிலையையும் பற்றி விரிவாகப் பார்போம் வாருங்கள்.

கடலில் விழுந்த பெரும்பாலான வணிகர்கள் வயோதிகர்கள் என்பதால் அவர்கள் கடலில் விழுந்த மாத்திரத்தில் குளிர் தாங்க முடியாமல் செயலற்று இறந்தார்கள். இன்னும் பலர் நீச்சல் அடிக்க முயற்சி செய்து கடல் அலைகளால் அலைக்கழிக்கப்பட்டு இறுதியில் மூழ்கியே போனார்கள். ஆனால் சிந்துபாத்தின் நல்ல நேரம் கப்பலில் இருந்து மரத் தொட்டிலைப் போன்ற அமைப்பு கொண்ட ஒரு மரக் கட்டை கடலில் விழுந்து அவன் அருகே மிதந்து வர, அதனை இறைவனின் கருணையாக நினைத்து மிகப் பத்திரமாக பிடித்துக் கொண்டு அதன் துணையால் நீந்தத் தொடங்கினான்.

மறுபுறம், சிந்துபாத் ஏறிவந்த கப்பல் அவன் கஷ்டப்பட்டு சம்பாதித்து சேர்த்த வணிகப் பொருட்களுடன் வெகு தூரம் சென்று அவனது பார்வையில் இருந்து மறைந்தது. எனினும், உயிராவது பிழைத்ததே என்று நினைத்து மனதார இறைவனுக்கு நன்றி சொன்னான் சிந்துபாத். பிறகு அந்த மரக் கட்டையின் உதவியுடன் நீந்தத் தொடங்கினான். பிறக்கும் போதே "பாபாஜானின்" ஆசிர்வாதத்தை பெற்ற சிந்துபாத்துக்கு காற்றும், கடல் அலைகளும் கூட கை கொடுத்து இறுதியில் ஒரு அழகான தீவின் கரைகளில் கொண்டு போய் அவனைச் சேர்த்தது.

நீண்ட நேரம் கடலில் நீந்தி வந்ததால் ஏற்பட்ட சோர்வும், பசியும், தாகமும் சிந்துபாத்தை படாத பாடு படுத்தியது. தண்ணீரில் கிடந்த வண்ணம் துழாவித் துழாவி அவனது கால்களும் உணர்வு இன்றி மரத்துப் போய் இருந்தது. எனினும் அந்நிலையிலும் மன உறுதி கொண்ட சிந்துபாத் மெல்ல நகர்ந்து தீவின் கரையில் காணப்பட்ட ஒரு அடர்ந்த மரத்தின் நிழலில் தஞ்சம் அடைந்து படுத்துக் கொண்டான். அப்படிப் படுத்த சிந்துபாத் சிறிது நேரத்தில் கண் அயர்ந்து அவனை அறியாமல் உறங்கவும் தொடங்கினான். இரவு நேரம் நெருங்க, நெருங்க

ஈரப் பதம் கலந்து வெளிவந்த குளிர் காற்று சிந்துபாத்துக்கு சாமரம் வீசியது. கடலில் மிதந்து வந்த சமயத்தில் கடல் மீன்கள் கடித்த ரணத்திற்கு அந்தக் குளிர்ந்த காற்றே அரும் மருந்தாக இருந்தது. இப்படித் தான் சிந்துபாத் இனிமையாக அன்றைய இரவு இயற்கையின் மடியில் உறங்கிக் கழித்தான்.

இந்நிலையில் மெல்ல, மெல்ல காலைப் பொழுதும் புலரத் தொடங்கியது. அதன் காரணமாகக் கிளை அகன்று சிறகு விரிக்கும் பறவைகளின் காலை இசை வானில்

எழுந்தது. அத்துடன் ஆதவன் தனது ஒளி மிகுந்த கதிர்களால் நிலவுக்கு விடை கொடுத்து அனுப்பினான்.

ஆதவனின் கதிர்களை கிரகித்துக் கொண்ட கடல் அன்னை புன்னகைத்தது போலக் காட்சி தந்தாள். உலகின் காரிருளை போக்கிய ஆதவன் தனது வெப்பக் கதிர்களால் சிந்துபாத்தின் உறக்கத்தையும் சுட்டு எரித்தான். அதனால் சிந்துபாத் கண் விழித்தான். அவனுடன் சேர்ந்து உறங்கிக் கொண்டு இருந்த அவனது வலிகளும் உயிர் பெற்றன. சிந்துபாத்தின் கால்கள் இரண்டும் அப்போது வீங்கி இருந்தது. அந்நிலையிலும் கூட, மெல்ல நடக்க முடியாமல் நடந்து அத்தீவுக்குள் பிரவேசித்தான். அவன் மீது இரக்கம் கொண்ட ஒரு மரம் தனது கிளைகளில் ஒன்றை ஊன்று கோலாக அவனுக்குக் கொடுக்க அதனைப் பிடித்துக் கொண்டு அதன் துணையுடன் மெல்ல நடக்கத் தொடங்கினான். அதைக் கண்ட இன்னொரு மரம் தன் பங்கிற்கு தன்னிடம் இருந்த கனிகளை அவனுக்கு உதிர்த்துக் கொடுத்தது. அதனை உண்டு சிந்துபாத் பசி ஆறினான். இப்படியாக மனிதன் மறந்து போன மாண்புகளை அத்தீவில் இருந்த மரங்கள் நினைவுபடுத்தின. இது தவிர அந்தத் தீவில் கிழங்கு வகைகளுக்கும், தென்ன மரங்களுக்கும் கூட குறைவு இல்லை. இயற்கை எழில் கொஞ்சிய அந்தத் தீவில் நன்னீர் ஊற்றுகளும் அதிகம் காணப் பட்டன. சுருங்கச் சொன்னால் மனிதனின் காலடித் தடம் படாத தீவு அல்லவா? அதனால் இறைவன் படைத்த போது இருந்த அதே அழகுடன் இப்பொழுதும் அது காணப்பட்டது. மேலும் அந்தத் தீவில் காணப்பட்ட பச்சிலைகள் சிந்துபாத்தின் ரணங்களுக்கு மருந்தாக இருந்தன. அதனால் ஓரிரு தினங்களில் சிந்துபாத் தனது பூரண பலத்தை மீண்டும் பெற்றான். எனினும் சிந்துபாத்தின் மனதில் ஆயிரம் எண்ணங்கள் நிழல் ஆடியது. இருக்கிற பொருளை வைத்துக் கொண்டு நிம்மதியுடன் ஊரிலேயே வாழ்ந்து

இருக்கலாமே! இப்படி வந்து மாட்டிக் கொண்டோமே! இங்கு இருந்து இனி எவ்வாறு தப்பித்து சொந்த ஊருக்குப் போவது? என்று நினைத்து, நினைத்துக் கண் கலங்கித் தவித்தான் சிந்துபாத். ஒரு உவமைக்காக பேச்சு வழக்கத்தில் "கண்களைக் கட்டி காட்டில் விடுவது" என்பார்கள் பெரியோர்கள். அந்த நிலையை சிந்துபாத் இப்போது தனது நிஜ வாழ்க்கையில் அப்படியே அனுபவித்தான். இப்படியாக சில நாட்கள் அந்தத் தீவிலேயே கழித்தான் அவன்.

ஒரு நாள் அந்தத் தீவில் இருந்த ஒரு உயர்ந்த மரத்தின் மீது பழங்கள் பறிக்க ஏறினான் சிந்துபாத். சற்று தொலைவில் அவன் கண்களுக்கு ஏதோ கோபுரம் போலத் தெரிந்தது. எனினும் அந்தக் கோபுரத்தின் உச்சியில் கூம்பு ஏதும் காணப்படவில்லை. அது சிந்துபாத்துக்கு மிகவும் விச்சித்திரமாகப் பட்டது. அந்த விசித்திரம் அவனது ஆர்வத்தை தூண்டியது. மரத்தில் இருந்து பழங்களைப் பறித்துக் கொண்டு வேகமாக இறங்கிய சிந்துபாத் விரைந்து அந்த கோபுரம் இருக்கும் திசை நோக்கி நடக்கத் தொடங்கினான். சிறிது நேரத்தில் எதை கோபுரம் என்று நினைத்தானோ அவ்விடத்தை அடைந்த போது தான் சிந்துபாத்துக்கே புரிந்தது அவன் நினைத்தது தவறு. அது உண்மையில் ஒரு கோபுரமே அல்ல, அது ராட்ச பறவை ஒன்றின் முட்டை என்று. உண்மையை உணர்ந்த சிந்துபாத் விரைவாக அவ்விடம் விட்டு நகர முயற்சி செய்தான். அப்போது திடீர் என்று ஒரு இருள் எங்கும் படர்ந்தது. சூரியனை மறைக்கும் பேரிருளாக அது தோன்றியது. என்ன இது இவ்விதம் திடீர் என்று சூரியன் மறைக்கப் படுகிறதே என்று பார்த்தால், வானத்தில் ஒரு மிகப் பெரிய பறவை தோன்றியது. உண்மையில் அது கற்பனைக்கும் அப்பாற் பட்ட ஒரு பெரிய பறவை என்று தான் சொல்ல வேண்டும். அப்படிப் பட்ட அந்தப் பறவை அந்த மூட்டையை நோக்கி வந்து கொண்டு இருந்தது. அதைக் கண்ட சிந்துபாத் விரைந்து சென்று மறைந்து கொண்டான். மறுபுறம் அந்த ராட்சஸ பறவை அதன் முட்டை மீது பக்குவமாக அமர்ந்து அடை காக்கத் தொடங்கியது.

ஒரு பெரிய பாறையின் இடுக்கில் மறைந்து கொண்டு அக் காட்சியைப் பார்த்துக் கொண்டு இருந்த சிந்துபாத்தின் மூளை மிக வேகமாக வேலை செய்தது.

"எப்படியும் இந்தப் பறவை தாம் இட்ட முட்டையின் மீது சில மணி நேரம் அமர்ந்து அடைகாத்து விட்டுத் தான் செல்லும். இந்த வாய்ப்பை நாம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். நம்முடைய ஆடைகளை உடன்

இந்த அங்க வஸ்த்திரத்தின் உதவியுடன் கயிறு போல ஆக்கி நமது உடலை அந்த ராட்சஸ பறவையின் கால்களுடன் சேர்த்து உறுதியாகக் கட்டிக் கொள்வோம். நிச்சயம் இந்தப் பறவை பறந்து வேறு இடத்திற்கு செல்லும். அப்போது பறவையின் கால்களில் கட்டி இருக்கும் நம்மையும் கூட இப்பறவை சுமந்து செல்லும். ஆயிரம் யானைகளின் தோற்றம் கொண்ட இந்தப் பறவைக்கு அதன் கால்களில் நாம் தஞ்சம் அடைந்து இருப்பது தெரியவா போகிறது? மேலும், இந்தப் பறவை நம்மை எங்காவது ஒரு இடத்தில் பத்திரமாகக் கொண்டு சென்று சேர்க்கும். அந்த இடம் இதைப் போல ஒரு அத்துவானமான தீவாக இருக்காது. நிச்சயம் நம்மை இறைவன் கை விட மாட்டார்" என்றெல்லாம் எண்ணிக் கொண்ட சிந்துபாத் உடனுக்குடன் தனது புத்தியில் உதித்த அந்தத் திட்டத்தை செயல் படுத்தத் தொடங்கினான். ஒரு வழியாக தன்னிடம் இருந்த தலைப் பாகை உட்பட அனைத்து ஆடைகளையும் கயிறு போல ஆக்கி அந்த ராட்சஸ பறவையின் கால்களுடன் தனது உடலை உறுதியாகப் பிணைத்துக் கொண்டான். சிந்துபாத்தின் திட்டப்படியே எல்லாம் நடந்தது.

சிந்துபாத் நினைத்தது போலவே அந்தப் பறவை பேரிரைச்சலுடன் தனது சிறகை விரித்துக் கொண்டு ஆகாயத்தில் பறக்கத் தொடங்கியது. சிந்துபாத் அந்த ராட்சஸ பறவையின் கால்களை பத்திரமாகப் பிடித்துக் கொண்டான். அத்துடன் அவனது ஆடையும் கழண்டு நழுவாமல் பார்த்துக் கொண்டான். நடப்பது நடக்கட்டும். எல்லாமே ஆண்டவன் செயல் என்ற எண்ணமுடன் சற்று தைரியத்தை வர வழைத்துக் கொண்டான் சிந்துபாத்.

மறுபுறம் அந்த ராட்சஸப் பறவை தான் புறப்பட்ட இடத்தில் இருந்து தொலைவாக உள்ள ஒரு மலையை அடைந்து ஒரு பாறையின் மீது அமர்ந்தது. இந்தத் தருணத்திற்காகத் தான் சிந்துபாத்தும் காத்துக் கொண்டு இருந்தான். அந்த ராட்சஸப் பறவை பாறையின் மீது அமர்ந்த சிறிது நேரத்திற்கு உள்ளாகத் தனது உடம்போடு உள்ள கட்டை-முடிச்சை அவிழ்த்து விட்டு, சிந்துபாத் அந்த இடத்தை விட்டே சென்று விட்டான். அத்துடன் அந்தப் பறவையின் கண்களுக்கு அகப்பட்டு விடக் கூடாது என்ற எண்ணமுடன் ஒரு பாதுகாப்பான இடத்தில் மறைந்தும் கொண்டான்.

அந்த அத்வான இடமும் அங்கு இருந்த மலைகளும் சிந்துபாத்துக்கு அவ்வளவு திருப்தியைத் தரவில்லை. மேலும் முன்பு தான் தனித்து விடப்

பட்டு இருந்த அந்தத் தீவிலாவது சுனைகள், பழங்கள், கிழங்குகள் என்று ஏராளமான பொருட்கள் உண்ணக் கிடைத்தது. ஆனால், தற்போது சிந்துபாத் வந்து இறங்கிய அந்த மலையில் இவை எதுவுமே காணப் படவில்லை. அதனால் நிம்மதி இழந்து தவித்தான் சிந்துபாத். எனினும் தனக்காக ஆண்டவன் ஏதேனும் ஒரு வழியை ஏற்படுத்தி வைத்து இருப்பார் என்று உறுதியாக நம்பினான். அந்த நம்பிக்கையில் ஆண்டவன் மீது பாரத்தை போட்டு விட்டு கால் போன போக்கில் நடக்கத் தொடங்கினான் சிந்துபாத்.

சிந்துபாத் நடந்து சென்ற பாதையில் ஒரு காட்டாறு குறுக்கிட்டது. அந்தக் காட்டாற்றின் மணலில் பலதரப்பட்ட நவ ரத்தினங்களைக் கண்டான். அவை அனைத்தும் சூரிய ஒளியில் மின்னியபடி சிந்து பாத்தின் கண்களை கூசச் செய்தது. இந்த வைரங்களை எல்லாம் நமது கண்களில் காட்ட வேண்டும் என்பதற்க்காகத் தான் அந்த ராட்சஸப் பறவை நம்மை இந்த மலையில் கொண்டு வந்து விட்டது போலும் என்று எண்ணியவனாய், வேண்டிய மட்டும் வைரங்களை வாரி எடுத்துக் கொண்டான். அவை அனைத்தையும் பல மூட்டைகளாகக் கட்டிக் கொண்டான். அதற்கு மேல் தன்னால் சுமக்க முடியாது என்ற நிலையில் இறைவனுக்கு நன்றி கூறியபடி நடக்கத் தொடங்கினான். பல தொலைவை கடந்தான். இறுதியில் சிந்துபாத் ஒரு பள்ளத்தாக்கை அடைந்தான். அந்தப் பள்ளத்தாக்கில் பொல்லாத விஷத் தன்மை கொண்ட பாம்புகள் காணப்பட்டன. சிந்துபாத்தின் நல்ல நேரம் அந்தப் பாம்புகள் அவனை எதுவுமே செய்ய வில்லை. சிந்துபாத்தும் அந்தப் பாம்புகளை ஒரு தொந்தரவும் செய்யவில்லை. நேரம் இருட்ட, இருட்ட சிந்துபாத்தின் மனதை பயம் கவ்வியது. இதற்கு மேல் என்ன செய்யலாம் என்று ஆலோசித்தான். சிந்துபாத்தின் கண்களில் ஒரு குகை தென்பட்டது. அதைக் கண்ட சிந்துபாத் முதலில் அந்தக் குகைக்குள் மிருகம் ஏதேனும் இருக்குமா? என்று சந்தேகித்தான். பிறகு பொறுமையாக சத்தம் போடாமல் உள்ளே சென்று அங்கு எந்த மிருகமும் இல்லை என்பதை உறுதிப்படுத்திக் கொண்டான். பிறகு குகையின் வாயில் கதவை உள்ளே இருந்தபடி ஒரு பெரும் பாறாங்கல்லைக் கொண்டு வேறு ஏதும் மிருகங்கள் வராத படி நன்றாகக் கஷ்டப்பட்டு நகர்த்தி மூடினான். அவன் வெகு தூரம் நடந்து வந்ததால் ஏற்பட்ட அசதியில் அந்தக் குகையிலேயே தூங்கினான். அடுத்த நாள் காலை சூரியன் உதித்ததை உறுதி செய்த பிறகு தான் சிந்துபாத் அந்தக் குகையை விட்டே வெளியே வந்தான். அப்படி வந்தவன் மீண்டும் தனது பயணத்தை நெடும் தூரம் தொடர்ந்தான்.

அவனது பயணம் அவனை வயல் வெளி நிறைந்த ஒரு காட்டுப் பகுதிக்கு கொண்டு சென்று விட்டது. அங்கு பல தரப்பட்ட குதிரைகளின் நடமாட்டம் காணப்பட்டது. தூரத்தில் ஒரு வெள்ளைக் குதிரை கட்டப்பட்டு இருந்தது. அது ஒரு பெண் குதிரை. அதன் அருகில் இரண்டு பேர் நின்று கொண்டு இருந்தார்கள். சந்தேகமே இல்லை அவர்கள் மனிதர்கள் தான் என்பதை உணர்ந்து ஆனந்தம் கொண்டான் சிந்துபாத். விரைந்து அப்புதிய மனிதர்கள் இருக்கும் அவ்விடம் நோக்கி நகர்ந்தான்.

சிந்துபாத்தை பார்த்த அப்புதியவர்கள் இருவரும் கடல் ஓராமாகக் காணப்பட்ட அடர்ந்த வனப் பகுதியில் இருந்து புதிதாக ஒரு மனிதன் வெளி வருவதை பார்த்து முதலில் யார் என்று தெரியாமல் அதிர்ந்து போயினர். மறுபுறம், புதியவர்கள் இருவரையும் நெருங்கிய சிந்துபாத் அவர்களிடம் நயமாகப் பேசத் தொடங்கினான். தன்னைப் பற்றிய அனைத்து விவரங்களையும் அவர்களிடம் கூறி தான் அந்தத் தீவுக்கு வந்து சேர்ந்த சோகக் கதையையும் தெரிவித்தான். இப்படியாக சிந்துபாத்தின் கதையை முழுவதுமாகக் கேட்ட அந்தப் புதியவர்கள் இருவரும் இப்படியெல்லாம் கூட உலகத்தில் நடக்குமா? என்ற ரீதியில் திகைத்து நின்றனர்.

பிறகு அவ்விருவரும் சிந்துபாத்தின் மீது கருணை கொண்டு தாங்கள் கொண்டு வந்த உணவை அவனுக்கும் கொடுத்து உதவினார்கள். அதற்கு ஈடாக சிந்துபாத் தன்னிடம் இருந்த விலை மதிக்க முடியாத நவ ரத்தினக் கற்களில் சிலவற்றைக் கொடுத்து தன்னை இந்தத் தீவில் இருந்து பத்திரமாக அழைத்துச் செல்லுமாறு வேண்டினான். நவ ரத்தினக் கற்களை மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்ட அப்புதியவர்கள் இருவரும் சிந்துபாத்துடன் இன்னும் அதிகம், அதிகமாக நட்பு கொண்டார்கள். அத்துடன் அவனது கரத்தைப் பற்றி தங்களுடன் வரும் படியாகக் கூறினார்கள். சிந்துபாத்தும் அவர்களது அன்புக்கு இசைந்து அவர்களுடன் சென்றான். புதியவர்கள் இருவரும் அவனைத் தாங்கள் பிரத்யேகமாக ஏற்கனவே தங்க அமைத்து இருந்த மிகப் பெரிய பதுங்குக் குழிக்குள் அழைத்து சென்று அங்கு காணப்பட்ட ஒரு உயரமான திண்டில் சிந்துபாத்தை அமரச் செய்தார்கள். சிந்துபாத் அந்தப் புதியவர்களிடம் அவர்களைப் பற்றிய தகவல்களை கேட்கத் தொடங்கினான். அவர்களும் மறுக்காமல் சிந்துபாத்தின் மீது தாங்கள் கொண்ட அன்பினால் தங்களைப் பற்றி கூறத் தொடங்கினார்கள்.

"அன்பரே! நாங்கள் இருவரும் இங்கு திரியும் குதிரைகளை பிடித்து

பழக்கப்படுத்தி அவைகளை நல்ல விலைக்கு அரசர்கள் மற்றும் பிரபுக்களிடம் கொண்டு சென்று விற்பவர்கள். அதற்காகத் தான் வெளியில் இருக்கும் வெள்ளைப் பெண் குதிரையை கட்டி வைத்து உள்ளோம். நாங்களோ இது போன்ற பதுங்குக் குழிகளில் மறைந்து கொள்வோம். இருட்ட, இருட்ட இந்தப் பெண் குதிரையின் வாசனையை உணர்ந்து இந்த வனத்தில் இருக்கும் பொலி குதிரைகள் சில இவ்விடம் வரும். அவைகள் இந்தப் பெண் குதிரையுடன் சில கணங்களிலேயே சேர்ந்து கூடி மகிழும், பின்னர் இந்தப் பெண் குதிரையை தங்களுடன் கூட்டிக் கொண்டு செல்ல முயலும். பெண் குதிரையும் அந்த ஆண் குதிரைகளுடன் புறப்பட சித்தம் கொள்ளும். ஆனால், நாங்கள் பெண் குதிரையை கட்டி வைத்து இருக்கும் பலமான கயிறின் பிடியில் இருந்து அவற்றால் விடு பட இயலாமல் தவிக்கும். இந்தப் போராட்டத்தில் கயிறுடன் நாங்கள் பிணைத்து இருக்கும் இந்த மணி அடிக்கத் தொடங்கும். அத்துடன் வலியின் காரணமாக அந்தப் பெண் குதிரையின் கனைப்பு சத்தமும் பலமாகக் கேட்கும். உடனே நாங்கள் பதுங்குக் குழிகளில் இருந்து வெளிவந்து நாங்கள் கொண்டு வந்திருக்கும் ஆயுதங்களின் உதவியால் ஆண் குதிரைகள் சிலவற்றை சேதாரம் இல்லாமல் பக்குவமாகத் தாக்கி அவைகளை பத்திரமாகப் பிடித்துக் கொள்வோம். அதே போல, பெண் குதிரையும் ஆண் குதிரைகளுடன் கூடியதால் விரைவில் குட்டிகள் போடும். அவற்றையும் நாங்கள் நல்ல விலைக்கு விற்று விடுவோம். எங்களைப் போல இன்னும் பலர் இந்தக் கடற்கரை ஓரமாக இதற்காகவே பதுங்குக் குழிகள் அமைத்துக் காத்துக் கொண்டு இருக்கிறார்கள். ஓர் இரு நாளில் கப்பல்கள் வந்தவுடன் அதில் நாங்கள் எங்கள் குதிரைகளுடனும், பிடிபட்ட குதிரைகளுடனும் ஏறிக் கொண்டு எங்கள் இருப்பிடம் திரும்பி விடுவோம். அப்போது தாங்களும் எங்களுடன் வரலாம். பிறகு அங்கிருந்து தங்களது சொந்த நாட்டுக்குச் செல்லலாம்" என்று கூறி முடித்தனர்.

அப்புதியவர்கள் இருவரில் ஒருவர் இவ்வாறு கூறிய மாத்திரத்தில் அதனைக் கேட்ட சிந்துபாத் ஆனந்தம் கொண்டான். இப்படியாக மூவரும் பேசிக் கொண்டு இருந்த சமயம். இருள் மெல்ல அந்த வனத்தைக் கவ்வியது. பெண் குதிரை ஒன்று ஆதரவு இன்றி தனியே நிற்பதைக் கண்ட அப்பகுதி ஆண் குதிரைகள் சில விரைந்து வந்து அப்பெண் குதிரையுடன் கூடி மகிழ்ந்தன. பிறகு அவைகள் அந்தப் பெண் குதிரையை அழைத்துச் செல்ல முயற்சிகள் செய்தன. பெண் குதிரையும் ஆண் குதிரைகளுடன் செல்லத் தீர்மானித்தது. ஆனால், அது கட்டி வைக்கப் பட்டு இருந்ததால் எவ்வளவு முயற்சி செய்தும் கூட

அந்தக் கயிறை அதனால் அறுக்க முடியவில்லை. அப்போராட்டத்தில் வலி தாங்காமல் அந்தப் பெண் குதிரை பலமாகக் கணைக்கத் தொடங்கியது. பெண் குதிரையின் கணைப்பை கேட்டு உணர்ந்த குதிரை வியாபாரிகள் இருவரும் கையில் ஆயுதங்களுடன் அவ்விடம் ஓடி வந்து பெரும் குரல் கொடுக்கத் தொடங்கினர். ஆங்காங்கே மறைந்து இருந்து வியாபாரிகளும் வெளி வந்து அக்குதிரைகளை தாக்கி முன்னேற விடாமல் பிடித்துக் கட்டினார்கள். பிறகு வந்த வேலை முடிந்த மாத்திரத்தில் அனைவரும் கப்பலுக்காக காத்துக் கொண்டு இருந்தனர். குறித்த நேரத்தில் அவ்விடத்திற்கு சிறு கப்பல்கள் பல வந்தது. அதில் ஒவ்வொன்றிலும் தாங்கள் பிடித்து வைத்து இருந்த குதிரைகளுடன் ஏறிக் கொண்ட குதிரை வியாபாரிகள் பத்திரமாக முன்பே நிறுத்தி வைக்கப்பட்டு இருந்து பெரிய கப்பலை அடைந்தனர். அவர்களுடன் சிந்துபாத்தும் பத்திரமாக முன்பு தான் சேகரித்த நவரத்தின மணிகளுடன் அந்தக் கப்பலில் ஏறினான். பிறகு சிறிது நேரத்தில் அந்தப் பெரிய கப்பல் புறப்படத் தயார் ஆனது.  அப்போது சிந்துபாத்தை பார்த்த குதிரை வியாபாரிகள் சிலர் அவனை யார் என்று வினவ, முன்பு சிந்துபாத்துக்கு அடைக்கலம் கொடுத்த அந்தப் புதியவர்கள் இருவரும் மற்ற வியாபாரிகளிடம் சிந்து பாத்தின் கதையை விளக்கமாகக் கூறி முடித்தனர். அக்கதையைக் கேட்ட குதிரை வியாபாரிகள் மிகுந்த ஆச்சர்யம் அடைந்தனர். இப்படிக் கூட உலகத்தில் நடக்குமா? என்று ஒருவரை ஒருவர் பார்த்துத் திகைத்தனர். பிறகு அன்புடன் அனைவரும் சிந்துபாத்திற்கு உணவு பரிமாறி மகிழ்ந்தனர். அவர்கள் அனைவரும் இனிமையாக பிரதி பலன் பார்க்காமல் சிந்துபாத்திடன் அன்பாகப் பழகினர். சிந்துபாத் அவர்கள் அனைவருக்குமே தான் கொண்டு வந்து இருந்த நவ ரத்தினங்களில் சிலவற்றை பரிசாகக் கொடுத்தான். முதலில் அதனை வாங்க மறுத்த குதிரை வியாபாரிகள் பிறகு சிந்துபாத் வற்புறுத்தியதன் காரணமாக சந்தோஷமாகப் பெற்றுக் கொண்டனர். அதனால், மேலும் சிந்துபாத்துடன் நன்கு பழகினர்.

ஓர் இரு தினங்களில் அந்தக் கப்பல் "அபூ சிம்பல்" என்ற துறைமுகத்தை அடைந்தது. அவ்விடத்தில் குதிரைகளுடன் இறங்கிய வியாபாரிகள் சிந்துபாத்தையும் பத்திரமாக இறக்கி விட்டனர். சில காலங்கள் அந்தக் குதிரை வியாபாரிகளுடனேயே தங்கி இருந்த சிந்துபாத் அவர்களிடம் இருந்து குதிரைகள் மீது ஏறி அமரப் பயன்படும் சேணத்தை செய்வது பற்றிக் கற்றுக் கொண்டான். அதில் அவன் நன்றாகத் தேர்ந்தும் விட்டான். மேலும் பலதரப்பட்ட குதிரைகளைப் பற்றியும் நிறைய தெரிந்து கொண்டான்.

பிறகு சிந்துபாத் தன்னிடம் இருந்த நவ ரத்தின மணிகளை அங்கு வந்த பிற நாட்டு வர்த்தகர்களிடம் விற்று அதற்கு ஈடாக எண்ணற்ற பொற்காசுகளை பெற்றுக் கொண்டான். இவ்வளவு தூரம் சிந்துபாத் நவ ரத்தினங்களை பல விதங்களில் செலவழித்தும் கூட அவனிடம் மேலும் பல மூட்டைகளில் நவ ரத்தினங்கள் குவிந்து கிடந்தன. தன்னிடம் எண்ணற்ற பொற்காசுகள் சேர்ந்த மாத்திரத்தில் தனக்குத் தேவையான பொற்காசுகளை மட்டும் வைத்துக் கொண்டு எஞ்சிய பொற்காசுகளைக் கொண்டு பல நல்ல காரியங்களை அவ்வூரில் செய்யத் தொடங்கினான். ஏழைப் பெண்கள் பலருக்கு அவனது சொந்தச் செலவிலேயே திருமணம் செய்து வைத்தான். அங்கு இருந்த மற்ற வியாபாரிகளின் உதவியுடன் இலவச அன்னச் சத்திரங்கள் பலவற்றை அமைத்தான். மருத்துவர்கள் பலரை நியமித்து அவன் செலவிலேயே இலவசமாக ஏழைகளுக்கு மருத்துவம் பார்க்கச் செய்தான். இப்படியாக சிந்துபாத் செய்த எண்ணற்ற நல்ல காரியங்கள் அந்த நாட்டின் மன்னரான "பாஸல் இக்பால்" அவர்களின் காதுகளை எட்டியது. அவர் சிந்துபாத்தை உடனடியாகக் காண விரும்பினார். தனது சேவகர்களை அழைத்து தகுந்த மரியாதையுடன் சிந்துபாத்தை அழைத்து வரச் செய்தார். சேவகர்கள் சிந்துபாத்தை அழைக்க, சிந்துபாத்தும் மன்னரைக் காணச் சென்றான். சிந்துபாத்தின் தோற்றம் மன்னரை மிகவும் கவர்ந்தது. அவனது உருவத்தை வைத்தே இவன் செல்வந்த குடும்பத்தில் பிறந்தவன் என்பதை மன்னர் அறிந்து கொண்டார். மன்னர் மீது தான் கொண்ட பேரன்பை வெளிப்படுத்த சிந்துபாத்தும் தன்னிடம் இருந்த நவ மணிகளில் சிலவற்றை அவருக்கு அன்பளிப்பாகக் கொடுத்தான். அதனைப் பெற்றுக் கொண்ட மன்னர் மிகவும் மனம் மகிழ்ந்தார். அந்த நவ மணிகளின் ஒளியால் அந்த அரண்மனையே பிரகாசித்தது என்று தான் சொல்ல வேண்டும். இவ்வளவு விலை உயர்ந்த நவ மணிகளை சிந்துபாத் எப்படிப் பெற்றான் என்ற கதையை மன்னர் கேட்க, சிந்துபாத்தும் தன் கதையை விரிவாகக் கூறி முடித்தான். அதனைக் கேட்ட மன்னர் சிந்துபாத்தை தனது உற்ற நண்பனாக ஆக்கிக் கொண்டார். சிந்துபாத்தும் மன்னருக்கு மிக நெருக்கமாக ஆனான். மன்னரின் அரசவையில் இருந்த பிரபுக்களுடன் அன்பாகப் பழகினான். படைத் தளபதிகளுக்கு உரிய மரியாதையை அளித்தான். அதனால் அனைவருமே சிந்துபாத்தை பெரிதும் விரும்பினார்கள். ஒரு கட்டத்தில் சிந்துபாத் அந்தப் படைத் தளபதிகளிடம் இருந்து வாள் பயிற்ச்சியை கற்றுத் தேர்ந்தார். மேலும் எண்ணற்ற பல போர் கலைகளை குறுகிய காலத்திலேயே சிந்துபாத் கற்றுத் தேர்ந்தார்.

இப்படி இருக்கும் சமயத்தில் மன்னர் பாஸல் இக்பாலின் அரண்மனைக்கு ஒரு வினோதமான வழக்கு வந்தது. ஒரு விலை உயர்ந்த ஜாதிக் குதிரைக்காக இருவர் சொந்தம் கொண்டாடி வந்தனர். இருவருமே அந்தக் குதிரை தங்களுடையது என்று உரிமை கொண்டாடினர். அத்துடன் அந்த இருவருமே ஒரே மாதிரியான தகவல்களை சொன்னதால் மன்னர் பாஸல் இக்பால் செய்வதறியாது தவித்தார். அப்போது சிந்துபாத் மன்னரின் அனுமதியுடன் வழக்கை விசாரிக்க முன்வந்தார். இறுதியில், சற்று நேரம் யோசித்த சிந்துபாத், ”இந்த வழக்கு நாளை விசாரிக்கப்படும். அது வரையில் குதிரை எங்கள் மன்னரின் அரண்மனையில் தான் இருக்கும்” என்று கூறி அந்த இருவரையும் அனுப்பி வைத்தார். சிந்துபாத் அவ்வாறு சொன்னதைக் கேட்ட அரசர், அவனைத் தனியாக அழைத்து அவனது மனக் கருத்தை அறியத் தொடங்கினார்.

அப்போது சிந்துபாத் மன்னரிடம், ”அரசர் பெருமானே! இவர்கள் இருவருமே தனித் தனியே அழைத்து விசாரித்தும் கூட ஒரே மாதிரியான பதிலைத் தான் சொல்கிறார்கள். அதனால் இந்தக் குதிரைக்கு யார் உண்மையான சொந்தக்காரர் என்பதை இனி நம்மால் சொல்ல முடியாது. அந்தக் குதிரை தான் சொல்ல வேண்டும்” என்றார்.

"சிந்துபாத் குழப்பாதே! குதிரை எப்படிச் சொல்லும்” என்றார் மன்னர் பாஸல் இக்பால்.

"இப்போது சொல்லும் பாருங்கள்” என்று சிரித்துக் கொண்டே சிந்துபாத் குதிரை அருகில் சென்றான் அதன் கட்டை அவிழ்த்து விட்டான். பிறகு அதனை ஒட்டிவிட்டான். பிறகு சேனை வீரர்களுடன் அந்தக் குதிரையை பின் தொடர்ந்து சென்றான். வேகமாக ஓடிய குதிரை ஒரு வீட்டின் வாசலில் வந்து நின்று கனைத்தது. உடனே வீரர்கள் சென்று அந்த வீட்டின் கதவை தட்ட அதன் உரிமையாளர் மெல்ல வந்து கதவைத் திறந்தார். அவர் வேறு யாரும் இல்லை காலையில் குதிரையை தன்னுடையது என்று உரிமை கொண்டாடிய அந்த இருவரில் ஒருவர் தான். அந்த உயர் ரக குதிரை அவரிடமே ஒப்படைக்கப் பட்டது. பொய் வழக்கு தொடர்ந்தவன் விஷயம் அறியாமல் அடுத்த நாள் காலை அரண்மனைக்கு வந்தான். அவனுக்கு நூறு பிரம்பு அடிகள் கொடுக்கப்பட்டது. வலி தாங்க முடியாமல் உண்மையை ஒத்துக் கொண்டு மன்னரிடம் மன்னிப்பு வேண்டினான். மன்னரும் அவனை எச்சரித்து அனுப்பி வைத்தார்.

இறுதியில் சிந்துபாத்திடன் அவன் எவ்வாறு உண்மையைக் கண்டு பிடித்தான் என்று கேட்க. சிந்துபாத் சிரித்துக் கொண்டே, "மன்னர் மன்னவா! குதிரைக்கு அதன் எஜமானர் மீது தான் பற்று அதிகம். எங்கு சென்று சுற்றினாலும் இறுதியில் தனது எஜமானர் இடம் தான் அக்குதிரை வரும். அதே வழியை பின்பற்றித் தான் நேற்று இரவு அந்தக் குதிரையை அவிழ்த்து விடச் சொன்னேன். அந்தக் குதிரையும் நான் நினைத்தபடியே அதன் உண்மையான எஜமானர் வீட்டை அடைந்து கனைத்தது. அதனை வைத்துத் தான் உண்மையான குற்றவாளியை கண்டு பிடித்தேன்" என்று கூறினான்.

"பலே சிந்துபாத்! பலே! நீ சாதித்து விட்டாய்" என்று கூறி பூரித்துப் போன மன்னர் சிந்துபாத்துக்குப் பரிசுகள் பல கொடுத்து அவனை அந்நாட்டின் நீதிபதியாக உயர்த்தினார். அத்துடன் அவன் வசிக்க மிகப் பெரிய அரண்மனையையும் கட்டிக் கொடுத்தார். மேலும் பல புதிய பதவிகளும் சிந்துபாத்தை தேடி வந்ததால் அந்த ஊரில் மன்னருக்கு நிகரான அந்தஸ்தை பெற்றான் சிந்துபாத். அந்த ஊருக்கு வரும் முக்கியஸ்தர்கள் யாராக இருந்தாலும் முதலில் சிந்துபாத்தைக் கண்ட பிறகே மன்னரைக் கண்டு வந்தனர்.

சிந்துபாத்தின் பணி யாதெனில் தினமும் காலை மன்னரைக் காணச் செல்ல வேண்டும். நீதி பரிபாலனம் தவிர மன்னர் கொடுக்கும் மேலும் பல முக்கியப் பொறுப்புகளை கண்காணிக்க வேண்டும். இப்படியே சில காலங்கள் கடந்தது.

ஒரு நாள் சிந்துபாத்தை அழைத்த மன்னர் "உடனே தாங்கள் துறைமுகத்திற்கு செல்ல வேண்டும். அங்கு வணிகர்கள் சிலர் நியாயமாக நாட்டுக்கு செலுத்த வேண்டிய வரியை செலுத்தாமல் பொய்க் கணக்கு எழுதி ஏய்க்கின்றனர். அந்தக் கருப்பு ஆடுகளை அடையாளம் கண்டு நீதியின் முன் அவர்களை இழுத்து வாருங்கள்" என்று பணித்தார்.

சிந்துபாத்தும் சில முக்கிய அதிகாரிகளுடன் வீரர்கள் பின் தொடர துறைமுகத்திற்கு திடீர் விஜயம் செய்தார். மன்னர் கூறியபடி அனைத்து வியாபாரிகளின் கணக்கையும் அவர்கள் கப்பல்களில் கொண்டு வந்த பண்டங்களையும் ஆராய்ந்தார். அவர் நடத்திய நீதி விசாரணையில் பல கோடி ரூபாய் மதிப்புள்ள வரியை வணிகர்கள் சிலர் வேண்டும் என்றே ஏமாற்றி இருப்பதை கண்டறிந்து அவர்களை அதிகாரிகளிடம் ஒப்படைத்தார் சிந்துபாத். உடனுக்குடன் அனைவரும் கைது

செய்யப்பட்டனர். அவர்களது வணிகப் பொருள்களும் பறிமுதல் செய்யப்பட்டு அரண்மனைக்கு கொண்டு செல்லப்பட்டது.

அப்போது துறைமுகத்திற்கு ஒரு பெரிய கப்பல் வந்து நின்றது. அந்தக் கப்பலில் இருந்தும் சரக்குகள் இறக்கப் பட்டன. அதையும் சென்று பார்வை இட்டார் சிந்துபாத். அந்தக் கப்பல் தலைவன் சிந்துபாத்தை பற்றி அறிந்ததும் ஓடி வந்து வணங்கி நின்று தன்னை அறிமுகப் படுத்திக் கொண்டான். அவனைப் பார்த்த சிந்துபாத்," சரக்குகள் இவ்வளவு தானா? இன்னும் தரை இறக்கப் பட வேண்டிய சரக்குகள் ஏதேனும் உண்டா?" என்று கேட்கவும், அவன் இவ்வாறு பதில் கூறத் தொடங்கினான்.

"ஐயனே! இன்னும் கொஞ்சம் சரக்குகள் கப்பலில் உள்ளன. அந்தச் சரக்குகளின் உரிமையாளர், நாங்கள் வந்த வழியில் ஏற்பட்ட ஒரு எதிர்பாராத விபத்தில் சிக்கி உயிர் இழந்து விட்டதாகக் கருதப் படுகிறார். ஆகவே, இந்தச் சரக்குகளை நாங்கள் போகும் வழியில் விற்று பாக்தாத்தில் உள்ள அவருடைய உறவினர்களிடம் அந்தப் பணத்தை ஒப்படைக்க வேண்டும்" என்றான்.

உடனே, சிந்துபாத் அந்தக் கப்பல் தலைவனிடம் "அந்த வர்த்தகரின் பெயர் என்ன?" என்று கேட்டதும், உடனே அந்தக் கப்பல் தலைவன் "பாக்தாத் நகரத்தை சேர்ந்த சிந்துபாத்" என்று கூறினான்.

அதனைக் கேட்ட சிந்துபாத் மிகவும் மகிழ்ச்சி அடைந்தவனாய், "தலைவரே என்னை அடையாளம் தெரிகிறதா? தாங்கள் சொன்ன அந்த சிந்துபாத் நான் தான். வரும் வழியில் ஒரு தீவில் பூதம் துரத்தியதில் பலர் கடலில் விழுந்து உயிர் துறந்தனர் அல்லவா?. ஆனால் இறைவனின் கிருபையால் எப்படியோ நாம் மட்டும் ஒரு மரத்துண்டின் மூலமாக பிழைத்துக் கொண்டேன். அதன் பின்னர் ஆண்டவன் அருளால் பலதரப்பட்ட பயணங்களுக்குப் பிறகு மன்னர் "பாஸல் இக்பால்" அவர்கள் மூலமாக ஒரு அருமையான நட்பு கிடைத்தது. இப்போது அந்த நல்ல நட்பின் விளைவாக நான் நீதிபதி பதவியில் அமர்ந்து நீதி பரிபாலனை செய்து வருகிறேன்" என்று சுருக்கமாகத் தனது கதையை கூறி முடித்தான்.

மறுபுறம் அந்தக் கப்பல் தலைவனும் சிந்துபாத்தை அடையாளம் கண்டு கொண்டு மகிழ்ந்தான். பிறகு அந்தக் கப்பல் தலைவன் சிந்துபாத்திடம்,"

சிந்துபாத் அவர்களே! ஆண்டவன் உங்களுடன் தான் இருக்கிறார். அதனால் தான் உயிர் பிழைத்து இவ்வளவு தூரம் வந்து உள்ளீர்கள். இவ்வளவு ஒரு முக்கியப் பொறுப்பில் உள்ளீர்கள். மேலும் நீங்கள் தொலைத்த உங்களது பொருள்களும் உங்களிடமே வந்து சேர்ந்து உள்ளது. இவை அனைத்தையும் வைத்துப் பார்க்கும் போது, உண்மையில் நீங்கள் கொடுத்து வைத்தவர் தான்" என்று புகழ்ந்து பேசினார். பிறகு சிந்துபாத்தின் பொருள்கள் அனைத்தும் அவரிடமே ஒப்படைக்கப்பட்டன.

பிறகு மன்னர் கொடுத்த வேலையை முடித்த சிந்துபாத் தனது வர்த்தகப் பொருள்களுடன் மன்னரைக் காணச் சென்றார். மன்னரிடம் விஷயத்தைக் கூறினார். அதனைக் கேட்ட மன்னர் உண்மையில் சிந்துபாத் அதிர்ஷ்டசாலி தான் என்று அவையில் கூறி அவரை ஆறத் தழுவி மகிழ்ந்தார். மேலும் பரிசுகள் பல கொடுத்து சிந்துபாத்தை பாராட்டினார்.

பிறகு சிந்துபாத் தனது பொருள்களில் விலை உயர்ந்த பொருட்களை மட்டும் எடுத்துக் கொண்டு அதனை நல்ல விலைக்கு விற்க ஏற்பாடு செய்தார். சிந்துபாத் நினைத்ததை விட அதிகம் அதிகமாக பொருள்களை சம்பாதித்தார். இறைவனுடைய கருணையுடன் அதிர்ஷ்டமும் சிந்துபாத்திற்கு துணை நின்றது. அதனால் தான் சிந்துபாத் விஷயத்தில் எல்லாமே இனிதாக நடந்து முடிந்தது. பிறகு பாக்தாத் செல்ல வேண்டும் என்ற ஆசை சிந்துபாத்தின் மனதை வருடியதால் அவன் மன்னனிடம் விடை பெற்று தனது சொந்த ஊருக்கு சென்று சேர்ந்தான். மன்னரே தன்னுடைய பாதுகாப்பில் அதிலும் தன்னுடைய செலவில் சிந்துபாத்தை பாக்தாத் நகரம் வரையில் அனுப்பி வைத்தார். ஏராளமான பொருள்களுடனும் தான் முன்பு கண்டெடுத்த நவ இரத்தின மணிகளுடனும் சிந்துபாத் பாக்தாத் நகரத்தை அடைந்தான். அங்கு அவனுக்கு பலமான வரவேற்பு அளிக்கப்பட்டது.

பாக்தாத் நகரத்தை அடைந்த மாத்திரத்தில் சிந்துபாத் தனது அரண்மனையை விரிவு படுத்தினான். தனது கடன்களை அடைத்தான். தனது தந்தையின் சொத்துக்களை மீட்டு எடுத்தான். அப்பொழுதும் கூட அவனிடம் இருந்த செல்வங்கள் குறையவில்லை. சிந்துபாத்திடம் பாக்தாத் மன்னரிடம் இருக்கும் செல்வத்திற்கு நிகரான செல்வம் இருந்தது. அதனை அறிந்த பாக்தாத் மன்னர் சிந்துபாத்தை அழைத்து விருந்தும், விருதுகளும் உடன் கொடுத்து அதன் கூடவே "பாக்தாத்தின்

கடலோடி சிந்துபாத்” என்ற பட்டத்தையும் அளித்து மகிழ்ந்தார். சிந்துபாத் செல்வம், செல்வாக்குடன் புகழின் உச்சியை அடைந்து இருந்தான். பணம் வந்து விட்டால் சாதாரண மனிதன் கூட சும்மா இருக்க மாட்டான் அல்லவா? அப்படி இருக்க இந்த விஷயத்தில் சிந்துபாத் மட்டும் விதி விலக்கா என்ன? மிகப் பெரிய ஒரு ஆடம்பரக் கப்பலை தனக்கென அதிக விலை கொடுத்து வாங்கினான். அதனைக் கொண்டு மீண்டும் இந்த உலகை சுற்றி வர விருப்பம் கொண்டான். அந்த விருப்பத்தை நிறைவேற்ற அவனது மனம் துடித்தது. ஒரு நல்ல நாளில் தனக்கு நம்பிக்கையான வேலை ஆட்கள் நூறு பேருடன் தனது அடுத்தக் கட்ட கடல் பயணத்தை தொடங்க ஆயத்தம் ஆனான்.

~~chapter~~3

~~title~~சிந்துபாத்தின் இரண்டாவது கப்பல் பயணம்

~~page_heading~~சிந்துபாத்தின் இரண்டாவது கப்பல் பயணம்

ஒரு பௌர்ணமி தினத்தில் சிந்துபாத் தனது உல்லாசமான அடுத்த கப்பல் பயணத்தை தொடங்கினார். உடன் சிந்துபாத்தின் வேலை ஆட்கள் நூறு பேர் துணைக்குச் சென்றனர். அவர்களுக்கும் கூட எந்தக் குறையும் இல்லாமல் பார்த்துக் கொண்டான் சிந்துபாத். கப்பலில் ஆட்டம், பாட்டம் எனக் கொண்டாட்டமாகத் தான் இருந்தது. சுமார் நாற்பது நாட்கள் கப்பல் பயணத்தை செய்த சிந்துபாத் பல நாடுகளுக்கும் சென்றார். பல நாடுகளின் கலாச்சாரத்தையும் அறிந்தார். அதன் மூலம் பல புதிய அனுபவங்களையும் பெற்றார். "பாடிய வாயும், ஓடிய காலும் சும்மா இருக்காது" என்பார்களே! அதே போலத் தான் சிந்துபாத்தின் நிலையும். ஒவ்வொரு நாட்டிலும் உல்லாசப் பயணத்தை மேற்கொள்ளச் சென்று இருந்தாலும் அந்த நாடுகளில் கிடைக்கும் பொருள்களை வாங்கி அது அறிதாகக் கிடைக்கும் நாடுகளுக்குச் சென்று வியாபாரம் செய்து அதன் மூலம் தனது வழிச் செலவுக்கான பொருள்களை வேண்டிய மட்டும் சம்பாதித்துக் கொண்டார். இதனால் சிந்துபாத்தின் கரங்களில் சற்று அதிகமாகவே பணம் தவழ்ந்தது. இதனால் தன்னுடன் வந்தவர்களின் தேவைகளை உடனுக்குடன் நிறைவேற்றினார். இப்படியாக சிந்துபாத்தின் பயணம் அவரது சொகுசுக் கப்பலில் எந்த விதக் குறையும் இல்லாமல் தான் நடந்து வந்தது. ஆனால், வாழ்க்கை என்பது எப்போதும் ஒரே போல இருக்காது அல்லவா? அப்படித் தான் ஒரு நாள் சிந்துபாத்தின் உல்லாசக் கப்பல் யாழித் தீவை நெருங்கும் சமயத்தில் கடல் கொந்தளிப்பால் சிக்கிச் சின்னாபின்னமாகிப் போனது. சிந்துபாத் உட்பட கப்பலில் இருந்த

அவரது வேலை ஆட்கள் அனைவரும் கடலில் விழுந்து தத்தளித்தனர். கடல் அலைகள் சிலரை இழுத்துச் சென்று பாறைகளில் கொண்டு போய் மோதியது. அதில் பலர் இறந்தனர். வெறும் நாற்பது பேர் மட்டுமே யாழித் தீவை அடைந்து கரை ஏறினார்கள். அவர்களில் சிந்துபாத்தும் ஒருவர்.

யாழித் தீவில் எண்ணற்ற கொடிய வன விலங்குகள் நடமாடி வந்தன. எனினும் அந்தத் தீவு மிகவும் செழிப்பாக இருந்தது. பழங்கள் நிறைந்த எண்ணற்ற மரங்களைக் கொண்டு அந்தத் தீவு காணப்பட்டது. ஆறுகளுக்கும் பஞ்சம் இல்லை. அந்த மரங்களில் இருந்த பழங்களை பறித்துத் தின்று சிந்துபாத்தும் அவன் உடன் வந்தவர்களும் பசி ஆறினார்கள். இரவு நேரம் நெருங்கிய சமயம் குளிர் அனைவரையும் வாட்டி எடுத்தது. குளிரை போக்கிக் கொள்ள அங்கிருந்த சுள்ளிகளை பொறுக்கிக் கொண்டு வந்து தீ மூட்டினர். இதனால் சற்றே இதம் அடைந்தனர். பிறகு நடு இரவு வரை சற்று நேரம் பேசிக் கொண்டு இருந்தவர்கள் ஒருவர் பின் ஒருவராக கண் அசரத் தொடங்கினார்கள்.

அப்போது பூமி குலுங்கியது. அந்த அதிர்ச்சியை உணர்ந்து எழுந்தவர்கள். வானம் உயர நின்று இருந்த ஒரு அரக்கனைக் கண்டார்கள். அவன் கருமை நிறம் கொண்டு காணப்பட்டான். முதலில் சிந்துபாத்தை தான் அந்த அரக்கன் பிடித்தான். அரக்கனின் கரங்களில் மாட்டிக் கொண்டு சிந்துபாத் உயிருக்காக போராடிக் கொண்டு இருந்த சமயம். சிந்துபாத்தின் விசுவாசம் நிறைந்த ஊழியர்கள் அந்த அரக்கன் மீது ஓரளவு பெரிய, பெரிய கற்களை தேர்ந்தெடுத்து வீசி எறிந்தனர். ஆனால், அவை அனைத்தும் அந்த அரக்கனுக்கு எம்மாத்திரம்? எனினும் எரிச்சல் அடைந்த அந்த அரக்கன் சிந்துபாத்தை தூக்கி எறிந்து விட்டு மற்றவர்களை கபலி கரம் செய்யத் தொடங்கினான். மயக்கம் அடைந்த நிலையில் இருந்த சிந்துபாத்துக்கு விதி துணை நிற்க அவன் அடர்ந்த புல் வெளிகள் நிறைந்த புதரில் போய் விழுந்தான். ஆனால் அவனுடன் வந்தவர்களில் சிலர் அரக்கனின் கால்களால் மிதிக்கப்பட்டும், இன்னும் பலர் அரக்கனின் பற்களில் அரைபட்டும் மடிந்து போயினர். இப்படியாகப் பல நாட்கள் மிகுந்த பசியில் இருந்த அரக்கன் அன்றைய தினம் நன்றாக மனித மாமிசத்தை உண்டு களித்தான். பிறகு தனது இருப்பிடமான ஒரு குகைக்குள் சென்றான்.

மறுநாள் காலை விடிந்தது, மெல்ல மயக்கத்தில் இருந்து தெளிந்த சிந்துபாத் ஆங்காங்கே சிதறிக் கடந்த தனது வேலை ஆட்களின்

பிணத்தைக் கண்டு அதிர்ந்தான். இவை அனைத்துமே அந்த அரக்கனின் வேலை தான் என்பதை  உணர்ந்தான். தன்னை நம்பி வந்தவர்களைத் தன்னால் காப்பாற்ற முடியாமல் போய்விட்டதே என்று நினைத்து, நினைத்து அழுதான். அன்றைய தினம் உணவைத் தவிர்த்தான். இரவு வரை அழுது கொண்டே இருந்தான். அதனால் அவனது முகம் வாடியது. நா வறண்டது. அவனது நிலையைக் கண்டு பரிதாபம் அடைந்த அந்த வனத்தின் தேவதை அவனுக்கு முன்னாள் தோன்றினாள். திடீர் என்று தனக்கு முன்னாள் ஆயிரம் சூரிய ஒளி தோன்றியது போல ஒரு அழகு நங்கை தோன்றியதைக் கண்டு முதலில் அச்சம் கொண்டான் சிந்துபாத். எனினும் தேவதை போன்ற அந்தப் பெண்ணால் தனக்கு எந்தத் தீங்கும் நேராது என்பதை அவன் மனம் நம்பியதால் அந்த வன தேவியிடம் அவளைப் பற்றிய அறிமுகத்தைக் கேட்டான். அந்த வன தேவியும் சிந்துபாத்திடம் தன்னைப் பற்றிக் கூறி அவன் அழுததன் காரணத்தை அவனது திருவாய் மொழி மூலம் அறிந்து கொண்டாள். பிறகு சிந்துபாத்துக்கு ஆறுதல் அளித்தாள். அத்துடன் அந்த அரக்கனின் உயிர் ரகசியத்தையும் சிந்துபாத்திடம் கூறத் தொடங்கினாள்.

"சிந்துபாத்! எந்த அரக்கன் உனது சகாக்களின் உயிரைப் பறித்ததாகக் கூறினாயோ அந்த அரக்கன் மிகவும் கொடியவன். பல நூற்றாண்டுகளாக இந்த வனத்தில் உள்ள மிருகங்களை கொன்று தின்று வந்துள்ளான். அவனது அட்டகாசத்தால் இந்த வனத்தின் அழகே சிதைந்து வருகிறது. ஆனால் நீ நினைத்தால் அந்த அரக்கனை உன்னால் கொல்ல முடியும். காரணம் நீ இறைவனின் அருள் பெற்றவன். நீ இறைவனின் அருள் பெற்றவன் என்பதற்கு உனது வலது கையில் இருக்கும் மூன்றாம் பிறை நட்சத்திரத்துடன் கூடிய மச்சமே சாட்சி. எனினும் அந்த அரக்கனை சாதாராண ஆயுதங்களால் கொல்ல முடியாது. நீ நேராக நான் காட்டும் பாதையில் நடந்து சென்றாய் என்றால் யாழி குகை தென்படும். அது தான் அந்த அரக்கனின் இருப்பிடம். அந்த யாழி குகையின் தெற்கே இன்னொரு குகை இருக்கும் அதற்குள் சென்றால் ஒரு புனித வாளை நீ காண்பாய். அந்த வாள் ஐந்து உலோகங்கங்களால் செய்யப்பட்ட அதி சக்தி வாய்ந்த வாள். பல நூற்றாண்டுகளாக உனக்காகவே அது அங்கு வைக்கப்பட்டு ஐந்து தலை நாகத்தால் பத்திரமாகப் பாதுகாக்கப்பட்டு வருகிறது.  அந்த வாளை நீ இலக்கை நோக்கி வீசினால் அது அந்த இலக்கை அழித்து விட்டு மீண்டும் உன்னிடமே வந்து சேர்ந்து விடும். அந்த வாளைக் கொண்டு தான் இந்த அரக்கனைக் கொல்ல இயலும். இதோ இந்த மோதிரத்தை வைத்துக் கொள். இது உனக்கான எனது பரிசு.  இது

உனது கையில் இருந்தால் இந்த வனத்தில் இருக்கும் எந்த ஜீவ ராசியாலும் உனக்கு ஆபத்து வராது. அது மட்டும் அல்ல, உலகத்தில் இருக்கும் பறவைகள், விலங்குகள் போன்ற ஏனைய உயிர் இனங்களும் தங்களுக்குள் என்ன பேசிக் கொள்கின்றன என்பதை நீ அறிந்து கொள்வாய். அத்துடன் இந்த மோதிரத்தை உரச நான் உனக்கு முன்னாள் வந்து வேண்டிய ஆலோசனைகளை உனக்குச் சொல்லுவேன். சென்று வா மகனே! வென்று வா!" என்று ஆசீர்வாதம் கூறி அனுப்பினாள் வன தேவி.

வன தேவியின் ஆசிர்வாதத்தை மோதிரத்தின் வாயிலாகப் பெற்ற சிந்துபாத் கம்பீரமாக அவள் திருவாய் மலர்ந்த அந்தக் குகையை நோக்கி வீர வாளைப் பெற வீர நடை போட்டுச் சென்றான். குகையின் வாயிலை மூடி இருந்த பாறையை மிகவும் சிரமப்பட்டு நகர்த்தினான். உள்ளே எண்ணற்ற விஷப் பாம்புகள் காணப்பட்டன. ஆனால், வன தேவி கொடுத்த மோதிரம் சிந்துபாத்தின் விரல்களில் மின்னிக் கொண்டு இருந்ததால் அவைகள் அவனை தீண்டுவதற்கு அஞ்சி ஓடி ஒழிந்தன. எந்த வித எதிர்ப்புமே இல்லாமல் சிந்துபாத் வாள் இருக்கும் இடத்தை அடைந்தான் அந்த வாளை ஒரு ஐந்து தலை நாகம் அதன் மீது தனது உடலைப் பரப்பிய படி பாதுகாத்து வந்தது. சிந்துபாத்தைக் கண்டதும்,"இவனே இந்த அற்புத வாளின் சொந்தக்காரன் என்பதை உணர்ந்து" அதுவாகவே அந்த வாளை விட்டு அகன்றது. சிந்துபாத் அந்த வாளைக் கையில் எடுத்துக் கொண்டான். அந்த வாளின் கணம் அவனை பிரமிக்க வைத்தது. குகையை விட்டு வெளியில் வந்த சிந்துபாத் தனது அடுத்த கட்ட வேலையாக யாழி குகையின் வாயிலை அடைந்தான். அரக்கன் உள்ளே தான் இருக்கிறான் என்பதை சிந்துபாத்திற்கு அவ்வரக்கனின் குறட்டை சத்தமே காட்டிக் கொடுத்தது. தனது சகாக்களின் கொடூரமான மரணத்தை சற்றே நினைத்துப் பார்த்த சிந்துபாத்தின் உள்ளம் குமுறியது. அதனால் அவனது கண்கள் சிவந்தது. அந்தக் கோபத்துடனேயே குகைக்குள் சென்ற சிந்துபாத் தனது கையில் இருந்த அற்புத வாள் கொண்டு அரக்கனின் கழுத்தை வெட்டினான். ரத்தம் வெள்ளமாகப் பாய அந்த இடத்திலேயே அந்த அரக்கன் அலறித் துடித்து மாண்டு போனான். பிறகு அந்த அரக்கனின் தலையைக் கொண்டு வந்து வன தேவிக்கு அர்ப்பணம் செய்தான் சிந்துபாத். வன தேவியும் கொடியவன் இறந்ததால் மனம் மகிழ்ந்தாள். அத்துடன் அந்தத் தீவை விட்டு செல்லும் வழியையும் சிந்துபாத் வேண்ட, அவனுக்கு அதனைக் காண்பித்தும் கொடுத்தாள்.

வன தேவி சொன்னது போலவே சிந்துபாத் அவள் கூறிய மார்க்கத்தில் வனத்தில் இருந்த காய்ந்த சுள்ளிகளை பொறுக்கியபடி நடந்து சென்றான். வன தேவி குறிப்பிட்ட அதே நேரத்திலேயே சிந்துபாத் கடற்கரையை அடைந்து இருந்தான். அப்போது சூரியன் அஸ்தமிக்கத் தொடங்கி இருந்தான். எனினும் இருள் அந்தக் காட்டை இன்னும் முழுவதுமாக ஆக்கிரமிக்க வில்லை என்று தான் சொல்ல வேண்டும். ஓரளவு வெளிச்சத்தில் சிந்துபாத் தான் கொண்டு வந்த கணிசமான சுள்ளிகளை பக்குவமாகப் பற்ற வைத்தான். அதில் இருந்து அதிகளவில் புகை வெளிப்பட்டது. அதே சமயத்தில் சற்று தொலைவில் ஒரு கப்பல் வருவதைக் கண்டான். அருகில் இருந்த அடர்த்தியான மரங்களின் கிளைகளை வேகமாக ஆட்டியபடி கூக்குரல் இட்டு அழைத்தான். அந்தக் கப்பலில் இருந்த தலைவன் சிந்துபாத்தின் கூக்குரலை கேட்டு அவ்விடம் நோக்கி கப்பலை திருப்பினான். அத்துடன், தூரத்தில் புகையையும் அருகில் நிராதரவாக ஒரு மனிதன் (சிந்துபாத்) நிற்பதையும் கண்டு இரக்கம் கொண்டு கப்பலை அந்தத் தீவை நோக்கி மிக வேகமாக செலுத்தினான். கப்பலும் தீவின் கரையை அடைந்தது. சிந்துபாத்துக்கு கப்பலில் இருந்த மற்றவர்கள் உதவ அவன் தான் கொண்டு வந்த வாளுடன் கப்பலில் பத்திரமாக ஏறிக் கொண்டான். உடனே அந்தக் கப்பல் புறப்பட்டது. கப்பலில் உள்ள அனைவரும் சிந்துபாத்தின் கதையைக் கேட்டு ஆச்சர்யம் அடைந்தார்கள். இருந்தாலும் அந்தத் தீவில் அப்படி ஒரு அரக்கன் இருப்பதைப் பற்றி ஏற்கனவே அவர்கள் கேள்விப்பட்டு இருந்ததால், சிந்துபாத் கூறியது அனைத்தும் உண்மையாகத் தான் இருக்கும் என்று அவர்கள் தீர்க்கமாகவே நம்பினார்கள்.

ஓர் இரவு, ஓர் பகல் என சிந்துபாத் அந்தக் கப்பலில் அவர்களுடனே தங்கி மகிழ்ந்தான். பிறகு அவர்களின் கப்பல் "யுரேசியா" என்னும் இடத்தை அடைந்தது. அது தான் கப்பலில் வந்தவர்களின் சொந்தத் தீவு. கப்பலின் தலைவன் தனது தீவில் இறங்கியவுடன் முதல் வேலையாக சிந்துபாத்தை அவனது அரசரான "ஷா அப்பாஸிடம்" கொண்டு சென்று அறிமுகம் செய்து வைத்தான். அத்துடன் நடந்த விஷயங்கள் அனைத்தையும் அரசரிடம் மறைக்காமல் கூறி முடித்தான். சிந்துபாத்தின் கதையை கேட்ட அரசர் மிகவும் ஆச்சர்யம் அடைந்தார். "இப்படி எல்லாம் கூட இந்த உலகத்தில் ஆச்சர்யங்கள் உண்டா?" என்று எண்ணி வியந்தார். எனினும், சிந்துபாத்தின் கதைகளுக்கு அவனது கையில் இருந்த வீர வாளே ஒரு சாட்சியாக இருந்ததால் அரசரால் அவன் கூறுவதை நம்பாமல் இருக்க முடியவில்லை. பிறகு சிந்துபாத்தை

கௌரவித்து அரசர் ஷா அப்பாஸ் அவனுக்கு ஆசனம் கொடுத்து அமரச் செய்தார்.

சிந்துபாத்தை பார்த்த மாத்திரத்திலேயே ஷா அப்பாஸுக்கு அவனை மிகவும் பிடித்துப் போய் விட்டது. அதனால் தனது அரண்மனையிலேயே அவனை தங்க வைத்து தனது அந்தரங்க செயலாளர் ஆக நியமித்துக் கொண்டார். சிந்துபாத்தும் அரசர் கொடுத்த பொறுப்புகளை நல்ல முறையில் கவனித்து வந்தான். அதனால் சிந்துபாத் மீது அரசருக்கு இருந்த மதிப்பு கூடியது. எனவே அனைத்து முக்கியப் பொறுப்புகளுமே சிந்துபாத்திடம் தான் ஒப்படைக்கப்பட்டது. ராஜாங்க விஷயமாய் சிந்துபாத் அடிக்கடி வெளியில் செல்ல வேண்டியும் இருந்தது. அந்த ஊர் மக்கள் அனைவருக்குமே சிந்துபாத்தை பிடித்துப் போய் விட்டது. அவர்கள் அனைவரும் சிந்துபாத்தை தன் வீட்டுப் பிள்ளையாகவே நினைக்கத் தொடங்கினார்கள். சிந்துபாத்தும் மக்களின் உள்ளக் கருத்தையும் அவர்களது தேவைகளையும் உடனுக்குடன் அறிந்து அதனை அரசர் மூலமாகவே நிறைவேற்றிக் கொடுத்தான். அதனால் மக்களின் மனதில் நீங்கா இடம் பெற்றான். பெண்கள் உட்பட அங்குள்ள மக்கள் அனைவருமே குதிரை சவாரியில் சிறந்து விளங்கினார்கள். மலைகள் மற்றும் காடுகள் நிறைந்து காணப்பட்ட அந்த வளமான பகுதியில் அனைவருக்குமே குதிரைகள் தான் முக்கிய போக்குவரத்து சாதனமாக விளங்கியது. எனினும் அங்கு உள்ள மக்கள் யாருமே சேணத்தை உபயோகிக்காமல் குதிரை மீது பயணம் செய்து வந்தனர். இதனை கவனித்தான் சிந்துபாத்.

ஒரு நாள் சிந்துபாத்  மன்னருடன் பேசிக் கொண்டு இருந்த சமயத்தில்," பிரபுவே, தாங்கள் குதிரையில் சவாரி செய்யும் சமயத்தில் சேணத்தை உபயோகித்தால் நலமாக இருக்கும்; சவாரி செய்வதற்கும் தங்களுக்கு இலகுவாக இருக்கும். அப்படி இருக்க தாங்கள் ஏன் அதனைப் பயன்படுத்தக் கூடாது?" என்று கேட்டான்.

சேணத்தைப் பற்றி எதுவுமே தெரியாத மன்னர் உண்மையில் சிந்துபாத் சொன்னதைக் கேட்டு வியந்தவராய் அதனைப் பற்றி விபரமாகக் கூறக் கேட்டுக் கொண்டார். உடனே சிந்துபாத் அது பற்றி விபரமாக மன்னரிடம் எடுத்துக் கூறினார்.

அதனைக் கேட்ட மன்னர்," சிந்துபாத்! அந்த சேணம் எங்கே கிடைக்கும்?" என்று கேட்டார்.

"நானே ஒரு சேணத்தைத் தயாரித்துத் தருகிறேன். தாங்கள் அதனை தங்கள் குதிரையின் மீது போர்த்தி சவாரி செய்தால் அதன் அருமையைத் தெரிந்து கொள்ளலாம்" என்று மறுமொழி கூறி மன்னரின் அனுமதியுடன் சேணத்தை தயாரிக்கும் முயற்சியில் ஈடுபட்டான் சிந்துபாத்.

ஏற்கனவே முன்பு குதிரை காரர்களிடம் சேணத்தை நன்கு செய்ய பயிற்சி எடுத்த சிந்துபாத் சில வாரங்களிலேயே ஒரு அழகான சேணத்தை தயார் செய்து அதில் கால்மிதிகளை இட்டு, அழகாக குஞ்சங்களையும் கட்டி மன்னரின் பட்டத்து குதிரை மீது போர்த்தி அதற்கு கடிவாளத்தை இட்டான்.

பிறகு மன்னரின் பட்டத்து குதிரையை அலங்காரத்துடன் மன்னரிடம் வாத்தியங்கள் முழங்க கூட்டிச் சென்றான். தனது குதிரையின் புதுமையான தோற்றத்தைக் கண்ட மன்னர் வியந்து போனார். ஆச்சர்யம் அடைந்தார். தாமதிக்காமல் குதிரை மீது ஏறி அந்தச் சேணத்தில் கச்சிதமாக அமர்ந்தார். அது அவருக்கு மிகவும் வசதியாக இருந்தது. சிந்துபாத்தின் அற்புதமான உழைப்பை பாராட்டி மன்னர் அவனுக்கு வெகுமதிகளை அளித்தார்.

இப்படியாக மன்னரின் குதிரைக்குச் சேணம் பொருத்தப் பட்டதுமே, பிரபுக்கள் சிலர் அதனைக் கண்டு தங்களுக்கும் அதே போல ஒரு சேணத்தை செய்து தருமாறு சிந்துபாத்திடம் வேண்டினர். அவர்களுக்கும் சிந்துபாத் சேணத்தை தயார் செய்து கொடுத்தான். இதனால் அவர்களும் குதிரை மீது மிகவும் சொகுசாக எறித் தங்களது பயணத்தை மேற்கொண்டனர். அதை பார்த்த அரசு அதிகாரிகள் பலர் அவர்களுக்கும் சேணத்தை செய்து தர வேண்டும் என்று கேட்க. சிந்துபாத் சேணம் செய்வதை ஒரு தனித் தொழிலாகவே ஆக்கிக் கொண்டார். இப்படியாக அந்த ஊரில் உள்ள அனைவருமே சேணத்தை உபயோகிக்க கற்றுக் கொண்டனர். சிந்துபாத் அந்த ஊரில் இருந்த வேலை இல்லாத இளைஞர்கள் பலருக்கும் சேணம் செய்யக் கற்றுக் கொடுத்தார். அதனால் அவர்கள் அனைவருமே ஒரு தொழிலைக் கற்று பொறுப்புடன் சம்பாதிக்கத் தொடங்கினார்கள். இதனால் சிந்துபாத்துக்கு இன்னும் அதிகமாகவே அந்த ஊரில் மதிப்பு கிடைத்தது. சிந்துபாத் எது கேட்டாலும் அந்த ஊரில் இல்லை என்று சொல்லாமல் மக்கள் கொடுக்கத் தொடங்கினார்கள். அரசு அதிகாரிகள் மூலமாகவும் சிந்து பாத்திற்கு பல சலுகைகள் கிடைத்தது.

எனினும் ஒருவன் நன்றாக வளர்வது ஒரு சிலருக்கு பிடிக்காது என்பார்கள். அந்த வகையில் சிந்துபாத்தையும் உயர் குடி பிரபுக்களைக் கொண்ட ஒரு கூட்டம் வெறுத்தது அவனது வளர்ச்சியை பார்த்துப் பார்த்து பொறாமைத் தீயில் வெந்தது.

"எங்கிருந்தோ இருந்து வந்து நமது ஊரில் இவன் கொடி கட்டிப் புகழுடன் இருக்கிறானே! நம்மை விட மக்கள் இவனை மதிக்கின்றனரே!" என்று பொருமித் தள்ளியது அந்தக் கூட்டம். இது சிந்துபாத்துக்கும் தெரியும் எனினும் அவன் எதைப் பற்றியும் கவலை கொள்ளாமல் பெருந்தன்மையுடன் நடந்து கொண்டான்.

பொறாமை கொண்ட அந்தக் கூட்டம் மன்னரிடமும் சிந்துபாத்தைப் பற்றி தவறாகக் கூறியது. ஆனால், சிந்துபாத் மீது பெரிய அளவில் மதிப்பு வைத்து இருந்த மன்னர் அதைப் பற்றி எல்லாம் காதில் வாங்கவே இல்லை. இப்படியே சில காலம் சென்றது.

ஒரு நாள் மன்னர் சிந்துபாத்திடம் பேசிக் கொண்டு இருந்தார். அப்போது அவர் சிந்துபாத்திடம்," எங்களில் நீயும் ஒருவனாக ஆகி விட்டாய்.; இனி நீ எங்களுடன் தான் இருக்க வேண்டும். அதற்கு ஏற்றார் போல நான் ஒரு திட்டத்தை வைத்து உள்ளேன். அதற்கு நீயும் இசைவு தெரிவிப்பாய் என்று நம்புகிறேன்" என்றார்.

மன்னர் கூறியதைக் கேட்ட சிந்துபாத் குழம்பிப் போனான்.

"மன்னர் என்ன திட்டத்தை வைத்து இருக்கிறாரோ தெரிய வில்லையே சரி நாமே கேட்டு விடலாம்" என்று சிந்தித்தவனாய் மன்னரிடம்," அரசே! தங்களது திட்டம் எதுவானாலும் அது நிச்சயம் எனக்கு நன்மையைத் தான் செய்யும். அதில் எனக்கு எந்த விதமான சந்தேகமும் இல்லை. எனினும் அந்தத் திட்டத்தை அறிந்து கொள்ள நான் ஆவலாக உள்ளேன்" என்றான்

சிந்துபாத் மேற்கண்டவாறு சொன்னதைக் கேட்ட மன்னர் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார். புன்னகைத்த முகத்துடன்," சிந்துபாத் உனக்குத் தான் என் மீது எவ்வளவு நம்பிக்கை! நிச்சயம் உனது நம்பிக்கை வீண் போகாது. நீ சொல்வது உண்மை தான். நல்லதொரு திட்டத்தை தான் நான் உனக்காக வைத்து உள்ளேன். எத்தனை காலம் தான் நீயும் தனியாக இருப்பாய்? உனக்கும் ஒரு துணை வேண்டாமா? அந்தத்

துணை உன்னைப் போலவே ஒரு புத்திசாலிப் பெண்ணாக இருந்தால்! அதிலும் அவள் உனது மனைவியாக இருந்தால்! ஆம் சிந்துபாத் தந்தையின் ஸ்தானத்தில் இருந்து உனக்கு நான் திருமணத்தை நடத்த ஆசை கொண்டு உள்ளேன். வெளிப்படையாகவே கேட்கிறேன் எனது மகள் பாத்திமாவை நீ திருமணம் செய்து கொள்ளத் தயாரா? அவளும் உன்னை மனதார விரும்புகிறாள்" என்றார்.

மன்னரே இவ்வாறு கேட்ட மாத்திரத்தில் சிந்துபாத்துக்கு என்ன சொல்வது என்றே தெரியவில்லை அதே சமயத்தில் மன்னர் கூறியதை ஏனோ அவனால் மறுக்கவும் முடியவில்லை. சில மணி நேர யோசனைக்குப் பிறகு அவன் இதற்கு சம்மதம் தெரிவித்தான். சிந்துபாத்தின் சம்மதத்தைக் கேட்ட மன்னர் மகிழ்ந்தார்.

ஆனால் மறுபுறம் பொறாமைத் தீயில் ஏற்கனவே வெந்து கொண்டு இருந்த பிரபுக்கள் சிலர் மன்னரின் முடிவைக் கேட்டு மேலும் வெந்து நொந்தார்கள்.

ஆனால் அரசர் தனது பெண்ணை சிந்துபாத்துக்குத் தரத் தீர்மானித்தே விட்டார். ஒரு நல்ல நாளில் சிந்துபாத்- பாத்திமா திருமணம் நடந்தேறியது. அதில் ஊரே கலந்து கொண்டு தம்பதியர் இருவரையும் வாழ்த்தி மகிழ்ந்தது.

பாத்திமாவுடனான சிந்துபாத்தின் மண வாழ்க்கை மிகவும் திருப்திகரமாக இருந்தது. அரசனின் மகளாகவே பாத்திமா இருந்தாலும் அவளிடம் சிறிது கூட "தான்" என்ற அகந்தை எல்லாம் இல்லை. சந்தோஷமாக சிந்துபாத்துக்கு வேண்டிய பணி விடைகளை எல்லாம் செய்தாள். சிந்துபாத்தும் பாத்திமாவை மிகவும் நேசித்தார். அவளை எப்படியாவது நேரம் பார்த்து மன்னரின் அனுமதியுடன் பாக்தாத்துக்கு தன்னுடன் அழைத்துச் சென்று விட வேண்டும் என்பதில் சிந்துபாத் சித்தமாக இருந்தாலும் அதை பற்றி ஏனோ தனது மனைவியிடம் கூட அவர் கூறவில்லை. காலம் வரட்டும் என்று காத்துக் கொண்டு இருந்தார். ஆனால், காலம் தான் உருண்டு ஓடியதே தவிர அதற்கான சந்தர்ப்பத்தை சிந்துபாத்துக்கு அது (காலம்) கடைசி வரையில் கொடுக்கவே இல்லை என்று தான் சொல்ல வேண்டும்.

இப்படி இருக்கும் சமயத்தில், ஒரு நாள் அந்த ஊரில் இருந்த பரப்புக்களில் ஒருவரும் சிந்துபாத்தின் நெருங்கிய நண்பருமான

அப்சலின் மனைவி ஈரா பேகம் இறந்து போனாள். தனது அந்த நல்ல நண்பரின் மனைவி இறந்து போனதை அடுத்து சிந்துபாத் பெரிதும் வேதனை அடைந்தார். அத்துடன் அப்சலின் வீட்டிற்கு சென்று அவனுக்கு ஆறுதலும் அளித்தார்.

அங்கு வந்திருந்த தனது நண்பர்கள் பலருடன் பேசிக் கொண்டு இருந்த சிந்துபாத்துக்கு அப்போது தான் அந்த நாட்டில் இருந்த ஒரு வழக்கம் தெரிய வந்தது. அதவாது அந்த வழக்கம் அந்த நாட்டில் பல தலைமுறைகளையும் தாண்டி இருந்து வரும் பழக்கம். அது யாதெனில், பெண்களுக்கு முன்னுரிமை தரும் அந்த நாட்டில் ஒரு வேளை கணவனுக்கு முன்னாள் மனைவி இறந்து விட்டாள் எனில் அவளை புதைக்கும் சமயத்தில் உயிருடன் இருக்கும் அவளது கணவனையும் சேர்த்து கல்லறையில் தள்ளி விட்டு கல்லை கொண்டு கல்லறையை மூடி விடுவார்களாம். அதாவது வேறு வகையில் இதனை சொல்ல வேண்டும் எனில் மனைவி இறந்து உயிர் வாழும் கணவரை உயிருடன் மனைவின் கல்லறையிலேயே புதைத்து விடுவார்களாம்!

இதனைத் தனது நண்பர்கள் வாயிலாக கேட்ட சிந்துபாத் அதிர்ந்து போனார். இந்தப் பழக்கம் அவ்வளவு நாகரிகமான பழக்கம் இல்லை என்றும் மேலும் அப்பழக்கம் சீக்கிரத்தில் ஒழிந்து விட வேண்டும் என்றும் மனதினில் தீர்மானித்துக் கொண்டார். அப்சலை அவனது மனைவியின் கல்லறையில் புதைக்கப் போவதாக பறை அறிவிப்பும் முறைப்படி வெளியானது. அதனைக் கேட்டு அப்சலின் நண்பர்கள் அவனுக்கு கடைசியாக பிரியா விடை கொடுக்க முன் வந்தனர். பலர் அவனுக்காகவும் அனுதாபம் கொண்டு கதறினர்.

இறந்துபோன பெண்ணை ஒரு சவப் பெட்டியில் பக்குவமாகக் கிடத்தினார்கள். பின்னர் பெட்டியை மூடி அதைச் சுமந்து கொண்டு சென்றவர்கள், அவளுடைய கணவனையும் அழைத்துச் சென்றார்கள். நகரத்தை விட்டுத் தொலைவான இடத்தில் உள்ள கடற்கரையை ஒட்டி உள்ள மலையின் அருகில் சென்று, மூடப்பட்ட பெரியதொரு பாறாங்கல்லைப் புரட்டினார்கள். அதன் கீழ் குகை போல ஆழமாகச் செய்யப்பட்டு இருந்த ஒரு மிகப் பெரிய அறை இருந்தது. அது மிகவும் ஆழமானது. இன்னும் சொல்லப் போனால் அது ஒரு கிணறு போன்ற அமைப்பைக் கொண்டது. அதில் இன்னும் கூட ஆயிரம் பேரை ஒரே நேரத்தில் புதைக்கலாம் அவ்வளவு பெரியதாக இருந்தது. அந்த ஆழமான பள்ளத்தில் அந்தப் பெண்ணின் பிணத்தை பத்திரமாக

சேதாரம் இல்லாமல் இறக்கினர்.

பிற்பாடு இறந்து போன அப்பெண்ணின் கணவனான அப்சலின் இரண்டு தோள்களிலும் பனை நார் கொண்டு கட்டி உள்ளே இறக்கினார்கள். உடன் ஒரு ஜாடி நிறைய நல்ல குளிர்ந்த நீரையும் அந்தப் பள்ளத்தில் கயிறு கொண்டு உள்ளே இருந்த அப்சல் அருகில் இருக்குமாறு இறக்கினர். பிறகு பிரார்த்தனை செய்வதற்காக ஏழு மெழுகுத் திரிகளையும், அவைகளை வைக்கும் ஒரு தாங்கியையும் உள்ளே இருந்த அப்சலிடம் கொடுத்தார்கள் அவ்வூர் மக்கள். இப்படியாக அனைத்துப் பொருள்களும் கொடுக்கப்பட்டு விட்டதா என்று பார்த்த பின்னர், அந்தக் கல்லறை வாயிலைப் பெரியதொரு பாறாங்கல்லைக் கொண்டு மூடினார்கள்.

இவற்றை எல்லாம் பார்த்துக் கொண்டு இருந்த சிந்துபாத்திற்கு இவை எதுவுமே பிடிக்க வில்லை. இது என்ன பழக்க வழக்கமோ தெரியவில்லையே என்று சிந்துபாத் உண்மையில் பெரிதும் வருந்தினார். ‘இதே நிலை நாளைக்கு தனக்கும் வந்து சேர்ந்தால் என்ன செய்வது?’ என்று யோசித்த போது சிந்துபாத்தின் தலையே சுற்றியது. இப்படிப் பட்ட ஊரிலே ஏன் பெண் எடுத்தோம் என்று தன்னைத் தானே முதல் முறையாக நொந்து கொண்டார். பிறகு மாளிகைக்கு சென்ற சிந்துபாத் அன்றைய இரவு உறக்கம் வராமல் தவித்தார்.

சிந்துபாத்தின் நிலையைப் பற்றிக் கேட்ட அவனது மனைவி விஷயத்தை அறிந்து கொண்டாள். பிறகு சிந்துபாத்தை பல விதங்களில் சமாதானம் செய்ய முயற்சி செய்தாள். ஆனால், சிந்துபாத் சமாதானம் ஆகாமல் அப்பழக்கத்தை மூடப் பழக்கம் என்று சாடினான்.

ஒரு பெண் இறந்ததும் கணவன் அவளது பிணத்துடன் சேர்த்து வைத்து புதைக்கப்படுவது கொடுமையிலும் கொடுமை என்றான். அதனை ஆண்களின் சமூகத்திற்கு இழைக்கப்படும் அநீதி என்றான். அதைக் கேட்ட பாத்திமா சிரித்தாள். பிறகு கோபத்துடன் அவனை முறைத்துப் பார்த்த சிந்துபாத்திடம்," ஊருக்கு ஊர் இது போன்ற ஏதேனும் ஒரு பழக்கம் இருக்கத் தான் செய்யும். இவ்வளவு ஏன்? தங்களுக்கு தெரியுமா? ஆசியக் கண்டத்தில் பாரத தேசம் என்ற நாடு உள்ளதாம் அங்கு கணவன் இறந்து விட்டால் இறந்த உடலை எரிக்கும் போது அவனது உயிர் உள்ள மனைவியையும் சேர்த்து எரியும் சிதையில் தள்ளி எரித்து விடுவார்களாம். அதே போலத் தான் இதுவும். அது மட்டும்

பெண்ணுக்கு இழைக்கப்படும் அநீதி இல்லையா? எங்கள் ஊரில் அது ஆண்களுக்கு நடக்கிறது. அவ்வளவு தான்" என்றாள்.

இதைக் கேட்ட சிந்துபாத்," ஆணோ! பெண்ணோ! யாருடைய உயிரையும் யாருக்கும் எந்த வகையிலும் எடுக்க உரிமை இல்லை. தற்கொலை செய்து கொள்வது கூட ஒரு பாவச் செயல் தான் என்கிறது அறிஞர்கள் சபை. அப்படி இருக்கும் போது இது போன்ற ஒரு அநீதியை இனி நான் இருக்கும் வரையில் இந்த ஊரிலே நடக்க விட மாட்டேன். உடனே இதை பற்றி நாளையே நான் மன்னரிடம் பேச இருக்கிறேன்" என்றான்.

"அதைப் பற்றி நாளை பார்ப்போம். இப்போது நடக்க வேண்டியதை, இப்போது பார்ப்போம்" என்று கூறி சிரித்தபடி விளக்கை அணைத்தாள் பாத்திமா. அன்றைய இரவுப் பொழுதும் இனிதாகக் கழிந்தது. அடுத்த நாள் காலையும் விடிந்தது. அப்புதிய விடியலைக் கண்டு பூக்கள் சிரித்தன. பறவைகள் பாடின. சில கணங்களில் செவ்வானம் நீல வானமாக மாறியது. அனைவரும் அவரவர் வேலையைப் பார்க்கப் புறப்பட்டனர். சிந்துபாத் முதல் வேலையாக மன்னரைக் காணச் சென்றான்.

மன்னரும் சிந்துபாத்தை நல்ல முறையில் வரவேற்றார். சிந்துபாத் மன்னருடன் சாதாரணமாக பேச்சை தொடங்கினார். மன்னரும் நல்ல மனநிலையில் தான் இருந்தார். அதனால் சிந்துபாத்துடன் நன்றாகத் தான் பேசினார். இதுவே சரியான சமயம் என்று உணர்ந்த சிந்துபாத்,"மன்னர் பெருமானே! நமது நாட்டில் மனைவி இறந்த பிறகு உயிருடன் இருக்கும் கணவரையும் கல்லறையில் சேர்த்து இறக்குகின்றோமே இந்தப் பழக்கம் சரிதானா? இதனை நாம் நினைத்தால் மாற்றலாமே!" என்று கேட்டான்.

"சிந்துபாத் இது இந்த நாட்டில் பத்து தலைமுறைகளைக் கடந்து இருக்கும் தொன்று தொட்டப் பழக்கம். இதில் எல்லாம் தாங்கள் தலையிடக் கூடாது. மேலும் இந்த நாட்டின் சட்டமே இப்பழக்கத்தை ஆதரிக்கிறது. மக்களின் ரத்தத்திலும் கூட இந்தப் பழக்கம் ஊறிப் போய் விட்டது. இனி ஒரு பேச்சுக்கே நான் இதனை மாற்ற நினைத்து சட்டத் திருத்தம் கொண்டு வந்தாலும் அது எனக்கே ஆபத்தை தரும். மக்கள் அதனை விரும்பவும் மாட்டார்கள். மேலும் இந்தப் பழக்கம் எல்லோருக்கும் பொதுவானது. ஏன் எனக்கும், உங்களுக்கும் கூட

நாளைக்கு மனைவி இறந்தால் இதே நிலை தான். புரிந்து கொள்ளுங்கள். இனி தாங்கள் இதை பற்றி என்னிடம் மட்டும் அல்ல, யாரிடமும்  பேசக்கூடாது. இது அரச கட்டளை" என்று உறுமினார் மன்னர். அதைக் கேட்ட பொறாமைக்கார பிரபுக்களின் கூட்டம் சிந்துபாத்தை அழிக்க இதுவே ஏற்ற ஒரு நல்ல சந்தர்ப்பம் என்று கருதினர்.

மறுபுறம், மன்னர் இவ்வாறு கூறிய வார்த்தைகள் சிந்துபாத்தை கதி கலங்க வைத்தது என்னமோ உண்மை தான். ஏனெனில்,  இதே நிலை தான் நாளை சிந்துபாத்துக்கும். அதனால் மனைவியின் ஆயுளுக்காக இறைவனை வேண்டிக் கொண்டார்.

இது இப்படி இருக்க, ஒரு நாள் இரவு சிந்துபாத்தை அழிக்க முடிவு செய்த பொறாமைக்கார பிரபுக்களின் கூட்டம் காலிங்க நாகம் என்னும் விஷ நாகத்தை அவனது அரண்மனைக்குள் படுக்கை அறை அருகே பாம்பாட்டிகளின் துணை கொண்டு விட ஏற்பாடு செய்தது. பாம்பாட்டிகளும் கச்சிதமாக வேலையை முடித்தனர்.

சிந்துபாத்தின் படுக்கை அறைக்குள் நுழைந்தது காலிங்க நாகம். ஆனால், இதனை அறியாத சிந்துபாத்தும் அவனது மனைவியும் வழக்கம் போல சந்தோஷமாக நேரத்தை செலவழித்தனர். காலிங்க நாகமோ மலர்களால் அலங்கரிக்கப்பட்ட கட்டிலின் அருகே மல்லிகை வாசனையை மோப்பம் பிடித்து வந்து விட்டது.

சிந்துபாத்தும் அவனது மனைவியும் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தனர். காலிங்க நாகம் சிந்துபாத்தின் அருகே வந்தது. அவனைத் தீண்டத் தயார் ஆனது. தீண்டும் நேரம், சிந்துபாத்தின் மனைவி பாத்திமா ஆழ்ந்த உறக்கத்தில் அவன் மீது தனது கையைப் போட பாம்பு சிந்துபாத்தை தீண்டாமல் தவறுதலாக பாத்திமாவைத் தீண்டி விட்டது. அவள் அலறித் துடித்தாள். ஆழ்ந்த உறக்கத்தில் இருந்த சிந்துபாத் திடுக்கிட்டு எழுந்தான். பாத்திமாவின் நிலையைக் கண்டு செய்வதறியாது துடித்தான். பாம்பு கடித்த சில மணி நேரத்திற்குள் பாத்திமா வாயில் நுரை தள்ளி மாண்டு போனாள்.

அடுத்த நாள் காலை விஷயம் அரசரின் காதுகளை அடைந்தது. தனது ஆருயிர் மகள் இறந்து போன விஷயத்தை கேட்டு துடித்துப் போனார் அரசர். விஷயத்தை அறிந்த பிரபுக்கள் சிந்துபாத் சாகவில்லையே

என்பதை அறிந்து கவலை கொண்டனர். எனினும் அந்த ஊர் வழக்கப்படி சிந்துபாத்தும் இறந்து போன மனைவியுடன் சேர்த்து புதைக்கப்படுவது உறுதி என்று எண்ணிய பிரபுக்கள் அகம் மகிழ்ந்தனர்.

பிரபுக்களின் எண்ணம் போலத் தான் எல்லாம் நடந்தது. பாத்திமாவின் உடல் அலங்கரிக்கப்பட்ட சவப்பெட்டியில் வைக்கப்பட்டது. சிந்துபாத்தையும் மாப்பிள்ளை போல அலங்கரித்து பாத்திமாவின் சவ ஊர்வலத்துடன் அழைத்துச் சென்றனர். வேறு வழி தெரியாமல் சிந்துபாத்தும் தனது அதிசய வாளை எடுத்துக் கொண்டு சென்றார். உடன் அரசரும் புறப்பட்டார். பிறகு கடல் அருகே அமைந்திருந்த கல்லறைத் தோட்டத்தை அடைந்தனர். பாத்திமாவை அடக்கம் செய்ய நேர்த்தியாக அனைத்து சடங்குகளும் நடத்தப்பட்டது. கடைசியாக மன்னர் பாத்திமாவுக்காக சேர்த்து வைத்த நகைகளை அவளுடனே கூட புதைத்து விடுமாறு சொல்ல அதன் படியே செய்யப்பட்டது. கயிறு கட்டி குகைக்குள் பாத்திமாவுடன் கூடிய அவளது சவப் பெட்டியை இறக்கினர். உடன் சிந்துபாத்தையும் அவனது கடைசி விருப்பப் படி முன்பு அவன் பெற்ற அதிசய வாளுடன் அந்தக் கல்லறைக் குகைக்குள் கயிறு கட்டி இறக்கினர். உடன் ஒரு ஜாடி நிறைய தண்ணீரும் அனுப்பி வைக்கப்பட்டது. எல்லாம் முடிந்த பிறகு கல்லறையின் வாயில் பெரிய பாறை ஒன்றைக் கொண்டு மூடப்பட்டது. சவ ஊர்வலத்தில் கலந்து கொண்ட அனைவருமே தத்தமது வழியே தங்கள், தங்கள் இருப்பிடத்திற்கு திரும்பிச் சென்றனர்.

வானில் சூரியன் அஸ்தமித்துக் கொண்டு இருந்த சமயம். சிந்துபாத் அந்தப் பிணவாடையைத் தாங்கிய வண்ணம் கொஞ்சம் தாக்குப் பிடித்தவனாய், களைத்துப் போன நிலையில் கொஞ்சம் நீரருந்திக் கொண்டு அங்கு ஏதேனும் புதுமை தெரிகிறதா என்று சிறிது தூரம் நடந்து சென்று பார்த்த சமயத்தில் கொஞ்சம் தொலைவில் ஒரு துவாரத்தின் வழியே சில் என்று காற்று வருவதை உணர்ந்தான். அப்போது அந்தக் குகையில் இருந்த சின்னஞ்சிறு விலங்கு ஒன்று அந்த துவாரத்தின் வழியே வெளியே சென்றது. அதையும் சிந்துபாத் பார்த்தான்.

உடனே சிந்துபாத்தின் மூளை சற்று அதிகமாகவே வேலை செய்தது. "இது தான் இந்தக் குகையிலேயே வைத்து மிகவும் பலவீனமான பகுதி போலக் காணப்படுகிறது. கொஞ்சம் முயற்சி செய்து பார்த்தால் நாம் இங்கிருந்து எளிதில் தப்பி விடலாம்" என்று தனது மனதினில் அவன்

சொல்லிக் கொண்டான். பிறகு தனது கையில் இருந்த கனமான அதிசய வாள் கொண்டு அந்தத் துவாரத்தை ஓங்கி மூன்று முறை அடித்தான். பாறை இடுக்கில் இருந்த எஞ்சிய கற்கள் அனைத்தும் உருண்டு கிழே விழுந்தது. ஒரு ஆள் நுழைந்து செல்லும் அளவுக்கு துவாரம் பெரிதானது. "இனி கவலை இல்லை இந்தத் துவாரம் போதும், இதன் வழியே நாம் வெளியே சென்று விடலாம்" என்று மீண்டும் தம் மனதினில் எண்ணிய சிந்துபாத் ஓடிச் சென்று தனது வழிச் செலவுக்கு வேண்டி தனது மனைவின் நகைகள் அனைத்தையும் எடுத்துக் கொண்டு அதனை ஒரு மூட்டையாகக் கட்டிக் கொண்டான். பிறகு தான் முன்பு ஏற்படுத்திய அந்த துவாரத்தை பயன்படுத்திக் கொண்டு மெல்ல குகையை விட்டு வெளியே வந்தான். அந்த சமயம் நன்கு இருட்டி இருந்தது.

குகையை விட்டு இவ்விதம் வெளியே வந்த சிந்துபாத் அந்தப் பொந்தை மீண்டும் துவாரம் வெளியே மற்றவர்களுக்கு தெரியாத வண்ணம் நன்கு மூடினான். பிறகு தான் குகையில் இருந்து தப்பி வந்த சுவடே தெரியாத வண்ணம் மணலில் கால் பதிக்காமல் புள் வெளியில் கால் பதித்து அக்குறுக்கு வழி காட்டும் பாதையில் நடந்து சென்று கடற்கரையை அடைந்தான். அங்கு மேட்டுப் பகுதியான ஒரு இடத்தில் நின்றபடி ஏதேனும் கப்பல் வருகிறதா என்று சிறிது நேரம் பார்த்தான். ஆனால், பல மணி நேரம் நின்று பார்த்தும் கப்பல் எதுவும் வருவதாகத் தெரியவில்லை. சற்று நேரம் யோசித்த சிந்துபாத் அக்கடலில் அலைகளின் வேகம் அந்த அளவுக்கு இல்லை என்பதை உணர்ந்து அருகில் இருந்த மரங்களைக் கொண்டு கச்சிதமாக ஒரு தெப்பத்தை செய்து கொண்டான். தெப்பத்தை கடலில் விட்டுப் பார்த்தான். அவன் நினைத்ததை விட அது நன்றாகவே கடலில் மிதந்தது. அதனைக் கொண்டு கடலில் சில தூரம் பயணம் செய்தான். ஒரு இடத்தில் நிறுத்தினான் அதற்கு மேல் சென்றால் ஆபத்து என்பதை உணர்ந்து வேறு ஏதேனும் கப்பல் வருகிறதா என்று பார்த்தபடி காத்திருந்தான். அதிகாலைப் பொழுதும் விடிந்தது. வானம் பளிச்சென்று காணப்பட்டது. எனினும் சிந்துபாத்தின் நம்பிக்கை மட்டும் குறையவில்லை.

பிறவியிலேயே இறை அருள் பெற்ற சிந்துபாத்திற்கு சிறு வயதில் இருந்தே விதி சாதகமாக எப்போதுமே இருந்து வந்தது. அதனால் அதிர்ஷ்டம் அடிக்கடி அவனது கரங்களை முத்தம் இட்டது. அதே போலத் தான் இந்த முறையும் நடந்தது. ஆம்! சிந்துபாத்தின் நம்பிக்கை வீண் போகவில்லை. அவன் எதிர்பார்த்தபடியே அவன் தெப்பத்தில் இருந்த அந்த இடத்தில் இருந்து சற்று வெகு அருகில் அந்த வழியாக ஒரு

படகு சென்றது. மீனவர்கள் பலர் பாடிக் கொண்டும் துடுப்பை போட்டுக் கொண்டும் வழக்கம் போலத் தங்கள் மீன் பிடித் தொழிலை செய்ய விரைந்து கொண்டு இருந்தனர். அவர்களை நோக்கி சிந்துபாத் பலமாகக் கூக்குரல் எழுப்பினான். கைகளை பலமாகத் தட்டினான். தனது வாளைக் கொண்டு நீரில் சலசலப்பை ஏற்படுத்தினான். அவனது முயற்சிகள் அனைத்தும் ஒரு சேர அவனுக்குப் பலன் அளித்தது. படகில் இருந்த மீனவத் தலைவன் சிந்துபாத்தை கண்டு கொண்டான். உடனே சிந்துபாத் இருக்கும் திசையை நோக்கிப் படகை செலுத்தச் சொன்னான். படகு விரைவாக செலுத்தப்பட்டது. சிந்துபாத்தின் அருகில் வந்து சேர்ந்தது. சிந்துபாத்துக்கு அந்தப் படகில் இருந்த நல் மனம் கொண்ட பலர் உதவ பத்திரமாகப் படகில் ஏறிக் கொண்டான் அவன்.

படகும் மதிய வேளையில் "ஜாவா" என்னும் தீவை அடைந்தது. அந்த இடைப்பட்ட காலத்தில் மீனவத் தலைவனிடம் சிந்துபாத் தனது கதையை கூறி முடித்தான். சிந்துபாத்தின் மனைவி இறந்ததைக் கேட்ட மீனவத் தலைவன் அதற்காக மிகவும் வருந்தினான். பிறகு தன்னை நம்பி வந்த சிந்துபாத்தை பத்திரமாக ஜாவாவில் இருந்த ஒரு பெரிய துறைமுகத்தில் கொண்டு சென்று சேர்த்தான் அந்த மீனவத் தலைவன். அந்தத் துறை முகத்திற்கு பாக்தாத் செல்லும் சில வணிகக் கப்பல்களும் வாரத்திற்கு ஒரு முறை வந்து போகும். அன்றைய தினம் மாலையும் ஒரு கப்பல் வரும் என்று அனைவரும் ஏற்கனவே எதிர்பார்த்துக் காத்துக் கொண்டு இருந்தனர். உரிய நேரத்தில் பாக்தாத் செல்லும் அந்தக் கப்பலும் வந்து சேர்ந்தது. அதில் சிந்துபாத்தை ஏற்றி விட்டான் மீனவத் தலைவன். அந்த உதவிக்கு பிரதிபலனாக சிந்துபாத் அந்த மீனவத் தலைவனுக்கு இறந்து போன தனது மனைவியின் சில நகைகளை கொடுக்க முன் வந்தான். ஆனால் பேராசை இல்லாத மீனவத் தலைவன் சிந்துபாத் கொடுத்த நகைகளை கையில் வாங்கி மனம் கேட்காமல் அதனை சிந்துபாத்திடமே திருப்பிக் கொடுத்து," தாங்கள் இதனை தங்களது இறந்த மனைவியின் ஞாபகமாக வைத்துக் கொள்ளுங்கள்" என்று கண்டிப்பாகக் கூறி விட்டான். சிந்துபாத்தும் மீனவத் தலைவனின் பெருந்தன்மையை பாராட்டி பல முறை நன்றி கூறினான். பிறகு மீனவத் தலைவன் விடை பெற்றான். பாக்தாத்திற்கு செல்ல வேண்டிய அந்தக் குறிப்பிட்ட வணிகக் கப்பலும் புறப்பட்டது.

சிந்துபாத் இறந்த தனது ஆருயிர் மனைவியை நினைத்துக் கொண்டே இரவும் பகலுமாக கப்பலில் காலத்தை கழித்தான். பாத்திமாவுடன் அவன் கழித்த காலங்கள் இனி திரும்பி வரப் போவதில்லை என்பதை

உணர்த்து தன்னைத் தானே தேற்றிக் கொண்டான் சிந்துபாத். எனினும் ஏனோ அவன் மனம் மேலும், மேலும் நடந்து முடிந்த பழைய சம்பவங்களை எல்லாம் நினைத்துப் பார்த்து அழுதது. தன்னுடன் முன்பு புறப்பட்டு வந்த வேலை ஆட்கள் நூறு பேரும் இறந்த அந்தச் சம்பவம் வேறு சிந்துபாத்தின் மனதை உலுக்கியது. பாக்தாத் அடைந்த பிறகு இறந்த உறவினர்களிடம் தான் என்ன சொல்லப் போகிறோம் என்பதை சிந்துபாத் நினைத்த போது அவன் நா துக்கத்தில் வறண்டது.

பல நாட்கள் பிரயாணத்திற்குப் பிறகு சிந்துபாத் வந்த கப்பல் பாக்தாத் நகரத்தை அடைந்தது. வெகு நாட்களுக்குப் பிறகு தனது ஊருக்கு வந்து சேர்ந்தான் சிந்துபாத். அதனைக் கேள்விப்பட்ட அவனது நண்பர்கள் உடனுக்குடன் அவனை வந்து பார்த்தனர். அவர்களிடம் சிந்துபாத் தனது பயண அனுபவத்தை பகிர்ந்து கொண்டான். அவனுடன் சென்ற வேலை ஆட்கள் நூறு பேருமே இறந்து விட்டனர் என்ற செய்தி அனைவருக்கும் அதிர்ச்சியை ஏற்படுத்தியது. இறந்தவர்களின் குடும்பத்தினருக்கு ஆறுதல் அளித்தான் சிந்துபாத். அத்துடன் அந்த நூறு பேரின் குடும்பத்துக்கும் அவர்களின் வாழ்க்கைக்கு தேவையான பொன்னையும் பொருளையும் தார்மீக ரீதியாக கொடுத்துத் தீர்த்தான். இதனால் அவனது செல்வம் பெரும் அளவில் செலவானது. உண்மையில் அந்த நூறு பேரும் உயிருடன் இருந்திருந்தால் கூட அவ்வளவு தினார்களை தங்களது குடும்பத்திற்கு சம்பாதித்து கொடுத்து இருப்பார்களா என்பது சந்தேகம் தான். அந்த அளவுக்கு சிந்துபாத் இறந்தவர்களின் குடும்பத்தினர் அனைவருக்கும் தன்னால் ஆன பொருள் உதவிகளை செய்தான். சிந்துபாத்தை பொறுத்த வரையில் பணம் பெரிய விஷயமாக இருக்க வில்லை. காரணம் அந்த நூறு வேலையாட்களும் அவனிடம் விசுவாசத்துடன் நடந்து கொண்டவர்கள்.

இப்படியாகத் தனது எல்லா கடமைகளையும் முடித்து விட்ட சிந்துபாத் அவனது மாளிகையிலேயே சில காலம் தங்கினான். பாத்திமாவை நினைத்து, நினைத்து மனதிற்குள் வருந்தினான். "அவள் இருந்திருந்தால் தன்னை இப்படி பசியுடன் விட்டு இருக்க மாட்டாளே!" என்று நினைத்து, நினைத்து பல நாட்கள் அவன் அழுதான். சில சமயங்களில் பாத்திமா தனது பெயரை சொல்லி அழைப்பதைப் போல உணர்வான். அதனால் அக்கணம் மகிழ்வான். அது பிரமை என்று அறிந்த மறு கணம் அழுவான். தன்னந்தனியான அந்த மாளிகையில் தன்னைத் தானே அவன் தேற்றிக் கொள்வான். பல சமயங்களில் நிலவின் குளிர்ந்த காற்று கூட அவனை சுட்டு எரித்தது. சில சமயங்களில் இறந்து விடலாமா?

என்று கூட சிந்துபாத் நினைப்பான். ஆனால் தான் இறந்தால் தன்னுடன் இருக்கும் பாத்திமாவின் நினைவுகளும் சேர்ந்து இறந்து விடுமே என்பதால் தனது முடிவை உடனுக்குடன் மாற்றிக் கொள்வான். இப்படியே மனதில் வலியை சுமந்து கொண்டு தன்னைக் காண வருபவர்களிடம் தனது வருத்தத்தை வெளியில் காட்டிக் கொள்ளாமல் உள்ளம் அழுதாலும் உதடுகளாவது சிரிக்கட்டுமே என்ற படி தனது வாழ் நாளை ஒட்டி வந்தான் சிந்துபாத். ஆம்! இப்படித் தான் சிந்துபாத்தின் காலங்கள் அவன் பார்த்துப் பார்த்து கட்டிய அந்த ஆடம்பர மாளிகையில் அமைதியாகக் கழிந்தது.

சிந்துபாத்தின் இந்த நிலையை அறிந்த அவனது நெருங்கிய நண்பர்களுள் ஒருவரான அக்கீம், "இப்படியே நண்பன் சிந்துபாத்தை விட்டு விடக் கூடாது. அவனுக்கு நல்லதொரு வழியை காட்ட வேண்டும்" என்று முடிவு செய்தான். கடல் பயணத்தின் மீது சிந்துபாத்திற்கு இருந்த மோகத்தை பயன்படுத்தி தன்னுடன் மீண்டும் வர்த்தகம் செய்ய கப்பலில் வருமாறு சிந்துபாத்துக்கு அழைப்பு விடுத்தான். முதலில் சிந்துபாத் இதற்கு மறுப்பு தெரிவித்தான். ஆனால் அக்கீம் சிந்துபாத்திடம்," சிந்துபாத்! நான் உன்னை மீண்டும் ஒரு செல்வந்தனாக பார்க்க விரும்புகிறேன். அத்துடன் உன்னைப் போன்ற நல்லவர்கள் செல்வத்தை சேர்த்துக் கொண்டால் தான் அது உரிய நேரத்தில் ஏழைகளின் கரங்களுக்கு சென்று அவர்களின் பசியை போக்கும். அதற்காக வேண்டியாவது மீண்டும் உனது வியாபாரத்தை தொடங்கு!" என்று கூறி மிகவும் வற்புறுத்தினான். சிந்துபாத்தும் தன்னிடம் இருந்த எஞ்சிய பொருள்களை விற்று அவற்றையே மூலதனமாக்கி வியாபாரத்திற்கு வேண்டிய சரக்குகளை வாங்கினான். அதனைக் கப்பலில் ஏற்றினான். ஆனால் சிந்துபாத்தின் நண்பனான அக்கீமால் அவன் சொன்னபடி சிந்துபாத்துடன் வர முடியாமல் போகவே அவனது பொருள்களையும் தானே விற்றுக் கொடுக்க தீர்மானித்து அதனையும் கப்பலில் ஏற்றிக் கொண்டான் சிந்துபாத்.

சிந்துபாத் மீண்டும் தனது வியாபாரத்தை தொடங்கியதைக் கண்ட மற்ற வணிகர்கள் அகம் மகிழ்ந்து அவனை வரவேற்றார்கள். எல்லோரும் சந்தோஷமாக பேசி மகிழ குறிப்பிட்ட நேரத்தில் கப்பல் புறப்பட்டது. இவ்வாறாக சிந்துபாத்தின் மூன்றாவது கப்பல் பயணம் தொடங்கியது.

# சிந்துபாத்தின் மூன்றாவது கப்பல் பயணம்

கப்பல் புறப்பட்டுப் பல கடல்களையும், நகரங்களையும் கடந்து சென்று கொண்டு இருந்தது. ஒவ்வொரு துறைமுகத்திலும் சிந்துபாத் மட்டும் இன்றி மற்ற வர்த்தகர்களும் தங்களது சரக்குகளை விற்றும், புதிய சரக்குகள் பலவற்றை வாங்கியும் தங்களது பயணத்தையும், வியாபாரத்தையும் வெற்றிகரமாகத் தொடர்ந்து கொண்டு இருந்தனர்.

இப்படியாக அந்த வணிகக் கப்பல் போய்க் கொண்டு இருந்த நிலையில் பல நாட்கள் எந்தத் தீவுகளையும் காணாமல் கடலில் சென்று கொண்டு இருப்பதை உணர்ந்தான் கப்பல் தலைவன். அதனை உணர்ந்த மாத்திரத்தில் பதற்றம் அடைந்தான். அப்போது தான் கப்பல் தவறான திசையில் பயணித்துக் கொண்டு இருப்பதையே அவன் அறிந்தான். தன்னுடன் வந்த மாலுமிகளிடம் விஷயத்தை சொல்லி இந்தத் தவறு எப்படி நடந்தது என்று ஆலோசித்தான். அப்போது மாலுமிகளில் ஒருவன்," தலைவா! தெரிந்தோ தெரியாமலோ தவறு நேர்ந்து விட்டது. கப்பல் தனது இலக்கை மாறி பயணித்துக் கொண்டு இருப்பதை வணிகர்கள் அறிந்தால் பதற்றம் அடைவார்கள். அதனால் நமது வேலையும் கெடலாம். அதனால் இது வணிகர்களுக்கு தெரியக் கூடாது. அவர்களிடம் நாம் ஏதேனும் சொல்லி சமாளிக்க வேண்டும். அத்துடன் இதே திசையில் நாம் இன்னும் சில தூரங்களுக்கு சென்று பார்ப்போம் நிச்சயம் நமக்கு ஏதேனும் ஒரு வழி பிறக்கும்" என்றான்.

கப்பல் தலைவனும் "அது தான் சரி" என்று முடிவு செய்து அமைதி காத்தான். கப்பல் பயணமும் தொடர்ந்து கொண்டு இருந்தது. நாளுக்கு நாள் கப்பலில் இருந்த உணவுப் பண்டங்கள் குறைந்து வருவதை வணிகர்கள் கப்பல் தலைவனிடம் சொல்ல, "இதோ அங்கு ஒரு நிலப் பகுதி தென்படுகிறது கவலை வேண்டாம். அதோ சீக்கிரத்தில் அங்கு ஒரு தீவை நெருங்கி விடுவோம்" என்றெல்லாம் தினம், தினம் எதையேனும் கூறி சமாளித்து வந்தான் கப்பல் தலைவன். இருந்தாலும் அவன் மனதிலும் ஒரு வித பயம் இருந்து வந்தது உண்மை தான். இந்நிலையில் ஒரு நாள் தூரத்தில் ஒரு தீவு தெரிவதை கண்ட மாலுமிகள் சந்தோஷமாக ஓடிச் சென்று கப்பல் தலைவனிடம் அது பற்றிக் கூறினர். அதைக் கேட்ட கப்பல் தலைவன் விரைந்து அந்தத் தீவை நோக்கி கப்பலை செலுத்துமாறு ஆணை பிறப்பித்தான். கப்பலும் அந்தத் தீவை நோக்கி விரைந்து செலுத்தப்பட்டது.

பிறகு தீவை நெருங்கியதும் நங்கூரம் பாய்ச்சப்பட்டது. கப்பலில் இருந்து அனைவரும் இறங்க பலகைகள் போடப் பட்டது. எனினும் சிந்துபாத் உட்பட சில வணிகர்கள் மட்டும் கப்பலிலேயே இருக்க பல வணிகர்கள் தாங்கள் கொண்டு வந்த சரக்குகளுடன் இறங்கினர். ஆனால், உண்மையில் அந்த வணிகர்கள் எதிர்பார்த்தபடி அந்தத் தீவில் மக்கள் நடமாட்டமே இல்லை. இருந்தும் எங்காவது மக்கள் இருக்கலாம் என்ற நம்பிக்கையில் அந்தத் தீவுக்குள் தனித் தனி குழுக்களாகப் பிரிந்தபடி நடந்து சென்றனர். அப்போது ஒரு குழுவினர் பெரிய வெள்ளை நிற மண்டபத்தின் பக்கம் சென்றனர். அது தூரத்தில் இருந்து பார்க்கும் போது பளிங்கு மண்டபம் போலத் தான் தெரிந்தது. ஆனால், அருகில் செல்லச் செல்ல வெள்ளைப் பாறை போல தோற்றம் அளித்தது. ஆனால், அது பாறையும் அல்ல, அதனால் அது என்ன என்பதை அறிய விரும்பிய வணிகர்கள் சிலர் அருகில் இருந்த சில பெரிய கற்களை எடுத்து அந்த வெள்ளை பளிங்குக் கல்லின் மீது வீசினார்கள். ஆனால், அது அவர்கள் நினைத்தது போல பளிங்குக் கல் எல்லாம் இல்லை. அது ஒரு ராட்சஸப் பறவையின் முட்டை. வணிகர்கள் கல் கொண்டு அடித்ததால் அந்த முட்டை சிதைந்து அதில் இருந்த தண்ணீர் வெளியே ஓடியது.

சிந்துபாத் கப்பலில் இருந்ததால் இந்த விஷயம் அவனுக்கு முதலில் தெரியவில்லை. பின்னர் தான் தெரிந்து கத்த ஆரம்பித்தான். சிந்துபாத்துக்கு ஏற்கனவே அந்தப் பறவையை பற்றிய அனுபவம் உள்ளது. அதனால் அவனுக்குத் தெரியும் இனி அந்த ராட்ச பறவை யாரையும் உயிருடன் விடாது என்று. எனினும் சிந்துபாத் அந்தப் பறவையைப் பற்றி அனைவரிடமும் எச்சரிப்பதற்குள் அந்தப் பிரம்மாண்டப் பறவை தனது ஜோடியுடன் அவ்விடத்திற்கே வந்து விட்டது. அதன் இறகுகள் சூரியனின் ஒளிக் கதிர்களையே மறைக்கும் அளவிற்கு மிகப் பிரம்மாண்டமாக இருந்தது.

முட்டை உடைந்து கிடந்ததைக் கண்ட அந்தப் பறவை பெரிய அளவில் இரைந்து கத்தியது. அதனைக் கண்ட அதன் துணையான ஆண் பறவையும் மிகவும் துயர் கொண்டு வருந்திக் கத்தியது. அந்த இரண்டு பறவைகளும் கப்பலில் வந்த புதியவர்கள் தான் முட்டைக்கு சேதத்தை விளைவித்து இருக்க வேண்டும் என்பதை மிகத் துல்லியமாக அனுமானித்துக் கொண்டன. உடனே அந்தக் கப்பலை நோக்கிப் பறந்து வந்தன. அதனைக் கண்ட கப்பல் தலைவன் அலறி அடித்த படி அபாய சங்கை ஒலிக்கச் செய்தான். தீவில் இருந்த வணிகக் குழுக்கள் அந்த

அபாய ஒலியை கேட்டு தங்களது கப்பலை நோக்கி அதிவேகமாக விரைந்தனர். கப்பல் தலைவன் மிகவும் சிரமப்பட்டு பாதியளவு வணிகர்களை கப்பலில் ஏற்றி விட்டான். எனினும் அந்தத் தீவில் மனிதர்களை உண்ணும் தாவரங்களும் இருந்ததால் பலர் அந்தத் தாவரங்களிடம் சிக்கி இறந்தனர். அப்போது தான் வணிகர்கள் அனைவருக்குமே அந்தத் தீவைப் பற்றிய பயங்கரங்கள் தெரிய வந்தன.

இந்நிலையில் அந்தப் பிரம்மாண்டப் பறவை சிந்துபாத்தும் மற்ற வணிகர்களும் இருந்த அந்தக் கப்பலை தனது துணையுடன் ஆக்ரோஷமாக முற்றுகையிட்டது. மேலும் கப்பலில் இருந்த அனைவரையும் தனது தூண் போன்ற கூர்மையான அலகால் கொத்திக் கொன்றது. இன்னும் சிலரை உண்டே களித்தது. இதனைக் கண்ட கப்பல் தலைவன் சற்றே சமாளித்து விரைந்து கப்பலை செலுத்தத் தொடங்கினான். கப்பல் அதுவரையில் வரலாறு காணாத வேகத்தில் செல்லத் துவங்கியது. எனினும் அந்த ராட்ச பறவைகள் விடாமல் அந்தக் கப்பலை வெகு தொலைவு தூரம் வரையில் துரத்திக் கொண்டு சென்றன. கப்பலும் நடு கடலை கடந்து கொண்டு இருந்தது. கிட்டத்தட்ட பல மணி நேரம் தங்களது கப்பலை வெகுவாக இயக்கிய மாலுமிகள் அனைவரும் சோர்ந்து போயினர். ஒரு கட்டத்தில் கப்பலின் வேகம் குறைந்ததால் அந்தக் கப்பலை ராட்சஸப் பறவைகள் மிக எளிதாகத் துரத்தித் தாக்கின. அது மட்டும் அல்லாமல் அந்தக் கப்பலில் இருந்து சில மைல் தூரத்தில் காணப்பட்ட இன்னொரு தீவில் இருந்து பெரிய பெரிய பாறைகளை தத்தமது கால் விரல்களால் பற்றிப் பிடித்த வண்ணம் வந்து கப்பலின் மீது போட்டன. இதனால் கப்பலின் பல பாகங்கள் சிதிலம் அடைந்தன. மேலும் அந்தப் பாறைகள் சில தவறி கடலில் விழுந்த படியும் பெரிய, பெரிய அலைகளை தோற்றுவித்தன. இதனால் அந்தக் கப்பலை கட்டுப் படுத்த இயலாமல் மாலுமிகள் திணறினார்கள். ஒரு கட்டத்தில் கப்பலில் சிதிலங்கள் மேலும் அதிகமாக அதன் உள்ளே கடல் நீர் புகுந்தது. அதைக் கண்ட பறவைகள் உற்சாகம் அடைந்து அந்தக் கப்பலை சீக்கிரத்தில் மூழ்கடித்து அனைவரும் கொல்ல வேண்டும் என்ற எண்ணத்தில் மேலும், மேலும் மலைகளில் இருந்து பாறைகளை கொண்டு வந்து தனது கால் நகங்கள் மூலம் ஏற்கனவே மூழ்கிக் கொண்டு இருந்த அந்தக் கப்பல் மீது கோபத்துடன் வீசின.

இதனால் கப்பல் முழுவதுமாக மூழ்கி அதில் இருந்த அனைவரும் தத்தளிக்கத் துவங்கினர். சிந்துபாத் உட்பட இன்னும் சிலர் கப்பலில்

இருந்து உடைந்து கடலில் மிதந்த உதிரி பாகங்களை பிடித்த வண்ணம் தங்களால் இயன்றவரையில் நீச்சல் அடித்து ஒரு தீவின் கரையை அடைந்தனர். அந்தத் தீவில் ஏராளமான மரங்கள் வரிசை வரிசையாக நிற்கக் கண்டனர். அந்த மரங்களில் சுவையான பழங்கள் பழுத்து கேட்பார் இன்றிக் குலுங்கிக் கிடந்தன. சிந்துப்பாத் உட்பட அவனுடன் வந்த அனைவரது வயிற்றுப் பசியையும் தீர்க்க அந்தப் பழங்கள் போதுமானதாக இருந்தன. அந்தத் தீவில் சுவையான நன்னீர் ஊற்றுகளும் காணப்பட்டன. அந்த ஊற்றுகளில் உள்ள நீரைப் பயன்படுத்தி அனைவரும் தாகம் தீர்ந்தனர், இந்நிலையில், மாலைப் பொழுது மெல்ல அகன்று இருள் அந்தத் தீவை கவ்விக் கொண்டு இருந்தது. சிறிது தூரம் சிந்துபாத்துடன் அந்தத் தீவுக்குள் நடந்த வணிகர்கள் அனைவருமே ஒரு வித பய உணர்வில் தான் இருந்தனர். காரணம் அந்தத் தீவில் எந்த வகையான ஆபத்து இருக்குமோ என்று அவர்கள் சிந்தனை செய்தது தான். எனினும் வெகு தூரம் நடந்து வந்த களைப்பினால் சிந்துபாத்தும் அவன் உடன் வந்தோரும் சற்று நேரம் கண் அயர அங்கு ஒரு பாதுகாப்பான இடத்தை தேடி இறுதியில் கண்டு அடைந்தனர். அனைவரும் அவ்விடத்தில் உறங்கத் தொடங்கினார்கள். சிந்துபாத்தும் அவ்விடத்தில் நன்கு உறங்கி ஓய்வு எடுத்தான். இரவு மெல்லக் கழிந்தது. விடியும் நேரமும் வந்தது. அந்தத் தீவில் இருந்த கொடிய சர்ப்பங்களைக் (பாம்புகளைக்) கண்டு சில வணிகர்கள் அலறிக் கத்தினர். பயந்து போன வணிகர்கள் விஷயத்தை அறியாமல் ஆங்காங்கே சிதறி ஓடினர். சிந்துபாத்தும் அப்போது கண் விழித்து ஏதோ பெரிய ஆபத்து வந்துவிட்டது என்று எண்ணி ஒடத் துவங்கினான். அவ்வாறு ஓடிய சிந்துபாத் இறுதியில் ஒரு கிணற்றின் அருகே வந்து நின்றான். அந்தக் கிணற்றை ஒட்டி ஒரு வாய்க்காலும் காணப்பட்டது. அந்தக் கிணற்றின் கரையில் ஒரு முதியவர் அமர்ந்து இருந்தார். அவர் பனை மட்டை நாரினாலான உடையை உடுத்தி இருந்தார்.

அவரைப் பார்த்ததும் சிந்துபாத் அவருக்கு வணக்கம் தெரிவித்தார். அந்த முதியவரும் சிந்துபாத்தை பதிலுக்கு வணங்கினார். அந்த முதியவரும் உடைந்த கப்பலில் நம்முடன் வந்த வணிகர்களுள் ஒருவராக இருப்பாரோ என்ற சந்தேகம் சிந்துபாத்திற்கு வந்தது. சிந்துபாத் இவ்வாறு அந்த முதியவரைப் பற்றி சிந்தித்துக் கொண்டு இருந்த சமயத்தில் அந்த முதியவர் சிந்துபாத்திடம் எதையோ கூற எண்ணியவராய்ச் சைகை செய்தார். ஆனால் அவர் வாய் திறந்து எதுவும் பேசவே இல்லை.

அந்த முதியவரை ஒரு துறவி என்று எண்ணிக் கொண்ட சிந்துபாத்," துறவி அவர்களே, எதற்காகத் தாங்கள் இங்கு அமர்ந்து உள்ளீர்கள்?" என்று கேட்கவும். அதற்கு அந்தத் துறவி சிந்துபாத்திடம் மறுமொழியாக," என்னை உனது தோளில் தூக்கிக் கொண்டு வாய்க்காலின் அக்கரைக்குப் போ" என்று அதிகாரக் குரலில் ஆணை பிறப்பித்தார்.

அவரை ஒரு துறவி என்ற விதத்தில் மதித்துப் போற்றிய சிந்துபாத், இவருக்கு எழுந்து நடமாட முடியாத நிலை போலும், ஒருவேளை நாம் இவருக்கு உதவினால் அதனால் நிச்சயமாக இறைவனின் கருணையை பெற முடியும் என்று மனதினில் எண்ணியவராய் அவரைத் தூக்கிக் கொண்டு சென்றான். பல தொலைவு நடந்து அந்த முதியவர் சொன்ன இடத்திற்கு அவரை சரியாக அழைத்துச் சென்ற சிந்துபாத்," ஐயா! பெரியவரே இங்கு தானே தாங்கள் இறங்க வேண்டும்" என்று கேட்டான். ஆனால் அதற்கு அந்த முதியவர் எந்த ஒரு பதிலையும் கூறாமல் அமைதியாக சிந்துபாத்தின் முதுகில் ஒய்யாரமாக அமர்ந்து இருந்தார். சிந்துபாத் இறங்குமாறு கேட்டுக் கொண்டும் அந்த முதியவர் இறங்க மறுத்தார். "இவரிடம் இரக்கம் காட்டி இருக்கவே கூடாது" என்று மனதினில் எண்ணிய சிந்துபாத்திற்கு இன்னொரு அதிர்ச்சி காத்துக் கொண்டு இருந்தது. அந்த வயோதிகன் தன்னுடைய முரட்டுக் கரங்களால் சிந்துபாத்தின் கழுத்தை இருக்க ஆரம்பித்தான் . "இனியும் இந்தக் கிழவனிடம் நாம் இரக்கம் காட்டவே கூடாது" என்று எண்ணிய சிந்துபாத் அந்தக் கிழவனை கீழே தரையில் தள்ளிவிட்டு அவனிடம் இருந்து தான் தப்பிக்க முயற்சி செய்தான். ஆனால், சிந்துபாத் எவ்வளவு முயன்றும் கூட அது அவனால் முடியவில்லை. அத்துடன் அந்தக் கிழவன் தனது குதிகால் கொண்டு சிந்துபாத்தை முரட்டுத் தனமாக தாக்க ஆரம்பித்தான். அந்தத் தாக்குதலில் சிந்துபாத் சற்றே நிலை குலைந்து போனான்.

பிறகு வேறு வழி இன்றி அந்தக் கிழவன் சொல்வதை எல்லாம் கேட்க ஒப்புக் கொண்டான். அந்தக் கிழவன் சிந்துபாத்தை பழங்கள் பழுத்துக் குலுங்கும் மரங்களின் பக்கம் எல்லாம் தூக்கிக் கொண்டு போகச் செய்தான். ஒருவேளை சிந்துபாத் அந்தக் கிழவன் சொல்வதற்கு மறுப்புத் தெரிவித்தால் குதி கால்களால் மீண்டும், மீண்டும் சிந்துபாத்தை பலமாக உதைக்கத் தொடங்கிவிடுவான். இப்படியே அன்றைய தினம் போய்க் கொண்டு இருந்தது. சிந்துபாத்தின் முதுகை விட்டு அந்தக் கிழட்டுப் பிசாசு இறங்குவதாகத் தெரியவில்லை. பலத்தை விட புத்தியை

பிரயோகிக்க சித்தம் கொண்ட சிந்துபாத் அந்தக் காட்டில் ஆங்காங்கே விளைந்து இருந்த போதை மூலிகைகளை அடையாளம் கண்டு அதனை எடுத்து வைத்துக் கொண்டான். அதனைப் பார்த்த கிழவன் அதனை ஏதோ உண்ணும் பொருள் என்று நினைத்து தனக்கும் தருமாறு சிந்துபாத்திடம் கேட்டான். "ஆடு தானாக தலையை வெட்டக் கொடுக்கிறதே" என்று மனதிற்குள் கூறி சந்தோசம் அடைந்த சிந்துபாத் மிகப் பணிவுடன் அந்த போதை மூலிகைகளை அந்தக் கிழட்டுப் பிசாசிடம் கொடுத்தான். அதனை உண்ட அந்தக் கிழவன் அதன் சுவையை விரும்பி மேலும், மேலும் சிந்துபாத்திடம் அதனைக் கேட்டுக் கொண்டே இருக்க, சிந்துபாத்தும் மறுக்காமல் அந்த போதை மூலிகைகளை மேலும், மேலும் கண்டறிந்து பறித்துக் கொடுத்துக் கொண்டே இருந்தான். ஒரு கட்டத்தில் போதை தலைக்கு ஏறிய அந்தக் கிழவன் செயலற்று மயங்கி சிந்துபாத்தின் தோளில் சாய்ந்தான். அந்த சமயத்திற்காகத் தான் சிந்துபாத்தும் காத்துக் கொண்டு இருந்தான்.

தனது தோளில் மயங்கிய நிலையில் இருந்த அந்தக் கிழவனை தரையில் இறக்கிய சிந்துபாத். "இவன் போன்ற ஒருத்தனை உயிருடன் விட்டால் தான் பாவம். கொன்றால் அது பாவம் இல்லை" என்ற முடிவுக்கு வந்தவனாய். அருகில் இருந்த ஒரு மிகப் பெரிய பாறையை எடுத்து அந்தக் கிழவனின் தலையில் ஒரே போடாகப் போட்டான். அந்த இடத்திலேயே அந்தக் கிழவன் துடி, துடித்து இறந்தான். பிறகு சிந்துபாத் தனது கால் போன போக்கில் எங்கெங்கோ தன்னுடன் வந்தவர்களை தேடித் சென்றான். ஆனால் யாரையும் காணமால் வருந்தினான்.

இறுதியில் தீவின் மறுபுறத்தை அடைந்த சிந்துபாத் அங்கு ஒரு பிரம்மாண்டமான கப்பல் நிற்பதையும். அதில் இருந்து சிறு, சிறு படகுகளில் சிலர் அந்தத் தீவை நோக்கி வந்து கொண்டு இருப்பதையும் கண்டான். அவ்விடம் நோக்கி விரைந்தான். படகில் வந்தவர்களிடம் தனது இக்கட்டான நிலையை எடுத்துக் கூறி உதவி கேட்டு நின்றான். படகில் வந்த அனைவருமே அந்தத் தீவில் காணப்படும் அறிய வகை வாசனை திரவியங்களையும், எங்கும் காணக் கிடைக்காத மூலிகைகளையும் எடுக்க வந்ததை அறிந்து அவர்களது வேலை முடியும் வரையில் காத்திருந்து பிறகு அவர்களுடனேயே படகில் ஏறி தொலைவில் நின்று இருந்த அந்தப் பிரம்மாண்டக் கப்பலை அடைந்தான். அந்தப் பிரம்மாண்டக் கப்பலில் எறிய மாத்திரத்தில் கப்பல் தலைவன் சிந்துபாத்தை பற்றி விசாரித்த போது, சிந்துபாத் தன்னைப் பற்றியும் அத்துடன் அந்தத் தீவில் நடந்த நிகழ்ச்சிகளையும்

இறுதியில் முதியவர் ஒருவரிடம் சிக்கித் தான் பட்ட துன்பத்தையும் எடுத்துக் கூறி வருந்தினான்.

சிந்துபாத் சொன்னதைக் கேட்ட கப்பல் தலைவன் மறுமொழியாக," சிந்துபாத்! நீ வருத்தப் படாதே, உனது தோளில் ஏறிச் சவாரி செய்தவன் மிகவும் கொடியவன். அவனது பெயர் "ஷேக் அலி பஹர்". அவன் மிகவும் பொல்லாதவன்; முதலில் நடக்க முடியாதபடி நடித்து தன்னை தோளில் சுமந்து செல்லுமாறு கூறுவான். நாம் அதற்கு இசைந்து அவனை தூக்கிச் சென்றால், பிறகு இறங்க மறுத்து தனக்கு முதுகில் ஏற இடம் கொடுத்தவனையே அடித்துக் கொன்று விடுவான். நான் கண்டதில் நீ ஒருவன் தான் அவனிடம் இருந்து தப்பித்து வந்து உள்ளாய். சாமர்த்தியசாலி தான் நீ!" என்று பாராட்டினான். பிறகு சிந்துபாத்துக்கு உணவும், உடையும் அளிக்கப்பட்டது. அத்துடன் அந்தக் கப்பல் இறுதியில் ஒரு பட்டணத்தை அடைந்தது. அதற்கு மேல் கப்பல் செல்லாது என்று கூறிய கப்பல் தலைவன் சிந்துபாத்தை பத்திரமாக அந்தப் பட்டணத்தில் இறக்கி விட்டான். பிறகு தனக்குத் தெரிந்த ஒரு பெரியவரிடம் சிந்துபாத்தை அறிமுகம் செய்து வைத்தான். அந்தப் பெரியவருக்கு பிள்ளை இல்லாத காரணத்தால் சிந்துபாத்தை தனது மகனாகவே பார்த்தார். அவனிடம் அன்பாகப் பழகினார். அந்தப் பெரியவரின் பெயர் "முகம்மது ர ஃ பி". அவர் மூலமாகத் தான் சிந்துபாத் அந்தப் பட்டணத்தின் வரலாற்றை அறிந்து கொண்டான். அது குரங்குகள் நிறைந்த ஒரு பட்டணம் ஆகும். அடிக்கடி குரங்குகள் நகரத்தின் வீதிகளில் புகுந்து பயங்கரமாக அட்டகாசம் செய்யும். இருந்தாலும் அந்த பட்டணத்தில் உள்ள மக்கள் குரங்குகளை கொல்லாமல் கல் கொண்டு எறிந்தும், தப்பட்டைகளை முழங்கியும், வெடி பொருள்களை வெடிக்கச் செய்தும் விரட்டி அடிப்பார்கள். ஏனெனில் குரங்குகளை கொன்றால் இறந்த பிறகு நரகத்தில் தான் இடம் கிடைக்கும் என்று அப்பட்டணத்து மக்கள் வலுவாக நம்பினர். அந்தப் பட்டணம் பெரும்பாலும் காடுகள் நிறைந்த ஒரு பட்டணம் ஆகும். அந்த ஊர் மக்களுக்கு வாழ்வாதாரமே அந்தக் காடுகள் தான். இப்படியாக அனைத்து விஷயங்களையும் "முகம்மது ர ஃ பி" சிந்துபாத்திடம் கூறி முடித்தார். பிறகு அன்றைய இரவு அந்த நல்ல மனம் கொண்டப் பெரியவரின் இல்லத்திலேயே சிந்துபாத் படுத்து உறங்கினான்.

அடுத்த நாள் காலை விடிந்தது. பட்டணத்தில் இருந்த சிலர் காட்டுக்குள் தங்கள் தொழிலைப் பார்க்கச் சென்று கொண்டு இருந்தனர். அவர்கள் பெரியவர் முகம்மது ர ஃ பி இல்லத்திற்கு வந்து நின்று அவரையும்

உடன் அழைத்தனர். ஆனால், முகம்மது ர ஃ பி தனக்கு உடல் நிலை சரியில்லாத காரணத்தால் சிந்துபாத்தை அன்றைய தினம் வனத்திற்கு அழைத்துச் செல்லுமாறு வேண்டினார். மேலும் சிந்துபாத்தைப் பற்றி அவர்களிடம் நல்லவிதமாகக் கூறி பத்திரமாக அவனைப் பார்த்துக் கொள்ளுமாறும் வேண்டினார்.

பிறகு சிந்துபாத் அந்தப் பெரியவரிடம் விடை பெற்று வனத்திற்கு செல்லும் சமயம். அப்பெரியவர் சிந்துபாத்தை சற்றே நிற்கச் சொல்லி ஒரு பை நிறைய கூழாங் கற்களைக் கொடுத்து "இவை உங்களுக்குப் பெரிதும் பயன்படும்; அத்துடன் தக்க சமயத்தில் இவை உங்களுக்கு நல்ல வருமானத்தையும் கொண்டு வந்து தரும். இதன் மூலம் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு உங்கள் ஊருக்கு தாங்கள் செல்லலாம்" என்று கூறவும், பதில் ஏதும் பேசாமல் அவைகளை மிகுந்த மரியாதையுடன் பெற்றுக் கொண்டான் சிந்துபாத். பிறகு மீண்டும் அந்தப் பெரியவர் சிந்துபாத்திடம்," உங்களுடன் வருபவர்கள் அனைவரும் என்ன செய்கிறார்களோ அதைப் போலவே நீங்களும் வனத்தில் செய்ய வேண்டும்" என்று கூற அவர் கூறிய அனைத்தையும் சிந்துபாத் பவ்யமாக செவிமடுத்து அதன் படியே நடப்பதாக வாக்குறுதி அளித்து விட்டு அந்தப் பட்டணத்து மக்களுடன் வனத்திற்குச் சென்றான்.

சிந்துபாத்துடன் சென்ற பட்டணத்து நண்பர்கள் வனத்தில் இருந்த ஒரு வளமான பகுதியை அடைந்தார்கள். அங்கே பெரிய, பெரிய மரங்கள் காணப்பட்டன. அவற்றின் கிளைகள் மென்மையாகப் படர்ந்து காணப்பட்டது. அப்படிப் பட்ட உயர்ந்த மரத்தை சிந்துபாத் அப்போது தான் முதன் முறையாகப் பார்த்தான். அதில் யாராலும் அவ்வளவு சீக்கிரத்தில் ஏறிவிட முடியாது. அந்த மரத்தின் அடியில் தூங்கிக் கொண்டு இருந்த மனிதக் குரங்குகள் சிந்துபாத்தையும் அவருடைய நண்பர்களையும் கண்டதும் மரக்கிளைகளில் ஏறி, அமர்ந்து கொண்டன. சிந்துபாத்தின் நண்பர்கள் வேண்டும் என்றே அந்தக் குரங்குகள் மீது தங்களிடமுள்ள கற்களை எடுத்து அடிக்க ஆரம்பித்தனர். குரங்குகள் அடிபடவும் அந்த மரங்களில் உள்ள பழங்களை பறித்துப் பதிலுக்கு வீசி எறிந்தன. அப்படி வீசப்ப பட்ட பழங்கள் யாவும் கொக்கோ விதைகளை கொண்டு இருந்தது. ஆம்! அவை அனைத்தும் கொக்கோப் பழங்கள் ஆகும். சிந்துபாத்தும் தனது கைகளில் இருந்த கூழாங்கற்களை எடுத்து அந்தக் குரங்குகள் மீது வீசினான். அவன் மீதும் அந்தக் குரங்குகள் கொக்கோ பழங்களை வீசின. தன்னுடன் வந்தவர்களைப் போலவே

சிந்துபாத்தும் அந்தப் பழங்களை பொறுக்கிக் கொண்டான். அதன் பின்னர் சிந்துபாத் தனியே சென்று ஒரு பெரிய மரத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டான். அந்தக் குறிப்பிட்ட மரத்திலும் கூட நிறைய குரங்குகள் இருந்தன. அந்தக் குரங்குகளை குறிபார்த்த சிந்துபாத் தனது கையில் இருக்கும் கூழாங்கற்களை வீசி எறிந்தார். அதனைக் கண்ட அந்தக் குரங்குகளும் பழக்க  தோஷத்தில் மரத்தில் இருந்த கொக்கோ விதைகளை பதிலுக்கு வீசி எறிந்தன; சிந்துபாத் அவைகளை பத்திரமாக சேகரித்துக் கொண்டார்.

பிறகு வீடு திரும்பிய சிந்துபாத் தான் கண்டு எடுத்த அந்த விதைகளை தனக்கு அடைக்கலம் கொடுத்தப் பெரியவர் முகம்மது ர ஃ பி அவர்களிடம் கொண்டு வந்து கொடுத்தான். ஆனால், பெருந்தன்மையில் சிறந்து விளங்கிய அந்தப் பெரியவர் சிந்துபாத் கொண்டு வந்து கொடுத்த விதைகளில் ஒன்றைக் கூட வாங்க வில்லை. மாறாக அவற்றை சிந்துபாத்திடமே கொடுத்து விட்டார். அத்துடன் புன்னகை தவழ்ந்த முகத்துடன் சிந்துபாத்திடம்,'' சிந்துபாத் இவைகள் யாவும் தங்களுடையவை, இவை அனைத்தையும் விற்று தாங்களே பணத்தை எடுத்துக் கொள்ளுங்கள். மேலும், இந்த விதைகள் யாவும் அதிக அளவில் விலை போகக் கூடியவை. அதனால் இதைப் போலவே தினமும் தாங்கள் சென்று விதைகளை பொறுக்கிக் கொள்ளுங்கள். அதில் குறிப்பாக முதலில் மோசமானவற்றை தேர்ந்தெடுத்து அதனை விற்க முயலுங்கள். நல்ல விதைகளை சேர்த்து வைத்து நீங்கள் ஊர் போகும் சமயத்தில் உங்களுடன் கொண்டு செல்லுங்கள். அவை உங்களுக்கு நல்ல பணத்தை கொடுக்கக் கூடியதாக இருக்கும்'' என்று அறிவுரை கூறினார். அந்த நல்ல மனம் கொண்டவர் சொன்னது போலவே சிந்துபாத்தும் செயல்பட்டார்.

இவ்விதம் தனக்கு நல்வழி காட்டிய அந்த நல்ல மனம் படைத்தவருக்கு மீண்டும் நன்றி கூறியதோடு, நாள் தோறும் சென்று விதைகளை சேகரித்தார் சிந்துபாத். உயர்தரமான விதைகள் உள்ள மரங்களை சிந்துபாத்திற்கு காட்டும் படியாக ஒருவர் மாறி ஒருவரிடம் அந்த நல்ல மனிதர் ஆணையிட்ட வண்ணம் இருந்தார். இவ்விதம் அந்தப் பெரியவர் கூறவும் நல்ல எண்ணம் கொண்ட மற்றவர்களும் சிந்துபாத்துக்கு உதவி செய்து வந்தார்கள்.

ஒரு கட்டத்தில் சிந்துபாத்திடம் அதிக அளவில் விதைகள் சேர்ந்து விட்டன. அவை அனைத்துமே தரமானதாகத் தான் இருந்தது. இதனை

நல்ல விலைக்கு விற்று காசு பார்க்கலாம் என்ற எண்ணம் சிந்துபாத்திடம் வந்தது.

இப்படி இருக்க சிந்துபாத்தின் விதியும் அவனுக்கு உதவ முன்வந்தது. அதன் காரணமாக ஒரு நாள் கப்பல் ஒன்று அந்த ஊர் கடற்கரைக்கு வந்து சேர்ந்தது. அந்தக் கப்பலில் வர்த்தகர்கள் பலர் வந்து இறங்கினார்கள். தாங்கள் கொண்டு வந்த பொருட்கள் அனைத்தையும் விற்றார்கள். அத்துடன் சிந்துபாத்திடம் கூட அவன் வைத்திருந்த உயர்தரமான கொக்கோ விதைகள் சிலவற்றைப் பெற்றுக் கொண்டு அதற்கு ஈடாக பண்ட மாற்று மூலம் வேறு சில உயரிய பொருட்களை அவர்கள் கொடுத்தார்கள். அத்துடன் அவர்களுடன் நல்ல முறையில் சிந்துபாத் பழகியதால், சிந்துபாத்தை பாக்தாத் நகரத்தில் கொண்டு சென்று விட அவர்கள் உதவுவதாக வாக்களித்தனர். அதனைக் கேட்ட சிந்துபாத் அகம் மகிழ்ந்தான்.

பிறகு பாக்தாத் நகரம் செல்ல விரும்பிய சிந்துபாத் அது நாள் வரையில் தனக்கு அடைக்கலம் கொடுத்தப் பெரியவரிடம் நன்றி தெரிவித்து செல்ல முடிவு செய்தான். உடனே முகம்மது ர ஃ பி அவர்களை சந்தித்தான். அவரும் சிந்துபாத் கூறியதை கேட்டு சந்தோஷம் அடைந்தார். அத்துடன் நல்வார்த்தை சொல்லி சிந்துபாத்தை அனுப்பி வைத்தார்.

கப்பலில் சிந்துபாத்தின் அனைத்துப் பொருட்களும் ஏற்றப்பட்டன. கப்பலும் புறப்பட்டது. எண்ணற்ற தீவுகளையும், கடல்களையும் கடந்து கப்பல் சென்று கொண்டு இருந்தது. கப்பல் நிறுத்தப்பட்ட ஊர்களில் எல்லாம் கொக்கோ விதைகளை விற்று நல்ல லாபம் பார்த்தான் சிந்துபாத். இன்னும் சொல்லப் போனால் அவன் பொருள்களை இழந்ததற்கு மேலாகவே ஏதோ ஒரு வழியில் இறைவன் வழிகாட்ட கொக்கோ விதைகளின் மூலம் கணிசமான வருமானத்தை பார்த்தான். அத்துடன் சிந்துபாத் இறங்கிய ஒரு தீவில் கிராம்பு, இலவங்கம், மிளகு போன்றவை ஏராளமாக இருந்தன. அவைகள் அனைத்தையும் நல்ல முறையில் கொள்முதல் செய்து விற்றான். அதன் மூலமும் கணிசமான அளவு லாபத்தை அடைந்தான் சிந்துபாத். பிறகு அல்- உசிராத் என்னும் தீவை அடைந்த சிந்துபாத் அங்கு முத்து குளிக்கும் நபர்களிடம் கொக்கோ விதைகளை கொடுத்து தனக்காக நல்ல முத்துக்களை மூழ்கி எடுத்து வருமாறு வேண்ட. அவர்களும் உடனுக்குடன் நல்ல முத்துக்களை மூழ்கி சிந்துபாத்திற்காக கடலில் இருந்து எடுத்து வந்து

கொடுத்தனர். அதனை வாங்கிக் கொண்ட சிந்துபாத் தனது பயணத்தை தொடர்ந்தான். அப்பயணம் ஆண்டவன் அருளால் இனிதாக முடிந்தது. பாக்தாத்தை அடைந்த சிந்துபாத் தான் சம்பாத்தித் ஏராளாமான செல்வத்தை எடுத்து வந்து நல்ல முறையில் தான தருமங்கள் செய்தான். அத்துடன் இதற்குக் காரணமான தனது அன்பு நண்பர் அக்கீம் அவர்களையும் அழைத்து அவரையும் நல்ல முறையில் கவனித்து தனது பயண அனுபவத்தை பகிர்ந்து கொண்டான். இப்படியாக சிந்துபாத்தின் ஒவ்வொரு கடல் பயனும் ஒரு வகையில் அவனுக்கு கஷ்டத்தை அளித்தாலும் இறுதியில் அவனுக்கு நல்ல லாபத்தையும், சுகத்தையும் ஈட்டிக் கொடுத்தன. இப்படியாக சிந்துபாத் அந்த ஊரிலேயே வைத்து மிகப் பெரும் புள்ளியாக போற்றப்பட அந்தப் பயண அனுபவங்கள் முழு முதல் காரணமாக இருந்தது.

சிந்துபாத்தின் நான்காவது கப்பல் பயணம்

மூன்று கப்பல் பயணங்களை முடித்த சிந்துபாத் தனது கடைசி கப்பல் பயணத்தில் ஏராளமான பொருள்களை சேர்த்தான். அதன் விளைவு அவனது மனம் நான்காவது கப்பல் பயணத்தை மேற்கொள்ள ஆசை கொண்டது. அதனைத் தூண்டும் விதத்தில் சில வர்த்தகர்கள் வந்து சிந்துபாத்தை சந்தித்து ஆசை வார்த்தைகள் காட்டினர். ஆசை யாரைத் தான் விட்டது. சிந்துபாத்தும் அதற்கு விதி விலக்கா என்ன? எனவே தான் நான்காவது கப்பல் பயணத்திற்கான அனைத்து வியாபார சரக்குகளையும் வாங்கினான். அதனை துறைமுகத்திற்கு கொண்டு வந்து கப்பலில் ஏற்றினான். உடன் இதர வியாபாரிகளின் பொருள்களும் கப்பலில் ஏற்றப்பட்டது. அனைவரும் கப்பலில் ஏறிய சில கணங்களில் கப்பல் அத்துறைமுகத்தை விட்டுப் புறப்பட்டது.

அப்படியாக அங்கிருந்து புறப்பட்ட கப்பல் எண்ணற்ற தீவுகளை கடந்து சென்றது. ஒவ்வொரு தீவிலும் கப்பல் நங்கூரம் போட்டு நிறுத்தப்பட்டது. அவ்விடங்களில் எல்லாம் இறங்கி சிந்துபாத் உட்பட அனைத்து வர்த்தகர்களும் தங்களது பொருட்களை விற்று கணிசமான அளவு லாபம் சம்பாதித்தனர். இப்படியே பயணம் போய்க் கொண்டு இருந்த வேளையில். ஒரு நாள் அந்தக் கப்பல் "அல் அ ஃ பா" என்னும் தீவை அடைந்தது. அங்கு இறங்கிய வர்த்தகர்கள் அங்கு மனிதர்கள் யாரும் காணப்படாததால் சிறிது நேரம் அந்தத் தீவிலேயே ஓய்வு எடுக்க சித்தம் கொண்டனர்.

சிந்துபாத்தும் சற்று தொலைவில் அவனுக்கென்று ஒரு தனிமையான இடத்தை தேர்ந்தெடுத்து அங்கு ஓய்வு எடுக்கத் துவங்கினான். அப்படி ஓய்வு எடுத்தவன் சற்று நேரத்திற்கெல்லாம் களைப்பில் அப்படியே உறங்கியும் விட்டான். பல மணி நேரம் கழித்து கண் விழித்த சிந்துபாத்திற்கு அதிர்ச்சி காத்துக் கொண்டு இருந்தது. ஆம்! அவனுடன் வந்த வணிகர்கள் யாருமே அவ்விடத்தில் காணப்படவில்லை. அனைவரும் சிந்துபாத் ஏறிவிட்டதாக நினைத்து அந்தக் கப்பலில் ஏற்கனவே புறப்பட்டு விட்டனர். அதனை சிந்துபாத்தும் உடனுக்குடன் அனுமானித்துக் கொண்டு. செய்வதறியாது துடித்துப் போனான். அந்தத் தீவில் மக்கள் யாருமே இருப்பதாக அவனுக்குத் தெரியவில்லை. காரணம் அந்தத் தீவு அவ்வளவு நிஷப்தமாக இருந்தது. இன்னும் சொல்லப் போனால் அந்தத் தீவின் நிஷப்தம் சிந்துபாத்தை வெகுவாக பயமுறுத்தியது என்று தான் சொல்ல வேண்டும். இந்நிலையில் அந்த

தீவினுள் செல்ல முடிவு செய்தான் சிந்துபாத். ஒருவேளை அந்தத் தீவில் எங்கேனும் மனித நடமாட்டம் காணப்பட்டால் அவர்கள் தனக்கு உதவலாம் என்று சிந்துபாத் நினைத்தான். அதனால் தான் சிந்துபாத் அந்தத் தீவின் உள்ளே காலடி எடுத்து வைத்து வெகு தூரம் சென்றான்.

அந்தத் தீவு மிகவும் செழிப்பான தீவாக காணப்பட்டது. இயற்கையில் மட்டும் அல்ல, எல்லாவிதத்திலுள்ள தான். அவ்விடத்தில் இருந்த சுரங்கங்களில் வைரக் கற்கள் கொட்டிக் கிடப்பதை பார்த்தான் சிந்துபாத். அவை சர்வ சாதாரணமாக ஆள் நடமாட்டமே இல்லாத அந்த இடத்தில் கூழாங்கற்களை போல அதிக அளவில் சிந்தி சிதறிக் கிடந்தது. அவற்றை எல்லாம் பத்திரமாக எடுத்து வைத்துக் கொண்டான் சிந்துபாத். அவன் மனம் மகிழ்ந்தது. இந்த வைரத்தை எல்லாம் தன்னிடம் காட்டத் தான் இறைவன் தன்னை அந்தத் தீவுக்கு அழைத்து உள்ளதாக அவனது மனம் எண்ணியது. அத்துடன் அந்தத் தீவில் இருந்த மண்ணில் அதிக அளவில் தாதுப் பொருள்கள் இருப்பதைக் கண்டான் சிந்துபாத். அவை சூரிய ஒளியில் மின்னிக் கொண்டு இருந்தது.

அது மட்டும் அல்ல, அந்தத் தீவில் மரங்கள் ஏராளமாக வளர்ந்து செழிப்புடன் காணப்பட்டது. "அம்பர்" என்னும் வாசனைக் குழம்பு சூரிய வெப்பத்தால் உருகி, ஓடைகளில் ஓடி இறுதியில் கடலுக்குள் சென்றது. இவ்விதம் உருகி வந்த அம்பர் குழம்பு காய்ந்ததும் பெரிய பெரிய மீன்கள் அதனை விழுங்கவே அந்தக் குழம்பு வயிற்றுனுள் சென்று மீன்களுக்கு எரிச்சலை ஏற்படுத்தும்; எனவே எரிச்சல் தாங்காமல் மீன்கள் அவற்றை உமிழ்ந்து விடவும் கடற்கரை ஓரத்தில் மிதந்து வரும் கடல் அலைகள் அம்பரைக் கொண்டு வந்து கரை சேர்க்கும்.

இப்படியாக அம்பர் குழம்பானது வாய்க்கால் வழியாக ஓடுவதால் அதன் கரைகள் எல்லாம் கமகம என்று மணம் வீசும். மேலும் பல இடங்களில் கட்டிப்பட்டு நிற்கும். அத்துடன் சூரிய ஒளியில் மீண்டும் உருகி ஓடுவதும் உண்டு. இப்படியாக ஒரு இரு தினங்களில் சிந்துபாத் அந்தத் தீவின் வளமையை அறிந்து கொண்டான். பழங்கள் செறிந்த மரங்களைக் கொண்டதாக அந்தத் தீவு இருந்து வந்தது. சிந்துபாத்தின் பசியைத் தீர்க்க அந்தத் தீவில் இருக்கும் பழங்களே அவனுக்குப் போதுமானதாக இருந்தது. அத்துடன், அத்தீவில் அங்கு காணப்பட்ட இன்னொரு ஓடையின் கரைகளில் மேலும் பல இடங்களில் நவ ரத்தினங்களை கண்டு எடுத்தான் சிந்துபாத். அவற்றையும் பத்திரமாக மூட்டையாகக் கட்டிக் கொண்டான்.

ஒரு நாள் சிந்துபாத்தின் மனதில்," இப்படியே இந்தத் தீவில் நாம் நேரத்தை கடத்திக் கொண்டு இருந்தால் அது சரியாக இருக்காது. இந்தத் தீவில் இருந்து தப்பிச் செல்ல நாம் தான் ஏதேனும் ஒன்றை செய்து ஆக வேண்டும்" என்று தோன்றியது. உடனே சிந்துபாத்தின் மூளை மிகவும் வேகமாக செயல்பட்டது. அதன் படி அந்த ஓடை ஏதாவது ஒரு இடத்தில் சென்று முடியும் அல்லவா? எனில் அந்த ஓடை வழியாகவே ஒரு ஓடத்தை செய்து கொண்டு சென்றால் என்ன என்ற எண்ணம் அவனது மனதினில் எழுந்தது. உடனே சிந்துபாத் அங்கு கிடைத்த சில பொருள்களைக் கொண்டு ஒரு, இரு தினத்தில் ஒரு வலுவான ஓடத்தை தயார் செய்து கொண்டான். அது மட்டும் அல்ல, அந்த ஓடம் அந்தத் தண்ணீரின் வேகத்தை தாங்கும் படியாக இருந்தது குறிப்பிடத்தக்கது. பிறகு அந்த ஓடத்தின் உறுதி நிலையை உணர்ந்து கொண்டு இறைவனையும் மனதினில் நினைத்துக் கொண்டு சிந்துபாத் அதன் மீது ஏறி அமர்ந்தான். அந்த ஓடத்தில் தண்ணீரின் வேகம் மிகக் கடுமையாக இருந்தது. இன்னும் சொல்லப் போனால் தண்ணீர் செல்கின்ற திசையில் அந்த ஓடம் அடித்துச் செல்லப் பட்டது. எனினும் சிந்துபாத் இதுவரையில் தனக்கு உதவிய இறைவன் இனியும் உதவுவான் என்ற நம்பிக்கையில் துணிந்து சென்று கொண்டு இருந்தான். துணிந்து சென்ற சிந்துபாத்தை அந்த ஓடம் ஒரு மலைக்கு அடியில் ஓரிடத்தில் உள்ள பெரிய குகை வழியாகச் சென்று கடைசியில் ஒரு சுரங்கத்தில் கொண்டு சென்று சேர்த்தது. அந்த சுரங்கத்தை கடந்து செல்ல வேண்டுமானால் அந்த ஓடத்தில் படுத்துத் தான் செல்ல வேண்டும். வேறு வழியே இல்லை. எனினும் அந்த ஓடம் ஒல்லியான உடல் அமைப்பைக் கொண்ட சிந்துபாத் படுக்கும் அளவிற்குப் போதுமானதாக இருந்தது. எனவே சிந்துபாத் அந்த குகைக்குள் ஆமை போல அந்த ஓடத்தில் தனது உடலை சுருக்கி படுத்துக் கொண்ட படி சென்றான். உள்ளே இருள் நிறைந்து காணப்பட்டது. தன்னை அந்தக் குகை எங்கு கொண்டு செல்லப் போகிறது என்பது சிந்துபாத்திற்கே தெரியாது. எனினும் கூட சிந்துபாத் இறைவனின் மீது தான் கொண்ட நம்பிக்கையால் துணிந்து சென்றான். சிந்துபாத்தை அந்த ஓடம் சுரங்கத்தின் மறு பக்கம் கொண்டு சென்று பத்திரமாக விட்டது. கண்களை மூடி அதிர்ச்சியில் உறைந்து இருந்து சிந்துபாத் எல்லாமே இறைவனின் சித்தப்படியே நடக்கட்டும் என்ற எண்ணத்தில் அப்படியே தூங்கியும் விட்டான். சிந்துபாத் கண்களைத் திறந்து பார்த்த சமயத்தில் ஒரு தீவில் சென்று ஒரு மரத்தில் இடித்த வண்ணம் ஓடம் நின்று கொண்டு இருந்தது. அதுவும் தீவின் மறுபக்கம் தான். ஆனால் அங்கு மக்கள் நடமாட்டம் அதிகமாக இருந்தது. அங்கு அபிசீனியர்கள், ஆப்ரிக்க மக்கள், இந்தியர்கள் என

அனைவரும் கூடிக் குழுமி இருந்தனர். சிந்துபாத்திடம் அவர்கள் எதை எதையோ கேட்டனர். ஆனால், சிந்துபாத்துக்குத் தான் அவர்கள் பேசிய மொழி ஒன்றுமே புரியவில்லை.

அவர்கள் பேசியது எதையுமே புரிந்து கொள்ள முடியாத நிலையில் விழித்துக் கொண்டு இருந்த சமயத்தில் அவர்களில் அரபு மொழி தெரிந்த ஒருவன் சிந்துபாத்திடம்," சகோதரனே! இந்த ஆற்றிற்கு எப்படி வந்தாய்? மேலும் இந்த மலைக்கு அப்பால் இருந்து இதுவரையில் யாருமே இந்தப் பக்கம் வந்தது இல்லை. நீ வந்தது எங்களுக்கு உண்மையில் ஆச்சர்யத்தை தான் அளிக்கிறது" என்று கூறவும், சிந்துபாத் நிதானமாக தன்னைப் பற்றி அவர்களிடம் கூறி முடித்தான். சிந்துபாத்தின் கதையை கேட்ட அங்கிருந்த அனைவரும் அவனுக்காகப் பரிதாபப்பட்டனர். மீண்டும் சிந்துபாத் அவர்களிடம்," நீங்கள் அனைவரும் யார்? இங்கு என்ன வேலை செய்து கொண்டு இருக்கின்றீர்கள்?" என்று கேட்டான். அதனைக் கேட்ட அவர்கள் சிந்துபாத்திடம் மறுமொழியாக," நாங்கள் அனைவரும் விவசாயிகள். எங்களது வயல்களுக்கும், தோட்டங்களுக்கும் இந்த ஓடைத் தண்ணீரைப் பாய்சசுவதற்காக இங்கு வந்தோம்" என்று கூறினார்கள்.

அத்துடன் அவர்கள் சிந்துபாத்தின் பசியையும் போக்கினார்கள். அதனால் சிந்துபாத் தெம்படைந்தான். பின்னர் பக்கத்தில் இருந்த ஒரு மரத்தின் நிழலுக்கு சிந்திப்பாத்தை அழைத்துச் சென்றார்கள். அங்கு சிறிது நேரம் சிந்துபாத் நன்றாக ஓய்வு எடுத்தான். பின்னர் சிந்துபாத் அவ்விடத்திற்கு வந்து இருப்பதை தங்கள் மன்னரிடம் தெரிவிக்க சிந்துபாத்தை அழைத்துக் கொண்டு அரண்மனையை அடைந்தார்கள் விவசாயிகள். அவ்விடத்தை ஆண்ட அரசரின் பெயர் "சரண் தீப்" அவர் ஒரு சிற்றரசர். எல்லோரிடமும் நல்ல படியாகப் பழகும் இயல்பு உடையவர். யாரையும் வெறுக்காதவர். யார் வேண்டுமானாலும் அவரை எளிதில் பார்த்து விடலாம். அவ்வளவு எளிமை வாய்ந்தவர்.

இந்நிலையில் மன்னர் "சரண் தீப்" ஏற்கனவே தான் பார்த்து மகிழ்ந்த விவசாயிகளுடன் புதிதாக வந்து இருந்த நபரைக் கண்டு விசாரித்தார். அவர்களும் சிந்துபாத் பற்றிய அனைத்து விஷயங்களையும் மன்னரிடம் கூறினர். சிந்துபாத்தும் தனது பயண அனுபவங்கள் அனைத்தையும் மன்னரிடம் தெரிவிக்க. அதனை அரபு மொழி தெரிந்தவர்கள், அப்படியே மன்னரிடம் மொழி பெயர்த்தனர். மன்னர் "சரண் தீப்" அதனைக் கேட்டு வியந்தார். எனினும் சிந்துபாத் கூறியதை மன்னரால்

நம்பவும் முடியவில்லை, நம்பாமல் இருக்கவும் முடியவில்லை. ஏனெனில் சிந்துபாத் சொன்ன அனைத்திற்கும் அவன் கொண்டு வந்த ரத்தினக் கற்களும், அவன் பயணித்த ஓடமுமே சாட்சி. அதனையும் விவசாயிகள் மன்னரிடம் கொண்டு சென்று காண்பித்தார்கள். அதனைக் கண்டு சிந்துபாத்தின் துணிகரச் செயலை பாராட்டினார் மன்னர்.

மறுபுறம் சிந்துபாத் தம்முடன் கொண்டு வந்த ஆபரணக் கற்கள், அம்பர் போன்ற மணமிகு பொருட்கள் போன்றவைகளை மன்னருக்குப் பரிசாகக் கொடுக்கவும் மன்னர் அவைகளை ஏற்றுக் கொண்டு சிந்துபாத்துக்கு தம்முடைய பாராட்டுகளை தெரிவித்து மகிழ்ந்தார். அத்துடன் சிந்துபாத்திற்கு நல்ல தங்கும் இட வசதி, உணவுக்கு வேண்டிய ஏற்பாடுகள் இவை அனைத்தையும் நல்ல முறையில் செய்து கொடுத்துத் தினமும் அவரை அரண்மனைக்கு வந்து போக வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். மன்னர் தம்மை மதித்து இப்படிக் கூறியதால் சிந்துபாத் தினமும் மாலை வேளையில் மன்னரின் ஓய்வு நேரத்தில் அவரைக் காணச் சென்று வந்தார். அத்துடன் மன்னருக்கு அரபு மொழியையும் கற்றுக் கொடுத்தார்.

இதர நேரத்தில் அரசரால் தனக்குக் கொடுக்கப்பட்ட வீட்டில் உணவுண்டும், உறங்கியும் சிந்துபாத் நேரத்தை பாழாக்க விரும்பாமல், தான் பார்த்து மகிழ வேண்டிய இடங்களை எல்லாம் பார்த்து வருவதற்கு சென்று விடுவார். அந்தத் தீவு முழுவதும் மலைகளும், பள்ளத்தாக்குகளும் நிறைந்து காணப்பட்டன. அந்தத் தீவில் இருந்து மூன்று மைல் தொலைவில் உள்ள மலைகளில் பலவிதமான மாணிக்கக் கற்களும், தாதுப் பொருட்களும் காணக் கிடைத்தன. அத்துடன் ஆபரணக் கற்கள் அந்த மலையில் இருந்து வெட்டி எடுக்கப்பட்டு நவீன வடிவில் செய்யப்பட்டன. மனதிற்கு மகிழ்ச்சி தரும் அந்த மலைகளில் ஏறிச் செல்வதும் மாலை வேளையில் மன்னரைச் சென்று பார்ப்பதுமாக சிந்துபாத் அங்கு வாழ்ந்து வந்தார். சரண் தீப் மன்னர் சிந்துபாத்தின் நல்ல ஒழுக்கத்தாலும் கூர்மையான அறிவாலும் மிகவும் கவரப்பட்டார்.

ஒரு நாள் மன்னர், சிந்துபாத்தின் நாட்டு அரசாங்கம் பற்றியும் மன்னர் கலீபாவின் ஆட்சியின் சிறப்பு பற்றியும் கேட்டு அறிந்து மகிழ்ந்தார். அதன் பின்னர் சிந்துபாத் ஊர் செல்லும் சமயத்தில் பாக்தாத் மன்னருக்குத் தாம் பரிசுகளைத் தந்து அனுப்புவதாகவும், அவைகளைத் தம்முடைய சார்பாகக் கொடுக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்.

இப்படியாக மன்னர் சரண் தீப்பின் விருந்தாளியாகவும் நண்பராகவும் நீண்ட நாள் தங்கி இருந்த சிந்துபாத், ஒரு நாள் வர்த்தகர்கள் சிலர் பாக்தாத்திற்குப் புறப்பட ஆயத்தமானதைக் கேள்வியுற்றுத் தாமும் போக விரும்புவதாக மன்னரிடம் கூறவும். அதனை ஏற்றுக் கொண்ட மன்னர் பழைய நண்பனை பிரிய மனம் இல்லாமல் இருந்தாலும், சிந்துபாத்தின் வேண்டுகோளை ஏற்று அவன் பாக்தாத் புறப்பட சம்மதம் தெரிவித்தார்.

பின்னர் மன்னர் பாக்தாத் செல்ல இருக்கும் வர்த்தகர்களை வர வழைத்து சிந்துபாத்திற்கு உரிய கட்டணத்தையும் அவரே கொடுத்து சிந்துபாத்தையும், அவனது பொருட்களையும் பத்திரமாகக் கொண்டு சென்று சேர்க்க வேண்டும் என்று கூறினார். அது மட்டும் அல்லாமல் சிந்துபாத் புறப்படும் சமயத்தில் அவனுக்கு நிறைய பரிசுப் பொருட்களை கொடுத்து மகிழ்ந்ததோடு, மன்னர் கலீபாவுக்குத் தாம் சிந்துபாத் மூலம் கொடுத்தனுப்பும் பரிசுப் பொருட்களையும் கவனமாகக் கொண்டு சேர்க்க வேண்டும் என்று கப்பல் தலைவரிடமும், வணிகர்களிடமும் கட்டளை பிறப்பித்தார்.  அதன் படியே கப்பல் தலைவன் சிந்துபாத்தையும் அவன் பொருள்களையும் கண் மணி போல பாதுகாப்பதாக ஒப்புக் கொண்டு புறப்பட்டான்.

அதே போல சிந்துபாத்தும் அனைவரிடமும் விடை பெற்று, மன்னர் பெருமானை ஆறத் தழுவி பிரிய மனம் இல்லாவிட்டாலும், கடமைகள் தன்னை அழைப்பதால் வேறு வழி இன்றி பாக்தாத் நகரம் நோக்கிய தனது கப்பல் பயணத்தை மேற்கொண்டான். கப்பல் பயணம் எந்த விதமான பிரச்சனையும் இன்றி இனிதாக நடந்தது. இறுதியில் கப்பல் பாக்தாத் நகரத்தை அடைந்தது. தனது பொருள்களுடன் வந்து இறங்கிய சிந்துபாத் தனது இல்லத்தை அடைந்து ஓய்வு எடுத்த பின்னர் கலீபா அவர்களை சந்தித்து மன்னர் சரண் தீப் தன்னிடம் கொடுத்த பரிசுகள் அனைத்தையும் அவரிடம் கொடுத்து மகிழ்வித்தான். அதனைப் பார்த்த மன்னர் சிந்துபாத்தை வெகுவாகப் பாராட்டினார். அத்துடன் சிந்துபாத்திற்கு பதில் மரியாதையையும் செய்தார். அன்றில் இருந்து அந்த ஊரிலேயே சிந்துபாத் பெரிதும் மதிக்கப்பட்டான். அவனுக்கு பாக்தாத்தின் மன்னரின் ஆதரவும் கிடைத்தது. மேலும், முன்பு சிந்துபாத் தவற விட்ட வணிகப் பொருள்களும் தெய்வாதீனமாக சிந்துபாத்திடமே வந்து சேர்ந்தது. அது எப்படி எனில், சிந்துபாத் உயிருடன் இருப்பதை அறிந்த வணிகர்கள் அவனிடம் தாமாகவே வந்து நியாயப்படி அவனுக்கு சேர வேண்டிய பொருள்களை ஒப்படைத்தனர்.  இப்படியாக சிந்துபாத்

பெரும் செல்வத்தைக் கொண்டு காணப்பட்டான். வழக்கம் போல வெள்ளிக் கிழமைகளில் ஏழை எளிய மக்களுக்கு விருந்து அளித்து மகிழ்ந்தான். இப்படியாக சிந்துபாத்தின் நான்காவது கப்பல் பயணமும் இனிதே முடிந்தது.

# சிந்துபாத்தின் ஐந்தாவது கப்பல் பயணம்

தனது நான்கு பயணங்களின் மூலமாக பெரும் சொத்துக்களை சேர்த்தான் சிந்துபாத். பயணங்களில் அவனுக்கு நேர்ந்த பல விதமான அனுபவங்கள் அவனை சிறந்த கடலோட்டியாகவும் மாற்றி இருந்தது. அத்துடன் மீண்டும் கடல் பயணம் செல்ல வேண்டும் என்ற ஆசை அவனது மனதினில் எழுந்தது. அதனால் சிந்துபாத் தனது அடுத்த கடல் பயணத்திற்கு ஆயத்தம் ஆனான். ஏராளமான வணிகப் பொருள்களை வாங்கி வழக்கம் போல கடலில் ஏற்றினான். உடன் எண்ணற்ற வியாபாரிகள் தங்கள் பொருள்களுடன் அந்தக் கப்பலில் முன்னதாகவே ஏறி இருந்தனர். சிந்துபாத்தை பார்த்த அந்த வணிகர்கள் அவனைப் போற்றிப் புகழ்ந்தனர். எனினும் சிந்துபாத் அவர்கள் மத்தியில் தன்னடக்கத்துடன் தான் காணப்பட்டான்.

சிந்துபாத்தின் கப்பல் புறப்பட்டது எண்ணற்ற தீவுகளை கடந்து கப்பல் பயணித்தது. நல்ல முறையில் வணிகமும் நடைபெற்றது. சிந்துபாத் மட்டும் அல்ல அவனுடன் வந்த ஏராளாமான வணிகர்களும் நல்ல லாபத்தை அடைந்தனர். வணிகர்கள் அனைவருக்கும் சுகமான காற்று நல்ல உற்சாகத்தை தந்தது. "மதினத் அல்ஸின்" என்ற இடத்தை கடந்து கொண்டு இருந்தனர் வியாபாரிகள். அதுவரையிலும் மிகவும் அமைதியாகச் சென்று கொண்டு இருந்த கப்பல் பயணம் பின்னர் அச்சம் தரும் விதமாக மாறியது. திடீர் என்று கப்பல் தலைவன் சத்தம் போடத் துவங்கினான்.

"கப்பலை வேகமாகத் திருப்புங்கள், விரைவாக செலுத்துங்கள். நம்மை நோக்கிக் கொள்ளையர்களின் கப்பல் விரைந்து வந்து கொண்டு இருக்கிறது. அவர்கள் நம்மை பிடித்தால் உயிருடன் விட மாட்டார்கள். நமது பொருள்களையும் அபகரித்து விடுவார்கள்" என்று தொடர்ந்து கப்பல் தலைவன் சத்தம் போட. கப்பல் தலைவன் சொன்னதைக் கேட்ட வியாபாரிகள் திடுக்கிட்டனர். செய்வது அறியாது திகைத்தனர்.

மறுபுறம் கொள்ளைக்காரர்களின் கப்பல் சிந்துபாத்தின் கப்பலை நோக்கி விரைந்து வந்து கொண்டு இருந்தது. ஒரு கட்டத்தில் சிந்துபாத்தின் கப்பல் கொள்ளையர்களின் கப்பலால் சிறைபிடிக்கப் பட்டது. உடனுக்குடன் கொள்ளையர்கள் சிலர் தங்களது கப்பலில் இருந்தபடி சிந்துபாத்தின் கப்பலுக்கு தாவினர். சிந்துபாத்

போர்க்கலையில் சிறந்தவன் தான் இருந்தாலுமே கூட கொள்ளையர்களுடன் அவன் போர் செய்ய விரும்பவில்லை. காரணம் ஒரு வேலை சிந்துபாத் கொள்ளையர்களுடன் போரிட்டால் அதனால் உடன் இருக்கும் வர்த்தகர்களுக்கு ஏதேனும் கேடு வந்து விடுமோ என்று அவன் நினைத்தது தான். இதனால் மற்ற வர்த்தகர்களுடன் சேர்ந்து சிந்துபாத்தும் கொள்ளையர்களால் கைது செய்யப்பட்டான். கப்பல் தலைவனை மிரட்டி கப்பலை சிறைபிடித்து தங்களது தீவிற்கு கொண்டு சென்றனர் கொள்ளையர்கள்.

தங்களிடம் இவ்வாறு பிடிபட்ட வர்த்தகர்களை மாட்டை அடைப்பதை போல ஓர் இடத்தில் அடைத்தார்கள். அங்கு ஏற்கனவே பலர் சிறைப்பட்டு இருந்தனர். இரவு நேரம் இருட்டத் தொடங்கியது. சிந்துபாத் அங்கு ஏற்கனவே சிறைவைக்கப்பட்டு இருக்கும் மற்ற கைதிகளுடன் பேச்சுக் கொடுக்கத் தொடங்கினான். அவர்கள் மூலமாக எண்ணற்ற விஷயங்களை அறிந்து கொண்டான்.

உண்மையில் அந்தக் கொள்ளைக்காரர்கள் தலைவனின் பெயர் "ஜாஃபர் கான்". அவன் மிகவும் கொடூரன். குறிப்பாக பெண்களைக் கண்டால் விட மாட்டான். நல்லவேளையாக சிந்துபாத்துடன் வந்த அனைத்து வர்த்தகர்களுமே ஆண்கள் தான். அதனை நினைத்து சிந்துபாத் ஆறுதல் அடைந்து கொண்டான். மேலும் அந்தக் கொள்ளைக்காரத் தலைவனைப் பற்றி ஏற்கனவே சிறைபட்டு இருந்தவர்களிடம் மெல்ல விசாரிக்கத் தொடங்கினான்.

கொள்ளைக்காரன் ஜாஃபர் கானை பிடிக்க துருக்கி நாட்டு அரசர் ஷா ஆலம் எண்ணற்ற முறை தனது படைகளை அனுப்பி இருக்கிறார். ஆனால் ஜாஃபர் கானுக்கு அந்தத் தீவின் அனைத்து பகுதிகளும், அனைத்துப் பாதைகளும் அத்துப்பிடி அதனால் எளிதில் ஷா ஆலமீன் படைகளை முறியடித்து வந்து உள்ளான். அத்துடன் அடிக்கடி தனது இடத்தை மாற்றிக் கொள்வான். இப்படியாக அந்தக் கொள்ளைக்காரனைப் பற்றிய அனைத்து விஷயங்களையும் சிந்துபாத் அறிந்து கொண்டான்.

அன்றைய இரவு இப்படியாகக் கழிந்தது. அடுத்த நாள் காலை விடிந்தும், விடியாததுமாக ஜாஃபர் கானின் ஆட்கள் அனைத்து கைதிகளையும் அடித்து, உதைத்து எழுப்பினர். சிந்துபாத்துக்கும் சில அடிகள் பரிசாகக் கிடைத்தது. அனைவரும் உடனுக்குடன் குளித்து தங்களது கடமைகள்

அனைத்தையும் முடித்தனர். உடனே கொள்ளைக்காரர்கள் தங்களிடம் பிடிபட்ட கைதிகளை இழுத்துச் சென்று தோட்டத்திலும், வயல் வெளிகளிலும் கொடுமையாக வேலை வாங்கினர். வயோதிகர்கள் என்று கூட பார்க்காமல் சிலரை கொள்ளையர்கள் அடித்துத் துன்புறுத்தினர். பெரிய, பெரிய மரங்களை சுமந்து செல்ல கட்டளை பிறப்பித்தனர். தூக்க முடியாமல் திணறுபவர்களை சவுக்கால் அடித்துத் துன்புறுத்தி மகிழந்தனர். சிந்துபாத்துக்கும் கடுமையான வேலைகள் பல காத்துக் கொண்டு இருந்தது. வேறு வழி இல்லாமல் அவற்றை பொறுமையுடன் செய்து முடித்தான் சிந்துபாத். பிற்பாடு இரவு நேரம் வந்ததும் மீண்டும் அனைவரும் கொண்டு செல்லப்பட்டு மாடுகளை போல முன்பு இருந்த இடத்தில் அடைக்கப்பட்டனர். இதே போல தினமும் நடந்து கொண்டு இருந்தது. சரியான நேரம் வரும் வரையில் காத்துக் கொண்டு இருந்தான் சிந்துபாத். அத்துடன் அந்தக் கொள்ளையர்களின் அனைத்து செயல்களையும் நன்கு மனதினில் பதிய வைத்துக் கொண்டான் சிந்துபாத். கொள்ளையர்களின் பலம் பலவீனம் என அனைத்தையுமே சிந்துபாத் அறிந்து கொண்டான்.

இந்நிலையில் ஜா ஃ பர் கான் "தையபா" என்னும் அழகு நங்கையை பிடித்து வைத்து இருந்தான். அவள் மீது கொண்ட ஆசையால் ஆரம்பத்தில் அவளை நல்ல முறையில் தான் நடத்தினான். எனினும் "தையபாவிற்கு" ஜா ஃ பர் கானை கண்டாலே பிடிக்காது. அவனிடம் இருந்து விலகி விலகி சென்றாள். கோபம் அடைந்த ஜா ஃ பர் கான் ஒரு நாள் அவளை துன்புறுத்தி வலுக்கட்டாயமாக அடைந்து விட்டான். தனது வாழ்க்கை பறிபோனதை நினைத்து அழுது துடித்தாள் தையபா. ஜா ஃ பர் கானை எப்படியாவது பழி வாங்க வேண்டும் என்று அவளது மனம் துடித்தது. அவளும் சரியான வாய்ப்பிற்காக காத்துக் கொண்டு இருந்தாள்.

இந்நிலையில் ஒரு நாள் வழக்கம் போல கைதிகள் அனைவரும் வேலைக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். அப்போது உடன் சென்ற கொள்ளையர்கள் உடல் நிலை சரியில்லாத நிலையில் இருந்த ஒரு பெரியவரை அடித்து உதைத்தனர். வீணாகத் துன்புறுத்தி நகைத்தனர். பொறுக்கமுடியாத சிந்துபாத் அதனை தட்டிக் கேட்டான். பேச்சுவார்த்தையில் தொடங்கிய சண்டை கை கலப்பில் முடிந்தது. கொள்ளையர்கள் அனைவரும் சேர்ந்து கொண்டு வஞ்சகமான முறையில் சிந்துபாத்தை தாக்கினர். இறுதியில் சிந்துபாத் கைது செய்யப்பட்டான். ஒரு தனி சிறையில் அவனைக் கொண்டு சென்று

அடைத்தனர் அக் கொள்ளையர்கள். இந்த விஷயத்தை கேள்விப்பட்டு மகிழ்ச்சி அடைந்தாள் தையபா. காரணம் அது நாள் வரையில் கொள்ளையர்களை எதிர்க்கும் அளவுக்கு அங்கு எந்த ஆணும் துணிந்ததில்லை. ஆனால் இன்று ஒருவன் துணிந்து இருக்கிறான் என்றால் சும்மாவா? அது தான் தையபாவின் மகிழ்ச்சிக்கு முக்கியக் காரணம். ஜா ஃ பர் கானை அழிக்க சிந்துபாத் தான் சரியான ஆள் என்ற முடிவுக்கு வந்தாள் அவள். அதனால் எப்படியாவது சிந்துபாத்தை தப்பிக்க வைக்க வேண்டும் என்று நினைத்தாள்.

அன்றைய தினம் தன்னை அணுகிய ஜா ஃ பர் கானிடம் அன்பாக நடந்து கொண்டாள் தையபா. தையபா பயத்தில் மனம் மாறிவிட்டாள் போல என்று நினைத்துக் கொண்டான் ஜா ஃ பர் கான். அப்போது மிக நைசாக பேசி சிந்துபாத் அடைக்கப்பட்டு இருக்கும் இடத்தை அறிந்து கொண்டாள். அத்துடன் அந்தச் சிறையின் சாவியையும் ஜா ஃ பர் கான் அசந்து இருக்கும் நேரத்தில் அவனிடம் இருந்து எடுத்துக் கொண்டாள். மது வகைகளை தனது கைகளால் அவன் போதும் போதும் என்று சொல்ல அதிகதிகமாக பருகச் செய்தாள். அதனால் ஜா ஃ பர் கான் மதுவில் மயங்கி விழுந்தான். அப்போது நள்ளிரவு வேளை சிந்துபாத் இருக்கும் இடத்தை பதுங்கிப் பதுங்கி சென்று அடைந்தாள் தையபா.

"நமது தலைவரை மீறி யாரால் இந்தத் தீவுக்குள் அவ்வளவு எளிதாக வர முடியும்?" என்ற நம்பிக்கையில் அலட்சியமாக தூங்கினர் சிறைக் காவலர்கள். இப்படியாக சூழ்நிலை அனைத்துமே தையபாவிற்கு சாதகமாக இருக்க மெல்லச் சென்று சிறைக் கதவை திறந்து சிந்துபாத்தை விடுவித்தாள் தையபா. தனக்கு உதவி செய்த தையபாவை பற்றி அனைத்து விஷயங்களையும் அறிந்து கொண்டான் சிந்துபாத். அவளையும் தன்னுடன் வருமாறு கேட்டுக் கொண்டான். அவளும் அதற்கு சம்மதித்தாள். இருவரும் அவ்விடத்தை விட்டு தப்பிச் சென்றனர்.

அடுத்த நாள் காலை தையபாவை தேடினான் ஜா ஃ பர் கான். அவள் காணப்படாததால் அதிர்ந்தான். இந்த சமயத்தில் கொள்ளைக் கூட்டத்தில் இருந்த ஒருத்தன் ஓடி வந்து ஜா ஃ பர் கானிடம் மீண்டும் துருக்கி மன்னன் ஷா ஆலம் படைகளை அனுப்பி இருப்பதை ஒற்றர்கள் மூலமாக அறிந்து கூறினான். இந்நிலையில் இன்னொரு அதிர்ச்சியும் ஜா ஃ பர் கானுக்கு அன்றைய தினம் வந்து சேர்ந்தது. அது தான் சிந்துபாத் தப்பித்த தகவல். அதனைக் கேட்டு ஜா ஃ பர் கானின் கண்கள் சிவந்தது. சிந்துபாத்தை பாதுகாக்கத் தவறிய தனது ஆட்களையே

அவன் கொன்று தீர்த்தான். உடனே சிந்துபாத்தையும், தையபாவையும் தேடி இழுத்துவருமாறு தனது ஆட்களை ஜா ஃ பர் கான் பணித்தான். அதன் படியே அவனது ஆட்கள் அனைவரும் அவ்விருவரையும் தேடி தீவுக்குள் பல திசைகளில் சென்றனர்.

இதனைப் பற்றி ஏற்கனவே முன்குறித்து அறிந்திருந்த சிந்துபாத் ஜா ஃ பர் கானின் ஆட்களை கொல்ல ஆங்காங்கே பலதரப்பட்ட மரணப் பொறிகளை ஏற்பாடு செய்து வைத்து இருந்தான். அதற்கு அவனுடன் இருந்த தையபாவும் உதவினாள்.

ஆனால் அதில் வெகு சிலரே சிக்கிக் கொண்டு இறந்தனர். பெரும்பான்மையான கொள்ளையர்கள் பல குழுக்களாகப் பிரிந்து சிந்துபாத்தையும், தையபாவையும் தேடிக் கொண்டு இருந்தனர். சிந்துபாத்தும் எவ்வளவு நேரம் தான் ஓடிக் கொண்டே இருப்பான். ஒரு கட்டத்தில் கொள்ளையர்களின் ஒரு குழுவினரிடம் சிந்துபாத்தும், தையபாவும் சிக்கிக் கொண்டனர். எனினும் சிந்துபாத் தீரத்துடன் போரிட்டான். அனைத்துக் கொள்ளையர்களையும் கொன்று குவித்தான். இனியும் அந்தத் தீவில் இருப்பது ஆபத்து என்று முடிவு செய்த சிந்துபாத் படகு ஏதேனும் வராதா என்ற எண்ணத்தில் கடற்கரையை நோக்கித் தையபாவுடன் ஓடினான்.

அந்த சமயத்தில் துருக்கி அரசர் ஷா ஆலமின் படைகள் பலதரப்பட்ட படகுகளில் வந்து வேக வேகமாக அந்தத் தீவின் கரைகளில் இறங்கியது. சிந்துபாத் அவர்களின் கண்களில் பட அவனும் கொள்ளைக் கூட்டத்தை சேர்ந்தவன் தான் போல, என்று நினைத்து அம்புகளால் அவனைத் தாக்கத் தொடங்கினர். ஆனால், உடன் ஒரு பெண் இருப்பதை கண்ட தளபதி தாக்குதலை உடனுக்குடன் நிறுத்தினான். சிந்துபாத்தும் தான் எண்ணற்ற படைவீரர்களால் சூழப்பட்டதால் வேறு வழி இன்றி கைகளை தூக்கி சரணாகதி அடைவது போல நின்றான். ஷா ஆலமின் ஆட்கள் சிந்துபாத்தையும், தையபாவையும் கைது செய்து விசாரித்தனர். அனைத்து விஷயங்களையும் சிந்துபாத் தளபதிக்கு புரியும் படியாக எடுத்து உரைத்தான். அதனைக் கேட்ட தளபதி சிந்துபாத்தின் நிலையை புரிந்து கொண்டார். சிந்துபாத் கொள்ளையர்களின் படை பலம் மற்றும் ஆயுத பலத்தை தளபதியிடம் எடுத்து உரைத்தார். அத்துடன் கொள்ளையர்களை குழுக்களாகச் சென்று சுற்றிவளைத்து நள்ளிரவில் திடீர் தாக்குதல் செய்வது தான் சிறந்தது என்று சிந்துபாத் கூற. படைத்தளபதி சிந்துபாத்தின் இந்தத் திட்டத்தை ஏற்றுக் கொண்டு தனது

படகுகளை மறைத்து வைத்தார். அனைவரும் இரவு வரும் வரையில் வியூகம் அமைத்துக் காத்துக் கொண்டு இருந்தனர். நள்ளிரவு நேரமும் வந்தது. சிந்துபாத், தையபா வழி காட்ட இந்த முறை கொள்ளைக்கூட்டம் இருக்கும் இடத்தை சரியாக அடைந்தனர் ஷா ஆலமின் ஆட்கள். அத்துடன் அவ்விடத்தை சுற்றி வளைத்தனர். ஏற்கனவே தங்களுக்குள் ஒருவராக ஊடுருவி இருந்த ஜா ஃ பர் கானின் உளவாளிகளை கண்டு பிடித்து தீர்த்துக் கட்டி இருந்தார் தளபதி. அதனால் ஷா ஆலமீன் வீரர்கள் தீவுக்கே வந்து விட்டனர் என்ற செய்தியை அதுவரையில் கூட அறியாமல் இருந்தனர் கொள்ளையர்கள். இரவு வேளையாக வேறு இருந்ததால் நன்றாக ஓய்வு எடுத்துக் கொண்டு இருந்தனர். இதனைப் பயன்படுத்தி ஷா ஆலமீன் படை வீரர்கள் கொள்ளையர்கள் மீது திடீர் தாக்குதலை மேற்கொண்டனர். அம்பு மழை பொழிந்தார்கள். அதில் யுத்தம் செய்யாமலேயே எண்ணற்ற கொள்ளையர்கள் உறக்கத்திலேயே இறந்தனர். சுதாரித்துக் கொண்ட எஞ்சிய கொள்ளையர்கள் ஆயுதம் எடுப்பதற்குள் அவர்களும் கடுமையாக தாக்கப்பட்டனர். இருந்தும் சமாளித்துக் கொண்டு பதில் தாக்குதல் நடத்தினர். கொள்ளையர்கள் நடத்திய பதில் தாக்குதலில் ஷா ஆலமீன் வீரர்கள் சிலரும் கொல்லப்பட்டனர். வாள் வீச்சில் சிறந்த சிந்துபாத், தளபதியிடம் இருந்து ஒரு வாளை பெற்றுக் கொண்டு கொள்ளையர்களுடன் கடுமையாகப் போராடினான். அதனைக் கண்ட தளபதி வியந்து போனார். சிந்துபாத்தின் வாள் சுழன்ற வேகத்தில் எண்ணற்ற கொள்ளையர்களின் தலைகள் உருண்டது. ஒரு கொள்ளையன் வஞ்சகமாக சிந்துபாத்தை கொல்ல நினைத்து பின்புறத்தில் இருந்து விஷம் தடவிய கத்தியை வீச அதனைக் கண்ட தையபா வேறு வழி இன்றி தனது உடலில் அந்தக் கத்தியை பெற்றுக் கொண்டாள். அதைப் பார்த்த சிந்துபாத் துடித்துப் போனான். ஆனால், கத்தி ஆழமாக தையபாவின் உடலை பதம் பார்த்து இருந்ததால் ஜாஃ பர் கானை சிந்துபாத் கொல்ல வேண்டும் என்ற வாக்குறுதியை பெற்றுக் கொண்டு சிந்துபாத்தின் மடியிலேயே இறந்து போனாள் தையபா. இனியும் ஜாஃ பர் கானை விட்டு வைக்கக் கூடாது என்ற முடிவுக்கு வந்த சிந்துபாத் அவனைத் தேடிச் சென்றான். இறுதியில் கண்டடைந்தான். சிந்துபாத்தைக் கண்ட ஜாஃ பர் கான் பற்களை நற நறவென்று கடித்தபடி, ”சிந்துபாத் இத்தனைக்கும் நீ தான் காரணமாக இருப்பாய். உன்னை விடப் போவதில்லை” என்று கூறியபடி கடுமையாக சிந்துபாத்தை தாக்கினான். இருவருக்கும் இடையில் பல பணி நேரங்களுக்கு வாள் சண்டை நடந்தது. இறுதியில் படுகாயங்கள் அடைந்து களைத்துப் போன ஜாஃ பர் கானின் தலையை துண்டித்து ஷா

ஆலமீன் தளபதியிடம் கொண்டு சென்று கொடுத்தான் சிந்துபாத். தங்களுக்கு பல வருடங்களாக சவாலாக இருந்து, பெரும் தொல்லையை கொடுத்து வந்த மிகப் பெரிய கொள்ளையனான ஜாஃ பர் கான் இறந்து விட்டான் என்ற செய்தியை கேட்ட மாத்திரத்தில் தளபதியால் அதனை நம்ப இயலவில்லை. எனினும், ஜாஃ பர் கானின் வெட்டப்பட்ட தலை தான் அவன் இறந்ததற்கு சாட்சி என்கிற நிலையில் தளபதி கொள்ளைக் கூட்டத்து தலைவனின் மரணத்தை உறுதி செய்தார். சிந்துபாத்தை பாராட்டினார். இறுதியில் ஜாஃ பர் கானின் கூட்டத்தில் இருந்த அனைத்துக் கொள்ளையர்களையும் கண்டம் துண்டமாக வெட்டி எறிந்தார் தளபதி. அது தான் அரச கட்டளையும் கூட. அத்துடன் வணிகர்கள் மற்றும் சிறைப்பட்டு இருந்த ஏனைய கைதிகளையும் விடுவித்தார். சிந்துபாத்துடன் வந்த வணிகர்களை பத்திரமாக அவர்களது பொருள்களுடன் மீட்டு எடுத்து அதனை அவர்களிடமே ஒப்படைத்து பாக்தாத் அனுப்பி வைத்தார் தளபதி. அந்தக் கப்பலிலேயே சிந்துபாத்தின் வியாபாரப் பொருள்களும் பாக்தாத்திற்கு அனுப்பப்பட்டது. தளபதியிடம் சிந்துபாத்தின் பொருள்களையும் பத்திரமாகக் கொண்டு சேர்ப்பதாக வாக்களித்தனர் வணிகர்கள். மறுபுறம், சிந்துபாத்தை ஷா ஆலமிடன் அழைத்துச் சென்று, அவன் செய்த வீர தீரச் செயல்களை மன்னரிடம் கூற வேண்டும் என்று துருக்கியின் தளபதியார் கொண்ட சித்தத்தால் சிந்துபாத்தை துருக்கி தேசத்திற்கு அழைத்துச் சென்றார்.

இதற்கிடையில் அதற்குள் ஜாஃபர் கான் இறந்த விஷயம் ஷா ஆலமிற்கு ஒற்றர்கள் மூலமாக அறிவிக்கப்பட்டது. ஒரு கொடிய கொள்ளையன் இறந்து விட்ட செய்தியை கேட்டு துருக்கி மக்கள் மகிழ்ச்சிக் கொண்டாட்டத்தில் ஈடுபட்டு மகிழ்ந்தனர். குறிப்பாக வர்த்தகர்களுக்கு இந்தச் செய்தி தேனாகத் தித்தித்தது.

மறுபுறம், சிந்துபாத்துடன் துருக்கியை அடைந்த தளபதியை மக்கள் வரவேற்றுக் கொண்டாடினர். ஷா ஆலம், தனது தளபதியை புகழ்ந்து பாராட்டினார். ஆனால், பெருந்தன்மை கொண்ட அந்தத் தளபதியோ,"அத்தனை புகழும் இறைவனையும் அதற்கு அடுத்தபடியாக இந்த சிந்துபாத்தையும் தான் போய் சேர வேண்டும்" என்று மன்னரிடம் கூறி. சிந்துபாத்தின் ஒவ்வொரு வீர தீரச் செயல்களையும் மன்னரிடம் எடுத்து உரைத்தார். அதனைக் கேட்ட சுல்தான் சிந்துபாத்தின் வீரத்தை புகழ்ந்து உரைத்தார். அத்துடன் சிந்துபாத்திற்கு எண்ணற்ற நவ ரத்தினங்களையும், தங்கக் கட்டிகளையும் பரிசாகக் கொடுத்து, தனது

நண்பரான பாக்தாத்தின் கலீபாவிடம் சிந்துபாத்தை பாராட்டி ஒரு பாராட்டுப் பத்திரத்தை எழுதிக் கொடுத்து அனுப்பினார். மேலும், பெரும் மரியாதையுடன் ஒரு சொகுசுக் கப்பலில் ஏற்றி சிந்துபாத்தை மன்னர் அவரது செலவிலேயே பாக்தாத் நகரத்திற்கு அனுப்பி வைத்தார். அந்தக் கப்பலும் சில தினங்களில் பாக்தாத் நகரத்தை அடைந்தது.

அந்தக் கப்பல் பாக்தாத் நகரத்தை அடைவதற்குள்ளாக (சிந்துபாத்துடன் முன்பு ஒரே கப்பலில் சென்று கொள்ளையர்களால் பிடிக்கப்பட்டு பிறகு விடுவிக்கப்பட்டு) தளபதி மூலமாக முன்னதாகே பாக்தாத் நகருக்கு அனுப்பப்பட்ட வணிகர்கள் சிந்துபாத்தின் பெருமைகளை நாடெங்கிலும் பரப்பி வைத்திருந்தனர். அதனால் பாக்தாத் வந்து இறங்கிய சிந்துபாத்திற்கு உற்சாக வரவேற்பு அளிக்கப்பட்டது. மக்கள் அவன் புகழை பாடித் துதித்தனர். சிந்துபாத்தும் தான் வந்து இறங்கிய கையோடு முதல் வேளையாக கலீபாவை சென்று பார்த்தார். துருக்கி மன்னர் தனக்கு அளித்த பாராட்டுப் பத்திரத்தை மன்னரிடம் சமர்ப்பித்து மகிழ்ந்தார். அதனைக் கண்டு மகிழ்ந்த பாக்தாத்தின் கலீபா, சிந்துபாத்திற்கு "பாக்தாத் சிங்கம்" என்னும் விருதை அளித்தார். அது பாக்தாத்தில் சிறப்பாக செயலாற்றிய ராணுவ வீரர்களுக்கு மட்டுமே அன்றைய காலகட்டத்தில்  அளிக்கப்பட்டு வந்து அந்நாட்டின் உயரிய விருது. எனினும் சிந்துபாத்திற்கு அந்த விருதை மனமுவந்து (அவன் ராணுவத்தில் இல்லாவிட்டாலும் சந்தோஷமாக) அளித்து அவனை சிறப்பான முறையில் கௌரவித்தார் பாக்தாத் மன்னர்.

இப்படியாக சிந்துபாத்தின் ஐந்தாவது பயணம் அவனுக்கு மிகப் பெரும் வெற்றியை தந்தது. துருக்கி மன்னர் ஷா ஆலம் கொடுத்த பரிசுகளே சிந்துபாத்தின் பத்து தலைமுறைக்கு வரும் என்கிற நிலையில், பாக்தாத்தின் கலீபாவும் நாட்டின் பெருமையை தமது வீரத்தால் உலகிற்கு புரிய வைத்த சிந்துபாத்திற்கு ஏராளமான பொன்னையும், பொருளையும் அள்ளி, அள்ளிக் கொடுத்து அவனை மகிழ்ச்சிக் கடலில் தத்தளிக்கச் செய்தார். இது தவிர வணிகர்கள் சிந்துபாத்தை சந்தித்து அவர்கள் விற்ற சிந்துபாத்தின் பொருள்களுக்கு உரிய நியாயமான தொகையையும் அவனிடம் கொண்டு வந்து கொடுத்தனர். அதன் மதிப்பு மட்டும் நாற்பது லட்சம் தினார்கள் ஆகும். அந்தக் காலத்தில் பாக்தாத்தின் ஒரு தினார் என்பது முப்பது வெள்ளிக்கு சமம். இப்படியாக சிந்துபாத்தின் ஐந்தாவது பயணம் அவனுக்கு செல்வச் செழிப்பை பெற்றுத் தந்தது. அதனைக் கொண்டு அவனது அரண்மனையை விஸ்தரித்தான். மன்னரின் அரண்மனையை விட சிந்துபாத்தின்

மாளிகை அழகுடன் காணப்பட்டது கண்டு, மன்னரே ஆச்சர்யம் கொண்டார். அத்துடன் தான் செய்து வந்த தருமங்களையும், தானங்களையும் அதிகரித்தான் சிந்துபாத். அதனால் ஏழை மக்கள் பலர் அவனை வாழ்த்தினர். தினம் நான்காயிரம் ஏழைகளுக்கு விருந்தளித்தான். இதனால் மக்கள் சிந்துபாத்தை பெருமைப்பட பார்த்தனர். எனினும், சிந்துபாத்தின் மனம் தனக்காக அன்று உயிரையே கொடுத்த தையபாவையும் நினைத்து அழாமல் இல்லை.

# சிந்துபாத்தின் ஆறாவது கப்பல் பயணம்

ஐந்து பயணங்களின் மூலமாக சிந்துபாத்திற்கு பெரும் சொத்துக்கள் சேர்ந்தன. சொத்துக்கள் மட்டுமா? புகழும் கூடத் தான். அதனால், தனது ஆறாவது கப்பல் பயணத்திற்கு ஆயத்தம் ஆனான் சிந்துபாத். அதன் பொருட்டு அதற்குத் தேவையான வியாபாரப் பொருட்கள் அனைத்தையும் வாங்கிக் குவித்தான். பிறகு ஆட்களை வைத்து துறைமுகத்திற்கு அனைத்தையும் கொண்டு சென்றான். அங்கு சக வணிகர்களின் சரக்குகளுடன் தனது சரக்குகளையும் கப்பலில் ஏற்றினான். அதனைப் பார்த்த வியாபாரிகளுள் சிலர் சிந்துபாத்தை வரவேற்றனர். இன்னும் சிலர்," சிந்துபாத்! தங்களுக்குத் தான் இறைவன் அனைத்தையுமே அருளி விட்டாரே! இன்னும் ஏன் சிரமப்பட்டு வியாபாரம் செய்ய வேண்டும்?" என்று கேட்க. அதற்கு சிந்துபாத் பதில் ஏதும் கூறாமல் புன்னகைத்தார். அப்போது அந்தக் கப்பலை இயக்க இருக்கும் கப்பல் தலைவன் சிந்துபாத்தைக் கண்டதும் அகம் மகிழ்ந்து வரவேற்றான். அத்துடன் அங்கு கூடி இருந்த வியாபாரிகளிடம், "எனது கடல் பயண அனுபவத்தை விட, சிந்துபாத்தின் அனுபவம் மிகப் பெரியது" என்று கூறி உவகை கொண்டான்.

அதனைக் கேட்ட சிந்துபாத் கப்பல் தலைவரிடமும் கூடி இருந்த மற்ற வியாபாரிகளிடமும்," கப்பல் பயணம் வெற்றி பெறுவது என்பது உண்மையில் நம்முடைய கையில் இல்லை; எத்தனை தான் அனுபவம் இருந்தாலும் ஆண்டவன் அருள் இருந்தால் தான் நாம் நினைத்தது போன்று செல்ல முடியும். ஆகவே, இதில் அனுபவம் ஒன்றும் முக்கியம் அல்ல. ஆண்டவனின் அருள் தான் மிக முக்கியம். அவர் மனது வைத்தால் தான் நம்மைத் துன்பங்கள் வராமல் காத்தருள முடியும்" என்று மிகவும் பணிவாகக் கூறினான். அதனை அங்கிகரிப்பது போல அங்கு கூடி இருந்தவர்கள் அனைவரும் தலை அசைத்தனர்.

இதற்கிடையில் கப்பல் கிளம்பும் நேரமும் வந்தது. கப்பல் தலைவன் அதற்குண்டான சமிக்ஞைகளை செய்ய சிறிது நேரத்தில் கப்பல் தனது பயணத்தை துவக்கியது. சுமார் நான்கு நாட்கள் பயணத்திற்குப் பிறகு கப்பல் "ஜமூர்" என்னும் இடத்தை அடைந்தது. அங்கு ஒரு நாள் முழுவதும் தங்கி வியாபாரிகள் தங்களது வர்த்தகத்தை நடத்தினர். நிறையப் பொருள்களை ஈட்டினர். பிறகு மீண்டும் தங்களது கப்பல் பயணத்தை தொடர்ந்தனர். இப்படியாக பல தீவுகளை கப்பல் கடந்து

சென்றது. வியாபாரமும் செழிப்பாக நடந்து வந்தது. ஒவ்வொரு துறை முகத்திலும் கொழுத்த ஆடு, மாடுகளையும் உணவுக்காக கப்பலில் ஏற்றினர் மாலுமிகள். பெரும்பாலும் அனைவரும் அசைவ உணவையே விரும்பியதால் அதிக அளவில் ஆடு, மாடுகள் வெட்டப்பட்டன. அதன் மாம்சக் கழிவுகள் நிரம்பி வழிந்ததால், அதனை கடலில் விட்டு வந்தனர். இப்படித் தான் "சாபா" என்னும் தீவை அடையும் சமயம் அதிகளவில் மாமிசக் கழிவுகளை கடலில் விட்டனர் மாலுமிகள். அந்த குறிப்பிட்ட கடற் பகுதி, மிகுந்த ஆபத்தான கடற் பகுதி. காரணம் அங்கு சுறா மீன்கள் அதிக அளவில் காணப்பட்டன. அவை ஒவ்வொன்றும் பிரம்மாண்டமான உருவத்தைக் கொண்டு இருந்தன. மாம்சக் கழிவுகளால் கடலில் ஓர் குறிப்பிட்ட இடத்தில் இருந்து ரத்த வாடை வருவதை உணர்ந்த அந்த மீன்கள் உடனே அந்த வாடையை பிடித்தபடி கடலில் கப்பல் இருக்கும் இடத்தை நெருங்கியது. அத்துடன் அந்தக் கப்பலை சுற்றி அதிகளவில் சுறா மீன்கள் வட்டமிட்டன. இதனை கவனிக்காத கப்பல் ஊழியர்கள் மேலும், மேலும் கழிவுகளை கடலில் கொட்டி வந்தனர். அந்த வாடையால் வெறி அடைந்த சுறா மீன்கள் வேகமாக வந்து கப்பலையும் தாக்கின. அந்தக் கப்பல் ஒரு கணம் நிலை குலைந்தது. கப்பலின் ஒரு பகுதியும் சேதம் அடைந்தது. அது வரையில் கூட யாருக்கும் எதுவும் புரியவில்லை.

ஆனால் சிந்துபாத்தோ கடல் அலைகளின் மீது சுறா மீன்களை கண்ட மாத்திரத்தில் அனைத்தையும் யூகித்துக் கொண்டு கப்பல் கழிவுகள் வெளியேற்றப் படுவதை உடனே  நிறுத்துமாறு மாலுமிகளிடம் கூறினான். அத்துடன் கப்பல் தலைவனிடம் இவ்விஷயத்தை பற்றிக் கூறி உடனே கப்பலை அங்கிருந்து வேகமாக செலுத்தும் படிக் கூறினான். விஷயத்தின் தீவிரத்தை உணர்ந்த கப்பல் தலைவன் உடனே மாலுமிகளின் உதவியால் கப்பலை அதிவேகமாக செலுத்த ஆணையிட்டான். கப்பலும் சற்று தூரத்தில் இருந்த "சாபா" தீவை நோக்கி விரைந்து செலுத்தப்பட்டது. மறுபுறம், மாலுமிகளில் சிலர் கப்பலை தடுக்க முயன்ற சுறாமீன்களை வேறு வழி தெரியாமல் வேட்டை ஆடத் துவங்கினர். இதனால் சுறா மீன்களில் சில செத்து கடலில் மிதந்தன. அதன் ரத்தம் வெள்ளமென கடலில் பாய்ந்தன அந்த ரத்த வாடைக்கு கடலுக்கு அடியில் இருந்த மேலும் பல பெரிய திமிங்கலங்கள் அலைகளின் மேல் எழுந்தன. அவைகள் கப்பலை விடாமல் துரத்திச் சென்று தாக்கின. கப்பல் பல முனைகளில் இருந்து தாக்கப்பட்டது. அதனைக் கண்ட அனைவரும் நடு, நடுங்கி செய்வதறியாது திகைத்து நின்றனர். கப்பல் தலைவனோ தைரியமாக

நிலமையை சமாளித்து வேகமாக கப்பலை செலுத்தக் கூறினான். இதன் காரணமாக அந்தக் கப்பல் அதி விரைவாக செலுத்தப் பட்டதால் சுராமீன்களால் அதனை வெகு தூரம் வரையில் தொடர இயலவில்லை. இந்தப் பதற்றத்தில் கப்பல் "சாபா" தீவை அடையும் சமயம். ஒரு பெரும் பாறையில் மோதி சுக்கல், சுக்களாக உடைந்தது. கப்பலில் இருந்த அனைவரும் கடலில் விழுந்து தத்தளித்தனர்.

அவ்வாறு தத்தளிக்கும் சமயத்தில் கூட தாங்கள் கொண்டு வந்த பொருள்கள் அனைத்தும் தண்ணீரோடு போனாலும் போகட்டும், தங்களது உயிர் காப்பாற்றப்பட வேண்டும் என்று தான் அனைவரும் எண்ணினார்கள். இன்னும் சொல்லப் போனால் இறைவனிடமும் அதைத் தான் வேண்டினார்கள். ஆனால் சிந்துபாத் உட்பட சிலரைத் தவிர மற்றவர்களின் விதி உண்மையில் மோசமாகத் தான் இருந்தது. சிலர் கடலில் விழுந்த மாத்திரத்தில் குளிரில் நடுங்கித் தவித்தனர். அந்தக் குளிரே அவர்களை நீந்த விடமால் கொன்றது. இன்னும் சிலரை கடல் மீன்கள் இழுத்துச் சென்றன. வெகு சிலரே, கப்பலில் இருந்து மிதந்து வந்த உடைந்த துண்டுகளை பிடித்த படி நீந்தி "சாபா" தீவை அடைந்தனர்.

"சபா" தீவைப் பற்றிச் சொல்ல வேண்டும் என்றால் அது ஒரு மிகப் பெரிய தீவு நாடாகும். "லைப்பி" என்னும் நதி அந்தத் தீவை இரு பகுதியாக பிரித்துள்ளது.  அதில் ஒரு பகுதி வனம் நிறைந்த பகுதி. அது மட்டும் அல்ல மிகுந்த ஆபத்தான பகுதி. இன்னொரு பகுதி மக்கள் வசிக்கும் நகரத்து பகுதி. "லைப்பி" என்றால் துயரம் என்று பொருள். அதாவது அந்த நதியில் அடிக்கடி வெள்ளம் பெருக்கெடுத்து ஊருக்குள் வந்து  மக்களுக்கு பெரும் துயரத்தை அளிக்கும் என்பதால் அதனை "லைப்பி" என்றே அழைத்து வந்தனர் மக்கள்.

சிந்துபாத்தும் அவனுடன் கடலில் மிதந்து வந்தவர்களும் அந்தத் தீவின் ஆபத்தான வனப் பகுதியில் தான் கால் வைத்தனர். ஊருக்குள் செல்ல வேண்டும் என்றால் பல மைல்களை கடந்து "லைப்பி" என்னும் நதியை அடைந்து ஓடத்தின் மூலம் அதனையும் தாண்டிச் சென்றால் தான் உண்டு. வேடிக்கை என்னயென்றால் "லைப்பி" ஆறில் பெரும்பாலும் ஓடப் போக்குவரத்து ஏதும் இருக்காது. அதற்குக் காரணம் அந்த ஆற்றின் வேகம் தான். இதனை யார் சிந்துபாத்துக்கு சொல்ல முடியும்? அவனுக்கோ அந்தத் தீவை பற்றி எதுவுமே தெரியாது. இந்நிலையில் வேறு வழி தெரியாமல் உடன் வந்த வணிகர்களுடன் கால் போன

போக்கில் அந்தத் தீவுக்குள் நடந்து சென்றான் சிந்துபாத்.

அப்போது தூரத்தில் ஒரு பெரிய குகை உள்ளே தீப்பந்தங்களுடன் தென்பட அங்கு சென்று பார்க்கலாம் என்று சிந்துபாத்தும் அவன் உடன் வந்தவர்களும் முடிவு செய்து அந்தக் குகையை அடைந்தனர். அப்போது அந்தக் குகையில் இருந்து நிர்வாணமான மனிதர்கள் சிலர் வெளி வந்தனர். சிந்துபாத்தையும் உடன் மற்ற வர்த்தகர்களையும் கண்ட அந்த நிர்வாண மனிதர்கள் அவர்களிடம் எதையுமே பேச வில்லை. ஆனால், நாகரிகம் இல்லாத அந்த மக்கள் வர்த்தகர்கள் உட்பட சிந்துபாத்தையும் சேர்த்து சிறைபிடித்து தங்களது மன்னரிடம் கொண்டு சென்று நிப்பாட்டினார்கள்.

அவர்களது அந்த மன்னனும் நிர்வாணமாகத் தான் காணப்பட்டான். அந்த மன்னனை சுற்றியும் கருப்பு நிறப் பெண்கள் சேவகம் செய்து கொண்டு இருந்தனர். அந்த மன்னன் சிந்துபாத்தையும் மற்ற வணிகர்களையும் கண்ட மாத்திரத்தில் அவர்கள் அனைவரையும் அமரும் படியாக செய்கை காட்டினான். அதன்படியே அனைவரும் அமர்ந்தனர். அப்போது மற்றொரு நிர்வாண மனிதன் உணவைக் கொண்டு வந்து வர்த்தகர்கள் முன் வைக்கவும் சிந்துபாத்தைத் தவிர மற்றவர்கள் அனைவரும் அந்த உணவை உட்கொண்டார்கள். ஆனால், சிந்துபாத்தை நிர்வாண மனிதர்கள் உணவு உன்னச் சொல்லி அடித்தும் கூட அவன் அதனை உண்ண மறுத்துவிட்டான். மன்னனோ! சிந்துபாத்தை கட்டாயப்படுத்த வேண்டாம் என்றபடி செய்கை காட்டிக் கூறினான். இந்நிலையில் உணவு உண்டவர்கள் அனைவருமே ஒரு வித மயக்க நிலையை அடைந்தனர். பின்னர் சிறிது நேரத்தில் கண் விழித்தனர். அப்போது அந்த நிர்வாண மனிதர்கள் அவர்களின் மேல் ஆடைகளை அகற்றி "கொக்கோ" எண்ணெய்யை கலந்த ஒரு பானத்தை குடிக்கக் கொடுத்தார்கள். சிந்துபாத்தையும் இந்த முறை கட்டாயப்படுத்தி குடிக்க வைத்தார்கள் அந்த நிர்வாண மனிதர்கள். வேறு வழி இன்றி இந்த முறை சிந்துபாத்தும் அந்த பானத்தை குடித்தான். அந்த பானத்தை குடித்த மாத்திரத்தில் அவர்கள் அனைவருக்கும் இன்னும் அதிக, அதிகமாகப் பசித்தது. அதனால் மீண்டும் அந்த நிர்வாண மனிதர்கள் கொண்டு வந்து கொடுத்த அடுத்த கட்ட உணவை உண்டார்கள். சிந்துபாத்துக்கு பசி அதிகமாக எடுத்தது தான் இருந்தாலும் தன்னை கட்டுப் படுத்திக் கொண்டான். ஆனால், தங்களை கட்டுப்படுத்த முடியாத மற்ற வணிகர்கள் அதிக அளவில் நிர்வாண மனிதர்கள் கொடுத்த உணவை உண்டதால் அவர்களின்

கண்கள் சொருக ஆரம்பித்தன. ஒரு கட்டத்தில் நினைவாற்றலையும் அடியோடு இழந்து விட்டார்கள். சிந்துபாத் ஓரளவு சுய நினைவுடன் தான் இருந்தான். என்ன நடக்கிறது என்பதை அமைதியாக கவனித்தான்.

அந்த நிர்வாண மனிதர்கள் மனித மாமிசம் சாப்பிடுபவர்கள் என்பதை சிந்துபாத் அறிந்து கொண்டார். மயங்கி விழுந்த வர்த்தகர்களுள் கொழுத்த ஒரு ஆளை தேர்ந்தெடுத்து அவனைக் கொன்று அவனது மாமிசத்தை சமைத்து மன்னருக்கு அளித்து, தாங்களும் உண்டு மகிழ்ந்தனர். சிந்துபாத் ஒல்லியாக இருந்ததால் அவனை அவர்கள் எதுவும் செய்யவில்லை. வேறு வழி இல்லை என்றால் கடைசியாக பார்த்துக் கொள்ளலாம் என்று விட்டு விட்டனர். இப்படியாக சிந்துபாத்தின் கண்ணுக்கு முன்னாலேயே தினம் ஒருவரை கொன்று மன்னருக்கும் விருந்து படைத்து தாங்களும் உண்டு வந்தனர். இந்நிலையில் அவர்கள் கொடுத்த உணவை சாப்பிட்டால் தானும் குண்டாகி விடுவோமோ என்ற பயத்தில் சிந்துபாத் அவர்கள் கொடுத்த உணவை ஒரு வேலை மட்டும் கால் வயிறு அளவே உண்டு வந்தான். உயிர் வாழ வேண்டுமே? அதற்காகத் தான் அதனைக் கூட அவன் உண்ண வேண்டி இருந்தது. ஒவ்வொரு முறையும் பசி தன்னை வதைக்க இந்த நிலை தனக்கு தேவையா? என்று மனதினில் கூறி நொந்து வந்தான் சிந்துபாத். இப்படியாக சிந்துபாத் பல நாட்கள் கால் வயிறு மட்டுமே உணவு உண்டு வந்ததால் இன்னும் அதிகமாக மெலிந்தான். எலும்பும், தோலுமாக ஒட்டிய தசையுடன் காணப்பட்டார்.

ஒரு கட்டத்தில் சிந்துபாத்துடன் வந்த வணிகர்கள் அனைவரையுமே தினம் ஒருவராக கொன்று தின்று முடித்தனர் நிர்வாண மனிதர்கள். இறுதியில் சிந்துபாத் மட்டும் தான் எஞ்சி இருந்தான். அவனைக் கண்ட மன்னன், "இவனைக் கொன்றால் நமக்கு என்ன கிடைக்கப் போகிறது?” என்று யோசித்தவனாய் சிந்துபாத்தை மேலும், கீழுமாக பார்த்தான். வெறுப்பில் சிந்துபாத்தை நாலு அடி, அடித்து தனது சேவர்களிடம்,"இவனைப் போன்ற ஆட்களை இனி பிடித்து வந்தால் உங்கள் அனைவரையும் கொன்று விடுவேன். இவன் இனி எனது கண்ணிலேயே படக் கூடாது. எங்காவது கொண்டு சென்று விட்டு வாருங்கள்" என்று கூறி நாய், நரிகளை விரட்டுவது போல சிந்துபாத்தை விரட்டி அனுப்பி விட்டான். மன்னர் திட்டியதால் கோபம் அடைந்த நிர்வாண மனிதர்கள் அதற்குக் காரணமான சிந்துபாத்தை அடித்து இழுத்துச் சென்று அருகில் இருந்த "லைப்பி" நதிக் கரையில்

விட்டுவிட்டு வந்தனர்.

தான் உயிருடன் திரும்புவோம் என்பதை சிந்துபாத்ததே நினைத்துப் பார்க்க வில்லை. செழிப்பான "லைப்பி" நதிக் கரையில் இருந்த பழங்களை உண்டு பசியை போக்கிக் கொண்டான். பிறகு எங்கே அந்த நிர்வாண மனிதர்கள் மனம் மாறி மீண்டும் வந்து விடுவார்களோ என்ற பயம் அவனது மனதைக் கவ்வியது. காட்டு வன விலங்குகளின் கர்ஜனை வேறு அவனை பயமுறுத்தியது. மாலை வரும் வேளை, இனியும் அவ்விடத்தில் இருக்கக் கூடாது என்று முடிவு செய்த சிந்துபாத் உடனடியாக அவ்விடத்தை வீட்டுக் கிளம்ப எண்ணினான். ஆற்றை தவிர அவனுக்கு அப்போதைக்கு தப்பிச் செல்ல வேறு மார்க்கம் இல்லை. என்ன செய்வது என்று யோசித்தான்.

முன்னொரு முறை, இதே போன்ற சூழ்நிலையில் தான் ஒரு ஓடத்தின் மூலம் ஆபத்தில் இருந்து மீண்டது அவனது நினைவிற்கு வந்தது. அதன் படியே இப்போதும் ஒரு ஓடத்தை தயார் செய்ய நினைத்தான் சிந்துபாத். ஒரு கட்டு மரத்தைக் கட்ட வேண்டும்; அதில் ஏறி ஆற்றின் வேகத்தில் சென்றால் எங்காவது ஒரு நகரத்தை நிச்சயமாக அடையலாம் என்ற நம்பிக்கை தோன்றவும் அவ்வாறே அங்கிருந்த மரங்களை வெட்டி அதனை உறுதியாகக் கட்டி ஒரு தெப்பத்தை செய்தான். இப்போது சிந்துபாத்தின் ஒரே கவலை தண்ணீரின் வேகத்திற்கு அந்தத் தெப்பம் ஈடு கொடுக்க வேண்டுமே என்பது தான். அதற்காக ஒரு பச்சை மரத்தில் உள்ள பட்டையை உரித்து அதனை நாராக்கி நன்றாக இறுக்கமாக தெப்பத்தில் கட்டினான். இனிமேல் அந்தத் தெப்பம் நிச்சயமாக ஆற்றின் வேகத்தை தாங்கும் என்ற நம்பிக்கை சிந்துபாத்திற்கு வந்தது. அப்படி ஒரு நம்பிக்கை பூரணமாக அவனுக்கு வந்த பின்னர் தான் தெப்பத்தை மெதுவாக இழுத்துச் சென்று எல்லாம் வல்ல இறைவனை வேண்டிக் கொண்டு ஆற்றில் தள்ளி அதன் மீது ஏறி அமர்ந்து கொண்டான். உடனே அந்தத் தெப்பம் அடுத்த சில கணங்களில் அந்த காட்டாற்று வெள்ளத்தில் வேகமாக இழுத்துச் செல்லப்பட்டது. எனினும், தண்ணீர் சில இடங்களில் அந்தத் தெப்பத்தை புரட்டி எடுத்தாலும் சிந்துபாத் தனது கைப் பிடியை மட்டும் தளர்த்தவில்லை. இந்தத் தெப்பத்தை விட்டால் தனக்கு வாழ்வே இல்லை என்று சிந்துபாத்தின் மனம் எண்ணியது தான் அதற்குக் காரணம். மறுபுறம் அந்தத் தெப்பம் வேகமான அந்த ஆற்றில் தொடர்ந்து சென்று கொண்டு இருந்தது.

அந்த ஆறு ஒரு மலையை ஒட்டிச் சென்று கொண்டு இருந்தது. சிந்துபாத்

தெப்பத்தை நிறுத்திவிட முயன்றான். எனினும் ஆற்றின் வேகத்தில் அவனால் ஒன்றுமே செய்யமுடியவில்லை. பின்னர் அந்த ஆறு ஒரு பள்ளத்தாக்கில் பாய்ந்தது. தெப்பத்தை பலமாகப் பிடித்துக் கொண்டு இருந்ததால் பாய்ந்த வேகத்தில் நல்ல காலமாக சிந்துபாத்துக்கு அடி ஒன்றும் படவில்லை. இப்படிப் பல விதமான சாகசங்களை செய்த அந்தத் தெப்பம் கடைசியாக ஒரு பெரிய பட்டினத்தின் கரையை அடைந்தது. ஆற்றின் மறுபுறம் கரையில் நின்ற மக்கள் தெப்பத்தில் இருந்து கைகாட்டிய சிந்துபாத்தைப் பார்த்து விட்டார்கள். உடனே அவர்கள் கையில் வைத்திருந்த வடம் போன்ற கயிற்றை வீசி எறியவும் கயிற்றைப் பலமாகப் பிடித்துக் கொண்ட சிந்துபாத்தை அந்த நல்ல உள்ளம் படைத்தவர்கள் சிலர் சேர்ந்து இழுத்துக் கரை சேர்த்து விட்டார்கள். களைப்பினால் அவர்களது நடுவில் பிணம் போலக் கிடந்த சிந்துபாத்துக்கு மருத்துவர்களை அழைத்து வைத்தியம் பார்த்தனர் அங்கு கூடி இருந்த மக்கள் சிலர்.

சிறிது நேரத்திற்கெல்லாம் களைப்பு நீங்கிய சிந்துபாத்தை அந்தக் கூட்டத்தில் இருந்த ஒரு வயதானவர் மெல்ல தனது வீட்டிற்கு அழைத்துச் சென்றார். பிறகு தன்னுடைய பணியாளனை அழைத்து முதலில் சிந்துபாத்தை குளிக்கக் கூட்டிச் செல்லக் கூறினார். சிந்துபாத் குளித்து முடித்ததும் அந்தப் பணியாளனே சிந்துபாத் உடுப்பதற்கு ஏதுவான நல்ல ஆடைகளுடன் தயாராக நின்றான். சிந்துபாத் ஆடைகளை உடுத்தி அந்தப் பெரியவர் பக்கம் வந்து நன்றி கூறவும் முதலில் அவனை உட்காரச் சொன்னார் அவர்.

பின்னர் சிந்துபாத்திற்கு நல்ல சுவையான உணவு வகைகள் கொண்டு வந்து வைக்கப்பட்டன. "நன்றாகச் சாப்பிடுங்கள்; கலைத்துப் போய் இருப்பீர்கள்" என்று அன்புடன் கூறி சிந்துபாத்தை சாப்பிட வைத்தார் அந்தப் பெரியவர். பிறகு தனது அரண்மனை போன்ற இல்லத்திலேயே ஒரு அறையில் சிந்துபாத்தை அந்தப் பெரியவர் தங்க வைத்தார். சிந்துபாத் அந்த அறையிலேயே தூங்கி ஓய்வெடுத்தான்.

அடுத்த நாள் காலை விடிந்ததும் சிந்துபாத்தை அந்தப் பெரியவர் வந்து மரியாதை நிமித்தமாகப் பார்த்தார். அத்துடன் சிந்துபாத்திடம்," தங்களது தெப்பம் அணைத் தடுப்புச் சுவரில் நின்று விட்டது. அதனை நமது இளைஞர்கள் கொண்டு வந்து விட்டார்கள்" என்று கூறினார்.

அதனைக் கேட்ட சிந்துபாத்," அந்தத் தெப்பம் தான் என்னை

உங்களிடம் கொண்டு வந்து சேர்த்தது. உங்களுக்கு எப்படி நன்றி தெரிவிப்பது என்றே தெரியவில்லை" என்று கண்ணீர் பெருக்கெடுக்கக் கூறினான்.

"தாங்கள் நன்றி கூற வேண்டும் என்ற அவசியம் எல்லாம் இல்லை; இப்போது உங்களுக்கு ஓய்வு தான் அதிகம் தேவை; அதனால் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். தங்களுக்கு வேண்டிய உதவிகளை இவர்கள் செய்வார்கள்" என்று கூறி தனது வேலைக் காரனையும், அவனுடைய மனைவியையும் காட்டி விட்டுச் சென்றார் அப்பெரியவர். மறுபுறம், சிந்துபாத் அந்தப் பெரியவர் தன்னிடம் விடை பெற்றுச் சென்ற மாத்திரத்தில் எதையோ எண்ணியவனாகப் படுத்திருந்து அவ்விதமே கண்ணயர்ந்து விட்டான்.

இப்படியாக சிந்துபாத் அந்தப் பெரியவரின் வீட்டில் தான் சுகமாக ஓர் இரு நாட்கள் தங்கி இருந்தான். அந்தப் பெரியவரும் சிந்துபாத்தை தனது மகனாகவே பாவித்து நல்ல முறையில் நடத்தி வந்தார். இப்படியாக மூன்றாவது நாளும் இனிதே கழிந்தது. நான்காம் நாள் சிந்துபாத்தை பார்க்க வந்த அந்தப் பெரியவர். சிந்துபாத் உற்சாகமாக காணப்படுவதை பார்த்து இறைவனுக்கு நன்றி கூறினார். மேலும் சிந்துபாத்திடம்," சந்தோஷம் தானே மகனே! உனக்கு ஒன்றும் குறை இல்லையே! இன்றைய தினம் சாயங்காலம் நாம் கடைத் தெருவுக்குப் போக வேண்டும்; நீ ஏறி வந்தாயே தெப்பம் அதனை ஏலம் விட வேண்டும்; அதற்காகத் தான் உன்னை கூப்பிடுகிறேன்" என்றார்.

"அந்தத் தெப்பம் என்ன விலை பெறப்போகிறது?. அதைப் போய் யார் வாங்கப் போகிறார்கள்?" என்று அந்தப் பெரியவரைப் பார்த்து அலட்சியமாகக் கேட்டான் சிந்துபாத்.

"மகனே! விஷயம் தெரியாமல் நீ பேசுகிறாய். நீ தெப்பமாக கட்டி ஏறிப் பயணித்த மரங்களில் பாதிக்கு மேல் சந்தன மரங்கள் தான். அது இப்போது காய்ந்து மெருகுடன் காணப்படுகிறது. விற்றால் நல்ல விலைக்குப் போகும். அதனால் தான் அதனை விற்க ஏற்பாடு செய்து இருக்கிறேன். நியாயப்படி அது உன்னுடையது அதனால் நீயும் என்னுடன் வர வேண்டும்" என்று அந்தப் பெரியவர் சிந்துபாத்திடம் மறுமொழி கூறவும். அதனைக் கேட்ட சிந்துபாத் ஆச்சர்யம் அடைந்தான். தப்பித்தால் போதும் என்ற பதற்றத்தில் அவன் வனத்தில் இருந்து முறித்தும், பிளந்தும் எடுத்த மரங்களில் பெரும்பாலும்

அனைத்தும் சந்தனக் கட்டைகள் என்பது அப்போது தான் அவனுக்கே புரிந்தது.

பிறகு அந்தப் பெரியவருடன் கடைத் தெருவுக்குச் சென்றான் சிந்துபாத். அங்கு அந்தச் சந்தன மரத்தைத் துண்டு துண்டாக வெட்டி ஏலம் விடுவதற்கு தயாராக வைத்திருந்தனர். அந்தப் பெரியவர் தலைமையில் ஏலம் துவங்கியது. ஏலம் கேட்டவர்கள் ஆயிரம் தினார் வரையில் கேட்டார்கள். அதற்கு மேல் யாரும் கேட்கவில்லை.

"என்ன மகனே! இதன் விலை இப்போதைக்கு இவ்வளவு தான் போகும். இதனை விற்று விடலாமா அல்லது பிறகு பார்த்துக் கொள்ளலாமா?" என்று கேட்டார் அந்தப் பெரியவர்.

அதற்கு சிந்துபாத் அந்தப் பெரியவரிடம்," தங்களது கிடங்குக்குக் கொண்டு செல்ல ஏற்பாடு செய்யுங்கள்; அத்துடன் நான் உங்களிடம் இதனை விற்று விட்டதாகவே இருக்கட்டும்" என்று மறுமொழியாகக் கூறினான்.

சிந்துபாத் அவ்வாறு சொன்னதைக் கேட்ட அந்தப் பெரியவர் உடனே அங்கு நின்ற தனது பணியாளர் ஒருவரிடம் தன்னுடைய கிடங்கு ஏதேனும் ஒன்றில் கொண்டு சென்று அந்த சந்தனக் கட்டைகளை வைக்கச் சொன்னார். பின்னர் வீட்டிற்கு வந்ததும் ஆயிரம் தினாரை ஒரு பையில் போட்டு அந்தரங்கமான ஒரு இடத்தில் வைத்துப் பூட்டிச் சாவியை சிந்துபாத்திடம் கொடுத்தார். ஆனால், சிந்துபாத்தோ அதனை வாங்கவில்லை," நீங்களே வைத்துக் கொள்ளுங்கள்" என்று அந்தப் பெரியவரிடம் கொடுத்து விட்டான்.

அன்றைய தினமும் சிந்துபாத் நன்றாக உண்டும் ஓய்வு எடுத்தும் அந்தத் தனி அறையில் இருந்து வந்தான். மறுநாள் மாலையில் சிந்துபாத்துடன் தோட்டத்தில் பேசிக் கொண்டு இருந்த அந்தப் பெரியவர் மெல்ல தான் அது வரையில் மனதில் கேட்கத் தயங்கிய விஷயத்தை சிந்துபாத்திடம் சொல்லத் தொடங்கினார்.

"மகனே, நான் உன்னிடம் எனது மனம் திறந்து இதனைக் கூறுகிறேன். உன்னை நான் கண்ட முதல் நாளிலேயே உன்னை எனக்கு நன்றாகக் பிடித்துப் போய் விட்டது. எனக்கு மகன் யாரும் இல்லை; ஒரே ஒரு மகள் தான். அவளை உனக்கு மணம் செய்து கொடுக்க எண்ணுகிறேன்;

இதனை நீ மறுக்க மாட்டாயே" என்றார்.

சிந்துபாத்தின் கரங்களைப் பற்றியவராய் இவ்விதம் கூறவும், சிந்துபாத் அவருடைய கைகளை அவ்விதமே தனது கண்களில் ஒற்றிக் கொண்டு, தன்னைப் பற்றியும், தனக்கு ஏற்கனவே திருமணமாகி மனைவி பாம்பு கடித்த இறந்த விஷயத்தையும் அந்தப் பெரியவரிடம் கூற. அவற்றை எல்லாம் ஒரு பொருட்டாகவே நினைக்கவில்லை அந்தப் பெரியவர். மேலும் மீண்டும், மீண்டும் சிந்துபாத்தை தனது மகளுக்கு திருமணம் செய்து வைப்பதிலேயே குறிக்கோளுடன் இருந்தார் அவர். ஒரு கட்டத்தில் சிந்துபாத் அந்தப் பெரியவரின் பேச்சிற்கு இணங்கி, "எல்லாமே தங்களது விருப்பம் போலவே நடக்கட்டும். எனக்குத் தங்களின் மகளை திருமணம் செய்து கொள்ள சம்மதம் தான்" என்று கூற அதனைக் கேட்ட அந்தப் பெரியவர் அகம் மகிழ்ந்தார்.

பிறகு மீண்டும் சிந்துபாத்திடம், "மகனே எனது ஒரே மகளின் வாழ்வு உன்னிடம் தான் உள்ளது. அவளைக் கண் கலங்காமல் பார்த்துக் கொள். நீ அவளை மணந்து கொள்வதன் மூலம். நீ என் அன்பு மகனாகக் கூட இருந்து எனது சொத்துக்களை அதிகாரம் செய்யலாம். மேலும் இந்தப் பெரிய வீடும், சொத்துக்களும் அவளுக்குத் தான்; அவளை மணந்து கொள்வதன் மூலம் உனக்குத் தான் எனது அத்தனை ஆஸ்திகளும் வந்து சேரும்" என்றார்.

அதனைக் கேட்ட சிந்துபாத்," ஐயா பெரியவரே! நிரந்தரம் இல்லாத தன்மை கொண்ட இந்தச் சொத்துக்களுக்காக உங்களது மகளை நான் மணந்து கொள்ளவில்லை. உங்களது அன்பை என்னால் மீற முடியாது. பாக்தாத்தில் எனக்கும் நிறைய சொத்துக்கள் உண்டு; ஆனால் என்னைப் பொறுத்தவரையில் இந்த உலகத்தில் பணத்தை விட வலிமை வாய்ந்தது அன்பும், தர்மமும் தான். அதனால் தான் நான் பிறந்தது முதற்கொண்டு அதனையே எனது முக்கியக் குறிக்கோளாக போற்றி வருகிறேன்" என்று மறுமொழி கூறினான்.

அதனைக் கேட்ட அந்தப் பெரியவர் சிந்துபாத்தின் நல்ல குணத்திற்கு அவன் கூறிய அந்த சொற்களையே சாட்சியாக ஆக்கிக் கொண்டு, உடனுக்குடன் தனது மகளை சிந்துபாத்திற்கு மணம் முடித்து வைத்தார். அந்தப் பெரியவரின் மகள் பெயர் "நதாஷா".

நதாஷா பணக்கார வீட்டில் பிறந்து இருந்தாலும் நல்ல குணத்துடன்

தான் இருந்தாள். அவள் சிந்துபாத்தை நல்ல விதத்தில் கவனித்து வந்தாள். அவர்கள் இருவரும் அந்த ஊரிலேயே வைத்து ஆதர்ஷ தம்பதிகளாக வாழ்ந்து வந்தனர்.

மறுபுறம், தனது  பெண்ணிற்கு நல்ல பையனை திருமணம் செய்து கொடுத்து விட்டோம் என்ற சந்தோஷத்தில் நதாஷாவின் திருமணம் முடிந்த ஓராண்டுக்குள் அந்தப் பெரியவர் இறந்து போனார். நதாஷா தனது தந்தையின் திடீர் மரணத்தால் ஆறாத துயர் அடைந்தாள். சிந்துபாத் அவளை தேற்றி ஆறுதல் அளித்தான்.

அதன் பின்னர் சிந்துபாத்தின் மனைவிக்கு அங்கு இருக்க விருப்பம் இல்லை; தனது கணவருடன் பாக்தாத்திற்க்கே சென்று விட வேண்டும் என்று பெரிதும் விரும்பினாள். எனவே, அவளுடைய சொத்துக்கள் அனைத்தும் விற்கப்பட்டன. கப்பலில் ஏறி சிந்துபாத்துடன் தனது பயணத்தை தொடர்ந்தாள் நதாஷா. கப்பல் பயணத்தை மட்டும் அல்ல, வாழ்க்கை பயணத்தையும் சேர்த்துத் தான்.

சில மாதங்களில் அந்தக் கப்பலும் பாக்தாத் நகரத்தை அடைந்தது. சிந்துபாத்தை பார்த்த அந்த ஊர் மக்கள் அவனை வரவேற்றனர். சிந்துபாத்திற்கு திருமணம் நடந்ததை எண்ணி அவனது நண்பர்கள் பூரித்தனர். தனது இல்லம் வந்து சேர்ந்த சிந்துபாத் தனது மாளிகையை நதாஷாவுக்கு சுற்றிக் காண்பித்தான். அந்த மாளிகையின் அழகில் நதாஷா தனது மனதையே பறி கொடுத்தாள். பிறகு நண்பர்கள், அதிகாரிகள், வியாபாரிகள் உட்பட மேலும் பல பெரிய மனிதர்களை வர வழைத்து மிகப் பெரிய திருமண விருந்தை ஏற்பாடு செய்து நடத்தினான் சிந்துபாத். அதில் கலந்து கொண்ட அனைவரும் சிந்துபாத்தை வாழ்த்தினர்.

பொதுவாக சிந்துபாத் தனது கடல் பயணத்தின் இறுதியில் ஏராளமான செல்வத்துடன் திரும்புவது வழக்கம் தான். ஆனால், இந்த முறை செல்வத்துடன் சேர்த்து ஒரு அழகிய பெண்ணையும் மணம் முடித்து அழைத்து வந்திருப்பது கண்டு சிலர் பொறாமையும் அடைந்தனர். இப்படியாக சிந்துபாத்தின் ஆறாவது கப்பல் பயணமும் இனிதாகவே முடிந்தது.

# சிந்துபாத்தின் ஏழாவது கப்பல் பயணம்

திருமணம் ஆகி விட்டது இனி எந்த ஒரு கப்பல் பயணத்தையும் மேற்கொள்ளாமல் இருக்கும் வாழ்க்கையை பொறுப்பாக ஓட்டினால் போதும் என்ற முடிவுக்கு வந்தான் சிந்துபாத். தனது புது மனைவியுடன் ஆனந்தமாக பொழுதை கழித்து வந்தான்.

இந்த சமயத்தில் பாக்தாத்தின் தளபதி நோய்வாய்ப்பட்டு உயிர் இழந்தார். "பொறுப்பான தளபதி இறந்து விட்டார். இனி போர்படையை யார் தலைமை ஏற்று நடத்துவார்கள்? அப்படிப் பட்ட ஒரு வீரம் மிகுந்த தளபதியை இனி எங்கு தேடுவது?" என்று கவலை அடைந்தார் பாக்தாத்தின் மன்னர். அமைச்சர்கள் மற்றும் மந்திரிகளை அழைத்து இது குறித்த ஆலோசனையை நடத்தினார். அப்போது சில மந்திரிகள் தளபதி பொறுப்பிற்கு சிந்துபாத்தின் பெயரை பரிந்துரைத்தனர். அங்கு கூடி இருந்த அனைவரும் அதுவே சரி என்ற விதத்தில் சம்மதம் தெரிவித்தனர்.

மன்னரும் கூட சிந்துபாத்தை பற்றி ஏற்கனவே அறிந்து வைத்து இருந்ததால் அவன் மீது ஒரு நல்ல அவிப்பிராயம் அவருக்கு இருந்து வந்தது. அதனால் சிந்துபாத்தையே தனது தளபதியாக நியமிக்க மன்னர் முடிவு செய்தார். மந்திரி சபை இதற்கு ஏகமனதாக ஒப்புக் கொண்டது.

அடுத்த நாள் காலை மன்னர் அழைப்பதாக சிந்துபாத்தின் வீட்டிற்கு வருகை தந்த சில உயர் அதிகாரிகள் கூற; உடனுக்குடன் சிந்துபாத் மன்னரைக் காணப் புறப்பட்டான்.

அரண்மனையை அடைந்த சிந்துபாத்தை வீரர்கள் சகல மரியாதையுடன் மன்னரிடம் அழைத்துச் சென்றனர். சிந்துபாத்தை மன்னர் வரவேற்று அவனிடம் விஷயத்தை கூறினார். மன்னரின் விருப்பத்தை சிந்துபாத்தும் ஏற்றுக் கொண்டான்.

ஒரு நல்ல நாளில் மௌலி "முகம்மது காஜி" சிந்துபாத்திற்கு பதவிப் பிரமாணமும் ரகசியக் காப்புப் பிரமாணமும் செய்து வைத்தார். மௌலி "முகம்மது காஜி" யை பற்றி சொல்ல வேண்டும் எனில் பாக்தாத் மன்னரின் வலது கை அவர் தான். அதீத இறை அருள் பெற்றவர் என்று

கருதப்படும் பெரியவர் அவர். யாக்கோப்பு சித்தரின் சீடர்கள் வழி வந்தவர். அதை விட இறை அருளால் முக்காலமும் உணர்ந்தவர். அவர் சிந்துபாத்தின் உடலில் இருந்த மூன்றாம் பிறையுடன் கூடிய நட்சத்திரக் குறியீட்டை பார்த்த மாத்திரத்தில் சிந்துபாத் இறை அருளாளன் என்பதை அறிந்து கொண்டார். மன்னர் சரியான ஆளிடம் சரியான பொறுப்பை தான் அளித்துள்ளார் என்று நினைத்து அகம் மகிழ்ந்தார்.

தளபதி பொறுப்பை ஏற்றுக் கொண்ட சிந்துபாத் என்றும் சத்தியத்தை பாதுகாப்பதாக ராஜ்ய சபையில் வாக்குறுதி அளித்தான். அங்கு கூடி இருந்த அனைவரும் சிந்துபாத்தை வாழ்த்தி மகிழ்ந்தனர். அன்று மாலை வீடு திரும்பிய சிந்துபாத் தனது மனைவியிடம் தான் தளபதியான விஷயத்தை சந்தோஷத்துடன் கூற அதனைக் கேட்டு அவனது மனைவியான நதாஷா சந்தோஷம் அடைந்து சிந்துபாத்துக்கு இனிப்புகள் வழங்கி தனது மகிழ்ச்சியைக் கொண்டாடினாள்.

சிந்துபாத் ராணுவத் தளபதியாக ஆன நாள் முதற்கொண்டு ராணுவத்தில் பல சீர்திருத்தங்களை கொண்டு வந்தான். அதனால் பாக்தாத்தின் ஒட்டு மொத்த ராணுவமும் நவீனப் படுத்தப்பட்டது. அது மட்டும் அல்ல, புதிய போர் கருவிகளை வாங்கினான். போர் திறமையில் சிறந்து விளங்கும் பல நட்பு நாட்டு அரசர்களுடன் பேசி அவர்களது ஒத்துழைப்புடன் பாக்தாத்தின் வீரர்களுக்கு ராணுவப் பயிற்சியை தொடர்ந்து அளித்து வந்தான். இதனால் எந்நேரமும் ராணுவம் தயார் நிலையில் இருந்தது. அதனால் பாக்தாத்தை திரும்பிப் பார்க்கக் கூட எதிரிகள் துணியவில்லை. மேலும், சிந்துபாத்தின் இது போன்ற நவீன சீர்திருத்தத்தால் "சிந்துபாத்திற்கு என்ன தெரியப் போகிறது?” என்று கூறி அவனை எள்ளி நகையாடிய சில மூத்த அதிகாரிகள் கூட அவனது திறமையான செயல்பாட்டை அறிந்து வியந்தனர். இப்படியாக சிந்துபாத் தன்னிடம் கொடுக்கப்பட்ட வேலையை சிறப்பாக செய்து வந்தான். அது மன்னருக்கு மிகுந்த திருப்தியை அளித்தது.

இப்படி இருக்கும் நிலையில் ஒரு நாள் மௌலி "முகம்மது காஜி" சிந்துபாத்தின் மாளிகைக்கு வந்தார். அவரை சிந்துபாத் நல்ல முறையில் வரவேற்றுப் பேசினான். அப்போது சிந்துபாத்தின் கைகளில் முன்பு வன தேவி அளித்திருந்த மோதிரம் மின்னிக் கொண்டு இருந்தது. அந்த மோதிரத்தை பார்த்த மாத்திரத்தில் அது சாதாரண மோதிரம் இல்லை என்பதை அறிந்து கொண்டார் மௌலி. அது பற்றி சிந்துபாத்திடம் மௌலி கேட்க. மௌலியிடம் உண்மையை மறைக்க விரும்பாத

சிந்துபாத் சத்தியத்தை உள்ளது உள்ளபடி கூறினான். அத்துடன் தனக்கு முந்தய பயணத்தில் கிடைத்த அதிசய வாளையும் அந்தப் பெரியவரிடம் காண்பித்தான். அதனைக் கண்ட மௌலி," இது சாதாரண வாள் இல்லை, அநீதிகளை எதிர்க்கும் இறைவனின் வாள். சிந்துபாத் இதனை எப்போதுமே உன்னுடன் வைத்துக் கொள். இது உன்னைக் காக்கும்" என்று கூறினார். பிறகு சிந்துபாத்தையும் அவனது மனைவியையும் ஆசிர்வதித்து விட்டு அவ்விடம் விட்டு நகர்ந்தார்.

இப்படியாக சிந்துபாத்தின் வாழ்க்கை நல்ல படியாகத் தான் போய்க் கொண்டு இருந்தது. பாக்தாத்தின் அரசர் சிந்துபாத்தை நல்ல முறையில் நடத்தினார்.

பாக்தாத்தின் அரசரைப் பற்றிச் சொல்ல வேண்டும் எனில் அவரது மனைவி ஒரு பெண் குழந்தையை பெற்று எடுத்து மன்னரிடம் கொடுத்து விட்டு சிறு வயதிலேயே இறந்து விட்டாள். அந்தப் பெண் குழந்தைக்கு "நூர்ஜகான்" என்று பெயர் வைத்து அன்புடன் வளர்த்து வந்தார் மன்னர். அப்பெண்ணும் பருவத்தை அடைந்து அழகுடன் காணப்பட்டாள்.

"நூர்ஜகான்" சிந்துபாத்தை அண்ணன் என்றே அழைத்து வந்தாள். சிந்துபாத்தும் அவளைத் தனது தங்கையைப் போலத் தான் பார்த்தான். நூர்ஜகான் அறிவில் மட்டும் அல்ல, அழகிலும் சிறந்து விளங்கினாள். ஆனால், அந்த அழகே எதிர்காலத்தில் அவளுக்கு எதிரி ஆக மாற இருக்கிறது என்பதை அவள் நினைத்துக் கூட பார்த்து இருக்க மாட்டாள். ஆம்! உலகத்தில் நல்லவர்களின் எண்ணிக்கையை விட தீயவர்களின் எண்ணிக்கை தானே அதிகம் உள்ளது. அந்த வகையில் நூர்ஜகான் என்னும் பேசும் ரோஜாவை கசக்கி எறிய நினைத்தான் மந்திரவாதி "உல் முல்க்".

யார் இந்த "உல் முல்க்" வாருங்கள் பார்ப்போம்.

"உல் முல்க்" ஒரு மிகப் பெரிய மந்திரவாதி. மிகக் கொடியவனும் கூட. அவனிடத்தில் சகல சக்திகளும் இருந்தது. அவன் நினைத்தால் நெருப்பில் நீந்துவான், தண்ணீரில் நடப்பான், காற்றோடு காற்றாகக் கரைவான். அப்படிப் பட்ட அந்த மந்திரவாதி அழகான பெண்களைக் கண்டால் விடமாட்டான். அவன் "கொல்கொத்தா" என்னும் தீவில் வசித்து வந்தான்.

ஒரு முறை "உல் முல்க்" தனது மாயக் கண்ணாடியின் எதிரே நின்றபடி, "இந்த உலகத்திலேயே வைத்து அழகான பெண் யார்?" என்று கேட்டான். உடனே அவனது மாயக்கண்ணாடி பாக்தாத்தின் இளவரசியான நூர்ஜகானை காண்பித்தது. அவளைப் பார்த்த மாத்திரத்தில் அவளது அழகில் மயங்கிப் போனான் "உல் முல்க்". எப்படியாவது அவளை அடைய வேண்டும் என்ற விருப்பத்தில் ஆகாய மார்க்கமாக பாக்தாத்தின் அரண்மனையை அடைந்தான்.

நூர்ஜகான் தனது தோழிகளுடன் நந்த வனத்தில் பொழுதை கழித்துக் கொண்டு இருந்தாள். அவளைக் கண்ட "உல் முல்க்" தனது மந்திர சக்தியால் நூர்ஜகானைத் தவிர அங்கு இருந்த அனைவரையும் மயங்கச் செய்தான். அனைவரும் மயங்கி விழுந்த மாத்திரத்தில் நூர்ஜகான் நடப்பதை அறியாது திகைத்து நின்றாள். அவளை நெருங்கிய "உல் முல்க்" ஆசை வார்த்தைகளை காட்டினான்.

ஆனால் நூர்ஜகான் அவனை வெறுத்து ஓடினாள். அதனைக் கண்டு கோபத்தில் சீறிப் பாய்ந்தான் "உல் முல்க்". இளவரசியோ அவனை எச்சரித்துப் பேசினாள். பொறுமை இழந்த அந்த துஷ்ட மந்திரவாதி நூர்ஜகானை மலராக மாற்றி கழுத்தில் அணிந்து கொண்டு தனது தீவிற்கு ஆகாய மார்க்கமாக புறப்பட்டு விட்டான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் மயக்கம் தெளிந்த தோழிகள் நூர்ஜகானை காணாது தவித்தனர். ஓடிச் சென்று பாக்தாத்தின் சுல்தானிடம் நூர்ஜகான் காணாமல் போன விஷயத்தை கூற, திடுக்கிட்ட கலீபா தனது ஏவலர்களை நாலாபுறமும் அனுப்பி தமது அருமை மகளை தேடச் சொன்னார். ஆனால், மூன்று நாட்கள் ஆகியும் எந்தத் தகவலும் இல்லை. சென்ற வீரர்கள் அனைவரும் வெறும் கையுடன் திரும்பினார். அதனைக் கண்ட கலீபா கோபத்தின் உச்சிக்கே சென்றார்.

அப்போது சிந்துபாத் மன்னரை அமைதிபடுத்தி," இது குறித்து நமது பெருமைக்குரிய மௌலியிடம் கூறுவோம். அவர் ஒருவரால் தான் இந்த சூழ்நிலையில் நமக்கு உதவ முடியும்" என்று கூறினான். மன்னரும் "அதுவே சரியான வழி" என்ற முடிவுக்கு வந்தார்.

உடனே "மௌலி" அழைக்கப்பட்டார். அவரிடம் நூர்ஜகான் காணாமல் போன விஷயத்தை சொன்னார் மன்னர். சற்று நேரம் யோசித்த ராஜ குரு (மௌலி) தனது ஞான திருஷ்டியால் நடந்த நிகழ்ச்சிகளை கண்டார்.

அதன் மூலம் "உல் முல்க்" என்ற மந்திரவாதியால் இளவரசி நூர்ஜகான் கடத்தப்பட்டு இருக்கும் விஷயத்தை மன்னருக்கு எடுத்துச் சொன்னார். மேலும் "உல் முல்க்" என்ற அந்த மந்திரவாதியின் ஆற்றலைப் பற்றியும் மன்னரிடம் விளக்கமாக எடுத்துக் கூறினார்.

தனது மகளை ஒரு பொல்லாத மந்திரவாதி கடத்தி விட்டான் என்ற செய்தியை கேட்ட மாத்திரத்தில் மன்னர் ஒரு கணம் மயங்கி கீழே விழுந்தார். அங்கு இருந்த ராஜ விசுவாசிகள் மன்னரை ஆசுவாசப்படுத்தி நினைவு திரும்ப வைத்தனர். மீண்டும் மன்னர் பழைய நிலைக்கு திரும்பி தனது வீரர்களை அழைத்தார் அவர்களிடம்," உடனே மந்திரவாதி உல் முல்க்- யை எனக்கு முன்னாள் கொண்டு வந்து நிறுத்துங்கள்" என்று கூறினார்.

மன்னர் கூறிய வார்த்தையை கேட்ட மௌலி சிரித்துக் கொண்டே மன்னரிடம்," சுல்தான்! தாங்கள் பெற்ற அனுபவம் இது தானோ? "உல் முல்க்" என்ன சாதாரண திருடனா? தாங்கள் நினைத்த மாத்திரத்தில் அவனை பிடித்துக் கொண்டு வர! அவன் ஒரு ஆபத்தான மந்திரவாதி. அதிலும் ஆபத்துக்கள் நிறைந்த கொல்கொத்தா தீவில் இருக்கிறான். அதனால் அவனைப் போன்ற ஒருவனை பிடிக்க வேண்டும் என்றால் அது இறை அருள் பெற்ற ஒருவனால் தான் முடியும்" என்றார்.

"அப்படிப் பட்ட ஒருவனை நான் எங்கே தேடுவேன்?" என்றார் கலீபா.

"நீங்கள் எங்கேயும் தேட வேண்டாம். இதோ அது நமது சிந்துபாத் தான். இவனால் தான் அந்தக் கொடிய மந்திரவாதியை பிடிக்க முடியும்" என்று கூறினார் மௌலி.

பிறகு மௌலியின் ஆலோசனைப் படி சிந்துபாத்தின் தலைமையில் ஐந்நூறு வீரர்களைக் கொண்ட ஒரு சிறு படையை நியமித்தார் சுல்தான். அந்தப் படையில்  இருந்த வீரர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதத்தில் திறமை வாய்ந்தவர்கள். மொத்தத்தில் அப்படை சிறுசானாலும் அதன் கீர்த்தி பெருசு தான்.

மறுபுறம் மௌலி சிந்துபாத்திடம், "சிந்துபாத் இந்த முறை அவசியம் உன்னிடம் இருக்கும் அதிசய வாளையும், முன்பு அந்த வன தேவதை உனக்கு கொடுத்த மோதிரத்தையும் உடன் எடுத்துக் கொண்டு செல்ல மறக்காதே! அது இந்த முறை உனக்கு மிகுந்த உதவியாக இருக்கும்.

நான் சொல்வதைக் கேள்!" என்று கூற. மௌலி கூறியபடியே செய்தான் சிந்துபாத்.

பிரம்மாண்டமான கப்பல் ஒன்று தயார் ஆனது. அதில் வீரர்களுக்கு தேவையான கவசங்கள், பல் வேறு விதமான ஆயுதங்கள், உணவுப் பண்டங்கள், பலதரப்பட்ட சிறிய படகுகள் என அனைத்தும் ஏற்றப்பட்டது.

சிந்துபாத் கிளம்பும் சமயம் மீண்டும் மௌலியை பார்க்கச் சென்றான். அவனை ஆசிர்வதித்த மௌலி அவனிடம் "கொல்கொத்தா" தீவின் வரைபடத்தை கொடுத்து. கையில் ஒரு ரக்ஷையையும் கட்டினார். பிறகு சிந்துபாத் அதிசய வாளுடன் அந்தக் கப்பலில் தனது வீரர்கள் புடை சூழ நின்றபடி நாட்டுமக்கள் அனைவரிடமும் விடை பெற்றான். கப்பல் கொல்கொத்தா தீவை நோக்கிய தனது பயணத்தை துவங்கியது.

சிந்துபாத்தின் மனைவியும் கூட்டத்தில் மக்களுடன் நின்றபடி தனது கைகளை அசைத்து சிந்துபாத்திற்கு விடை கொடுத்தாள். அந்தப் பெரிய கப்பல் கடல் அலையில் மிதந்து வெகு தூரம் சென்று சிறிய கப்பலாக காண்போரின் கண்களில் உரு மாறி ஒரு புள்ளியாய் மறைந்து போனது. அதனைக் கறையில் இருந்து கண்ட பாக்தாத் பிரஜைகள் அனைவரும் மெல்ல கலைந்து சென்றனர். இப்படியாக இளவரசியை மீட்க சிந்துபாத்தின் ஏழாவது கப்பல் பயணம் ஆரம்பமானது.

சுமார் அறுபத்தி எட்டு நாட்கள் கடலில் மிதந்த கப்பல் கொல்கொத்தா தீவின் அருகே வந்து சேர்ந்தது. சிந்துபாத் நங்கூரம் பாய்ச்சி கப்பலை நிறுத்தினான். உடனே சிறிய, சிறிய படகில் வீரர்கள் கொல்கொத்தா தீவை விரைவாக சென்று அடைந்தனர். சிந்துபாத்தும் தனது வீரர்களுடன் அந்தத் தீவில் காலடி எடுத்து வைத்தான்.

சிந்துபாத்தைப் பொறுத்தவரையில் இவ்வளவு எளிதாக எந்த வித எதிர்ப்பும் இல்லாமல் அந்தத் தீவில் வந்து இறங்குவோம் என்பதை அவன் நினைத்துக் கூடப் பார்க்கவில்லை. ஒரு வேளை உண்மையிலேயே மந்திரவாதி அந்தத் தீவில் தான் உள்ளானா? அப்படி என்றால் ஏன் அவன் இதுவரையில் எந்த வித எதிர்ப்பும் காட்டவில்லை என்பது போன்ற பல கேள்விகள் சிந்துபாத்தின் மனதினில் எழுந்தது. ஆனால், அவன் ஒன்றை அறியவில்லை இனிமேல் தான் அவனுக்கும், அவனுடன் வந்தவர்களுக்கும் ஆபத்துக்கள் ஒன்றன் பின் ஒன்றாக

அச்சுறுத்த காத்துக் கொண்டு இருக்கிறது என்பது தான் அது.

சிந்துபாத்தும் அவனுடன் வந்த வீரர்களும் தீவுக்குள் பல தொலைவு நடந்து சென்றனர். அந்தத் தீவில் யாருமே இருப்பதாகத் தெரியவில்லை. இந்நிலையில் திடீரென சிந்துபாத்துடன் வந்த வீரர்கள் மணல் நிறைந்த ஒரு பகுதியில் நடந்து செல்லும் சமயத்தில் அதில் தங்கள் கால்களை பதிக்க அவர்கள் அப்படியே பூமிக்குள் புதையுண்டு போயினர். அப்போது தான் சிந்துபாத்துக்கு தெரிந்தது அது ஒரு புதை மணல் என்று. எனினும் அவன் சுதாரிப்பதற்குள் அவனுடன் வந்த பெரும்பாலான வீரர்கள் அந்த மண்ணில் புதையுண்டு போயினர். அவர்களது உடலைக் கூட கண்டெடுக்க இயலவில்லை.

உடனே சிந்துபாத் எஞ்சிய வீரர்களையாவது காப்பாற்ற வேண்டும் என்ற நோக்கில் மற்றவர்களை தடுத்துப் பாதுகாப்பான இடத்தில் நிறுத்தினான். எனினும் அந்தப் புதை மணலை தாண்டினால் தான் மேற்கொண்டு தீவுக்குள் பிரவேசிக்க இயலும் என்கிற நிலை, எப்படித் தாண்டுவது என்று யோசித்த சிந்துபாத்தின் மூளை மிக வேகமாக அவனுக்கு ஒரு வழியை காட்டியது. அதன் படி அந்தப் புதை மணலின் இடை, இடையே சரியாக அளந்து வைத்ததை போல ஓர் அடி இடைவெளியில் கால்களை வைக்கும் அளவுக்குப் பாறைகள் இருந்தது. உடனே சிந்துபாத் தனது வீரர்களின் தலைப்பாகையை அவிழ்க்க செய்து அதனைக் கொண்டு கயிறு போல திரித்து அதனைத் தனது உடலில் இறுக்கமாகக் கட்டிக் கொண்டு; அதன் மறுமுனையை ஒரு மரத்தில் கட்டி அருகில் இருந்த வீரர்களை பத்திரமாக பிடித்துக் கொள்ளுமாறு கூறி மெல்ல அந்த முதல் பாறையில் கால் வைத்தான். அவனுக்கு எதுவுமே நேரவில்லை. பிறகு மெல்ல அடுத்த பாறையில் கால் வைத்தான். அப்போதும் அவனுக்கு ஒன்றுமே ஆகவில்லை. பிறகு மூன்றாவது பாறை மீது நின்றபடி தனது இடுப்பில் கட்டி இருந்த தலைப்பாகையை அவிழ்த்து விட்டு தைரியமாக அந்தப் பாறைகளின் மீது நடந்து சென்றான். அதனைத் தொடர்ந்து சிந்துபாத்தின் வீரர்களும் புதை மணலில் கால்களை பதிக்காமல் பாறையின் மீது மட்டுமே மெல்லத் தங்களது கால்களை பதித்து எந்த விதமான ஆபத்தும் இன்றி நடந்து சென்றனர். இப்படியாக சிந்துபாத் உட்பட எஞ்சிய அனைவரும் புதை மணலைக் கடந்து புல்வெளி நிறைந்த ஒரு வனப்பகுதியை அடைந்தனர்.

சிந்துபாத்தின் சைன்யம் அந்தப் புல்வெளியை அடையும் சமயம். மாலை

நேரம் கடந்து கொண்டு இருந்தது. எங்கும் இருட்டுப் பரவியது. இனியும் தீவுக்குள் பிரவேசிப்பது ஆபத்து என்று உணர்ந்த சிந்துபாத் அவ்விடத்திலேயே கூடாரங்களை அமைத்து தனது அடுத்த திட்டத்தை வீரர்களுடன் சேர்ந்து ஆலோசித்து முடித்தான். அன்றைய இரவு அந்தக் கூடாரத்தில் சில மணி நேரங்களுக்கு மட்டும் அனைத்து வீரர்களும் சற்றே களைப்பாற நினைத்தனர். சில வீரர்கள் பசியின் கொடுமையால் அங்கு நடமாடிய மான்களை கொன்று அதனை சுட்டுக் கொண்டு இருந்தனர். அதனைப் பார்த்து மற்ற வீரர்களும் மான்களை வேட்டையாடி அதனை சுட்டுத் தின்று பசி ஆறினார்கள். அப்போது மான்களின் மாமிச வாடையை நுகர்ந்த அந்த வனத்தில் இருந்த ராட்ச சிலந்திகள் தங்களது பிரம்மாண்டமான கூட்டில் இருந்து சரியாக அந்தப் புல்வெளிக்கு மோப்பம் பிடித்தபடி வந்து சேர்ந்தன. அப்போது மான் கறியை சுவைத்து உண்டு கொண்டு இருந்த ஒரு வீரனை ராட்சஸ சிலந்தி பிடித்து உண்டது. அது வரையில் வன விலங்குகளை மட்டுமே பிடித்து உண்டு பசியாறிய அந்த சிலந்திக்கு மனித மாமிமாசம் வித்யாசமாக இருந்தது. அதனால் அந்த வீரனின் எஞ்சிய பாகங்களை குதறி பூமியில் போட்டு விட்டு அடுத்த மனிதனை தேடிச் சென்றது. அதனைக் கண்ட மற்ற சிலந்திகளும் அவ்வாறே அங்கிருந்த வீரர்களை பிடித்து உண்டன. அது கண்ட மற்ற வீரர்கள் அலறினர். இன்னும் சிலர் ஆயுதங்களை எடுத்துக் கொண்டு அந்த சிலந்திகளுடன் கடுமையாகத் துணிந்து போரிட்டனர். சிந்துபாத்தும் அந்த சிலந்திகளை தனது அதிசய வாள் கொண்டு வேட்டையாடினான். இப்படியாக அங்கு நர மாமிசம் தின்ற சுமார் எட்டு சிலந்திகளை சிந்துபாத் உட்பட அனைத்து வீரர்களும் வேட்டையாடி வெற்றி கண்டனர். பின்னர் அனைவரும் வெற்றிக் களிப்பில் இருந்தனர். சிறிது நேரத்தில் களைப்பின் மிகுதியால் ஓய்வு எடுக்க சென்றனர். அத்துடன் தங்களுக்கு வந்த ஆபத்து நீங்கியதாகக் கருதினர். ஆனால் அது வெறும் தொடக்கம் தான்.

நள்ளிரவு வேளை சிந்துபாத்தின் வீரர்களுள் ஒருவன் சிறுநீர் கழிக்கச் சென்றான். அப்போது அவன் அருகே முதுகின் பின்னால் யாரோ மூச்சு விடுவது போல இருந்தது. திரும்பிப் பார்த்தான், அவன் கண்ட காட்சி அவனை உறைய வைத்தது ஒரே ஒரு அலறல் தான். மயங்கி விழுந்தவனை ராட்ச சிலந்திப் பட்டாளம் இரு துண்டுகளாக வகுந்து உண்டது. வீரனின் அலறல் சத்தத்தை கேட்ட மற்ற வீரர்கள் திடுக்கிட்டு எழுந்தனர். அதற்குள் ஆயிரக்கணக்கான ராட்ச சிலந்திகள் கூடி விட்டன. அவர்களின் பாசறையை அந்த சிலந்திக் கூட்டம் கபளீகரம் செய்து அழித்தது. எண்ணற்ற வீரர்கள் மடிந்தனர். இறுதியில்

சிந்துபாத்துடன் எஞ்சிய வீரர்கள் வெறும் நான்கு பேர் தான்.

இனியும் சமாளிக்க முடியாது என்கிற நிலையில் சிந்துபாத் அவர்களை அழைத்துக் கொண்டு ஓடினான். ராட்ச சிலந்திகள் அந்தக் காரிருள் நேரத்தில் கூட மனிதர்கள் உடலில் இருந்து வந்த வெப்பக் கதிர்களைக் கொண்டு அவர்களை எளிதில் அடையாளம் கண்டன. அதன் காரணமாக சிந்துபாத்துடன் ஓடிக் கொண்டு இருந்த நான்கு வீரர்களையுமே அந்த சிலந்திகள் முந்திச் சென்று கொன்றன. சிந்துபாத் பயத்தில் அலறி அடித்து தனது அதிசய வாளுடன் அருகில் இருந்த ஆற்றங்கரையில் விழுந்தான். அவன் விழுந்த இடத்தில் சகதி இருந்ததால் அவனது உடல் முழுக்க சகதியால் நனைந்தது. இன்னும் சொல்லப் போனால் சகதியானது அவனது உடலை மறைத்து விட்டது. அவன் அருகே வந்த சிலந்தி அவனை ஒன்றும் செய்யவில்லை. மரம், செடி கொடி போல நினைத்து சிந்துபாத்தை விட்டு விட்டது. அப்போது தான் சிந்துபாத்திற்கு விஷயம் புரிந்தது. சகதியில் நனைந்தால் அந்தக் கொடிய சிலந்திகளின் கண்களுக்கு மனிதன் தெரியமாட்டான் என்ற தத்துவத்தை விளங்கிக் கொண்டு, மேலும் மேலும் அங்கு இருந்த சகதியை உடல் முழுக்க சிந்துபாத் பூசிக் கொண்டான். அதனால் அங்கு நடமாடிய ராட்ச சிலந்திகளின் கண்களில் இருந்து சிந்துபாத் தப்பினான். அவனது வெப்பக் கதிர்கள் குளிர்ந்த சகதியால் வெளிவராமல் போனது. சிறிது நேரத்தில் ராட்ச சிலந்திகள் மனிதர்கள் யாருமே அங்கு இல்லை என்று கருதி அவ்விடத்தை விட்டு தங்களது கூடுகளுக்கு சென்று மறைந்தன. விடியற் காலை பொழுதும் வந்தது.

சிந்துபாத் ஆற்றைக் கடந்து வெகு தூரம் சென்றான். ஓர் இடத்தில் நீர் வீழ்ச்சியைக் கண்டு அதில் குளித்து முடித்தான். எனினும் தன்னுடன் வந்த அனைவரும் இறந்து போனதால் மிகவும் துக்கம் கொண்டு அழுதான். பிறகு அவனையே அவன் தேற்றிக் கொண்டு இளவரசியை தேடும் பணியில் இறங்கினான். அந்தத் தீவில் எங்கு தேடியும் இளவரசியை காணாததால் தவித்தான். அப்போது ஒரு இடத்தில் காட்டுத் தீ எங்கும் பரவி இருப்பதைக் கண்டான்; உள்ளே இருந்து ஒரு அலறல் சத்தம் கேட்டது. தெளிவாக அந்தக் குரலை கேட்டான் சிந்துபாத் அது ஒரு ஆணின் குரல் தான்." ஒரு வேளை தன்னுடன் வந்த வீரர்களுள் யாரோ பிழைத்துக் கொண்டு இந்த வனத்தில் அதுவும் இந்தக் காட்டுத் தீயில் சிக்கி விட்டார்களோ?" என்று அவன் மனம் பதறியது. அடுத்த கணம் தனது உயிரைப் பணயம் வைத்து அந்தக் காட்டுத் தீயினுள் புகுந்தான் இருளை விட கருமை நிறம் கொண்ட ஒருவனை காப்பாற்றி

அந்தக் காட்டுத் தீயில் இருந்து அவனை பத்திரமாக வெளியே கொண்டு வந்தான். அவன் பார்ப்பதற்கு வித்யாசமாக இருந்தான். சத்தியமாக அவனை யாரும் மனிதன் என்று சொல்ல முடியாது. முகத்தில் அப்படி ஒரு குரூரம். ஒரு கணம் சிந்துபாத்," நல்லதை செய்வதாக நினைத்து சொந்தக் காசில் சூனியம் வைத்துக் கொண்டோமோ" என்று கூட சிந்தித்தான். அவ்வாறு சிந்தித்த மறுகணம் அவனது முகம் வியர்த்தது.

அதனைக் கண்ட அந்தக் காரிருள் தோற்றத்தவன் பலமாக சிரித்தான். அந்த சிரிப்பு சிந்துபாத்தின் பயத்தை மேலும் அதிகரித்தது. அத்துடன் அவனது முகம் கலவரம் அடைந்தது.

தனது உயிரை பேர் ஆபத்தில் இருந்து காப்பாற்றிய மனிதனின் பயத்தை போக்க நினைத்த அந்தக் கருமை நிற ஆள் சிந்துபாத்திடம் பேசத் தொடங்கினான்.

"ஏ மனிதா! நீ என்னை பெரிய ஆபத்தில் இருந்து காப்பாற்றி விட்டாய். நீ யார்? நான் உண்மையில் உனக்கு உதவ நினைக்கிறேன். உனக்கு என்ன வேண்டும்? கேள்" என்றான்.

அதனைக் கேட்ட சிந்துபாத் மறுமொழியாக," நான் பாக்தாத் நகரத்தின் படைத் தளபதி. என்னை எல்லோரும் "கடலோடி சிந்துபாத்" என்று அழைப்பார்கள். அது சரி தாங்கள் யார்? முதலில் அதனை சொல்லுங்கள். மேலும், தாங்கள் எப்படி எனக்கு உதவ முடியும்? இங்கு எப்படி வந்தீர்கள்? ஒரு வேளை தாங்கள் மந்திரவாதி உல் முல்கின் ஆளா? இல்லை தாங்கள் தான் அவனா?" என்று அடுக்கடுக்கான பல கேள்விகளை கேட்டான்.

சிந்துபாத்தின் கேள்விக் கணைகளை கண்டு மீண்டும் ஒரு முறை பலமாக நகைத்த அந்த காரிருள் ஆள், " சிந்துபாத்! நான் இந்த வனத்தில் நடமாடும் கொடிய நாகங்களின் அரசன். நினைத்த நேரத்தில் நினைத்த ரூபத்தை எடுக்கக் கூடியவன் என்னை எல்லோரும் கஷ்டக் என்று அழைப்பார்கள். அது சரி நீ ஏன் உல் முல்க்- ஐ தேடுகிறாய்? அவன் மகா கொடியவன் ஆயிற்றே! அது மட்டும் அல்ல ஒரு விதத்தில் எங்களுக்கும் அவன் பகைவன் தான்" என்றான்.

கஷ்டக் கூறியதைக் கேட்ட சிந்துபாத்,"உல் முல்க் எங்கள் இளவரசியான நூர்ஜகானை கடத்தி இந்தத் தீவுக்கு கொண்டு வந்து

இருக்கிறான். ஆனால் எங்கு இருக்கிறான் என்று எனக்கு சரியாகத் தெரியவில்லை. அது மட்டும் அல்ல என்னுடன் வந்த ஐநூறு வீரர்களும் பல்வேறு விபத்துக்களில் இறந்து போயினர். இப்போது நான் மட்டும் தான் மிச்சம். எனது லட்சியம், ஒன்று உல் முல்க் - யை கொல்ல வேண்டும். இல்லையேல் நான் மடிய வேண்டும். ஆனால் எடுத்த காரியத்தை மட்டும் முடிக்காமல் நான் இந்தத் தீவை விட்டுப் போகவே மாட்டேன்" என்றான்.

"சபாஷ் சிந்துபாத்! நீ சரியான ஆளிடம் தான் வந்து உள்ளாய். ஆனால் நீ நினைப்பது போல உல் முல்க் - யை கொல்வது அவ்வளவு சுலபம் அல்ல. அதற்கு உன்னிடம் இருக்கும் இந்த அதிசய வாள் மட்டும் போதாது. இதோ இந்த வில்லை வைத்துக் கொள். அத்துடன் இந்த அம்புறாத் துணியையும் தான். இதில் எண்ணற்ற திவ்ய அஸ்திரங்கள் உள்ளன. அது மட்டும் அல்ல, இதில் அம்புகள் எடுக்க எடுக்கக் குறையாது. மேலும், உல் முல்க் உனது கையால் சாக வேண்டும் என்பது தான் விதி போலும். உனக்கு அதற்கான தகுதியும் உண்டு. ஆனால் நீ உல் முல்க் - ஐ கொல்ல வேண்டும் எனில் முதலில் அவனது உயிர் ரகசியத்தை தெரிந்து கொள். அது தெரியாமல் நீ அவனை கொல்லவே இயலாது" என்று கூறி முடித்தான் கஷ்டக்.

"எனில் அந்த உயிர் ரகசியம் தான் என்ன? தாமதிக்காமல் உடனே சொல்லுங்கள்" என்று கெஞ்சினான் சிந்துபாத்.

கஷ்டக்கும் சிந்துபாத்தின் மீது அவன் கொண்ட பேர் அன்பினால் உல் முல்க் - யை  கொல்லும் ரகசியத்தை கூறத் தொடங்கினான்.

"சிந்துபாத்! இதே பாதையில் சென்றால் இங்கிருந்து நான்கு மைல் தூரத்தில் ஒரு குகையைக் காண்பாய். அது தான் உல் முல்க்- கின் குகை அதற்குள் தான் இளவரசி இருக்க வேண்டும். அந்த குகைக்கு தெற்கே ஒரு மைல் தூரம் நடந்தால் ஒரு பளிங்கு மாளிகையை காண்பாய். அந்த மாளிகையை இரவும், பகலுமாக உல் முல்க்-கின் ஆட்கள் காவல் காத்து வருகின்றனர். காரணம் அந்தப் பளிங்கு மாளிகைக்குள் ஒரு கிளியின் உடலில் தான் உல் முல்க் - கின் உயிர் உள்ளது. அந்தக் கிளையை எடுத்துக் கொண்டு சென்று உல் முல்க் - கின் முன்னாள் அதன் கழுத்தை நெறித்தாள் போதும். அடுத்த கணமே உல் முல்க் மரணம் அடைவான். ஆனால், அது எளிதான காரியம் இல்லை" என்று கூறி மேற்கொண்டு சிந்துபாத்திடம் ஒரு மாயப் போர்வையையும், பறக்கும் கம்பளத்தையும்

கொடுத்தான் கஷ்டக்.

அந்தக் கம்பளத்தையும், போர்வையையும் வாங்கி கொண்டான் சிந்துபாத். பிறகு மீண்டும் கஷ்டக் சிந்துபாத்திடம்,"சிந்துபாத் இந்தப் போர்வையை போர்த்திக் கொண்டால் நீ யார் கண்ணுக்கும் தெரியாமல் மறைந்து போவாய். அது மட்டும் அல்ல, இந்தப் பறக்கும் கம்பளம் உன்னை விரும்பிய இடத்திற்கு எல்லாம்  அழைத்துச் செல்லும். இது எத்தனை பேரை வேண்டுமானாலும் சுமக்க வல்லது. இனியும் நீ ஏன் தாமதிக்கிறாய்? சென்று வா! வென்று வா! " என்று வாழ்த்தி அனுப்பினான்.

பிறகு சிந்துபாத் அந்தப் பறக்கும் கம்பளத்தில் ஏறி அமர்ந்த மாத்திரத்தில் அந்தக் கம்பளம் அவனை உல் முல்க்-க்கின் குகைக்குள் அழைத்துச் சென்றது. அங்கிருந்து கஷ்டக் முன்பு சொன்ன அந்தப் பளிங்கு மாளிகையை நோக்கி சென்றான். அத்துடன் கஷ்டக் கொடுத்த போர்வையை போர்த்திக் கொள்ள சிந்துபாத் அங்கு காவல் காத்த வீரர்கள் யார் கண்ணுக்கும் தெரியவில்லை. மறுகணம் மறைந்திருந்தபடியே அம்புகளை எய்து அங்கு இருந்த வீரர்கள் அனைவரையும் கொன்றான். மேலும், அந்தப் பளிங்கு மாளிகைக்குள் நுழைந்து கஷ்டக் சொன்ன கிளியை எடுத்துக் கொண்டான். நேராக மந்திரப் போர்வையை போர்த்திய படியே பறக்கும் கம்பளத்தின் உதவியுடன் உல் முல்க்-க்கின் குகைக்குள் மேலும் பிரவேசித்தான்.

அங்கு இளவரசி நூர்ஜகான் தலைவேறு உடல் வேறாகக் கிடந்ததை பார்த்து சிந்துபாத் அதிர்ச்சி அடைந்தான். "ஒரு வேலை நூர்ஜகான் இறந்து விட்டாளா? பாவி மந்திரவாதி அவளைக் கொன்று விட்டானா?" என்றபடி எல்லாம் சிந்துபாத்தின் மனம் சிந்தித்தது. அந்த நேரம் மந்திரவாதி உல் முல்க் அவ்விடத்திற்கு வந்தான். நூர்ஜகானின் தலையை தனது கைகளால் பற்றி எடுத்தான். அதனை அவளது உடலுடன் பொறுத்தினான். பிறகு தனது மந்திரக் கோளின் நுனியில் இருந்த வேரை எடுத்து அவளது தலையும், உடலும் சேரும் இடத்தில் வைத்தான். அடுத்த கணம் துண்டான நூர்ஜகானின் உடலும், தலையும் ஒன்று இணைந்தது. அதனை தூரத்தில் இருந்து கண்ட சிந்துபாத் விஷயத்தை அறிந்து கொண்டான். அத்துடன் மந்திரவாதி நூர்ஜகானிடம் பேசிக் கொண்டு இருப்பதையும் பறக்கும் கம்பளத்தின் மீது அமர்ந்த படி அத்துடன் மந்திரப் போர்வையில் தன்னை மறைத்தபடி பொறுமையாகக் கேட்டுக் கொண்டு இருந்தான்.

மந்திரவாதி நூர்ஜகானிடம்," நூர்ஜகான்! என்னால் இனியும் பொறுக்க முடியாது. மரியாதையாக என்னை மணந்து கொள். இந்தத் தீவே என்னுடையது தான். உன்னை இங்கு ராணி போலவே நான் வைத்துக் காப்பாற்றுவேன். என்னை நம்பு. நீ ஒருவேளை மறுத்தால் எனக்கு கிடைக்காத உன்னை யாருக்கும் கிடைக்க விட மாட்டேன். புரியவில்லை! உன்னை இன்றே நான் வணங்கும் துர்தேவதைகளுக்கு பழி கொடுத்து விடுவேன்" என்று மிரட்டினான்.

அதனைக் கேட்ட சிந்துபாத் மந்திரப் போர்வையை போர்த்தியபடி பறக்கும் கம்பளத்தின் உதவியால்  நூர்ஜகானிடம் மெல்ல வந்தான். அவளது காதுகளில் அவளுக்கு மட்டும் கேட்கும் படியாக "நூர்! நான் தான் அண்ணன் சிந்துபாத் வந்து உள்ளேன். நான் இங்கு வந்திருப்பதை காண்பித்துக் கொள்ளாதே! மந்திரவாதியை மணம் முடிக்க சம்மதம் என்று சொல். மற்றதை நான் பார்த்துக் கொள்கிறேன்" என்றான்.

சிந்துபாத்தின் குரலை கேட்டுக், கேட்டு நூர்ஜகானுக்கு நன்கு பரிட்சயம் ஆகி இருந்ததால் நூர்ஜகானின் மனம் சிந்துபாத் தான் வந்திருக்கிறார் என்பதை வலிமையாக நம்பியது. ஆனால், அவளது மூளையோ ஒரு வேளை இது மந்திரவாதியின் தந்திரமாக இருக்குமோ என்று யோசித்தது. எனினும், அவளுக்கு உயிர் பிழைக்க அப்போதைக்கு வேறு வழி தெரியவில்லை. மறுத்தால் மந்திரவாதி அடுத்த நிமிடமே கொன்று விடுவான் என்ற நிலையில் சிந்துபாத் சொற்படி மந்திரவாதியை மணந்து கொள்வதாகக் கூறினாள்.

நூர்ஜகான் கூறியதைக் கேட்ட மந்திரவாதி மனம் மகிழ்ந்தான். உடனே அவளைத் திருமணம் செய்ய ஏற்பாடு செய்வதாகக் கூறிச் சென்றான். இது தான் சமயம் என்று சிந்துபாத் போர்வையை விளக்கி தன்னை நூர்ஜகானுக்கு வெளிப்படுத்தி அவளது பயத்தையும், சந்தேகத்தையும் போக்கினான். அப்போது தான் நூர்ஜகானுக்கு தைரியமே வந்தது.

திருமண ஏற்பாடுகளை செய்து முடித்து விட்டு மந்திரவாதி நூர்ஜகானை தேடி வந்தான். அப்போது அவளது அருகில் சிந்துபாத் இருப்பதைக் கண்டு அவனைக் கொல்ல மந்திரக் கோலை உயர்த்தி மந்திரங்களை உச்சரிக்கத் தொடங்கினான். சுதாரித்துக் கொண்ட சிந்துபாத் அந்த மந்திரக் கோலை தனது கையில் இருந்த அதிசய வாளால் இரு துண்டுகளாக உடைத்தான். அடுத்த கணமே அந்த மந்திரக் கோல் தனது சக்தியை இழந்தது. அந்த மந்திரவாதியின் முக்கால் பங்கு பலமே அந்த

மந்திரக் கோல் தான். ஆனால் இப்போது அது உடைந்து விட்டது. கோபத்தில் அந்த துஷ்ட மந்திரவாதியின் கண்கள் சிவந்தது. தன்னிடம் இருந்த இதர மந்திர வித்தைகளை பயன்படுத்தி அதன் மூலம் சிந்துபாத்தின் மீது தனது துர் மந்திர சக்தியை பிரயோகித்தான். ஆனால், முன்பு மௌலி கொடுத்த ரட்சை சிந்துபாத்தின் கைகளில் இருந்ததால் அந்த மந்திரவாதியின் எந்த மந்திரமும் சிந்துபாத்தை ஒன்றும் செய்யவில்லை. இதனால் அவனிடம் இருந்த கொஞ்ச நஞ்ச மந்திர சக்திகளையும் பறிகொடுத்தான். இறுதியாக பலத்தை பிரயோகித்து சிந்துபாத்துடன் துவந்த யுத்தத்தில் இறங்கினான் அந்த மந்திரவாதி.

சிந்துபாத்துக்கும், மந்திரவாதிக்கும் கடுமையாகப் போர் நடந்தது. கத்தியும், கத்தியும் மோதிக் கொள்ள எங்கும் அனல் பறந்தது. அதனால் அந்தத் தீவு அதிர்ந்தது. சிந்துபாத்தின் அதிசய வாள் மந்திரவாதியின் உடலில் பல இடங்களில் புகுந்து விளையாடியது. அதனால் ஒரு வரிக் குதிரையை போல காணப்பட்டான் மந்திரவாதி. அவனது உடலில் இருந்து குருதி பெருக்கெடுத்து ஓடியது. இப்படியாகப் பல மணிநேரம் நடந்த அந்த யுத்தத்தின் இறுதியில் மந்திரவாதி உல்- முல்க் ஐ சிந்துபாத் கொன்றான். அதனைக் கண்ட நூர்ஜகான் ஆனந்தம் கொண்டாள். ஓடி வந்து தனது உடன் பிறவா அண்ணன் சிந்துபாத்தை ஆறத் தழுவிக் கொண்டாள். பிறகு சிந்துபாத் நூர்ஜகானுடன் கஷ்டக் கொடுத்த பறக்கும் கம்பளத்தில் ஏறி வெற்றியுடன் பாக்தாத் நகரத்தை அடைந்தான். மன்னரிடம் நூர்ஜகானை ஒப்படைத்தான். தனது மகள் எந்த வித சேதாரமும் இல்லாமல் ஒரு கொடிய மந்திரவாதியின் பிடியில் இருந்து வந்திருக்கிறாள் என்றால் அதற்கு சிந்துபாத் தான் கரணம் என்று கூறி அவனைப் போற்றி புகழ்ந்தார் மன்னர். மேலும், அவனுக்குப் பரிசுகள் பல வழங்கினார். மூட்டை, மூட்டையாகப் பொற்காசுகளை கொடுத்தார். ஆனால் சிந்துபாத் அதனை ஏற்காமல் அந்தச் செல்வங்கள் அனைத்தையும் தன்னுடன் வந்து இறந்த போன அந்த ஐந்நூறு வீரர்களின் குடும்பங்களுக்கும் கொடுத்தான். அதனைக் கண்ட பாக்தாத் மக்கள் சிந்துபாத்தின் கருணையை போற்றிப் புகழ்ந்தனர்.

இப்படியாக கடலோடி சிந்துபாத்தின் ஏழு பயணங்களும் அவனுக்கு பல விதங்களில் வெற்றியை தேடித் தந்தது. இன்னும் சொல்லப் போனால் அவனுக்கு ஏழு விதமான அனுபவங்களையும் அவனது அந்த ஏழு விதமான கடல் பயணங்கள் பெற்றுக் கொடுத்தன. தனது ஒவ்வொரு பயணத்தின் போதும் இறைவன் அவன் உடன் இருப்பதை உணர்ந்தான் சிந்துபாத்.

இவ்வாறு ஷாரஜாத் சிந்துபாத்தின் கதையை பல இரவுகள் தொடர்ந்து சொல்லி முடித்தாள். ஷாரஜாத் கதையைக் கூறி முடித்தவுடனேயே அவளது தங்கை துன்யாஜாத் கணவனையும், மனைவியையும் தனியே விட்டுச் சென்று விட்டாள். எனவே மன்னர் ஷாரியர் ஷாரஜாத்தை அணைத்தும் முத்தமிட்டும் தழுவியும் மகிழ்ந்தார். ஷாரஜாத்தும் ஆனந்தக் கண்ணீருடன் அவரிடம் தன்னை ஒப்படைத்து விட்டாள். அவர் இழுத்த இழுப்புக்கு எல்லாம் அவள் ஈடுகொடுத்தாள் அவளும் தனது இதய ஆசையை தணித்துக் கொண்டாள்.

அதன் பிறகு சிறிது நேரம் கழித்து தனது ஆடையை சரி செய்து கொண்டாள் ஷாரஜாத். அத்துடன் ஷாரியரிடம், "வேந்தே பெண்களால் எத்தனையோ பாதிப்புகள் ஏற்பட்டு இருக்கிறது என்பது உண்மைதான். ஆண்கள் தான் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்" என்றாள். அந்த வார்த்தைகள் ஷாரியரின் கண்களைத் திறந்தது. அப்போதில் இருந்து அவன் பெண்களை மதிக்கத் தொடங்கினான். "சில பெண்கள் தான் தவறானவர்கள். எல்லாப் பெண்களும் அப்படி அல்ல" என்பதைப் புரிந்து கொண்டு தான் இதுவரையில் முதலிரவு முடித்து கொலை செய்த பெண்களின் ஆத்மா சாந்தி அடைய இறைவனை வேண்டினான். அத்துடன் தனது அந்தச் செயலுக்காக தலை குனிந்தும் நின்றான்.

மன்னரின் இந்தக் குற்ற உணர்வை மானசீகமாக உணர்ந்த ஷாரஜாத், ஷாரியரைத் தேற்றினாள். அப்போது, "அடிமைத் தனத்தில் இருந்தும், அப்பாவிப் பெண்கள் தனது ராஜ்யத்தில் கொலை உருவதில் இருந்தும் பெண்களைக் காப்பாற்றுவதற்காகத் தான் ஷாரஜாத்தை எல்லாம் வல்ல அல்லா அனுப்பி வைத்து உள்ளார்" என்று மனதுக்குள் எண்ணிக் கொண்டார் மன்னர் ஷாரியர்.

மறுநாள் காலையில் அரசவைக்குச் சென்றதும் அந்த அவையில் ஷாரஜாத்தின் தந்தைக்கு சிறப்பு மரியாதையை செய்தார் அரசர் ஷாரியர். பிறகு அவரிடம்,"மிகச் சிறந்த ஒரு பெண்ணை எனக்கு மணம் முடித்து வைத்துள்ளீர்கள். எனது வாழ்வில் நடந்த சில கசப்பான சம்பவங்காளால் நான் பெண்களையே வெறுத்து வந்தேன். அத்துடன் மிருக வெறியுடன் சில பெண்களைக் கூட கொலை செய்ய ஆணை பிறப்பித்து உள்ளேன். ஆனால், தங்கள் மகளோ எனக்கு உண்மையை உணர்த்தி விட்டாள். அவள் உண்மையிலேயே பெரிதும் பாராட்டப் பட வேண்டியவள். இப்போது அவள் கர்ப்பம் அடைந்தும் உள்ளாள்" என்று கூற அந்த சபையே மன்னருக்கு வாழ்த்துக்களைக் கூறியது. பின்னர்

அங்கு உள்ள மற்ற அமைச்சர்களையும் அரசர் ஷாரியர் கௌரவிக்கத் தவறவில்லை. பின்னர் அன்றைய தினம் மிகவும் களிப்புடன் அரசவை கலைந்தது. பிறகு ஷாரியர் கொடுத்த பிரத்தேயக விருந்தில் ஷாரஜாத்தின் தந்தையும், அவளது சகோதரியும் மன்னர் குடும்பத்தில் சிலரும் கலந்து கொண்டனர். அந்த விருந்தின் போது ஷாரஜாத்தின் தங்கையான துன்யாஜாத்தை தனது அருமைத் தம்பி ஷாஜமானுக்கு மணம் முடிக்க நினைப்பதாக ஷாரியர் ஷாரஜாத்தின் தந்தையிடம் கூற அதைக் கேட்டு அனைவரும் மகிழ்ந்தனர்.

ஷாஜமான் வர வழைக்கப்பட்டார். பின்னர் ஷாரஜாத்தின் குடும்பத்தின் பெருமையை ஷாஜமானிடம் எடுத்து உரைத்த ஷாரியர். துன்யாஜாத் கற்புக்கரசி என்று சொல்ல, தனது அண்ணனின் வார்த்தையின் மீது நம்பிக்கை கொண்ட ஷாஜமான் அவளை மணக்க முழு மனதுடன் சம்மதம் தெரிவித்தான். அவன் மனதில் இருந்த ஐயங்கள் அனைத்தும் நீங்கியது. தனது அண்ணன் எப்போதுமே தனக்கு நன்மையைத் தான் செய்வார் என்று ஷாஜமான் நம்பினார். துன்யாஜாத், ஷாஜமான் திருமணத்துக்கு நாள் குறிக்கப்பட்டது.

அடுத்த சில தினங்களில் அவர்களது திருமணம் கோலாகலமாக நடந்தது. அன்றைய தினத்தில் ஏழை எளிய மக்களுக்கு பரிசுகளைக் கொடுத்து மகிழ்ந்தார் மன்னர் ஷாரியர். அன்றைய தினம் அனைவருமே முழு மன நிறைவைப் பெற்றனர். ஷாரஜாத், மன்னர் ஷாரியருக்கு மட்டும் அல்ல அந்த நாட்டுக்கே ஒரு கலங்கரை விளக்காகத் திகழ்ந்தாள்.

----------முற்றும்--------